ம்.

உ

சிவமயம்.

பத்தாந்திருமுறையென்னும்

# திருமந்திரம் மூவாயிரம்.

அறுபத்துமூன்று நாயன்மாரு ளொருவராகிய

திருமூலநாயனாரியற்றியது.





இஃது,

கொ - சண்முகசுந்தர முதலியா ரவர்களது

சிவஞானபோதயந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது,



சென்னை - சிந்தாதிரிப்பேட்டை.

சர்வஜித்து ஞு ஆவணி மீ

உ

சிவமயம்.

பத்தாந்திருமுறையென்னும்

# திருமந்திரம் மூவாயிரம்.

அறுபத்துமூன்று நாயன்மாரு ளொருவராகிய

திருமூலநாயனாரியற்றியது.





இஃது,

சொ - சண்முகசுந்தர முதலியா ரவர்களது

சிவஞானபோதயந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.



சென்னை - சிந்தாதிரிப்பேட்டை.

சர்வஜித்து ஸ்ரீ ஆவணி மீ

## திருமூலநாயனார் சரித்திரம்.

நம்பியாண்டார்நம்பி திருவந்தாதி. ருசு-வது, செ.

குடிமன்னுசாத்தனூர்க் கோக்குலமேய்ப்போன் குரம்பைபுக்கு, முடிமன்னுகூனற் பிறையாளன்றன்னை முழுத்தமிழின், படிபன்னுவேதத்தின் சொற்படியேபர விட்டெனுச்சி, யடிமன்னவைத்தபிரான் மூலனாகின்ற வங்கணனே. (ருசு)

உமாபதி சிவாசாரியார்

திருத்தொண்டர் புராணசாரம். ருச - வது, செ.

கயிலாயத் தொருசித்தர் பொதியிற்சேர்வார் காவிரிசூழ் சாத்தனூர் கருதுமூலன், பயிலாநோ யுடன்வீயத் துயரநீடும் பசுக்களைக்கண் டவனுடலிற் பாய்ந்துபோத,வயலாகப் பண்டையுட லருளான்மேவி யாவடுதெண் டுறையாண்டுக் கொருபாவாகக், குயிலாரு மரசடியி லிருந்துகூறிக் கோதிலா வடகயிலை குறுகினாரே. (ருச)

திருமந்திரம் பத்தாவதுதிருமுறை என்பதற்கு

திருமுறைகண்டபுராணம். உசு - வது செ.

ஆகவளர் திருமுறையே ழருட்டிருவா சகமொன்று, மோகமெறி திருவிசைப்பா மாலைமுறை யொன்றுசிவ, போகமிகு மந்திரமா முறையொன்று புகழ்பெறவே, பாகமிகுந் திருமுறைகள் பத்தாக வைத்தார்கள். (உசு)

திருமூலர் திருநக்ஷத்திரம்

ஐப்பசி ஸ்ரீ அஸ்வநிநக்ஷத்திரம்.

திருமூலநாயனார் இம்மூவாயிரச்செய்யுளன்றி வயித்தியத்தி கஉ0 - ரு000 - என்னுங் கோர்வைகளையுஞ் செய்திருக்கின்றார்.

# இப்போதச்சிட்டிருக்கும்
# சிவஞானபோதயந்திரசாலை
# புத்தகங்களின் விபரம்.

| புத்தகம் | விலை |
| --- | --- |
| சிவஞானபோத விருத்தியுரை. | க - ச - |
| திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார், இருபா இருபஃது, உண்மைவிளக்கம், திருவருட்பயன், வினாவெண்பா, கொடிக்கவி, உண்மை நெறி விளக்கம், போற்றிப்பஃறொடை, சங்கற்ப நிராகரணம், இவற்றினுரை. | க - கஉ - ‌ |
| சிவஞானசித்தியார் பரபக்ஷவுரை. | க - அ - |
| சிவப்பிரகாச வியாக்கியானம். | க - அ - |
| [illegible] | [illegible] |
| [illegible] | [illegible] |
| கூர்மபுராணம். | உ - அ - |
| விநாயககவசம், சிவகவசம், சத்திகவசம், திரிபுரை அகவல், திரிபுரைதோத்திரம், காமாட்சியம்மன் அகவல், விநாயகர் அகவல், கந்தர் சஷ்டி கவசம். | ௦ - ௦ - [illegible] |
| சௌந்தரி - யானந்தலகரி மூலம். | ௦ - ௦ - [illegible] |
| அபிராமி யந்தாதி. | ௦ - ௦ - [illegible] |
| கந்தரநுபூதி மூலமும் - உரையும். | ௦ - ௦ - [illegible] |
| சரஸ்வதிதோத்திரம், சரஸ்வதியந்தாதி. | ௦ - ௦ - [illegible] |
| ஆத்திசூடி கொன்றைவேந்தன் மூலம். | ௦ - ௦ - [illegible] |
| ஷை உரை. | ௦ - ௦ - [illegible] |
| வாக்குண்டாம் மூலம் - உரையும், | ௦ - க - ௦ |
| நல்வழி ஷை ஷை | ௦ - க - ௦ |
| சமஸ்கிருத சிவஞானபோத சவ்வியாக்கியானம். ஆகம உதாரணங்களுடன். | ௦ - ச |
| சித்தாந்த சாராவளி வியாக்கியானம். | |

உ

சிவமயம்

# அதிகாரவகராதி.

---



உ

சிவமயம்.

# திருமூலநாயனார்

# திருமந்திரம் - ௩௲.

## விநாயகர் காப்பு.

ஐந்து கரத்தனை யானை முகத்தனை
யிந்தி னிளம்பிறை போலு மெயிற்றனை
நந்தி மகன்றனை ஞானக் கொழுந்தினைப்
புந்தியில் வைத்தடி போற்றுகின் றேனே.

## சிறப்புப்பாயிரம்.

போற்றிசைத் தின்னுயிர் மன்னும் புனிதனை, நாற்றிசைக் கும்நல்ல மாதுக்கு நாதனை, மேற்றிசைக் குட்டென் றிசைக் கொரு வேந்தனுங், கூற்றுதைத் தானையான் கூறுகின் றேனே.

ஒன்றவன் றானே யிரண்டவ னின்னரு, ணின்றனன் மூன்றினு ணான்குணர்ந் தானைந்து, வென்றன னாறு விரிந்தன னேழும்பர்ச், சென்றவன் றானிருந் தானுணர்ந் தெட்டே. (௨)

ஒக்கநின் றானை யுலப்பிலி தேவர்க, ணக்குநின் றேத்திடு நாதனை நாடொறும், பக்கநின் றாறி யாத பரமனைப், புக்குநின் றுன்னியான் போற்றிசெய் வேனே. (௩)

அகலிடத் தார்மெய்யை யண்டத்து வித்தைப், புகலிடத் தெம்மெய்யைப் போதவிட் டானைப், பகலிடத் தும்மிர வும்பணிந் தேத்தி, யிகலிடத் தேயிருணீங்கிநின் றேனே. (௪)

சிவனொடொக்குந் தெய்வந் தேடினு மில்லை, யவனொடொப் பாரிங் கியாவரு மில்லை, புவனங் கடந்தன்று பொன்னொளி மின்னுந், தவளச் சடைமுடித் தாமரை யானே. (௫)

அவனை யொழிய வமரரு மில்லை, யவனன்றிச் செய்யு மருந்தவ மில்லை, யவனன்றி மூவரா லாவதொன் றில்லை, யவனன்றி யூர்புகு மாறறி யேனே. (௬)

முன்னையொப் பாயுள்ள மூவர்க்கு மூத்தவன், றன்னை யொப் பாயொன்று மில்லாத் தலைமகன், றன்னையப் பாவெனி லப்பனு மாயுளன், பொன்னையொப் பாகின்ற போதகத் தானே.

தீயினும் வெய்யன் புனலினுந் தண்ணிய, னாயினு மீச னருளறி வாரில்லை, சேயினு நல்ல னணியனல் லன்பர்க்குத், தாயினு நல்லனாற் றாழ்சடை யோனே. (௮)

பொன்னாற் புரிந்திட்ட பொற்சடை யென்னப், பின்னாற் பிறங்க விருந்தவன் பேர்நந்தி, யென்னாற் றொழப்படு மெம்மிறை மற்றவன், றன்னாற் றொழப்படு வாரில்லை தானே. (௯)

தானே யிருநிலந் தாங்கிவிண் ணாய்நிற்குந், தானே சுடுமங்கி ஞாயிறுந் திங்களுந், தானே மழைபொழி தையலு மாய்நிற்குந், தானே தடவரைத் தண்கட லாகுமே. (௧௦)

அயலும் புடையுமெம் மாதியை நோக்கி, லியலும் பெருந்தெய்வ மியாதுமொன் றில்லை, முயலு முயலில் முடிவுமற் றாங்கே, பெயலு மழைமுகிற் பேர்நந்தி தானே. (௧௧)

கண்ணுத லானொரு காதலி னிற்கவு, மெண்ணிலி தேவ ரிறந்தா ரெனப்பலர், மண்ணுறு வார்களும் வானுறு வார்களு, மண்ண லிவனென் றறியகி லார்களே. (௧௨)

மண்ணளந் தான்மல ரோன்முதற் றேவர்க, ளெண்ணளந் தின்ன நினைக்கிலா ரீசனை, விண்ணளந் தான்றன்னை மேலளந் தாரில்லை, கண்ணளந் தெங்குங் கடந்துநின் றானே. (௧௩)

கடந்துநின் றான்கம லம்மல ராதி, கடந்துநின் றான்கடல் வண்ணனெம் மாயன், கடந்துநின் றானவர்க் கப்புற மீசன், கடந்துநின் றானெங்குங் கண்டுநின் றானே. (௧௪)

ஆதியு மாயர னாயுட னுண்ணின்ற, வேதியு மாய்விரிந் தார்ந்திருந் தாரருட், சோதியு மாய்ச்சுருங் காததோர் தன்மையு, நீதியுமாய் நித்த மாகிநின் றானே. (௧௫)

கோதுகு லாவிய கொன்றைக் குழற்சடை, மாதுகு லாவிய வாணுதற் பாகனை, யாதுகு லாவி யமருந் தேவருங், கோதுகு லாவிக் குணம்பயில் வாரே. (௧௬)

காயமிரண்டுங் கலந்து கொதிக்கினு, மாயங் கத்தூரி யது மிகு மவ்வழி, தேசங் கலந்தொரு தேவனென் றெண்ணினு, மீச னுறவுக் கெதிரில்லை தானே. (௧௭)

அதிபதி செய்த வளகை வேந்தனை, நிதிபதி செய்த நிறைதவ நோக்கி, யதுபதி யாதரித் தாக்கம தாக்கி, யிதுபதி கொள்ளென்ற வெம்பெரு மானே. (௧௮)

இதுபதி யேலங் கமழ்பொழி லேழு, முதுபதி செய்தவன் மூதறி வாளன், விதுபதி செய்தவன் மெய்த்தவ நோக்கி, யதுபதி யாக வமருகின் றானே. (௧௯)

முடிவு பிறப்பையு முன்னே படைத்த, வடிக ளுறையு மரனெறி நாடி, லிடியு முழக்கமு மீச னுருவங், கடிமலர்க் குன்ற மலையது தானே. (௨௰)

வானப் பெருங்கொண்டன் மாலயன் வானவ, ரூனப் பிறவி யொழிக்கு மொருவனைக், கானக் களிறு கதறப் பிளந்தவெங், கோனைப் புகழுமின் கூடலு மாமே. (௨௧)

மனத்தி லெழுகின்ற மாயநன் னாடன், னினைத்த தறிவனெ னில்தா னினைக்கில, னெனக்கிறை யன்பில னெனப ரிறைவன், பிழைக்கநின் றார்பக்கம் பேணிநின் றானே. (௨௨)

வல்லவன் வன்னிக் கிறையிடை வாரணை, நில்லென நிற்பித்த நீதியு ளீசனை, யில்லென வேண்டா மிறையவர் தம்முத, லல்லும் பகலு மருளுகின் றானே. (௨௩)

போற்றிசைத் தும்புகழ்ந் தும்புனி தன்னடி, தேற்றுமி னென்றுஞ் சிவனடிக் கேசெல்வ, மாற்றிய தென்று மயலுற்றுச் சிந்தையை, மாற்றிநின் றார்வழி மன்னிநின் றானே. (௨௪)

பிறப்பிலி பிஞ்ஞகன் பேரரு ளாள, னிறப்பிலி யாவர்க்கு மின்ப மருளுந், துறப்பிலி தன்னைத் தொழுமின் றொழுதான், மறப்பிலி மாயா விருத்தமு மாமே. (௨௫)

தொடர்ந்துநின் றானைத் தொழுமின் றொழுதாற், படர்ந்துநின் றான்பரி பாரக முற்றுங், கடந்துநின் றான்கம லம்மலர் மேலே, யுடந்திருந் தானடிப் புண்ணிய மாமே. (௨௬)

சந்தி பெனத்தக்க தாமரை வாண்முகத், தந்தமி லீசனை ருணமக் கேயென்று, நந்தியை நாளும் வணங்கப் படுமவர், புத் தியி னுள்ளே புகுந்துநின் றானே. (உள)

இணங்கிநின் றானெங்கு மாகிநின் றானும், பிணங்கிநின் றான்பின்முன் னாகிநின் றானு, முணங்கிநின் றானம ராபதி, நாதன், வணங்கிநின் றார்க்கே வழித்துணை யாமே. (உ அ)

காணநில் லாயடி யேற்குற வாருள்ள, நாணநில் லேனுன் னைநான்ற மூவிக்கொள்ளக், சோணநில் லாத குணத்தடி யா ரிமனத்தாணிய னாகி யமர்ந்துநின் றானே. (உகூ)

வானின் றழைக்கு மழைபோ லிறைவனுந், தானின் றழைக்குங்கொல் லென்று தயங்குவா, ரானின் றழைக்கு மதுபோ லென் னந்தியை, நானின் றழைப்பது ஞாலங் கரியே. (௩0)

மண்ணகத் தானொக்கும் வானகத் தானொக்கும், விண்ண கத் தானொக்கும் வேதத்தி னொக்கும், பண்ணகத் தின்னிசைப் பாடலுற் றானுக்கே, கண்ணகத் தேநின்று காதலித் தேனே.

தேவர் பிரானம் பிரான்றிசை பத்தையு, மேவுபி ரான்வி ரிநீருல கேழையுந், தாவுபி ரான்றன்மை தானறி வாரில்லை, பா வுபி ரானருட் பாடலு மாமே. (௩உ)

பதிபல வாவது பண்டிவ் வுலகம், விதிபல செய்தொன்று மெய்ம்மை யுணரார், துதிபல தோத்திரஞ் சொல்லவல் லாரு, மதியிலர் நெஞ்சினுள் வாடுகின் றாரே. (௩௩)

சாந்து கமழுங் கவரியின் கந்தம்போல், வேந்த னமரர்க் கருளிய மெய்ந்நெறி, யார்ந்த சுடரன்ன வாயிர நாமமும், போந்து மிருந்தும் புகழவென் றானே. (௩௪)

ஆற்றுகி லாவழி யாரு மிறைவனைப், போற்றுமின் போற்றிப் புகழ்மின் புகழ்ந்திடில், மேற்றிசைக் குங்கிழக் குத்திசை யெட்டுக்கு, மாற்றுவ னப்படி மாடமு மாமே. (௩௫)

அப்பனை நந்தியை யாரா வமுதினை, யொப்பிலி வள்ளலை
யூழி முதல்வனை, யெப்பரி சாயினு மேத்துமி னேத்தினா, லப்ப
ரி சீச னருள்பெற லாமே. (௩௬)

நானுநின் றேத்துவ னாடொறு நந்தியைத், தானுநின் றான்
றழற் போலொக்கு மேனியன், வானுநின் றார்மதி போலுட லு
ள்ளுவந், தூனினின் றாங்கே யுயிர்க்கின்ற வாறே. (௩௭)

பிதற்றொழி யேன்பெரி யானரி யானைப், பிதற்றொழி யே
ன்பிற வாவுரு வானைப், பிதற்றொழி யேனெங்கள் பேர்நந்தி த
ன்னைப், பிதற்றொழி யேன்பெரு மைத்தவன் றானே. (௩௮)

வாழ்த்தவல் லார்மனத் துள்ளுறு சோதியைத், தீத்தனை
யங்கே திலக்கின்ற தேவனை, யேத்தியு மெம்பெரு மானென்
றிறைஞ்சியு, மாத்தஞ்செய் தீச னருட்பெற லாமே. (௩௯)

குறைந்தடைந் தீசன் குறைகழ லாடி, நிறைந்தடை செம்
பொனி னேரொளி பொக்கு, மறஞ்சடஞ் செய்யாது வாழ்த்
தவல்லார்க்குப், புறஞ்சடஞ் செய்யான் புகுந்துநின் றானே.

சினஞ்செய்த நஞ்சுண்ட தேவர் பிரானைப், புனஞ்செய்த
நெஞ்சிடைப் போற்றவல்லார்க்குக், கனஞ்செய்த வாளுதற்
பாகனு மங்கே, யினஞ்செய்த மான்போ லிணங்கிநின் றானே.

போயரன் றன்னைப் புகழ்வார் பெறுவது, நாயக னான்மு
டி செய்தது வேநல்கு, மாயகஞ் சூழ்ந்து வரவல்ல ராகிலும்,
வேயன தோளிக்கு வேந்தொன்றுந் தானே. (௪௨)

அரனடி சொல்லி யரற்றி யழுது, பரனடி நாடியே பாவி
ப்ப நாளு, முரனடி செய்தங் கொதுங்கவல் லார்க்கு, நிரனடி
செய்து நிறைந்துநின் றானே. (௪௩)

போற்றியென் யாரம ரர்புனி தன்னடி, போற்றியென்
பா ரசுரர்புனி தன்னடி, போற்றியென் பார்மனி தர்புனி தன்
னடி, பொற்றியென் னன்புள் விளங்கவைத் தேனே. (௪௪)

விதிவழி யல்லதிவ் வேலை யுலகம், விதிவழி யின்பம் விரு
த்தமு மில்லை, துதிவழி நிற்றலுஞ் சோதிப்பிரானும், பதிவழி

காட்டும் பகலவ னாமே. (சரு)

அந்திவண் ணாவரனே சிவனே யென்று, சிந்தைசெய் வண்ணந் திருந்தடி யார்தொழ,முந்திவண் ணாமுதல் வாபர னேயென்று, வந்திவ் வண்ணமெனம் மனம்புகுந் தானே. (சசு)

மனையி லிருந்தவர் மாதவ ரொப்பர், நினைவு ளிருந்தவர் நேசத்து ணிற்பர், பனையு ளிருந்த பருந்தது போல, நினையா தவர்க்கில்லை நின்னின்பந் தானே. (சஎ)

அடியார் பரவு மமரர் பிரானை, முடியால் வணங்கி முதல்வனை முன்னிப், படியா ருளும் பரம்பர னெந்தை, விடியா விளக்கென்று மேவிநின் றானே. (சஅ)

பசுபசு பாசத்து தாதனை யுள்ளி, வசுபசு பாசத் தொருங்கவல் லார்க்குத், திரைபசு பாசச் செழுங்கட னீந்திக், கரைபசு பாசங் கடந்தெய்த லாமே. (சகூ)

சூடுவ னெஞ்சிடை வைப்பன் பிரானென்று, பாடுவன் பன்மலர் தூவித் தொழுதுநின், றாடுவ னாடி யமரர் பிரானென்று, நாடுவ னானின் றறிவது தானே. (ருo)

---

## வேதச்சிறப்பு.

வேதத்தை விட்ட வறமில்லை வேதத்தி, னோதத் தகுமற மெல்லா முளதர்க்க, வாதத்தை விட்டு மதிஞர் வளமுற்ற, வேதத்தை யோதியே வீடுபெற் றார்களே. (க)

வேத முரைத்தானும் வேதிப னாகிலன், வேத முரைத்தானும் வேதா விளங்கிட, வேத முரைத்தானும் வேதியர் வேள்விக்காய், வேத முரைத்தானு மெய்ப்பொருள் காட்டவே. (உ)

இருக்குரு வாமெழில் வேதத்தி னுள்ளே, யுருக்குணர் வாயுணர் வேதத்து ளோங்கி, வெருக்குரு வாகிய வேதியர் சொல்லுங், கருக்குரு வாய்நிறை கண்ணனு மாமே. (ங)

திருநெறி யாவது சித்தசித் தன்றிப், பெருநெறி யாய பிரா

லை நினைந்து, குருநெறி யாஞ்சிவ மாநெறி கூடு, மொருநெறி யொன்றாக வேதாந்த மோதுமே. (௪)

ஆறங்க மாய்வரு மாமறை, யோதியைக், கூறங்க மாகக் குணம்பயில் வாரில்லை, வேறங்க மாக விளைவுசெய் தப்புறம், பேறங்க மாகப் பெருக்குகின் றாரே. (௫)

பாட்டு மொலியும் பறக்குங் கணிகையா, ராட்ட மருத வவனியின் மாட்டாத, வேட்டு விருப்பார் விரதமில் லாதவ, ரீட்டிடஞ்சென் றிகலலுற் றாரே. (௬) ஆ. ௫௬.

---

## ஆகமச்சிறப்பு.

அஞ்சன மேனி யரிவையோர் பாகத்த, னஞ்சொ டிருபத்து மூன்றுள வாகம, மஞ்சலி கூப்பி யறுபத் தறுவரு, மஞ்சா முகத்தி லரும்பொருள் கேட்டதே. (௧)

அண்ண லருளா லருளுஞ் சிவாகம மெண்ணி லிருபத்தெண் கோடி நூ றாயிரம், விண்ணவ ரீசன் விழுப்ப முரைத்தனர், ரண்ணிநின் றப்பொரு ளேத்தவ னானே. (௨)

பண்டித ராவார் பதினெட்டுப் பாடையுங், கண்டவர் கூறுங் கருத்தறி வாரென்க, பண்டிதர் தங்கள் பதினெட்டுப் பாடையு, மண்ட முதலா னரன்சொன்ன வாறே. (௩)

அண்ண லருளா லருளுந் திவ்யாகமம், விண்ணி லமரர் தமக்கும் விளங்கரி, தெண்ணி லெழுபது கோடிநூ றாயிர, மெண்ணிலு நீர்மே லெழுத்தது வாகுமே. (௪)

பரனாய்ப் பராபரங் காட்டி யுலகிற், றரனாய் சிவதன்மந் தானேசொல் காலத்,தரனு யமரர்க ளர்ச்சிக்கு நந்தி, யுரனாகி யாகம மோங்குகின் றானே. (௫)

சிவமாம் பரத்தினிற் சத்தி சதாசிவ, முவமா மகேச ருருத்திர தேவர், தவமால் பிரமீசர் தம்மிற்றாம் பெற்ற, நவவாகமமெங்க ணந்திபெற் றானே. (௬)

பெற்றநல் லாகமங் காரணங் காமிக, முற்றநல் வீர முயர்

வா துளஞ்சிந் திய, மற்றவ் வியாமள மாகுங்கா லோத்திரந், துற்றநற் சுப்பிரஞ் சொல்லு மகுடமே. (எ)

அண்ண லருளா லருளுஞ் சிவாகமம், மெண்ணிலி கோடி தொகுத்திடு மாயின், மண்ண லறைந்த வறிவறி யாவிடி, னெண்ணிலி கோடியு நீர்மே லெழுத்தே. (அ)

மாரியுங் கோடையும் வார்பனி தூங்கநின், றேரியு நின்றங் கிளக்கின்ற காலத்து, வாரிய முந்தமி ழும்முட னேசொல்லிக், காரிகை யார்க்குங் கருணைசெய் தானே. (௯)

[illegible]ழ்க்கின்ற வாறு மதுகிட்டு மாறுஞ், சிமிட்டலைப் பட்டுயிர் போகின்ற வாறுந், தமிழ்ச்சொல் வடசொல் லெனுமிவ் விரண்டு, முணர்த்து மவனை யுணரலு மாமே. (௧௦) ஆ. ௬௬.

---

## குருபாரம் பரியம்.

நந்தி யருள்பெற்ற நாதரை நாடிடி, னந்திக ணால்வர் சிவயோகம மாமுனி, மன்று தொழுத பதஞ்சலி வியாக்ரம, ரென்றிவ ரென்னோ டெண்மரு மாமே. (௧)

நந்தி யருளாலே நாதனும் பேற்பெற்றோம், நந்தி யருளாலே மூலனை நாடினோம், நந்தி யருளாவ தென்செயு நாட்டினில், நந்தி வழிகாட்ட நானிருந் தேனே. (௨)

மந்திரம் பெற்ற வழிமுறை மாலாங்க, னிந்திரன் சோமன் பிரம னுருத்திரன், கந்துருக் காலாங்கி கஞ்ச மலையனோ, டிந்த வெழுவரு மென்வழி யாமே. (௩)

நால்வரு நாலு திசைக்கொன்று நாதர்க, ணால்வரு நானுவிதப்பொருள் கைக்கொண்டு, நால்வரு நான்பெற்ற தெல்லாம் பெறுகென, நால்வருந் தேவராய் நாதரா னார்களே. (௪)

மொழிந்தது மூவர்க்கு நால்வர்க்கு மீச, னொழிந்த பெருமை யிறப்பும் பிறப்புஞ், செழுஞ்சுடர் மூன்றொளி யாகிய தேவன், கழிந்த பெருமையைக் காட்டகி லானே. (௫)

எழுந்துநீர் பெய்யினு மெட்டுத் திசையுஞ், செழுக்க ணியமங்கள் செய்மினென் றண்ணல், கொழுந்தண் பவளக் குளிர்சடை யோடே, யழுந்திய நால்வர்க் கருள்புரிந் தானே. (௬)

ஆக ௭௨.

---

திருமூலர் வரலாறு.

நந்தி யிணையடி நான்றலை மேற்கொண்டு, புந்தியி னுள்ளே புகப்பெய்து போற்றிசெய், தந்தி மதிபுனை யரனடி நாடொறுஞ், சிந்தைசெய் தாகமஞ் செப்பலுற் றேனே. (௧)

செப்புஞ் சிவாகம மென்னுமப் பேர்பெற்று, வ[illegible] நல் குமருணந்தி தாள்பெற்று, தப்பிலா மன்றிற் றனிக்கூத்துக் கண்டபி, னொப்பி லெழுபதுகோடி யுகமிருந் தேனே. (௨)

இருந்தவக் காரணங் கேளிந் திரனே, பொருந்திய செல்வப் புவனா பதியை, யருந்தவச் செல்வியைச் சேவித் தடியேன், பரிந்துடன் வந்தனன் பத்தியி னாலே. (௩)

சதாசிவந் தத்துவ முத்தமிழ் வேத, மிதாசனி யாதிருந் தேநின்ற காலை, மிதாசனி யாதிருந் தேன்மன நீங்கி, யுதாசனி யாதுட னேயுணர்ந் தோமால். (௪)

மாலாங்க னேயிங் கியான்வந்த காரண, நீலாங்க மேனி நேரிழை யாளொடு, மூலாங்க மாக மொழிந்த திருக்கூத்தின், சீலாங்க வேதத்தைச் செப்பவந் தேனே. (௫)

நேரிழை யாவா ணிரதிச யானந்தப், பேருடை யாளென், பிறப்பறுத் தாண்டவள், சீருடை யாள்சிவ னாவடு தண்டுறை சீருடை யாள்பதஞ் சேர்ந்திருந் தேனே. (௬)

சேர்ந்திருந் தேன்சிவ மங்கைதன் பங்கனைச், சேர்ந்திருந் தேன்சிவ னாவடு தண்டுறை, சேர்ந்திருந் தேன்சிவ போதியி னீழலிற், சேர்ந்திருந் தேன்சிவ னாமங்க ளோதியே. (௭)

இருந்தேனிக் காயத்தே யெண்ணிலி கோடி, யிருந்தே னிராப்பக லற்ற விடத்தே, யிருந்தே னிமையவ ரேத்தும் பதத்தே, யிருந்தேனென் னந்தி யிணையடிக் கீழே. (௮)

பின்னைநின் றென்னே பிறவி பெறுவது, முன்னைநன் றாக முயல்தவஞ் செய்கிலீ, ரென்னைநன் றாக விறைவன் படைத்தனன், றன்னைநன் றாகத் தமிழ்ச்செய்யு மாறே. (௯)

ஞானத் தலைவிதன் னந்தி நகர்புக்கு, வூனமி லொன்பது கோடி யுகந்தனுள், ஞானப்பா லாட்டி நாதனை யர்ச்சித்து, யானு மிருந்தேனற் போதியின் கீழே. (௰)

செல்கின்ற வாறறி சிவமுனி சித்தசன், வெல்கின்ற ஞானத்து மிக்கோர் முனிவராய்ப், பல்கின்ற தேவர் சுரர்நரர் தம்பா, லொல்கின்ற வான்வழி யூடுவந் தேனே. (௧௧)

சத்தத்தி னுள்ளே சிறக்கின்ற நூல்களி, னுத்தம மாகவே யோதிய வேதத்தி, னொத்த வுடலையு முண்ணின்ற வுற்பத்தி, யத்த னெனக்கிங் கருளா லளித்ததே. (௧௨)

நான்பெற்ற வின்பம் பெறுகவிவ் வையகம், வான்பற்றி நின்ற மறைப்பொருள் சொல்லவு, மூன்பற்றி நின்ற வுணர்வுறு மந்திரந், தான்பற்றப் பற்றத் தலைப்படுந் தானே. (௧௩)

பிறப்பிலி நாதனைப் பேர்நந்தி தன்னைச், சிறப்பொடு வானவர் சென்றுகை கூப்பி, மறப்பிலர் நெஞ்சினுண் மந்திர மாலை, யுறைப்பொடு கூடிநின் றோதலு மாமே. (௧௪)

அங்கி மிகாமைவைத் தானுடல் வைத்தா, னெங்கு மிகாமைவைத் தானுல கேழையுந், தங்கி மிகாமைவைத் தான்றமிழ்ச் சாத்திரம், பொங்கி மிகாமைவைத் தான்பொரு டானுமே.

அடிமுடி காண்பா ரயன்மா லிருவர், படிகண் டிலர்மீண்டும் பார்மிசைக் கூடி, யடிகண் டிலனென் றச்சுதன் சொல்ல, முடிகண்ட னென்றயன் பொய்மொழிந் தானே. (௧௬)

பெற்றமு மானு மழுவும் பிரிவற்ற, தற்பரன் கற்பனை யாகுஞ் சராசரத், தற்றமு நல்கி யடியேன் சிரத்தினி, னற்பத முமளித் தானெங்க ணந்தியே. (௧௭)

ஞேயத்தை ஞானத்தை ஞாதுரு வத்தினை, மாயத்தை மா மாயை தன்னில் வரும்பரை, யாயத்தை யச்சிவன் றன்னை யகோ

சர, வியத்தை முற்றும் விளங்கியிட் டேனே. (சஅ)

விளங்கிப் பரமாகு மெய்ஞ்ஞானச் சோதி, யளப்பில் பெருமைய ளுனந்த நந்தி, துளக்கறு மானந்தக் கூத்தன்சொற் போந்து, வளப்பிற் கயிலை வழியில்வந் தேனே. (சக)

நந்தி யருளாலே மூலனை நாடிப்பின், னந்தியருளாலே சதாசிவ னாயினே, னந்தி யருளாலேமெய்ஞ் ஞானத்து நண்ணினே, னந்தி யருளாலே நானிருந் தேனே. (உ0)

இருக்கி லிருக்கு மெண்ணிலி கோடி, யருக்கின்ற மூலத்துளங்கே யிருக்கு, மருக்கனுஞ் சோமனு மாரழல் வீச, வுருக்கி யுரோம மொளிவிடுந் தானே. (உக)

பிதற்றுகின் றேனென்றும் பேர்நந்தி தன்னை, யியற்றுவ னெஞ்சத் திரவும் பகலு, முயற்றுவ னோங்கொளி வண்ணனெம் மானை, யியற்றிகழ் சோதி யிறைவனு மாமே. (உஉ) ஆ கூசு

---

## அவையடக்கம்.

ஆரறிவா ரெங்க ளண்ணல் பெருமையை, யாரறிவா ரிந்த வகலமு நீளமும், பேரறி யாத பெருஞ்சுட ரொன்றதின், வேரறி யாமை விளம்புகின் றேனே. (க)

பாடவல் லார்நெறி பாட வறிகிலே, னாடவல் லார்நெறி யாட வறிகிலே, னாடவல் லார்நெறி ஞான மறிகிலேன், றேடவல் லார்நெறி தேடகில் லேனே. (உ)

மன்னிய வாய்மொழி யாலு மதித்தவ, ரின்னிசை யுள்ளே யெழுகின்ற வீசனைப், பின்னை யுலகம் படைத்த பிரமனு, முன்னி யவனை யுணரலு மாமே. (ங)

தத்துவ ஞான முணர்த்துத் தாழ்வரை, முத்திக் கிருந்த முனிவருந் தேவரு, மொத்துடன் வேறு யிருந்து துதிசெய்யும், பத்திமை யானிப் பயனறி யாரே. (ச) ஆ கூஅ

### திருமந்திரத் தொகைச்சிறப்பு.

மூல னுரைசெய்த மூவாயிரந் தமிழ்,ஞால மறியவே நந்தி யருளது,காலை யெழுந்து கருத்தறிந் தோதிடின், ஞாலத் தலைவனை நண்ணுவ ரன்றே. (க)

வைத்த பரிசே வகைவகை நன்னூலின், முத்தி முடிவிது மூவாயிரத்திலே, புத்திசெய் பூர்வத்து மூவாயிரம் பொது வைத்த சிறப்பு தருமிவை தானே. (உ) ஆ கஎ0.

---

### குருமட வரலாறு.

வந்த மடமேழு மன்னுஞ்சன் மார்க்கத்தின், முந்தி யுதிக்கின்ற மூலன் மடவரை, தந்திரமொன்பது சார்வுமூ வாயிரஞ் சுந்தர வாகமச் சொன்மொழிந் தானே. (க)

கலந்தருள் காலாங்கர் தம்பாற் கோரர், நலந்தரு மன்னிய தேவர்நா தாந்தர், புலங்கொள் பரமா னந்தர் போகதேவர், நிலந்திகழ் மூலர் நிராமயத் தோரே. (உ) ஆ கஎஉ.

---

### திரிமூர்த்திகளின் சேட்டகனிட்ட முறைமை.

அளவி லிளமையு மந்தமு மீறு, மளவியல் காலமு நாளு முணரிற், றளர்விலன் சங்கரன் றன்னடி யார்சொல், லளவிற் பெருமை யரியயற் காமே. (க)

ஆதிப் பிரானு மணிமணி வண்ணனு, மாதிக் கமலத் தலர்மிசை யாயனுஞ், சோதிக்கில் மூன்றுந் தொடர்ச்சியி லொன்றெனார், பேதித் துலகம் பிணங்குகின் றார்களே. (உ)

ஈச னிருக்கு மிருவினைக் கப்புறம், பீச முலகிற் பெருந்தெய்வ மானது, வீச னதுவிது வென்பார் நினைப்பிலார், தூசு பிடித்தவர் தூரறிந் தார்களே. (ங)

சிவமுதல் மூவரோ டைவர் சிறந்த, வவைமுத லாறிரண் டொன்றொடொன் றாகு, மவைமுதல் விந்துவு நாதமு மோங்கச், சவைமுதற் சங்கரன் றன்பெயர் தாமே. (௪)

பயனறிந் தவ்வழி யெண்ணு மளவி,லயனொடு மானமக் கன்னிய மில்லை, நயனங்கள் மூன்றுடை நந்தித் தமராம், வயன் பெறு வீரவ் வானவ ராலே. (௫)

ஓலக்கஞ் சூழ்ந்த வுலப்பிலி தேவர்கள்,பாலொத்த மேனிப் பணிந்தடி யேன்றொழ, மாலுக்கு மாதிப் பிரமற்கு மொப்புநீ, ஞாலத்து நம்மடி நல்கிடென் றானே. (௬)

வானவ ரென்று மனித ரிவரென்றுந்,தேனமர் கொன்றைச் சிவனரு ளல்லது, தானமர்ந் தோருந் தனித்தெய்வ மற்றில்லை, யூனமர்ந் தோரை யுணர்வது தானே. (௭)

சோதித்த பேரொளி மூன்றைந் தெனநின்ற, வாதுக்கு ளாவ தறிகிலா தார்க, ளோதிக்க ணீச னெடுமா லயனென்று, பேதித்தவரைப் பிதற்றுகின் றாரோ. (௮)

பரத்திலே யொன்று யுள்ளாய்ப் புறமாகி, வரத்தினுண் மாயவ னாயய னாகித், தரத்தினுட் டான்பல தன்மயனாகிக், கரத்தினு ணின்று கழிவுசெய் தானே. (௯)

தானொரு கூறு சதாசிவ னெம்மிறை, வானொரு கூறு மருவியு மங்குளன், கோனொரு கூறுட லுண்ணின் றுயிர்க்கின்ற, தானொரு கூறு சலமய னாமே. (௧௦)

ஆ அதிகாரம் - ௯ - இ - பாடல் - ௧௧௨.
சிறப்புப்பாயிரம் - முற்றும்.

---

## முதற்றந்திரம்.

உபதேசம்.

விண்ணின் றிழிந்து வினைக்கீடாய் மெய்கொண்டு,தண்ணின்ற தாளைத் தலைக்காவல் முன்வைத்து, வுண்ணின் றுருக்கியொ ரொப்பிலா வானந்தக், கண்ணின்று காட்டிக் களிம்பறுத் தானே. (௧)

களிம்பறுத் தானெங்கள் கண்ணுதல் நந்தி, களிம்பறுத்

தானருட் கண்விழிப் பித்தூக், களிம்பணு காத சதிரொளி கா ட்டிப், பளிங்கிற் பவளம் பதித்தான் பதியே. (உ)

பதிபசு பாச மெனப்பகர் மூன்றிற், பதியினைப்போற்ப சு பாச மநாதி, பதியினைச் சென்றணு காப்பசு பாசம், பதிய ணு கிற்பசு பாச நிலாவே. (ங)

வேயி னெழுங்கனல் போலேயிம் மேனியுங், கோயி லிருந் து குடிகொண்ட கோனந்தி, தாயினு மும்மல மாற்றித் தயாவெ ன்னுந், தோயம தாயெழுஞ் சூரிய னாமே. (ச)

சூரிய காந்தமுஞ் சூழ்பஞ்சும் போலவே, சூரிய காந்த ஞ் சூழ்பஞ்சைச் சுடமாட்டாச், சூரியன் சந்நிதி யிற்சுடு மாறு போ, லாரியன் றோற்றமு னற்ற மலங்களே. (ரு)

மலங்களைந் தாமென மாற்றி யருளித், தலங்களைந் தான த் சதாசிவ மான, புலங்களைந் தானப் பொதுவினு ளந்தியே, நலங்களைந் தானுண் ணபந்தா னறிந்தே. (சு)

அறிவைம் புலனுட னேநான் றதாகி, நெறியறி யாதுற்ற நீ ராழ்போல, வறிவறி வுள்ளே யழிந்தது போலக், குறியறி விப் பான் குருபர னாமே. (எ)

ஆமேவு பாலைப் பிரிக்கின்ற வன்னம்போற், றமே தனிமன் றிற் றன்னந் தனிநிந்தந், திமேவு பல்கர ணங்களு ளுற்றன, தா மே பிறப்பெரி சேர்ந்தவித் தாமே. (அ)

வித்தைக் கெடுத்து வியாக்கிரத் தேமிகச், சுத்தத் துரியம் பிறந்து துடக்கற்று, வொத்துப் புலனுயி ரொன்று யுடம்பொடு, செத்திட் டிருப்பர் சிவயோ கியர்களே. (கூ)

சிவயோக மாவது சித்தசித் தன்று, தவயோகத் துட்புக் குத் தன்னொளி தாய, தவயோகஞ் சாராத வன்பதி போக, ந வயோக நந்தி தனக்களித் தானே. (க0)

அளித்தா னுலகெங்குந் தானான வுண்மை, யளித்தா னமர ரறியா வுலக, மளித்தான் றிருமன்று ளாடுந் திருத்தா, னளித்

தான் பேரின்பத் தருள்வெளி தானே. (கக)

வெளியின் வெளிபோய் விரவிய வாறு, மளியி னளிபோ யடங்கிய வாறு, மொளியி னொளிபோ யொடுங்கிய வாறுந், தெ ளியு மவரே சிவசித்தர் தாமே. (கஉ)

சித்தர் சிவலோக மிங்கே தெரிசித்தோர், சுத்தமுஞ் சத்த மனமுந் தமிழ்கொண்டோர், நித்தர் நிமலர் நிராமயர் நீள்பர, முத்தர்த முத்தி முதல்முப்பத் தாறே. (கங)

முப்பது மாறும் படிமுத்தி யேணியா, யொப்பிலா வான ந்தத் துள்ளொளி புக்குச், செப்ப வரிய சிவங்கண்டு நான்றெ ளிந், தப்பரி சாக வமர்ந்திருந் தாரே. (கச)

இருந்தார் சிவமாகி யெங்குந் தாமாகி, யிருந்தார் சிவன் செயலியாவையு நோக்கி, யிருந்தார் முக்காலத் தியல்பைக் கு றித்தங், கிருந்தா ரிழவுவந் தெய்திய சோம்பே. (கரு)

சோம்ப ரிருப்பது சுத்த வெளியிலே, சோம்பர் கிடப்பது சுத்த வொளியிலே, சோம்ப ருணர்வு சுருதி முடிந்திடஞ், சோ ம்பர்கண் டாரச் சுருதிக்கட் டூக்கமே. (கசு)

தூங்கிக்கண் டார்சிவ லோகமுந் தம்முள்ளே, தூங்கிக்கண் டார்சிவ யோகமுந் தம்முள்ளே, தூங்கிக்கண் டார்சிவ போக முந் தம்முள்ளே, தூங்கிக்கண் டார்நிலை சொல்வதெவ் வாறே.

எவ்வாறு காண்பா னறிவு தனக்கெல்லை, யவ்வா றருட் செய்வா னாதியான் றானு, மொவ்வாத மன்று ளுமைகாண வா டுஞ், செவ்வானிற் செய்ய செழுஞ்சுடர் மாணிக்கம். (கஅ)

மாணிக்கத் துள்ளே மரகதச் சோதியாய், மாணிக்கத் து ள்ளே மரகத மாடமா, யாணிப்பொன் மன்றினி லாடுந் திருக் கூத்தைப், பேணித் தொழுதென்ன பேறுபெற் றாரே. (கக)

பெற்றா ருலகிற் பிரியாப் பெருநெறி, பெற்றா ருலகிற் பிற வரப் பெரும்பயன், பெற்றாரம் மன்றிற் பிரியாப் பெரும்பேறு, பெற்றா ருலகுடன் பேசாப் பெருமையே. (உ0)

பெருமை சிறுமை யறிந்தெம் பிரான்போ, லருமை யெளிமை யறிந் தறிவாரா, ரொருமையு ளாமைபோ லுள்ளைந் தடக்கி, யிருமையுங் கேட்டிருந் தார்புறை யற்றே. (உச)

புரையற்ற பாலினு ணெய்கலந் தாற்போற், றிரையற்ற சிந்தையு ளாரிய னென்செப்பு, முரையற் றுணர்வோ ருடம்பிங் கொழிந்தாற், கரையற்ற சோதி கலந்தசத் தாமே. (உஉ)

சத்த முதலைந்துந் தன்வழித் தான்சாரிற், சித்துக்குச் சித்தன்றிச் சேர்விடம் வேறுண்டோ, சுத்த வெளியிற் சுடரிற் சுடர்சேர்ந், மத்த மிதுகுறித் தாண்டுகொ ளப்பிலே. (உங)

அப்பினிற் கூர்மை யாதித்தன் வெம்மையா, லுப்பெனப் பேர்பெற் றுருச்செய்த தவ்வுரு, வப்பினிற் கூடிய தொன்றாகு மாறுபோற், செப்பினிற் சீவன் சிவத்து ளடங்குமே. (உச)

அடங்குபே ரண்டத் தணுவண்டஞ் சென்றங், கிடங்கொண்ட தில்லை யிதுவன்றி வேறுண்டோ, கடந்தொறு நின்ற வுயிர்கரி காணிற், றிடம்பெற நின்றான் றிருவடி தானே. (உரு)

திருவடி யேசிவ மாவது தேரிற், றிருவடி யேசிவ லோகஞ் சிந்திக்கிற், றிருவடியேசெல் கதியது செப்பிற், றிருவடி யே தஞ்ச முட்டெளி வார்க்கே. (உசு)

தெளிவு குருவின் றிருமேனி காண்டல், தெளிவு குருவின் றிருநாமஞ் செப்பல், தெளிவு குருவின் றிருவார்த்தை கேட்டல், தெளிவு குருவுரு சிந்தித்த றானே. (உஎ)

தானே புலனைந்துந் தன்வச மாயிடுந், தானே புலனைந்துந் தன்வசம் போயிடுந், தானே புலனைந்துந் தன்னில் மடைமாறும், தானே தனித்தெம் பிரான்றனைச் சந்தித்தே. (உஅ)

சந்திப்பது நந்தி தன்றிருத் தாளிணை, சந்திப்பது நந்தி செய்ய திருமேனி, வந்திப்பது நந்தி நாமமென் வாய்மையாற், புந்திக்குள் நிற்பது நந்திபொற் போதமே. (உகூ)

போதந் தருமெங்கள் புண்ணிய நந்தியைப், போதந்தனில்

வைத்துப் புண்ணிய ராயுளார், நாத னடித்தா ணயனங் களிகூ ர, வேதந் துதித்திடப் போயடைந் தார்விண்ணை. (௩௰)

ஆக ௱௪௨

---

யாக்கைநிலையாமை.

மண்ணொன்று கண்டீ ரிருவினைப் பாத்திரந், திண்ணென் றிருந்தது தீயினைச் சேர்ந்தது, விண்ணின்று நீர்விழின் மீண்டு மண் ணாம்போ, லெண்ணின்ற மாந்த ரிறக்கின்ற வாறே. (க)

பண்டம்பெய் கூரை பழகி விழுந்தலா, லுண்டவப் பெ ண்டிரு மக்களும் பின்செலார், கொண்ட விரதமு ஞானமு மல் லது, மண்டி யவருடன் வழிநட வாதே. (உ)

ஊரெலாங் கூடி யொலிக்க வழுதிடப், பேரினை நீக்கிப் பி ணமென்று பேரிட்டுச், சூரையங் காட்டிடை கொண்டுபோய்ச் சுட்டிட்டு, நீரினில் மூழ்கி நினைப்பொழிந் தார்களே. (ந)

காலு மிரண்டு முகட்டல கொன்றுள, பாலுள் பருங்கழி முப்பத் திரண்டுள, மேலுள கூரை பிரியும் பிரிந்தபின், போவுயி ர் மீளப் புகவறி யாதே. (ச)

சீக்கை விளைந்தது செய்வினை மூட்டிற்ற, வாக்கை பிரிந்த தலகு பழுத்தது, மூக்கினிற் கைவைத்து மூட்டிடுக் கொண்டு போய்க், காக்கைக்குக் கைபலி காட்டிய வாறே. (ரு)

அடப்பண்ணி வைத்தா ரடிசிலை யுண்டார், மடக்கொடி யாரொடு மந்தணங் கொண்டா, ரிடப்பக்க மேயிறை நேர்ந்த தே யென்றார், கிடக்கப் படுத்தார் கிடந்தொழிந் தாரே. (சு)

மன்றத்தே நம்பிக்கு மாட மெடுத்தது, மன்றத்தே நம்பி சிவிகைபெற் றேறினான், மன்றத்தே நம்பிமுக் கோடி வழங்கி னான், சென்றத்தா வென்னத் திரிந்திலன் றானே. (எ)

வாசந்தி பேசி மணம்புணர்ந் தப்பதி, நேசந் தெவிட்டி நி னைப்பொழி வார்பின்னை, யாசந்தி மேல்வைத் தமைய வழுதி ட்டுப், பாசந்தி சுட்டுப் பலியட்டி னார்களே. (அ)

கைவிட்டு நாடிக் கருத்தழிந் தச்சற, நெய்யட்டிச் சோறு
ணு மைவரும் போயினர், மையிட்ட கண்ணாளு மாடு மிருக்க
வே, மெய்விட்டுப் போக விடைகொள்ளு மாறே. (௯)

பந்தற் பிரிந்தது பண்டாரங் கட்டற்ற, ஒன்பது வாசலு
மொக்க வடைந்தன, துன்புறு காலந் துரிசுவர் மேன்மே, லன்
புடை யார்க ளழுதகன் றார்களே. (௧௦)

நாட்டுக்கு நாயக னம்மூர்த் தலைமகன், காட்டுச் சிவிகை
யொன் றேறிக் கடைமுறை, நாட்டார்கள் பின்செல்ல முன்
னே பறைகொட்ட, நாட்டுக்கு நம்பி நடக்கின்ற வாறே. (௧௧)

முப்பது முப்பது முப்பத் தறுவருஞ், செப்ப மதிளுடைக்
கோயிலுள் வாழ்பவர், செப்ப மதிளுடைக் கோயிற் சிதைந்தபி
ன், ஒக்க வனைவரு மோட்டெடுத் தாரே. (௧௨)

மதுவூர் குழலியு மாடு மனையு, மிதுவூ ரொழிய விமானம
தேறிக், பொதுவூர் புறஞ்சுடு காடது நோக்கி, மதுவூர் வாங்கி
யே வைத்தகன் றார்களே. (௧௩)

வைச்சகல் வுற்றது கண்டு மனிதர்க, ளச்சக லாதென நா
டு மரும்பொருள், விச்சது வாயின் றொடர்வுறு மற்றவ, ரெச்
சக லாநின் றிளைக்கின்ற வாறே. (௧௪)

ஆர்த்தெழு சுற்றமும் பெண்டிரு மக்களு, மூர்த்துறை கா
லே யொழிவா ரொழிந்தபின், வேர்த்தலை போக்கி விறகிட்
டெரிமூட்டி, நீர்த்தலை மூழ்குவர் நீதியி லோரே. (௧௫)

வளத்திடை முற்றத்தோர் மாநில முற்றுங், குளத்தின்ம
ண் கொண்டு குயவன் வனைந்தால், குடமுடைந் தாலவை யோ
டென் றுவைப்ப, ருடலிறந் தாலிதைப் போதும்வை யாரே.

ஐந்து தலைப்பரி யாறு சடையுள, சந்தவை முப்பது சார்
வு பதினெட்டுப், பந்தலு மொன்பது பந்தி பதினைந்து, வெந்து
கிடந்தது மேலறி யோமே. (௧௭)

அத்திப் பழமு மறைக்கீரை நல்வித்துங், குத்தி யுலைப்
பெய்து கூழிட்டு வைத்தன, ரத்திப் பழத்தை யறைக்கீரை வி

தீத்துணைக், கத்தி யெடுத்தவர் காடுபுக் காரே. (௧௮)

மேலு முகட்டில்லை கீழும் வடிம்பில்லை, காலு மிரண்டு மு
கட்டல கொன்றுண்டு, வோலையான் மேய்ந்தவ ரூடு வரிதமை,
வேலையா மேய்ந்ததோர் வெள்ளித் தளிகையே. (௧௯)

கூடங் கிடந்தது கோலங்க ளிங்கில்லை, யாடு மிலையமு ம
ற்ற தறுதலுட், பாடுகின்றார் சிலர் பண்ணி லழுதிட்டுத், தேடி
யே தீயினிற் றீயவைத் தார்களே. (௨௦)

முட்டை பிறந்தது முந்நூறு நாளினில், விட்டது தானிலை
யேதேனு மேழைகாள், பட்டது பார்மணம் பன்னிரண் டாண்
டினிற், கெட்ட தெழுபதிற் கேட்டறி யீரே. (௨௧)

இடிஞ்சி லிருக்க விளக்கெரி கொண்டான், முடிஞ்ச தறி
யார் முழங்குவர் மூடர், விடிஞ்சிரு ளாவ தறியா வுலகம், படி
ஞ்சு கிடந்து பதைக்கின்ற வாறே. (௨௨)

மடல்விரி கொன்றையன் மாயன் படைத்த, வுடலு முயி
ரு முருவந் தொழாமல், விடர்படர்ந் தேழா நரகிற் கிடப்ப, கு
டர்பட வெந்தமர் கூப்பிடு மாறே. (௨௩)

குடையுங் குதிரையுங் கொற்றவா ளுங்கொண், டிடையு
மக் கால மிருந்து நடுவே,யுடையு மனிதனுற் போகுமப் போது,
அடையு மிடம்வல மாறுயி ராமே. (௨௪)

காக்கை கவரிலென் கண்டார் பழிக்கிலென், பார்த்துழிப்
பெய்யிலென் பல்லோர் பழிக்கிலென், தோற்பையு ணின்று தொ
ழிலறச் செய்தூட்டுங், கூத்தன் புறப்பட்டுப் போனவிக் கூட்
டையே. (௨௫)

ஆ௨ ௪௧௭.

---

## செல்வ நிலையாமை.

அருளு மரசரு மானையுந் தேரும், பொருளும் பிறர்கொள்
ளப் போவதன் முன்னந், தெருளு முயிரொடுஞ் செல்வனைச்
சேரின், மருளும் பிணியவன் மாதவ மன்றே. (௧)

இயக்குறு திங்க ளிருட்பிழம் பொக்குந், துயக்குறுஞ் செ
ல்வத்தைச் சொல்லவும் வேண்டா, மயக்கற நாடுமின் வானவ
ர் கோனைப், பெயற்கொண்டல்பா லப் பெருஞ்செல்வ மாமே.

தன்னது சாயை தனக்குத வாதுகண், டென்னது மாடெ
ன் றிருப்பார்க ளேழைகள், ளுன்னுயிர் போமுட லொக்கப் பிற
ந்தது, கண்ணது காணொளி கண்டுகொ ளீரே. (௩)

ஈட்டிய தேன்பூ மணங்கண் டிரதமுங், கூட்டிக் கொண
ர்ந்தொரு கொம்பிடை வைத்திடு; மோட்டித் துரந்திட் டதுவ
லியார்கொளக், காட்டிக் கொடுத்தவை கைவிட்ட வாறே. (௪)

தேற்றத் தெளிமின் றெளிந்தீர் கலங்கன்மி, னூற்றுப் பெ
ருக்கிங் கலக்கிமலக்காதே, மாற்றிக் களைவீர் மறித்துங்கள் செ
ல்வத்தைக், கூற்றன் வருங்கால் குறிக்கலு மாமே. (௫)

மகிழ்கின்ற செல்வமு மாடு முடனே, கவிழ்கின்ற நீர்மி
சைச் செல்லுங் கமலம்போ, லவிழ்கின்ற வாக்கைக்கோர் வீடு
பேறாகச், சிமிழொன்று வைத்தமை தேர்ந்தறி யாரே. (௬)

வாழ்வு மனைவியு மக்களு டன்பிறந், தாரு மளவே தனக்
கென்ப வொண்பொருண், மேவு மதனை விரிவுசெய் வார்கட்கு
க், கூறுந் துணையொன்று கூறலு மாமே. (௭)

வேட்கை மிகுத்தது மெய்கொள்வா ரிங்கிலை, பூட்டுந் தறி
யொன்று போம்வழி யொன்பது, நாட்டிய தாய்தமர் வந்து
வணங்கிப்பின், காட்டிக் கொடுத்தவர் கைவிட்ட வாறே. (௮)

உடம்பொ டுயிரிடை விட்டோடும் போது, வடும்பரி சொ
ன்றில்லை யண்ணலை யெண்ணும், விடும்பரி சாய்நின்ற மெய்நம
ன் றூதர், சுடும்பரி சத்தையுஞ் சூழகி லாரே. (௯) ஆ௲ ௧௭௯.

இளமை நிலையாமை.

கிழக்கெழுந் தோடிய ஞாயிறு மேற்கே, விழக்கண்டுந் தே
றார் விளிவிலா மாந்தர், குழக்கன்று மூத்தெரு தாய்ச்சில நா
ளில், விழக்கண்டுந் தேறார் வியனுல கோரே. (௧)

ஆண்டு பலவுங் கழிந்தனப் பனைப், பூண்டுகொண் டாரும் புகுந்தறி வாரில்லை, நீண்டன காலங்க ணீண்டு கொடுக்கினுந், தூண்டு விளக்கின் சுடரறி யார்களே. (உ)

தேய்ந்தற் றொழிந்த விளமை சடைமுறை, யாய்ந்தற்ற பின்னை யரிய கருமங்கள், பாய்ந்தற்ற கங்கைப் படர்சடை நந்தியை, யோர்ந்துற்றுக் கொள்ளு முலாவுள்ள போதே. (ங)

விரும்புவர் முன்னென்னை மெல்லியன் மாதர், கரும்பு தகர்த்துக் கடைக்கொண்ட நீர்போ, லருப்பொத்த மென்முலை யாயிழை யார்க்குக், கரும்பொத்துக் காஞ்சிரங் காயுமொத் தேனே

பால னிளையன் விருத்த னெனநின்ற; காலங் கழிவன கண்டுமறிகிலார், ஞாலங் கடந்தண்ட மூடறுத் தானடி, மேலுங் கிடந்து விரும்புவ னானே. (ரு)

காலை யெழுந்தவர் நித்தலு நித்தலு, மாலை படுவதும் வாணாட் கழிவதுஞ், சாலுமவ் வீசன் சலவிய னாகிலு, மேல நினைப்பவர்க் கின்பஞ்செய் தானே. (சா)

பருவூசி யைந்துமோர் பையினுள் வாழும், பருவூசி யைந்து பறக்கும் விருகம், பருவூசி யைந்தும் பனித்தலைப் பட்டாற், பருவூசிப் பையும் பறக்கின்ற வாறே. (எ)

கண்ணனுங் காய்கதி ரோனு முலகினை, யுண்ணின் றளக்கின்ற தொன்று மறிகிலார், விண்ணுறு வாரையும் வினையுறு வாரையு, மெண்ணுறு முப்பதி லீர்ந்தொழிந் தாரே. (அ)

ஒன்றிய வீரெண் கலையு முடன்றன, நின்றது கண்டு நினைக்கிலர் நீதர்கள், கன்றிய காலன் கருக்குழி வைத்தபின், சென்றதில் வீழ்வர் திசைப்பொழி யாரோ. (கூ)

எய்திய நாளி லிளமை கழிபாமை, யெய்திய நாளி லிசையினு லேத்துமி, னெய்திய நாளி லெறிவ தறியாம, லெய்திய நாளி லிரந்துகண் டேனே. (கO) ஆ கஅ.

## உயிர் நிலையாமை.

தழைக்கின்ற செந்தளிர்த் தண்மலர்க் கொம்பி, லிழைக்கின்ற தெல்லா மிறக்கின்ற கண்டும், பிழைப்பின்றி யெம்பெருமானடி யேத்தா, ரழைக்கின்ற போதறி யாரவர் தாமே (௧)

ஐவர்க் கொருசெய் விளைந்து கிடந்தது, வைவரு மச்செய்யைக் காத்து வருவர்க, ளைவர்க்கு நாயக னோலை வருதலா லைவரு மச்செய்யைக் காவல்விட் டாரே. (௨)

மத்தளி யொன்றுள தாள மிரண்டுள, வத்துள்ளே வாழு மரசரு மஞ்சுள, வத்துள்ளே வாழு மரசன் புறப்பட்டான், மத்தளி மண்ணாய் மயங்கிய வாறே. (௩)

வேங்கட நாதனை வேதாந்தக் கூத்தனை, வேங்கடத் துள்ளே விளையாடு நந்தியை, வேங்கட மென்றே விரகறி யாதவர், தாங்கவல் லாருயிர் தானறி யாரே. (௪)

சென்றுணர் வான்றிசை பத்துந் திவாகர, னன்றுணர் வாலளக் கின்ற தறிகிலர், நின்றுண ராரிந் நிலத்தின் மனிதர்கள், பொன்றுணர் வாரிற் புணர்க்கின்ற மாயமே. (௫)

மாறு திருத்தி வரம்பிட்ட பட்டிகை, பீறு மதனைப் பெரிதுணர்ந் தாரில்லை, கூறுங் கருமயிர் வெண்மயி ராவது மீறும் பிறப்பொ ராண்டெனு நீரே. (௬)

துடுப்பிடு பானைக்கு மொன்றே யரிசி, யடுப்பிடு மூன்றிற்கு மஞ்செரி கொள்ளி, யடுத் தெரியாமற் கொடுமின் னரிசி, விடுத்தன நாட்களு மேற்சென் றனவே. (௭)

இன்புறு வண்டங் கினமலர் மேற்போ, யுண்பது வாசம றுபோ லுயிர்நிலை, யின்புற நாடி நினைக்கிலு மூன்றொளி, கண்புற நின்ற கருத் துணில் லானே. (௮)

ஆம்விதி நாடி யறஞ்செய்மி னந்நிலம், போம்விதி நாடிப் புனிதனைப் போற்றுமின், ஞாம்விதி வேண்டு மதென்சொல்லின் மானுட, ராம்விதி பெற்ற வருமைவல் லார்க்கே. (௯)

அவ்வியம் பேசி யறங்கெட நில்லன்மின், வெவ்விய னாகிப் பிறர்பொருள் வவ்வன்மின், செவ்விய னாகிச் சிறந்துண்ணும் போதொரு, தவ்விக்கொ டுண்மின் றலைப்பட்ட போதே. (கo)

ஆ. ககூசு.

---

### கொல்லாமை.

பற்றாய நற்குரு பூசைக்கும் பன்மலர், மற்றோ ரணுக்களைக் கொல்லாமை யொண்மலர், நற்றார் நடுக்கற்ற தீபமுஞ் சித்தமு, முற்றாரு மாவி யமர்ந்திடு முச்சியே. (க)

கொல்லிடு குத்தென்று கூறிய மாக்களை, வல்லிடிக் காரர் வலிக்கயிற் றாற்கட்டிச், செல்லிடு நில்லென்று தீவாய் நரகிடை, நில்லிடு வென்று நிறுத்துவர் தாமே. (உ) ஆ. ககூஅ.

---

### புலால் மறுத்தல்.

பொல்லாப் புலாலை நுகரும் புலையரை, யெல்லாருங் காண வியமன்றன் றூதுவர், செல்லாகப் பற்றிய தீவாய் நரகத்தின், மல்லாக்கத் தள்ளி மறித்துவைப் பாரே. (க)

கொலையே களவுகட் காமம்பொய் கூறல், மலைவான பாதக மாமவை நீக்கித், தலையாஞ் சிவனடி சார்ந்தின்பஞ் சார்ந்தோர்க், கிலையா மிவைஞான னந்தத் திருத்தலே. (உ) ஆ. உ00

---

### பிறர்மனை நயவாமை.

ஆத்த மனையா ளகத்தி லிருக்கவே, காத்த மனையாளைக் காமுறுங் காளையர், காச்ச பலாவின் கனியுண்ண மாட்டாம, லீச்சம் பழத்துக் கிடருற்ற வாறே. (க)

தரித்து வளர்த்ததோர் தேமாங் கனியை, யருத்தமென் றெண்ணி யறையிற் புதைத்துப், பொருத்த மிலாத புளிமாங் கொம்பேறிக், கருத் தறியாதவர் காலற்ற வாறே. (உ)

பொருள்கொண்ட கண்டனும் போதகை யாளு, மிருள்

கொண்ட மின்வெளி கொண்டுநின் றோரு, மாறாக்கொண்ட மா தர் பயமுறு வார்கள், மருள்கொண்ட சிந்தையை மாற்றகில் லாரே. (௩) ஆ உ௱௩.

---

மகளிரிழிவு.

இலைநல்ல வாயினு மெட்டி பழுத்தாற், குலைநல வாங்கனி கொண்டுண லாகா, மூலைநலங் கொண்டு முறுவல்செய் வார்மே ல், விலகுறு நெஞ்சினை வெய்துகொள் வீரே. (௧)

மனைபுகு வார்கண் மனைவிலை நாடிற், சுனைபுகு நீர்போ ற் சுழித்துடன் வாங்குங், கனவது போலக் கசிந்தெழு மன் பை, நனவது போலவு நாடவொண் ணாதே. (௨)

இயலுறும் வாழ்க்கை யிளம்பிடி மாதர், புயலுறும் புல்லி ற் புணர்ந்தவ ரேயினு, மயலுறும் வானவர் சார, விருமென்பா, ரயலுறப் பேசியகன்றொழிந் தாரே. (௩)

வையகத் தேமட வாரொடுங் கூடியென், மெய்யகத் தோருழ வைத்த விதியது, கையகத் தேகரும் பாலையின் சாறு கொண், மெய்யகத் தேபொரும் யாம்பது வாமே. (௪)

கோழை யொழுக்கங் குளமூடு பாசியி, லாழ நடுவா ரள ப்புறு வார்களைத், தாழத் துடக்கித் தடுக்ககில் லாவிடிற், பூ ழை நுழைந்தவர் போகின்ற வாறே. (௫) ஆ உ௱அ.

---

நல்குரவு.

புடைவை கிழிந்தது போயிற்று வாழ்க்கை, யடையப் ப ட்டார்களு மன்பில ரானார், கொடையில்லை கோளில்லை கொ ண்டாட்ட மில்லை நடையில்லை நாட்டி லியங்குகின் றார்கட்கே.

பொய்க்குழி தூர்ப்பான் புலரி புலருந்தென், றக்குழி தூர் க்கு மரும்பண்டந் தேடுவீ, ரெக்குழி தூர்த்து மிறைவனை யே த்துமி, னச்குழி தூரு மழுக்கற்ற போதே. (௨)

கற்குழி தூரக் கனமுந் தேடுவ, ரக்குழி தூர்க்கை யாவ

ர்க்கு மரியது, வக்குழி தூர்க்கு மறிவை யறிந்தபி, னக்குழி தூரு மழுக்கற் றவரோ. (ங)

தொடர்ந்தெழுஞ் சுற்றம் வினையிலுந் தீய, கடந்ததோ ராவி கழியதன் முன்னே, யுடைந்தொரு காலத் துணர்விளக் கேற்றித், தொடர்ந்துநின் றவ்வழி தூர்க்கலு மாமே. (ச)

அறுத்தன வாறினு மானின மேவி, யறுத்தனை வைவரு மெண்ணிலி துன்ப, மொறுத்தன வல்வினை யொன்றல்ல வாழ்வை, வெறுத்தன னீசனை வேண்டிநின் றேனே. (ரு) ஆ உசங

அக்கினிகாரியம்.

வசையில் விழுப்பொருள் வானு நிலனுந், திசையுந் திசைபெறு தேவர் குழாமும், விசையம் பெருகிய வேத முதலா, யசைவிலா வந்தண ராகுதி வேட்கிலே. (க)

ஆகுதி வேட்கு மருமறை யந்தணர், போகதி நாடிப் புறங்கொடுத் துண்ணுவர், தாம்விதி வேண்டித் தலைப்படு மெய்ந்நெறி, தாமறி வாலே தலைப்படு வாரே. (உ)

அணைதுணை யந்தண ரங்கியு ளங்கி, அனைதுணை வைத்ததி னுட்பொரு ளான, வினைதுணை யாமத் தயங்கும் பொழுது, துணையணை யாயதோர் தூய்நெறி யாமே. (ங)

போதிரண் டோதிப் புரிந்தருள் செய்திட்டு, மாதிரண் டாகி மகிழ்ந்துட னேநிற்குந், நாதிரண் டாகிய தண்ணம் பறவைகள், வேறிரண் டாகி வெறிக்கின்ற வாறே. (ச)

நெய்ந்நின் றெரிய நெடுஞ்சுட ரேசென்று, மைந்நின் றெரியும் வகையறி வார்கட்கு, மைந்நின் றவிழ்தரு மத்தின் மரமென்றுஞ், செய்ந்நின்ற செல்வ மதியது வாமே. (ரு)

பாழி யகலு மெரியுந் திரிபோலுட், டூழி யகலு முறுவினை நோய்பல, வாழிசெய் தங்கி யுதிக்க வவைவிழுஞ், வீழிசெய் தங்கி வினைசுடு மாமே. (சு)

பெருஞ்செல்வங் கேடென்று முன்னே படைத்த, வருஞ்
செல்வந் தந்த தலைவனை நாடும், வருஞ்செல்வத் தின்பம் வரவி
ருந் தெண்ணி, யருஞ்செல்வத் தாகுதி வெட்கநின் றாரே. (எ)

ஒண்சுட ரானை யுலப்பிலி நாதனை, யொண்சுட ராகியென்
னுள்ளத் திருக்கின்ற, கண்சுட ரோனுல கேழுங் கடந்தவத், த
ண்சுட ரோமத் தலைவனு மாமே. (அ)

ஓமத்து ளங்கியி னுள்ளானெம் மிறை, யீமத்து ளங்கி யி
ரதங்கொள் வானுளான், வேமத்து ளங்கி விளைவு வினைக்கடற்,
கோமத்து ளங்கி குரைகட றானே. (கூ)

அங்கி நிறுத்து மருந்தவ ராரணத், தங்கி யிருக்கும் வகை
யருள் செய்தவ, ரொங்கு நிறுத்தி யிளப்பப் பெரும்பதி, யொங்
கி நிறுத்தும் புகழது மாமே. (௧0) ஆ உஉங.

அந்தணரொழுக்கம்.

அந்தண ராவோ ரறுதொழிற் பூண்டுளோர், செந்தழ
லோம்பிமுப் போது நியமஞ்செய், தஞ்சது நற்கரு மத்துநின் று
ங்கிட்டுச், சந்தியு மோதிச் சடங்கறுப் போர்களே. (௧)

வேதாந்தங் கேட்க விரும்பொடு முப்பதப், போதாந்த
மான பிரணவத் துள்புக்கு, நாதாந்த வேதாந்த போதாந்த
நாதனை, யீதா மெனுதுகண் டின்புறு வோர்களே. (௨)

காயத் திரியே கருது சாவித்திரி, யாய்தற் குவப்பர் மந்
திர மாங்குன்னி, நேயத்தே றேறி நினைவுற்று நேயத்தாய், மா
யத்துட் டோயா மறையோர்க டாமே. (௩)

பெருநெறி யான பிரணவ மோர்ந்து, குருநெறி யாலுமை
கூடினல் வேதத், திருநெறி யான திருநை யிருத்திச், சொருப
மதானோர் துகளில்பார்ப் பாரே. (௪)

சத்திய முந்தவந் தானவ னாதலு, மெய்த்தகு மிந்திய மீ
ட்டியே வாட்டலு, மொத்த வுயிருட னுண்டா யுணர்வுற்றுப்,
பெத்த மறுத்தலு மாகும் பிரமமே. (௫)

வேதாந்தங் கேட்ட விரும்பிய வேதியர், வேதாந்தங் கே
ட்டுந்தம் வேட்கை யொழிந்திலர், வேதாந்த மாவது வேட்கை
யொழிந்திடம், வேதாந்தங் கேட்டவர் வேட்கைவிட் டாரே.

நூலுஞ் சிகையு நுவலிற் பிரமமோ, நூலது கார்ப்பாச நு
ண்சிகை கேசமாம், நூலது வேதாந்த நுண்சிகை ஞானமாம்,
நூலுடை யந்தணர் காணு நுவலிலே. (எ)

சத்திய மின்றித் தனிஞானந் தானின்றி, யொத்த விடை
யம்விட் டோருமுணர் வின்றிப், பத்தியு மின்றிப் பரனுண்மை
யின்றியூண், பித்தேறு மூடர் பிராமணர் தாமன்றே. (அ)

திருநெறி யாகிய சித்தசித் தின்றிக், குருநெறி யாலே கு
ருபதஞ் சேர்ந்து, கருமநி யமாதி கைவிட்டுக் காணுந், துரியச்
சமாதியாந் தூய்மறை யோர்க்கே. (கூ)

மறையோ ரவரே மறையவ ரானால், மறையோர்தம் வே
தாந்த வாய்மையிற் றூய்மை, குறையோர்தல் மற்றுள்ள கோ
லா கலமென், றறிவோர் மறைதெரிந் தந்தண ராமே. (க0)

அந்தண்மை பூண்ட வருமறை யந்தத்துச், சிந்தைசெய் ய
ந்தணர் சேருஞ் செழும்புவி, நந்துத லில்லை நரபதி நன்றாகு,
மந்தியுஞ் சந்தியு மாகுதி பண்ணுமே. (கக)

வேதாந்த ஞானம் விளங்கி விதியிலோர், நாதாந்த போ
த னணுகிய போகத்துப், போதாந்த மாம்பரன் பாற்புகப் புக்க
தால், நாதாந்த முத்தியுஞ் சித்தியு நண்ணுமே. (கஉ)

ஒன்று மிரண்டு மொடுங்கிய காலத்து, நன்று மிருந்து நல
ம்பல பேசினும், வென்று விளங்கும் விரதனை நாடுவர், சென்
று வணங்குந் திருவுடை யோரே. (கங)

தானே விடும்பற் றிரண்டுந் தரித்திட, நானே விடைப்படு
மேதொன்றை நாடாது, பூமேவு நான்முகன் புண்ணிய போக
னு, யோமேவு மோமா குதியவி யுண்ணவே. (கச) ஆ உகூஎ.

## இராசதோடம்.

கல்லா வரசனுங் காலனுநேரொக்கும், கல்லா வரசனிற் காலன் மிகநல்லன், கல்லா வரச னறமோரான் கொல்லென் பான், நல்லாரைக் கால னணுகி நில்லானே. (க)

நாடோறு மன்னவ னாட்டிற் றவநெறி, நாடோறு நாடி யவனெறி நாடானேல், நாடோறு நாடு கெடுமுட னண்ணு, நாடோறுஞ் செல்வ நரபதி குன்றுமே. (உ)

வேட நெறிநில்லார் வேடம்பூண் டென்பயன், வேட நெறிநிற்போர் வேடமே மெய்வேடம், வேட நெறிநில்லார் தம்மை விறல்வேந்தன், வேடநெறி செய்தால் வீடது வாகுமே. ( )

மூடங் கெடாதோர் சிகைநூன் முதற்கொள்ளில், வாடும் புவியும் பெருவாழ்வு மன்னனும், பீடொன் றிலனாகு மாதலாற் பேர்த்துணர்ந், தாடம்பர நூற் சிகையறுத் தானன்றே. (ச)

ஞான மிலாதார் சடைசிகை நூனண்ணி, ஞானிகள் போல நடிக்கின் றவர்தம்மை, ஞானிக ளாலே நரபதி சோதித்து, ஞான முண்டாக்குத னலமாகு நாட்டிற்கே. (ரு)

ஆவையும் பாவையு மற்றற வோரையுந், தேவர்கள் போற்றுந் திருவேடத் தாரையுங், காவலன் காப்பவன் காவா தொழிவனேன், மேலு மறுமைக்கு மீளா நரகமே. (சு)

திறந்தரு முத்தியுஞ் செல்வமும் வேண்டின், மறந்து மறநெறி யேயாற்றல் வேண்டுஞ், சிறந்தநீர் ஞாலஞ் செய்தொழில் யாவையு, மறைந்திடில் வேந்தனுக் காறிலொன் றாமே. (எ)

வேந்த னுலகை மிகநன்று காப்பது, வாய்ந்த மனிதர்க ளவ்வழி யாநிற்பர், பேர்ந்திவ் வுலகைப் பிறர்கொள்ளத் தாங் கொள்ளப், பாய்ந்த புலியன்ன பாவகத் தானே. (அ)

கால்கொண்டு கட்டிக் கனல்கொண்டு மேலேற்றிப், பால்கண்டு சோமன் முகம்பற்றி யுண்ணுதோர், மால்கொண்டு தேற லையுண்ணு மருளாளை, மேல்கொண்டு தண்டஞ்செய் வேந்தன் கடனே. (கூ)

தத்தஞ் சமயத் தகுதிநில் லாதாரை, யத்தன் சிவன்சொ
ன்ன வாகம நூனெறி, யெத்தண் டமுஞ்செயு மம்மையி லிம்
மைக்கே, மெய்த்தண்டஞ் செய்வதவ் வேந்தன் கடனே. (௧0)
ஆ உசஎ.

வான்சிறப்பு.

அமுதூறு மாமழை நீரத னாலே, யமுதூறும் பன்மரம்
பார்மிசை தோற்றுங், கமுகு நறுந்தெங்கு கரும்பொடு வாழை, ய
முதூறுங் காஞ்சிரை யாங்கது வாகுமே. (௧)

வரையிடை நின்றிழி வானீ ரருவி, யுரையில்லை யுள்ளத் த
கத்துநின் றூறு, நுரையில்லை மாசில்லை நுண்ணிது தெண்ணீர்
க், கரையில்லை யெந்தைக் கழுமணி யாறே. (௨) ஆ உசகூ.

தானச்சிறப்பு.

ஆர்க்குமி டுமி னவரிவ ரென்னன்மின், பார்த்திருந் துண்
மின் பழம்பொருள் போற்றன்மின், வேட்கை யுடையீர் விரை
ந்தொல்லை யுண்ணன்மின், காக்கை கரைந்துண்ணுங் கால மறி
மினே. (௧) ஆ உரு0.

இரந்தார்க்கிதல்.

தாமறிவா ரண்ண லாள்பணி வாரவர், தாமறி வாரந் தர
ங்கிநின் றாரவர், தாமறி வார்சில தத்துவ ராவர்க, டாமறி வா
ர்க்குத் தமர்பர னாமே. (௧)

யாவர்க்குமா மிறைவற் கொருபச்சிலை, யாவர்க்கு மாம்
பசுவிற்கொரு வாயுறை, யாவர்க்குமா முண்ணும் போதொரு
கைப்பிடி, யாவர்க்குமாம் பிறர்க் கின்னுரை தானே. (௨)

அற்றுநின் றாருண்ணு மூணே யறமென்னுங், கற்றன போ
தங் கமழ்பவர் மானுட, ருற்றுநின் றாங்கொரு கூவற் குளத்தி
னிற், பற்றிவந் துண்ணும் பயனறி யாரே. (௩)

அழுக்கினை யோட்டி யறிவை நினையீர், தழுக்கிய நாளிற் றருமமுஞ் செய்யீர், விழித்திருந் தென்செய்வீர் வெம்மை பரந்து, விழிக்கவன் றென்செய்வீ ரேழைநெஞ் சீரே. (௪)

தன்னை யறியாது தானல்லா ரென்றிங், கின்மை யறியா திளையரென் றோராது, வன்மையில் வந்திடுங் கூற்றம் வருமுன்னந், தன்மையு நல்ல தவஞ்செயு நீரே. (௫)

துறந்தான் வழிமுதற் சுற்றமு மில்லை, பிறந்தான் வழிமுத் தின்பமு மில்லை, மறந்தான் வழிமுதல் தந்திலனீச, னறந்தா னறியு மளவறி வாரே. (௬)

தான்றவஞ் செய்வதாஞ் செய்தவத் தவ்வழி, மான்றெய்வ மாக மதிக்கு மனிதர்க, ளூன்றெய்வ மாக வுயிர்க்கின்ற பல்லுயிர், நான்றெய்வ மென்று நமன்வரு வானே. (௭)

திளைக்கும் வினைக்கட லூர்வுறு தோணி, யிளைப்பின்றி நீக்கு மிருவழி யுண்டு, திளைக்குந் தனக்குமக் கேடில் புகழோன், விளைக்குந் தவமற மேற்றுணை யாமே. (௮)

பற்றது வாய்நின்ற பற்றினைப் பார்மினீ, யற்ற முறையா னறநெறிக் கல்லது, யுற்றுங்க ளாலொன்று மீந்தது வேதனை, மற்றண்ணல் வைத்த வழிகொள்ளு மாறே. (௯) ஆக ௨௫௧.

---

அறஞ்செயான் றிறம்.

எட்டி பழுத்த விருங்கனி வீழ்ந்தன்ன, வொட்டிய நல்லறஞ் செய்யா தவர்செல்வம், வட்டிகொண் டாட்டியே மண்ணின் முகந்திடும், பட்டப் பதகர் பயனறி யாரே. (௧)

ஒழிந்தன காலங்க ளூழியும் போயின, கழிந்தன கற்பனை நாளுங் குறுகிப், பிழிந்தது போலத்தம் பேரிட ராக்கை, யழிந்தது கண்டு மறமறி யாரே, (௨)

அறமறி யாரண்ணல் பாத நினையுந், திறமறி யார்சிவ லோகநகர்க்குப், புறமறி யார்பலர் பொய்மொழி கேட்டு, மறமறி வார்பகை மன்னிநின் றாரே. (௩)

இருமலுஞ் சோகையு மீளையும் வெப்புந் தருமஞ் செய்யா
தவர் தம்பால தாகு, முருமிடி நாக முரோணி கழலைத், தரும
ஞ் செய்வார்பக்கற் றுழுகி லாவே. (௪)

பரவப் படுவார் பரமனை யேத்தா, ரிரவலர்க் கீதலை யாயி
னு மீயார், கரகத்தே நீராட்டிக் காயை வளர்க்கார், நரகத்தி
னிற்றிரோ நன்னெஞ்சி னீரே. (௫)

வழிநடப் பாரின்றி வானோ ருலகங், கழிநடப் பார்நடந்
தார்சரும் பாரு, மழிநடக் கும்வினை மாசற வோட்டிட், டொ
ழிநடப் பார்வினை யோங்கிநின் றாரே. (௬)

கனிந்தவ ரீசன் கழலடி காண்பர், துணிந்தவ ரீசன் றுற
க்கம தாள்வர், மலிந்தவர் மாளுந் துணையுமொன் றின்றி, மெ
லிந்த சினத்தினுள் வீழ்ந்தொழிந் தாரே. (௭)

இன்ப மிடரொன் றிரண்டுற வைத்தது, முன்பவர் செய்
கையி னாலே முடிந்தது, வின்பமது கண்டு மீகிலாப் பேதைக,
ளன்பிலார் சிந்தை யறமறி யாரே. (௮)

கெடுவது மாவதுங் கேடில் புகழோ, னடுவல்ல செய்தின்
ப நாட்டவு மொட்டா,னிடுவது மீவது மெண்ணுமி னின்பம், ப
டுவது செய்யிர் பசுவது வாமே. (௯)

செல்வங் கருதிச் சிலர்பலர் வாழ்வெனும், புல்லறி வாள
ரைப் போற்றிப் புராரே, யில்லங் கருதி யிறைவனை யேத்து
மின்,வில்லிற வெய்த விற்குறி யாமே. (௰) ஆ. ௨௬௯.

---

அன்புடைமை.

அன்புஞ் சிவமு மிரண்டென்ப ரறிவிலா, ரன்பே சிவமா
வ தாரு மறிகிலா, ரன்பே சிவமாவ தாரு மறிந்தபி, னன்பே
சிவமா யமர்ந்திருந் தாரே. (௧)

பொன்னைக் கடந்திலங் கும்புலித் தோலினன், மின்னிக்
கிடந்து மிளிரு மிளம்பிறை, துன்னிக் கிடந்த சுடுபொடி யாடி
க்குப், பின்னிக் கிடந்ததென் பேரன்பு தானே. (௨)

என்பே விறகா யிறைச்சி யறுத்திட்டுப், பொன்போற் கனலிற் பொரிய வறுப்பினு, மன்போ டுருகி யகங்குழை வார்க்கன்றி, யென்போன் மணியினை யெய்த வொண்ணாதே. (௩)

ஆர்வ முடையவர் காண்ப ரரன் றன்னை, யீர முடையவர் காண்பரிணையடி, பார முடையவர் காண்பார் பவந்தன்னைக், கோர நெருக்கொடு கோங்குபுக் காரே. (௪)

மன்னன் புருக்கி யிறைவனை யேத்துமின், முன்னன் புருக்கி முதல்வனை நாடுமின், பின்னன் புருக்கிப் பெருந்தகை நந்தியுந், தன்னன் பெனக்கே தலைநின்ற வாறே. (௫)

தானொரு காலஞ் சயம்புவென் றேத்தினும், வானொரு காலம் வழித்துணை யாய்நிற்குந், தேனொரு பாற்றிகழ் கொன்றை யணிசிவன், றானொரு வண்ணமெ னன்பினின் றானே. (௬)

முன்படைத் தின்பம் படைத்த முதலிடை, யன்படைத் தெம்பெரு மானை யறிகிலார், வன்படைத் திந்த வகலிடம் வாழ்வினி, லன்படைத் தான்ற னகலிடந் தானே. (௭)

கருத்துறு செம்பொன்செய் காயத்திற் சோதி, யிருத்தியும் வைத்து மிறைவனென் றேத்தியு, மருத்தியு னீசனை யாரருள் வேண்டில், விருத்தி கொடுத்திடு விண்ணவர் கோனே. (௮)

நித்தலுந் துஞ்சும் பிறப்பையுஞ் செய்தவன், வைத்த பரிசறிந் தேயு மலிதர்க, ளிச்சையுளோ வைப்ப ரெந்தை பிரானென்று நச்சியே யண்ணலை நாடுகி லாரே. (௯)

அன்பினுள் ளான்புறத் தானுட லாயுளான், முன்பினுள் ளான்முனி வர்க்கும் பிரானவ, னன்பினுள் ளாகி யமரு மரும்பொரு, ளன்பினுள் ளார்க்கே யணைதுணை யாமே. (௰) ஆ. ௩௭௯.

---

## அன்புசெய்வாரை யறிவன் சிவன்.

இகழ்ந்ததும் பெற்றது மீச னறியு, முகந்தருள் செய்திடு முத்தம நாதன், கொழுந்தன்பு செய்தருள் கூரவல் லார்க்கு, மகிழ்ந்தன்பு செய்யு மருளது வாமே. (௧)

இன்பப் பிறவிக் கியல்வது செய்தவன், றுன்பப்பிறவித் தொழில்பல வென்னினும், அன்பிற் கலவுசெய் தாதிப்பிரான்வைத்த, முன்பப் பிறவி முடிவது தானே. (௨)

அன்புறு சிந்தையின் மேலெழு மவ்வொளி, யின்புறு கண்ணியோ டேற விசைந்தன, துன்புறு கண்ணியைந் தாடுந் துடக்கற்று, நண்புறு சிந்தையை நாடுமி னீரே. (௩)

புணர்ச்சியு ளாயிழை மேலன்பு போல, வுணர்ச்சியு ளாங்கே யொடுங்கவல் லார்க்குக், குணர்ச்சி யில்லாது குலாவி யுலாவி, யணைத்தலு மின்ப மதுவிது வாமே. (௪)

உற்றுநின் றாரொடு மத்தகு சோதியைச், சித்தர்க ளென்றுந் தெரிந்தறி வாரில்லை, பத்திமை யாலே பணிந்தடி யார்தொழ, முத்தி கொடுத்தவர் முன்புநின் றானே. (௫)

கண்டேன் கமழ்தரு கொன்றையி னானடி, கண்டேன் கரியுரி யான்றன் கழலிணை, கண்டேன் கமல மலருறை வானடி, கண்டேன் கழலதெ னன்பினுள் ளானே. (௬)

நம்பனை நானு விதப்பொரு ளாகுமென், றும்பரில் வானவ ரோதுந் தலைவனை, யின்பனை யின்பத் திடைநின் றிரதிக்கு, மன்பனை யாரு மறியகி லாரே. (௭)

முன்பு பிறப்பு மிறப்பு மறியாதா, ரன்பி லிறைவனை யாமறி யோமென்ப, ரின்பப் பிறப்பு மிறப்பு மிலாநந்தி, யன்பி லவனை யறியகி லாரே. (௮)

ஈச னறியு மிராப்பகலுந் தன்னைப், பாசத்துள் வைத்துப் பரிவுசெய் வார்களைத், தேசுற் றறிந்து செயலற் றிருந்திடி, லீசன்வந் தெம்மிடை யீட்டிநின் றானே. (௯)

விட்டுப் பிடிப்பதென் மேதரு சோதியைத், தொட்டுத் தொடர்வன் றலையாப் பெருமையை, யெட்டுமென் றுருயி ராய்நின்ற வீசனை, மட்டுக் கலப்பது மஞ்சன மாமே. (௧௦)

ஆ உ௮௯.

கல்வி.

குறிப்பறிந் தேனுட லுயிரது கூடிச், செறிப்பறிந் தேன்மிகு தேவர் பிரானை, மறிப்பறி யாதுவந் துள்ளம் புகுந்தான், கறிப்பறி யாமிகுங் கல்விகற் றேனே. (௧)

கற்றறி வாளர் கருதிய காலத்துக், கற்றறி வாளர் கருத்திலோர் கண்ணுண்டு, கற்றறி வாளர் கருதி யுரைசெய்யுங், கற்றறி காட்டக் கனலுள வாக்குமே. (௨)

நிற்கின்ற போதே நிலையுடை யான்கழற், கற்கின்ற செய்யின் கழிந்தறும் பாவங்கள், சொற்குன்ற லின்றித் தொழுமின் றொழுதபின், மற்றொன் றிலாத மணிவிளக் காமே. (௩)

கல்வி யுடையார் கழிந்தோடிப் போகின்றார், பல்லி யுடையார் பாம்பரிந் துண்கின்றார், றெல்லியுங் காலையு மேத்து மிறைவனை, வல்லியுள் வாதித்த காயமு மாமே. (௪)

துணையது வாய்வருந் தூயநற் சோதி, துணையது வாய்வருந் தூயநற் சொல்லாந், துணையது வாய்வருந் தூய்மலர் கந்தந், துணையது வாய்வருந் தூயநற் கல்வியே. (௫)

நூலொன்று பற்றி நுனியேற மாட்டாதார், பாலொன்று பற்றினாற் பண்பின் பயன்கெடுங், கோலொன்று பற்றினாற் கூடாப் பறவைகண், மாலொன்று பற்றி மயங்குகின் றாரே. (௬)

ஆய்ந்துகொள் வார்க்கர னங்கே வெளிப்படுந், தோய்ந்த நெருப்பது தூய்மணி சிந்திடு, மேய்ந்த விளமதி யெட்டவல் லார்கட்கு, வாய்ந்த மனமல்கு நூலணி யாமே. (௭)

வழித்துணை யாய்மருந் தாயிருந் தார்முன், கழித்துணை யாங்கற் றிலாதவர் சிந்தை, பொழித்துணை யாமும் பாராமுல கேழும், வழித்துணை யாம்பெருந் தன்மைவல் லானே. (௮)

பற்றது பற்றிப் பரமனைப் பற்றுமின், முற்றது வல்லா முதல்வ னருள்பெறில், கிற்ற விரகிற் கிளரொளி வானவர், கற்றவர் பேரின்ப முற்றுநின் றாரே. (௯)

கடலிடை யான்மலை யானைந்து பூதத், துடலிடை யான்பல வூழிதொ றூழி, யடல்விடை யேறு மமரர் கணாத, னிடமுடை யார்நெஞ்சத் தில்லிருந் தானே. (௧௦) ஆக ௨௩௩.

---

கேள்விகேட்டமைதல்.

அறங்கேட்டு மந்தண ராய்மொழி கேட்டு, மறங்கேட்டும் வானவர் மந்திரங் கேட்டும், புறங்கேட்டும் பொன்புரை மேனியெம் மீசன, திறங்கேட்டும் பெற்ற சிவகதி தானே. (௧)

தேவர் பிரான்றனைத் திவ்விய மூர்த்தியை, யாவ ரொருவ ரறியா ரறிந்தபின், னோதுமின் கேண்மி னுணர்மி னுணர்ந்தபி, னோதி யுணர்ந்தவ ரோங்கினின் றாரே. (௨)

மயன்பணி கேட்பது மாகத்தி கேட்பி, னயன்பணி கேட்ப தரன்பணி யாலே, சிவன்பணி கேட்பவர் தேவரு மாவர் பயன்பணி கேட்பது பற்றது வாமே. (௩)

பெருமா னிவனென்று பேசி யிருக்குந், திருமா னுடர்பின்னைத் தேவரு மாவ, ரருமா தவர்க்கு மகிழ்ந்தருள் செய்யு, மருமா தவத்தெங்க ளாதிப் பிரானே. (௪)

ஈச னருளு மிறப்பும் புறப்பையும், பேசி யிருந்து பிதற்றி மகிழ் வெய்தி, நேசமு மாகு நிகழொளி யாய்நின்று, வாச மலர்க்கந்த மன்னிநின் றானே. (௫)

விழுப்பங் கெழுமிய மெய்நின்ற ஞானத், தொழுக்கமுஞ் சிந்தை யுணர்கின்ற போது, வழுக்கி விடாவிடில் வானவர் கோனு, மிழுக்கின்றி யெண்ணிலி காலம தாமே. (௬)

சிறியார் மணற்சோற்றிற் றேக்கிடு மாபோற், செறிவா லனுபோகஞ் சித்திக்கு மென்னிற், குறியாத தொன்றைக் குறியாதார் தம்மை, யறியா திருந்தா ரவரவ ரன்றே. (௭)

உறுதுணை யாவ துயிரு முடம்பு, முறுதுணை யாவ துலகு

று கேள்வி, செறிதுணை யாவது சிவனடிச் சிந்தை, பெறுதுணை
கேட்கிற் பிறப்பில்லை தானே. (அ)

புகழநின் றார்க்கும் புராணனெம் மீச, னிகழநின் றார்க்கு
மிடும்பைக் கிடமா, மகிழநின் றாதியை யோதி யுணராக், கழிய
நின் றார்க்கொரு கற்பசு வாமே. (௯)

வைத்துணர்ந் தான்மனத் தோடும்வாய் பேசி, யொத்து
ணர்ந் தானுரு வொன்றொடொன் றொவ்வா, தச்சுழன் றாணி
கலங்கினு மாதியை, நச்சுணர்ந் தார்க்கே நணுகலு மாமே. (௰)

ஆ ௩௦௬.

---

கல்லாமை.

கல்லா தவருங் கருத்தறி காட்சியை, வல்லா ரெனிலருட்
கண்ணான் மதித்துளோர், கல்லாதா ருண்மைபற் றாநிற்பர் க
ற்றோருங், கல்லாதார் பேரின்பங் காணகி லாரே. (௧)

வல்லார்க ளென்றும் வழியொன்றி வாழ்கின்றா, ரல்லாத
வர்க ளறிவு பலவென்பர், ரெல்லா விடத்து முளனெங்க டம்
மிறை, கல்லா தவர்கள் கலப்பறி யாரே. (௨)

நில்லா நிலையை நிலையாக நெஞ்சத்து, நில்லாக் குரம்பை
நிலையென் றுணர்வீர்கா, ளெல்லா வுயிர்க்கு மிறைவனே யாயி
னுங், கல்லாதார் நெஞ்சத்துக் காணவொண் ணாதே. (௩)

கில்லேன் வினைத்துய ராக்கு மயலானேன், கல்லேன ர
னெறி யறியாத் தகைமையின், வல்லேன் வழங்கும் பொருளே
மனத்தினுட், கல்லேன் கழியநின் றாடவல் லேனே. (௪)

நில்லாது சீவ னிலையன் றெனவெண்ணி, வல்லா ரறத்து
ந் தவத்துளு மாயினார், கல்லா மனிதர் கயவ ருலகினிற், பொ
ல்லா வினைத்துயர் போகஞ்செய் வாரே. (௫)

விண்ணினி னுள்ளே விளைந்த விளங்கனி, கண்ணினி னுள்
ளே கலந்தங் கிருந்தது, மண்ணினி னுள்ளே மதித்து மதித்துநி

ன், றெண்ணி யெழுதி யிளைத்துவிட் டாரே. (௬)

கணக்கறிந் தார்க்கன்றிக் காணவொண் ணாது. கணக்கறி ந் தார்க்கன்றிக் கைகூடாக் காட்சி, கணக்கறிந் துண்மையைக் கண்டண்ட நிற்குங்,கணக்கறிந் தார்கல்வி கற்றறிந் தாரே.(௭)

கல்லாத மூடரைக் காணவு மாகாது, கல்லாத மூடர்சொ ற் கேட்கக் கடனன்று,கல்லாத மூடர்க்குக் கல்லாதார் நல்லா ராங், கல்லாத மூடர் கருத்தறி யாரே. (௮)

கற்றுஞ் சிவஞான மில்லாக் கலதிகள், சுற்றமும் விடார், துரிசறுர் மூடர்கள், மற்றும் பலதிசை காணூர் மதியிலோர், கற்றன்பி னிற்போர் கணக்கறிந் தார்களே. (௯)

ஆதிப் பிரானம ரர்க்கும் பரஞ்சுடர், சோதி யடியார்ர் தொடரும் பெருந்தெய்வ, மோதி யுணரவல் லோமென்ப ருண் ணின்ற, சோதிநடத்துந் தொடர்பறி யாரே. (௧0) ஆ ௩௧௧.

---

நடுவுநிலைமை.

நடுவுநின் றார்க்கன்றி ஞானமு மில்லை, நடுவுநின் றார்க்கு நரகமு மில்லை, நடுவுநின் றார்நல்ல தேவரு மாவர், நடுவுநின் றார்வழி நானுநின் றேனே. (௧)

நடுவுநின் றானல்ல கார்முகில் வண்ண, னடுவுநின் றானல்ல நான்மறை யோதி, நடுவுநின் றார்சிலர் ஞானிக ளாவோர், நடு வுநின் றார்நல்ல நம்பனு மாவரே. (௨)

நடுவுநின் றார்சிலர் ஞானிக ளாவர், நடுவுநின் றார்சிலர் தே வரு மாவர், நடுவுநின் றார்சிலர் நம்பனு மாவர், நடுவுநின் று ரொடு நானுநின் றேனே. (௩)

தோன்றிய வெல்லாந் துடைப்பன வன்றிவ, ரேன்றுநின் றொன்றீச னிணையடி, மூன்றுநின் றார்முதல் வன்திரு நாம த்தை, நான்றுநின் றார்நடு வாகிநின் றாரே. (௪) ஆ ௩௨௩.

---

கள்ளுண்ணாமை.

கழுநீர்ப் பசுப்பெறிற் கயந்தொறுந் தேராக், கழுநீர் வி டாய்த்துத்தங் காயஞ் சுருக்கு, முழுநீர்க்கள் ளுண்போர் மு றைமை யகன்றோர், செழுநீர்ச் சிவன்றன் சிவானந்தத் தே றலே. (க)

சித்த முருக்கிச் சிவமாஞ் சமாதியி, லொத்தச் சிவானந் த மோவாத தேறலைச், சுத்த மதுவுண்ணச் சிவானந்தம் விட்டி டா, நித்த விருத்தல் கிடத்தல்கீழ்க் காலே. (உ)

காமமுங் கள்ளுங் கலதிகட் கேயாகு, மாமல முஞ்சம யத்துள் மயலுறும், போமதியாகும் புனித னிணையடி, யோமய வானந்தத் தேற லுணர்வுண்டே. (௩)

வாமத்தோர் தாமு மதுவுண்டு மாள்பவர், காமத்தோர் காமக்கள் ளுண்டே கலங்குவ, ரோமத்தோ ருள்ளொளிக் குள் ளே யுணர்வர்கண், ணாமத்தோ ரன்றே நணுகுவர் தாமே. (௪)

உள்ளுண்மை யோரா ருணரார் பசுபாசம், வள்ளன்மை நாத னருளினின் வாழ்வுறார், தெள்ளுண்மை ஞானச் சிவயோ கஞ் சேர்வுறார், கள்ளுண்ணு மாந்தர் கருத்தறி யாரே. (௫)

மயக்குஞ் சமய மலமன்னு மூடர், மயக்கு மதுவுண்ணு மாமூடர் கேரார், மயக்குறு மாயையின் மாமாயை வீடு, மய க்கிற் றெளியின் மயக்குறு மன்றே . (௬)

மயங்குந் தியங்குங்கள் வாய்மை யழிக்கு,மியங்கு மடவா ர்தம் மின்பமே யெய்தி, முயங்கு நயங்கொண்ட ஞானத்து மு ந்தா, ரியங்கு மிடையறா வானந்த மெய்துமே. (௭)

இராப்பக லற்ற விடத்தே யிருந்து, பராக்கற வானந்தத் தேறல் பருகா, விராப்பக லற்ற விறையடி யின்பத்,திராப்பக ன் மாயை யிரண்டிடத் தேனே. (அ)

சத்தியை வேண்டிச் சமயத்தோர் கள்ளுண்பர், சத்தி ய ழிந்தது தம்மை மறத்தலால்,சத்திச் சிவஞானந் தன்னிற் றலை

ட்டுச், சத்திய ஞானவா னந்தத்திற் சார்தலே. (௯)

சத்த னருட்டிற் சத்தி யருளுண்டாஞ், சத்தி யருட்டிற் ச
த்த னருளுண்டாஞ், சத்தி சிவமா மிரண்டுந்தன் னுள்வைக்
கச், சத்தியு மெண்சித்தித் தன்மையு மாமே. (௧0)

தத்துவ நீக்கி மருணீக்கித் தானாகி, பொய்த்தவ நீக்கிமெ
ய்ப் போகத்துட் போக்கியே, மெய்த்த சுகமுண்டு விட்டுப்
பரானந்தச், சித்திய தாக்குஞ் சிவானந்தத் தேறலே. (௧௧)

யோகிகள் கால்கட்டி யொண்மதி யானந்த, போக வமு
தைப் புசித்தவ ரெண்சித்தி, மோகியர் கள்ளுண்டு மூடராய்
மோகமுற், றுகு மதத்தா லறிவழிக் தாரே. (௧௨)

உண்ணீ ரமுத முறுமூ றலைத்திறக், தெண்ணீர் குரவ னி
ணையடித் தாமரை, நண்ணீர் சமாதியி னாடினி ரானலங், கண்
ணுறொ டேசென்று கால்வழி காணுமே. (௧௩)

௧—தந்திர அதிகாரம் - ௨௪இ - பாடல் - ௨௨௪.

முதற்றந்திர முற்றும்.

ஆ பாயிர முட்பட வதிகாரம்

௩௩ - இ - திருமந்திரம் — ௩௩௯.

---

## இரண்டாந்தந்திரம்.



### அகத்தியம்.

நடுவுநில் லாதிவ் வுலகஞ் சரிந்து, கெடுகின்ற தெம்பெரு
மானென்ன வீச, னடுவுள வங்கி யகத்திய நீபோய், முடுகிய
வையத்து முன்னிரென் றானே. (௧)

அங்கி யுதயம் வளர்க்கு மகத்திய, னங்கி யுதயஞ்செய் மே
ல்பா லவனொடு, மங்கி யுதயஞ்செய் வடபாற் றவமுனி, யெங்
கும் வளங்கொள் ளிளங்கொளி தானே. (௨)

---

## பதிவலியில் வீரட்டமெட்டு.

கருத்துறை யந்தகன் றன்போ லசுரன், வரத்தி னுலகத் துயிர்களை யெல்லாம், வருத்தஞ்செய் தானென்று வானவர் வேண்டக், குருத்துயர் சூலங்கைக் கொண்டு கொன்றானே.

கொலையிற் பிழைத்த பிரசா பதியைத், தலையைத் தடிந்தி ட்டுத் தானங்கி யிட்டு, நிலையுல குக்கிவன் வேணுமென் றெண் ணித், தலையைப் பரிந்திட்டுச் சந்திசெய் தானே. (உ)

எங்கும்பரந்து மிருநிலந் தாங்கியுந், தங்கும் படித்தவ ன் றாளுணர் தேவர்கள், பொங்குசினத்து ளயன்றலை முன்னு ற, வங்கச் சுதனை யுதிரங்கொண் டானே. (௩)

எங்குங் கலந்து மென்னுள்ளத் தெழுகின்ற, வங்க முதல் வ னருமறை யோகிபாற், பொங்குஞ் சலந்தரன் போர்செல்ல நீர்மையி, னங்கு விரற்குறித் தாழிசெய் தானே. (௪)

அப்பணி செஞ்சடை யாதி புராதனன், முப்புரஞ் செற்ற ன னென்பர்கண் மூடர்கண், முப்புர மாவது மும்மல காரிய, மப்புர மெய்தமை யாரறி வாரே. (௫)

முத்திக் கொளுவி முழங்கெரி வேள்வியு, ளத்தி யுரியர னு வ தறிகிலர், சத்திக் கருதிய தாம்பல தேவரு, மத்தியி னுள்ளெ ழூந் தன்று கொலையே. (௬)

மூலத் துவாரத்து மூளு மொருவனை, மேலைத் துவாரத் தி ன மேலுற நோக்கிமுற், காலுற்றுக் காலனைக் காய்ந்தங்கி யோ கமாய், ஞாலக் கடவூர் நலமா யிருந்ததே. (௭)

இருந்த மனத்தை யிசைய விருத்திப், பொருந்திய லிங்க வெளியது போக்கித், திருந்திய காமன் செயலழி யத்தங், கருந் தவ யோகங் கொறுக்கை யமர்ந்தே. (௮) ஆக ௬௦.

---

## இலிங்கபுராணம்.

அடிசேர்வ னென்னவெம் மாதியை நோக்கி, முடிசேர் ம

லைமக ளூர்மக ளாகித், திடமா தவஞ்செய்து தேவரறியப், ப
டியார வர்ச்சித்துப் பத்திசெய் தானே. (௬)

திரிகின்ற முப்புரஞ் செற்ற பிரானை, யரியனென் றெண்
ணி யயர்வுற வேண்டாம், புரிவுடை யாளர்க்குப் பொய்யல னீ
சன், பரிவொடு நின்று பரிசறி வானே. (௨)

ஆழி வலங்கொண் டயன்மா லிருவரு, மூழி வலஞ்செய்ய
வொண்சுட ராதியு, மாழி கொடுத்தன னச்சுதற் கவ்வழி, வா
ழிப் பிரமற்கும் வாள்கொடுத் தானே. (௩)

தாங்கிய விருபது தோளுந் தடவரை, யோங்க வெடுத்த
வ னொப்பில் பெருவலி, யாங்கு நெரித் தமராவென் றழைத்த
பின், நீங்கா வருள்செய்தா னின்மலன் றானே. (௪)

உறுவ தறிதண்டி யொண்மணற் கூட்டி, யறுவகை யானே
ந்து மாட்டத்தன் றாதை, செறுவகை செய்து சிதைப்ப முனிந்
து, மறுமழு வால்வெட்டி மாலைபெற் றானே. (௫)

ஓடிவந் தெல்லா மொருங்கிய தேவர்கள், வாடி முகமும்
வருத்தத்துத் தாஞ்சென்று, நாடி யிறைவா நமவென்று கும்பி
ட, வேடில் புகழோ னெழுகவென் றானே. (௬) ஆ கசு.

---

தக்கன்வேள்வி.

தந்தை பிரான்வெகுண் டான்றக்கன் வேள்வியை, வெந்
தழ லூடே புறப்பட்ட விண்ணவர், முந்திய பூசை முடியார்
முறைகெட்டுச், சிந்தின ரண்ணல் சினஞ்செய்த போதே. (க)

சந்திசெய் கண்டெழு கின்றரி தானு, மெந்தை யிவனல்ல
யாமே யுலகினிற், பந்தஞ்செய் பாசத்து வீழ்ந்து தவஞ்செய்ய,
வந்தமி லானு மருள்புரிந் தானே. (௨)

அப்பரி சேயய னுபதி வேள்வியு, ளப்பரி சங்கி யதிசய
மாகிலு, மப்பரி சேயது நீர்மையை யுள்கலந், தப்பரி சேசிவ னு
லிக்கின் றானே. (௩)

அப்பரி சேயயன் மால்முதற் றேவர்க ளப்பரி சேயவ ராகிய காரண, மப்பரி சங்கியு நாளுமுள் ளிட்ட, வப்பரி சாகிய லந்திருந் தானே. (௪)

அலந்திருந் தானென் றமரர் துதிப்பக், குலந்தருங் கீழங்கி கோளுற நோக்கிச், சிவந்த பரமிது சென்று கதுவ, வுவந்த பெருவழி யோடிவந் தானே. (௫)

அரிபிரமன் றக்க னருக்க னுடனே, வருமதி வாலை வன்னி நல் லிந்திரன், சிரமுக நாசி சிறந்தகை தோள்தா, னரனரு ளின்றி யழிந்தநல் லோரே. (௬)

செவிமந்திரஞ் சொல்லுஞ் செய்தவத் தேவர், விதிமந்திரத்தி னடுக்கலைக் கோலிற், செவி மந்திரஞ் செய்து தாமுற நோக்குங், குவி மந்திரங்கொல் கொடியது வாமே. (௭)

நல்லார் நவகுண மொன்பது மின்புரப், பல்லா ரமரர் பரிந்தருள் செய்கென, வில்லால் வளையை விளங்கொளி கொற்றவன், பொல்லா வசுரர்கள் பொன்றும் படிக்கே. (௮)

தெளிந்தார் கலங்கினு நீகலங் காதே, யளிந்தாங் கடைவதெம் மாதிப் பிரானை, விளிந்தானத் தக்கனவ் வேள்வியை வீயச், சுளிந்தாங் கருள்செயத் தூய்மொழி யாளே. (௯) ஆ உ௫.

---

## பிரளயம்.

கருவரை மூடிக் கலந்தெழும் வெள்ளத், திருவருங் கோவென் றிகல விறைவ, னொருவனு நீருற வோங்கொளி யாகி, யருவரை யாய்நின் றருள்புரிந் தானே. (௧)

அலைகட லூடறுத் தண்டத்து வானோர், தலைவ னெனும்பெயர் தான்றலை மேற்கொண், டுலகா ரழற்கண் டுள்விழா தோடி, யலைவாயில் வீழாம லஞ்சலென் றானே. (௨)

தண்கடல் விட்ட தமரருந் தேவரு, மெண்கடல் சூழெம் பிரானென் றிறைஞ்சுவர், விண்கடல் செய்தவர் மேலெழுந் தப்

புறங், கண்கடல் செய்யுங் கருத்தறி யாரே. (௩)

சமைக்க வல்லானைச் சயம்புவென் றேத்தி, யமைக்கவல் லாரிவ் வுலகத் துளாரோ, திமைத்த தெண்ணீரிற் கடலொலி யோசை, மிகைக்கொள வங்கி மிகாமைவைத் தானே. (௪)

பண்பழி செய்வழி பாடுசென் றப்புறங், கண்பழி யாத கமலத் திருக்கின்ற, நண்பழி யாளனை நாடிச்சென் றச்சிரம், விண்பழி யாது விருத்திக்கொண் டானே. (௫) ஆ ௩௦.

---

## சக்கரப்பேறு.

மால்போ தகனென்னும் வண்மைக்கிங் காங்காரங், கால்போதங் கையினோ டந்தரச் சக்கர, மேல்போக வெள்ளி மலையம ராபதிப், பூர்போக மேழும் படைத்துடை யானே. (௧)

சக்கரம் பெற்றுநற் றாமோதரன் றானுஞ், சக்கரந் தன்னைத் தரிக்கவொண் ணாமையால், மிக்கரன் றன்னை விருப்புட னர்ச்சிக்கத், தக்கநற் சத்தியைத் தான்கூறு செய்ததே. (௨)

கூறது வாகக் குறித்துநற் சக்கரங், கூறது செய்து கொடுத்தனன் மாலுக்குக், கூறது செய்து கொடுத்தனன் சத்திக்குக், கூறது செய்து தரித்தனன் கோலமே. (௩)

தக்கன்றன் வேள்வி தகர்த்தநல் வீரர்பாற், றக்கன்றன் வேள்வியிற் றாமோதரன் றானுஞ், சக்கரந் தன்னைச் சசிமுடி மேல்விட, வக்கி யுமிழ்ந்தது வாயுக்[கிரத்திலே. (௪) ஆ ௩௪.

---

## எலும்புங்கபாலமும்.

எலும்புங் கபாலமு மேந்தி யெழுந்த, வலம்பன் மணிமுடி வானவ ராதி, யெலும்புங் கபாலமு மேந்தில னாகி, லெலும்புங் கபாலமு மிற்றுமண் ணாமே. (௧) ஆ ௩௫.

---

## அடிமுடி தேடல்.

பிரமனு மாலும் பிரானேநா னென்னப், பிரமன்மா றங்கட்டம் பேதமை யாலே, பரம னனலாய்ப் பரந்துமுன் னிற்க, வரனடி தேடி யரற்றுகின் றாரே. (௧)

ஆமே முலகுற நின்றவெம் மண்ணலுந், தாமே ழுலகிற் றழற்பிழம் பாய்நிற்கும், வானே ழுலகுறு மாமணிக் கண்டனை, நானறிந் தேனவ னுண்மையி னாலே. (௨)

ஊனா யுயிரா யுணர்வங்கி யாய்முன்னஞ், சேணுயர் வானோங் கிருந் திருவுரு வேயண்டத், தாணுவு ஞாயிறுந் தண்மதி யுங்கடந், தாண்முழு தண்டமு மாகிநின் றானே. (௩)

நின்று விலமுழு தண்டத்து ணீளிய, னன்றே யவன்வடிவஞ்சின ராய்ந்தது, சென்றி ருவர் திருமுடி மேற்செல, நன்றுங் கழலடி காடவொண் ணாதே. (௪)

சேவடி யேத்துஞ் செறிவுடை வானவர், மூவடி தாவென் றானு முனிவரும், பாவடி யாலே பதஞ்செய் பிரமனுந், தாவடி யிட்டுத் தலைப்பெய்தும் வாறே. (௫)

தானக் கமலத் திருந்து சதுமுகன், றானக் கருங்கடலூழித் தலைவனு, மூனத்தி னுள்ளே யுயிர்போ லுணர்கின்ற, தானப் பெரும்பொருட் டன்மைய தாமே. (௬)

ஆலிங் கனஞ்செய் தெழுந்த பரஞ்சுடர், மேலிங்ஙன் வைத்ததோர் மெய்ந்நெறி முன்கண், டாலிங் கனஞ்செய் துலகம் வலம்வருங், கோலிங் கமைஞ்சருள் கூடலு மாமே. (௭)

வாள்கொடுத் தானை வழிபட்ட தேவர்க, ளாள்கொடுத் தெம்போ லரனை யறிகில, ராள்கொடுத் தின்பங் கொடுத்துக் கோளாசத், தாள்கொடுத் தானடி சாரகி லாரே. (௮)

ஊழி வலஞ்செய்தங் கோரு மொருவற்கு, வாழிச் சதுமுகன் வந்து வெளிப்படும், வீழித் தலைநீர் விதித்திது தாவென, வூழிக் கதிரோ னொளியைவென் றானே. (௯) ஆ ௪௪.

சர்வசிருஷ்டி.

ஆதியொ டந்தமிலாத பராபரம், போதம தாகப் புணரும் பராபரை, சோதி யதனிற் பரந்தோன்றத் தோன்றுமாந், தீதில் பரையதன் பாற்றிகழ் நாதமே. (௧)

நாதத்தில் விந்துவு நாதவிந் துக்களில், தீதற் றகம்வந்த சிவன்சத்தி யென்னவே, பேதித்து ஞானங் கிரியை பிறத்தலால், வாதித்த வித்தையில் வந்தெழும் விந்துவே. (௨)

இல்லது சத்தி யிடந்தனி லுண்டாகிக், கல்லொளி போலக் கலந்துள் ளிருந்திடும், வல்லது வாக வழிசெய்த வப்பொருள், சொல்லது சொல்லிடிற் றூராதி தூரமே. (௩)

தூரத்திற் சோதி தொடர்ந்தொரு சத்தியா, யார்வத்து நாக மணைந்தொரு விந்துவாய்ப், பாரச் சதாசிவம் பார்முத லைந்துக்கு, மார்வத்துச் சத்தியோ ராவத்து மானுமே. (௪)

மானின்கண் வானாகி வாரி வளந்தனிற், கானின்க ணீருங் கலந்து கடினமாய்த், தேனின்க ணைந்துஞ் செறிந்தைந்து பூதமாய்ப், பூவின்க ணின்று பொருந்தும் புவனமே. (௫)

புவனம் படைப்பா னொருவ னொருத்தி, புவனம் படைப்பார்க்குப் புத்திர னாவர், புவனம் படைப்பானும் பூமிசை யானாய், புவனம் படைப்பானப் புண்ணியன் றானே. (௬)

புண்ணிய னந்தி பொருந்து முலகெங்கு, மண்ணியல் பாகி வளர்ந்திடுஞ் சத்தியுந், தண்ணியல் பாகித் தரணி முழுதுமாய், கண்ணியல் பாகிக் கலந்தெழும் பூவிலே. (௭)

நீரகத் தின்பம் பிறக்கு நெருப்பிடை, காயத்திற் சோதி பிறக்குமக் காற்றிடை, யோர்வுடை நல்லுயிர்ப் பாத மொலிசத்தி, நீரிடை மண்ணி னிலைபிறப் பாமே. (௮)

உண்டுல கேழு முமிழ்ந்தா னுடனாகி, யண்டத் தமரர் தலைவனு மாதியுங், கண்டச் சதுமுகக் காரணன் றன்னொடும், பண்டிவ் வுலகம் படைக்கும் பொருளே. (௯)

ஒன்று பெருங்கட லுள்ளுறு வாளொடும், பாங்கார் கயிலைப் பராபரன் றானும், வீங்கு கமல மலர்மிசை மேலய, னாங்குயிர் வைக்கு மதுவுணர்ந் தானே. (கஎ)

காரண னன்பிற் கலந்தெங்கு நின்றவன், நாரண னின்ற நடுவுட லாய்நிற்கும், பாரண னன்பிற் பதஞ்செய்யு நான்முக, னாரண மாயுல காயமர்ந் தானே. (கக)

பயனெளி தாம்பரு மாமணி செய்ய, நயனெளி தாகிய நம்பனென் றுண்டு, வயனெளி யாயிருந் தங்கே படைக்கும், பயனெளி தாம்வய ணங்கெளிந் தேனே. (கஉ)

போக்கும் வரவும் புனித னருள்புரிந், தாக்கமுஞ் சிந்தைய தாகின்ற காலத்து, மேக்கு மிகநின்ற வெட்டுத் திசையொடுங், தாக்குங் கலக்குந் தயாபரன் றானே. (கங)

நின்றுயி ராக்கு நிமலனென் னுருயி, ரொன்றுயி ராக்கு மளவை யுடனுற, முன்னுயி ராக்கு முடக்குந் துணையதா, நன்றுயிர்ப் பானே நடுவுநின் றானே. (கச)

ஆஇன்ற தன்மையி லக்கலி கொன்றையன், வேகின்ற செம்பொனின் மேலணி மேனியன், போகின்ற சீவன் புகுந்திட லாயுள, னாஇன்ற தன்மைசெய் யாண்டகை யானே. (கரு)

ஒருவ னொருத்தி விளையாட லுற்று, இருவர் விளையாட்டு மெல்லாம் விளக்கும், பருவங்க டோறும் பயன்பல வான, திருவொன்றிற் செய்கை செகமுற்று மாமே. (கசு)

புகுந்தறி வான்புவ னாபதி யண்ணல், புகுந்தறி வான்புரி சக்கரத் தண்ணல், புகுந்தறி வான்மலர் மேலுறை புத்தேள், புபுகுந்தறி யும்முழக் காகிநின் றாரே. (கஎ)

ஆணவச் சத்தியு மாமதி லைவருங், காரிய காரண வீசர் கடைமுறை, பேணிய வைந்தொழி லால்விந்து விற்பிறந், தாணவ நீங்கா தவரென லாகுமே. (கஅ)

உற்றமுப் பாலொன்று மாயா ளுதயமா, மற்றைய மூன்று

மா மாயோ தயம்விந்து, மெற்றவ னாதம் பரையிற் பிறத்தலா
ற், றுற்ற பரசிவன் றெல்லை யாட்டிதே. (௧௯)

ஆகாய மாகி சதாசிவ ராதியென், போகாத சத்தியுட்
போந்துடன் போந்தனர், மாகாய வீச னரன்மால் பிரமனா,
மாகாயம் பூமியுங் காண வளித்தலே. (௨௰)

அளியார் முக்கோணம் வயிந்தவந் தன்னில், லளியார் தி
ரிபுரை யாமவ டானே, யளியார் சதாசிவ மாகி யமைவா, ள
ளியார் கருமங்க ளைந்துசெய் வாளே. (௨௧)

வாரணி கொங்கை மனோன்மணி மங்கலி, காராண காரிய
மாகக் கலந்தவள், வாரணி யாரணி யானவம் மோகினி, பூரணி
போதாதி போதமு மாமே. (௨௨)

நின்றது தானாய் நிறைந்த மகேசுரன், சென்றங் கியங்கி
யரன்றிரு மாலவன், மன்றது செய்யு மலர்மிசை மேலய, னெ
ன்றிய ராக விளைந்திருந் தானே. (௨௩)

ஒருவனு மேயுல கேழும் படைத்தா,னொருவனு மேயுல கே
ழு மளந்தா, னொருவனு மேயுல கேழுங் கடந்தா, னொருவனு
மேயுட லோடுயிர் தானே. (௨௪)

செந்தா மரைவண்ணன் றீவண்ண னெம்மிறை, மஞ்சார்
முகில்வண்ணன் மாயஞ்செய் பாசத்துக், கொந்தார் குழலியர்
கூடிய கூட்டத்து, மைந்தார் பிறவி யமைத்துநின் றானே. ()

தேடுந் திசையெட்டுஞ் சீவ னுடலுயிர், கூடும் பிறவிக் கு
ணஞ்செய்த மாசக்தி, யூடு மவர்தம துள்ளத்தி னுண்ணின்று,
நாடும் வழக்கமு நானறிந் தேனே. (௨௬)

ஓராய மேயுல கேழும் படைத்தது, வோராய மேயுல கே
ழு நடப்பது, யோராய மேயுல சேழு மிறப்பது, வோராய மே
யுட லோடுயிர் தானே. (௨௭)

நாத னொருவனு நல்ல விருவருங், கோது குலத்தொடு கூ
ட்டிக் குழைத்தன, ரேது பிணியன் றிசையு மிருவருக், காதி யி
னனே யருளுகின் றானே. (௨௮)

அப்பரி செண்பத்து நான்கு நூறுயிர, மெய்ப்பரி செய்தி விரிந்துயி ராய்நிற்கு, மப்பரி சேதென்று புகலு மனிதர்க, ளப்பரி சேயிருண் மூடநின் றுரே. (உக)

ஆதித்தன் சந்திர னங்கியெனப் பலர், போதித்த வாஞெலி பொங்கெரி நீர்புவி, வாதித்த சத்தாதி வாக்கு மனாதிக, ளோதற்ற மாயையின் விந்துவி னுற்றதே. (௩௨) ஆ எச.

---

திதி

புகுந்துநின் றுன்வெளி யாயிரு ளாகிப், புகுந்துநின் றுன்புக ழாயிகழ் வாகிப், புகுந்துநின் றுனுட லாயுயி ராகிப், புகுந்துநின் றுன்புந்தி மன்னிநின் றுனே. (க)

தானே திசையொடு தேவரு மாய்நிற்குந், தானே யுடலுயிர் தத்துவ மாய்நிற்குந், தானே கடன்மலை யாதியு மாய்நிற்குந், தானே யுலகிற் றலைவனு மாமே. (உ)

உடலா யுயிரா யுலகம தாகிக், கடலாய்க் கார்முகி னீர்பொழி வாஞெ, யிடையா யுலப்பிலி யெங்குந்தா ஞெகி, யடையார் பெருவழி யண்ணனின் றுனே. (௩)

தேடுந் திசையெட்டுஞ் சீவ னுட்லுயிர், கூடு மரபிற் குணஞ்செய்து மாகந்தி, யூடு மவர்தம துள்ளத்து ளேநின்று, நாடும் வழக்கமு நானறிக் தேனே. (௪)

தாஞெரு காலந் தனிச்சுட ராய்நிற்குந், தாஞெரு காலசண்ட மாருத மாய்நிற்குந், தாஞெரு காலந் தண்மழை யாய்நிற்குந், தாஞெரு காலந்தண் மாயனு மாமே. (௫)

அன்பு மறிவு மடக்கமு மாய்நிற்கு, மின்பமு மின்பக் கலவியு மாய்நிற்கு, முன்பொரு காலமு மூழியு மாய்நிற்கு, மன்புற வைந்தி னமர்ந்துநின் றுனே. (௬)

உற்று வனைவா னவனே யுலகினைப், பெற்று வனைவா னவனே பிறவியைச், சுற்றிய சாலுங் குடமுஞ் சிறிதுதை, மற்று மவனே வனையவல் லானே. (எ)

உள்ளுயிர்ப் பாயுட லாகிநின் றூர்நந்தி, வெள்ளுயி ராகும் வெளியா னிலங்கொளி, யுள்ளுயிர்க் கும்முணர் வேயுட லுட்ப ரந், தள்ளுயி ராவண்ணந் தாங்கிநின் றானே. (அ)

தாஞ்சருந் தன்மையுந் தானவை பல்லுயிர், வாங்கிய காலத்து மற்றோர் பிறிதில்லை,யோங்கி யெழுமைக்கும் யோகாந்த மவ்வழி, தாங்கிநின் றனுமத் தாரணி தானே. (கூ)

அணுகினுஞ் சேயவ னங்கியிற் கூடி, நணுகினு ஞானக் கொழுந்தொன்று நல்கும், பணியினும் பார்மிசைப் பல்லுயிரா கித், தணியினு மன்னுட லண்ணல்செய் வானே. (க0) ஆ அச.

சங்காரம்.

அங்கிசெய் தீச னகலிடஞ் சுட்டது, அங்கிசெய் தீசனை லகடற் சுட்டது, அங்கிசெய் தீச னசுரரைச் சுட்டது, அங்கி யவ் விசர்க்கு கையம்பு தானே. (க)

இலயங்கண் மூன்றினு மொன்றுகற் பாந்த, நிலையன் றிழிந்தமை நின்றுணர்ந் தேனு, னுலைதந்த மெல்லரி போலு முலக, மலைதந்த மாநிலந் தான்வெந் ததுவே. (உ)

பதஞ்செய்யும் பாரும் பனிவரை யெட்டு, முதஞ்செய்யு மேழ்கட லோத முதலாங், குதஞ்செய்யு மங்கி கொளுவி யாகாசம், விதஞ்செய்யு நெஞ்சின் வியப்பில்லை தானே. (ங)

கொண்டல் வரைநின் றிழிந்த குலக்கொடி, யண்டத்து ளூறி யிருந்தெண் டிசையாதி, யொன்றின் பதஞ்செய்த வோமென்ற வட்புறக், குண்டத்தின் மேலங்கி கோலிக்கொண் டானே. (ச)

நித்த சங்கார முறக்கத்து நீண்மூடம், வைத்த சங்கார முஞ் சாக்கிரா தீதமாஞ், சுத்தசங் காரந் தொழிலற்ற கேவல, முய்த்தசங் காரம் பரனரு ளுண்மையே. (ரு)

நித்தசங் கார மிரண்டுட னீவுதல்,வைத்தசங் காரமு மாயாள்சங் காரமாஞ், சுத்தசங் கார மனுதிதந் தோய்வித்த, வாய்த்தசங் காரஞ் சிவனரு ளுண்மையே. (௬)

நித்தசங் காரங் கருவிடர் நீக்கினு, லொத்தசங் கார முடலுயிர் நீவுதல், வைத்தசங் காரங் கேவல மான்மாவுக், குய்த்தசங் காரஞ் சிவமாகு முண்மையே. (௭)

நித்தசங் காரமு நீடிளைப் பாற்றுதல், வைத்தசங் காரமு மன்னு மனுதியிற், சுத்தசங் காரமுந் தோயாப் பரனருள், வைத்தசங் காரமு நாலா மதிக்கிலே. (௮)

பாழே முதலா வெழும்பயி ரவ்விடம், பாழே யடங்கினும் பண்டைப்பா ழாகாவாம், வாழாச்சங் காரத்தின் மாலயன் செய்தியாம், பாழாம் பயிரா யடங்குமப் பாழிலே. (௯)

தீயவைத் தார்மின்கள் சேரும் வினைதனை, மாயம்வைத் தான்வைத்த வன்பதி யொன்றுண்டு, காயம்வைத் தான்கலந் தெங்கு நினைப்பதோ, ராயம்வைத் தாயுணர் வாரவைத் தானே.

ஆ ௯௪.

---

## திரோபாவம்.

உள்ளத் தொருவனை யுள்ளுறு சோதியை, யுள்ளம்விட் டோரடி நீங்கா வொருவனை, யுள்ளமுந் தானு முடனே யிருக்கினு, முள்ள மவனை யுருவறி யாதே. (௧)

இன்பப் பிறவி படைத்த விறைவனுந், துன்பஞ்செய் பாசத் துயருளடைந்தன, னென்பிற் கொளுவி யிசைந்துறு தோற்றநசை, முன்பிற் கொளுவி முடிகுவ தாக்குமே. (௨)

இறையவன் மாதவ னின்பம் படைத்த, மறையவன் மூவரும் வந்துடன் கூடி, யிறையவன் செய்த விரும்பொறி யாக்கை, மறையவன் வைத்த பரிசறி யாரே. (௩)

காண்கின்ற கண்ணொளி காதற்செய் யீசனை, யாண்பெண் ணலியுரு வாய்நின்ற வாதியைப், பூண்படு நாவுடை நெஞ்ச முணர்ந்திட்டுச், சேண்படு பொய்கைச் செயலணை யாமே. (௪)

தெருளு முலகிற்குந் தேவர்க்கு மின்ப, மருளும் வகைசெய்யு மாதிப் பிரானுஞ், சுருளுஞ் சுடருறு தூவெஞ் சுடரு, மிருளு மறநின் றிருட்டறை யாமே. (௫)

அரைக்கின் றருடரு மங்கங்க ளோசை, புரைக்கின்ற வாசையு மொன்றொன் றுவ்வாப், பரக்கு முருவமும் பாரகீந் தானாய்க், கரக்கின் றவைசெய்த காண்டகை யானே. (௬)

ஒளித்தவைத் தென்னுள் ளுறவுணர்ந் தீசனை, வெளிப்பட் டு நின்றருள் செய்திடு மீண்டே, களிப்பொடுங் காதன்மை பென்னும் பெருமை, வெளிப்பட் டிறைஞ்சினும் வேட்சியு மாமே.

நின்றது தானாய் நிறைந்த மகேசுரன். சென்றங் கியங்கு மயன்திரு மாலவ, னன்றது செய்யு மலர்மிசை மேலய, னென்றிவ ராகி யிசைந்திருந் தானே. (௮)

ஒருங்கிய பாசத்து ளுத்தம சித்த, னிருங்களை மேலிருந் தின்புற நாடி, வருங்களை யோரா வகையினிற் கங்கை, யருங்களை பேணு தழுக்கது வாமே. (௯)

மண்ணொன்று தான்பல நற்கல மாயிடு, முண்ணின்ற யோனிக ளெல்லா மொருவனே, கண்ணொன்று தான்பல காணுந் தனைக்காணு, வண்ணலு மவ்வண்ணமாகிநின் றானே. (௧௦) ஆ ௧௰௪

---

அநுக்கிரகம்.

எட்டுத் திசையு மடிக்கின்றகாற்றவன், வட்டத் திரைய னல் மாநில மாகாச, மொட்டி யுயிர்நிலை யென்னுமிக் காயப் பை, கட்டி யவிழ்க்கின்ற கண்ணுதல் காணுமே. (௧)

உச்சியி லோங்கி யொளிதிகழ் நாதத்தை, நச்சியே யின

பங்கொள் வார்க்கு நமனில்லை, விச்சும் விரிசுடர் மூன்று மொலி
குக்குந், தைச்சு மவனே சமைக்கவல் லானே. (௨)

குசவன் றிருக்கையி லேற்றிய மண்ணைக், குசவன் மனத்
துற்ற தெல்லாம் வனைவன், குசவனைப் போலெங்கள் கோனந்
தி வேண்டி, லசைவி லுலக மதுவிது வாமே. (௩)

விடையுடை யான்விகிர் தன்மிகு பூதப், படையுடை யா
ன்பரி சேயுல காக்குங்,கொடையுடை யான்குண மேருவை மா
குஞ், சடையுடை யான்சிந்தை சார்ந்துநின் றானே. (௪)

உகந்துநின் றேபடைத் தானுல கேழு, முகந்துநின் றேப
டைத் தான்பல வூழி, யுகந்துநின் றேபடைத் தானைந்து பூத,
முகந்துநின் றேயுயி ருண்படைத் தானே. (௫)

படைத்துடை யான்பண் டுலகங்க ளேழும், படைத்து
டை யான்பல தேவரை முன்னே, படைத்துடை யான்பல சீ
வரை முன்னே, படைத்துடை யான்பர மாகிநின் றானே. (௬)

ஆதி படைத்தன னைம்பெரும் பூதங்க, ளாதி படைத்த
ன னையபல் லூழிக, ளாதி படைத்தன னெண்ணிலி தேவரை,
யாதி படைத்தவை தாங்கிநின் றானே. (௭)

அகன்று னகலிட மேழுமொன் றாகி, யிவன்று னெனநின்
றெளியனு மல்லன், சிவன்றன் பலபல சீவனு மாகி, நவின்று
னுலகுறு நம்பனு மாமே. (௮)

உண்ணின்ற சோதி யுறநின்ற வோருடல், விண்ணின் றம
ரர் விரும்பும் விழுப்பொருண்,மண்ணின்ற வானோர் புகழ்திரு
மேனியன், கண்ணின்ற மாமணி மாபோ தகமே. (௯)

ஆரு மறியாதவ் வண்டத் திருவுருப், பார்முத லாகப் பயி
லுங் கடத்திலே, நீரினிற் பால்போல நிற்கின்ற நேர்மையைச்,
சோராமற் காணுஞ் சுகமறிக் தேனே. (௧௦) ஆ ௧௧௪.

---

## கர்ப்பக்கிரிகை.

ஆக்குகின் றான்முன் பிரிந்த விருபத்தஞ், சாக்குகின் றான வன் றுதியெம் மாறுபி, ராக்குகின் றன்கர்ப்பக் கோளகை யுள் ளிருந், தாக்குகின் றனவ ளுவ தறிந்தே. (க)

அறிகின்ற மூலத்தின் மேலங்கி யப்புச், செறிகின்ற ஞான த்துச் செந்தாள் கொளுவிப், பொறைநின்ற வின்னுயிர்ப் போ ந்துறை நாடப், பறிகின்ற பத்தெனும் பாரஞ்செய் தானே. (உ)

இன்புறு காலத் திருவர்முன் பூறிய, துன்புறு பாசத் துய ர்மனை வானுளான், பண்புறு காலமும் பார்மிசை வாழ்க்கையு, மன்புறு காலத் தமைத்தொழிந் தானே. (ங)

கருவை யொழிந்தவர் கண்டநால் மூவேழ், புருட னுடலி ல் பொருந்துமற் றோரார், திருவின் கருக்குழி தேடிப் புகுந்த, துருவ மிரண்டாக வோடி விழுந்ததே. (ச)

விழுந்தது லிங்கம் விரிந்தது யோனி, யொழிந்த முதலைந் து மிரைந்தொ டேறிப், பொழிந்த புனல்பூதம் போற்றுங் கர ண, மொழிந்த நுதலுச்சி யுள்ளே யொளித்தே. (ரு)

பூவின் மணத்தைப் பொருந்திய வாயுவுந், தாவி யுலகிற் ற ரிப்பித்த வாறுபோன், மேவிய சீவனில் மெல்லநீள் வாயுவுங், கூவி யவிழுங் குறிக்கொண்ட போதே. (சு)

போகின்ற வெட்டும் புகுகின்ற பத்தெட்டு, மூழ்கின்ற மு த்தனு மொன்பது வாய்தலு, நாகமு மெட்டுட னாலு புரவியும், பாகன் விடாவிடிற் பன்றியு மாமே. (எ)

ஏற வெதிர்க்கி லிறையவன் றானாகு, மாற வெதிர்க்கி லரி யவன் றானாகு, நேரொக்க வைக்கி னிகர்போதந் தானும், பே ரொத்த மைந்தனும் பேரர சாளுமே. (அ)

ஏயங் கலந்த விருவர்தஞ் சாயத்துப், பாயுங் கருவு முரு வாமெனப்பல, காயங் கலந்தது காணப் பதிந்தபின், மாயங் கலந்த மனோலய மானதே. (கூ)

கெற்பத்துக் கேவல மாயாள் கிளைகூட்ட, நிர்குந் துரியம் பேதித்து நினைவெழ, வற்புறு காமிய மெட்டாதல் மாயேயஞ், சொற்புறு தூய்மறை வாக்கினுஞ் சொல்லே. (கo)

என்பால் மிடைந்து நரம்பு வரிக்கட்டிச், செம்பா லிறைச்சித் திருந்த மனைசெய்து, வின்பா லுயிர்நிலை செய்த விறையோங்கு, நண்பா லொருவனை நாடுகின் றேனே. (கக)

பதஞ்செய்யும் பால்வண்ணன் மேனிப் பகலோ,னிதஞ்செய்யு மொத்துட லெங்கும் புகுந்து, குதஞ்செய்யு மங்கியின் கோபந் தணிப்பான், விதஞ்செய்யு மாறே விதித்தொழிந் தானே.

ஒழிபல செய்யும் வினையுற்ற நாளே, வழிபல நீராட்டி வைத்தமூ வாங்கிப், பழிபல செய்கின்ற பாசக் கருவைச், சுழிபல வாங்கிச் சுடாமல்வைத் தானே. (கங)

சுக்கில நாடியிற் றோன்றிய வெள்ளியு, மக்கிர மத்தே தோன்றுமவ் வியோனியும், புக்கிடு மெண்விரற் புறப்பட்டு நால்விர, லக்கர மெட்டுமண் சாணது வாமே. (சச)

போகத்து ளாங்கே புகுந்த புனிதனுங், கோசத்து ளாகங் கொணர்ந்த கொடைத்தொழி, லேகத்து ளங்கே யிரண்டெட்டு மூன்றைந்து, மோகத்து ளாங்கொரு முட்டைசெய் தானே. (சரு)

பிண்டத்தி லுள்ளூறு பேதப் புலனைந்தும், பிண்டத்து ளூடே பிறந்து மரித்தது, வண்டத்தி னுள்ளூறு சீவனு மவ்வகை, யண்டத்து நாதத் தமர்ந்திடுந் தானே. (கசு)

இலைப்பொறி யேற்றி யென்துட லீசன், றுலைப்பொறி யிற்கரு வைந்துட னாட்டி, நிலைப்பொறி முப்பத்து நீர்மை கொளுவி, யுலைப்பொறி யொன்பதி லொன்றுசெய் தானே. (கஎ)

இன்புற் றிருந்தவ ரியலித்து வைத்தமண், டுன்பக் கலச மனைவா னொருவனே, யொன்பது நீர்ச்சால் கலசம் பதினெட்டு, வெந்தது சூளை விளைந்தது தானே. (கஅ)

அறியீ ருடம்பினி லாகிய வாறும், பிறியீ ரதனிற் பெரு குங் குணங்கள், செறியீ ரவற்றினுட் சித்திக ளெட்ட, சறிவீ ரொந்தினுள் ளானது பிண்டமே. (கக)

உடல்வைத்த வாறு முயிர்வைத்த வாறு, மடைவைத்த வொன்பது வாய்தலும் வைத்துத், திடம்வைத்த தாமரைச்செ ன்னியு ளங்கி, கடைவைத்த வீசனைக் கைகலந் தேனே. (உ0)

கேட்டுநின்றே னெங்குங் கேடில் பெருஞ்சுடர், மூட்டுகின் றுன்முதல் யோனி மயமவன், கூட்டுகின் றுன்குழம் பின்கரு வையுரு, நீட்டிநின் றுகத்து நேர்பட்ட வாறே. (உக)

பூவுடன் மொட்டுப் பொருந்த வலர்ந்தபின், காவுடைத் தீபங் கலந்து பிறந்திடு, நீரிடை நின்ற குமிழி நிழற்றுய், பாரு ட லெங்கும் பரந்தெட்டும் பற்றுமே. (உஉ)

எட்டினு ளைந்தாகு மிந்திரி யங்களுங், கட்டிய மூன்று க ரணமு மாய்விடு, மொட்டிய பாச வுணர்வென்னுங் காயப்பை, கட்டி யவிழ்ந்திடுங் கண்ணுதல் காணுமே. (உங)

கண்ணுத லுமங் கலந்துடம் பாயிடப், பண்ணுதல் செய் து பசுபாச நீக்கிட, வெண்ணிய வேத மிசைத்த பரப்பினை, ம ண்முத லாக வகுத்துவைத் தானே. (உச)

அருளல்ல தில்லை யரனறி வின்றி, யருளில்லை யாதலி ன் லோ ருயிர்க்குத், தருகின்ற போதிரு கைத்தாயர் தம்பால், வ ருகின்ற நண்பு வகுத்திடுந் தானே. (உ )

வகுத்த பிறவியின் மாதநல் லாளுந், தொகுத்திருள் நீக் கிய சோதி யவனும், பகுத்துணர் வாகிய பல்வகை யெங்கும், வகுத்துள்ளு நின்றதோர் மாண்பது வாமே. (உசு)

மாண்பது வாக வளர்கின்ற வன்னிபைக், காண்பது வா ண்பெண் ணலியெனுங் கற்பனை, பூண்பது மாதா பிதாவழி போலவே, யாம்பதி செய்தானச் சோதிதன் னுண்மையே. ()

ஆண்மிகி லாணுகும் பெண்மிகிற் பெண்ணாகும், பூணிரண் டொத்துப் பொருந்தி லலிபாகுந், தாண்மிகு மாகிற் றரணி மூ மூதாளும், பாண்வசமிக்கிடில் பாய்ந்தது மில்லையே. (உஅ)

பாய்ந்தபின் னஞ்சோடி லாயுளு நூறுகும், பாய்ந்தபின் னாலோடில் பாரினி லெண்பதாம், பாய்ந்திடும் வாய்வு பகுத்த றிந்தவ்வகை, பாய்ந்திடம் யோகிக்குப் பாய்ச்சலு மாமே. ()

பாய்கின்ற வாய்வு குறைமிற் குறளாகும், பாய்கின்ற வாயு விளைக்கின் முடமாகும், பாய்கின்ற வாய்வு நடுப்படிற் கூனு கும், பாய்கின்ற வாய்வு மாதர்க்கில்லை பார்க்கிலே. (௩௰)

மாதா வுதர மலமிகின் மந்தனும், மாதா வுதரஞ் சலமிகின் மூகையா, மாதா வுதர மிரண்டொக்கில் கண்ணில்லை, மாதா வுதரத்தில் வந்த குழவிக்கே. (௩௪)

குழவியு மாணும் வலத்தது வாகில், குழவியும் பெண்ணு மிடத்தது வாகில், குழவி யிரண்டா மபான னெதிர்க்கில், குழவி யலியாகுங் கொண்டகா லொக்கிலே. (௩௨)

கொண்டநல் வாயு விருவர்க்கு மொத்தெழில், கொண்ட குழவியுங் கோமள மாயிடுங், கொண்டநல் வாயு விருவர்க்குங் குழறிடில், கொண்டது மில்லையாங் கோல்வளை யார்க்கே. ()

கோல்வளை யுந்தியிற் கொண்ட குழவியுந், தாய்வளை யுள்ளே தயங்கிய சோதியாம், பால்வளர்ந் துள்ளே பகலவன் பொன்னுநப், போல்வளர்ந் துள்ளே பொருந்துரு வாமே. (௩௪)

உருவம் வளர்ந்திடு மொண்டிங்கள் பத்திற், பருவம தாகவே பாரினில் வந்து, மருவி வளர்ந்திடு மாயையி னாலே, பருவம தாவதிங் காரறி வாரோ. (௩௫)

இட்டா ரறிந்தில ரேற்றவர் கண்டிலர், தட்டா னறிந்து மொருவர்க் குரைத்திலன், பட்டாங்கு சொல்லும் பரமனு மங்குளன், கெட்டேனெம் மாயையின் கீழ்மையெவ் வாறே. (௩௬)

இன்புறு நாடி யிருவருஞ் சந்தித்த, தன்புறு பாசத்திற் றோன்றி வளர்ந்தபின், முன்புற நாடி நிலத்தின்முன் றோன்றி ய, தோன்புற நாடிநின் றோதலு மாமே. (௩௭)

குயிற்குஞ்சு முட்டையைக் காக்கைதன் கூட்டிட்டா, லயிர்ப்பின்றிக் காக்கை வளர்க்கின் றதுபோ,லியக்கில்லை போக்கில்லை யேயென்ப தில்லை, மயக்கத்தா லாக்கை வளர்கின்ற வாறே. (௩௮)

முதற்கிழங் காய முளையாய் முளைப்பி, னதற்புக லாய்வை மாய்நின் றளிக்கு, மதற்கது வாமின்ப மாவது போல, வதற்கது வாய்நிற்கு மாதிப் பிரானே. (௩௯)

ஏனோர் பெருமைய னாகினு மெம்மிறை, யூனே சிறுமையு ளுட்கலந் தாங்குளன், வானோ ரறியு மளவல்ல மாதேவன், றானே யறியுந் தவத்தினி னுள்ளே. (௪0)

பரத்திற் பதிந்து பதிந்தநற் காய, முருத்தரித் திவ்வுடலோங்கிட வேண்டிற், றிரைக்கட லுப்புத் திரண்டது போலத், திரித்தும் பிறக்குந் திருவரு ளாலே. (௪௧) ஆக கஙுங.

---

மூவகையாருயிர்வர்க்கம்.

சத்தி சிவன்விளை யாட்டா லுயிராக்கி, யொத்த விருமாயா கூட்டத் திடையூட்டிச், சுத்தம தாகுந் துரியம் பிரிவித்துச், சித்தம் புகுந்து சிவமய மாக்குமே. (௧)

விஞ்ஞானர் நால்வரு மெய்ப்பிரளயாகலத், தஞ்ஞானர் மூவருந் தாங்கு சகலத்தின்,அஞ்ஞானர் மூவரு மாகும் பதின்மராம், விஞ்ஞான ராதிகள் வேற்றுமை தானே. (௨)

விஞ்ஞானர் கேவலத் தாரது விட்டவ, ரஞ்ஞான ரட்டவித் தேசுரஞ் சார்ந்துளோ, ரெஞ்ஞானமேழ்கோடி மந்திர நாயகர், மெய்ஞ்ஞான ராணவம் விட்டுநின் றோரே. (௩)

இரண்டாவ தில்முத்தி யெய்தவ ரத்தனை, யிரண்டாவ துள்ளே யிருமல பெத்தர், திரண்டாகு நூற்றெட்டு ருத்திர ரென்பர், முரண்சேர் சகலத்தர் மும்மலத் தாரே. (௪)

பெத்தத்தர் சித்தொடு பேண்முத்திச் சித்தது, வொத்திட் டிரண்டிடை யூடுற்றார் சித்துமாய், மத்தத்து மும்மலம் வாட்டுங்க மாட்டாதார், சத்தத் தமிழ்ந்து சகலத் துளாரே. (௫)

சிவமாதி யைவகைத் திண்மலஞ் செற்றோ, ரவமாகாச் சித்தர்முத் தாந்தத்து வாழ்வார், பவமான தீர்வோர் பசுபாச மற்றோர், நவமான தத்துவ நாடிக்கொண் டாரே. (௬)

விஞ்ஞான ராணவங் கேவல மேவுவ, ரஞ்ஞானர் மாயையிற் றங்கு மிருமல, ரஞ்மூன ரச்சக லத்தர் சகலராம், விஞ்ஞான ராதிக ளொன்பான்வே றுயிர்களே. (௭)

விஞ்ஞான கன்மத்தர் மெய்யகங் கூடிய, வஞ்ஞான கன்மத்தி னூர்சுவர் யோனிபுக், கெஞ்ஞான மெய்தீண்டி யேயிடையிட்டுப்போய், மெஞ்ஞான ராகிச் சிவமேவ லுண்மையே. (௮)

ஆணவந் துற்ற வவித்தா நனவற்றோர், காணியவிந் துவாநாத சகலாதி, யாணவ மாதி யடைந்தோ ரவரன்றே, சேணுயர் சத்திசிவதத் துவ மாமே. (௯) ஆஉ ௧௬௪.

---

பாத்திரம்.

திலமத் தனையே சிவஞானிக் கீந்தால், பலமுத்தி சித்தி பரபோக முந்தரும், நிலமத் தனைபொன்னை நின்மூடர்க் கீந்தால், பலமுமற் றேபர போகமுங் குன்றுமே. (௧)

கண்டிருந் தாருயி ருண்டிடுங் காலனைக், கொண்டிருந் தாருயிர் கொள்ளுங் குணத்தினை, நன்றுணர்ந் தார்க்கருள் செய்திடு நாதனை, சென்றுணர்ந் தார்சிலர் தேவரு மாமே. (௨)

கைவிட்டி லேன்கரு வாகிய காலத்து, மெய்விட்டி லேன்விகிர் தன்னடி தேடுவன், பொய்விட்டு நானே புரிசடை யானடி, நெய்விட் டிலாத விடிஞ்சிலு மாமே. (௩)

ஆவன வாவ வழிவ வழிவன, போவன போவ புகுவ புகுவன, காவலன் பேர்நந்தி காட்டித்துக் கண்டவ, னேவன செய்யு மிளங்கிளை யோனே. (௪) ஆ ௧௬௮

## அபாத்திரம்.

கோல வறட்டைக் குனிந்து குளகிட்டுப், பாலைக் கறந்து பருகுவ தேயொக்குஞ், சீலமு நோன்பு மிலாதவர்க் கீந்தது, காலங் கழிந்த பயிரது வாமே. (௧)

ஈவது யோக மியம நியமங்கள், சார்வ தறிந்தன்பு தங்கு மவர்க்கன்றி, யாவ லறிந்தன்பு தங்கா தவர்களுக், கீவ பெரும் பிழை யென்றுகொள் ளீரே. (௨)

ஆமா றறியா ரதிபஞ்ச பாதகர், தோமாறு மீசற்குந் தூய குரவற்குங், காமாதி விட்டோர்க்குந் தரல்தக் குகட்டிப் போன், போமா நரகிற் புகான்போதங் கற்கவே. (௩)

மண்மலை யத்தனை மாதன மீயினு, மண்ணா ளிவனென் றஞ்சலி யத்தனு, யெண்ணி யிறைஞ்சாதார்க் கீந்த விருவரு, நண்ணுவ ரேழா நரகக் குழியிலே. (௪) ஆ ௧௭௨

## தீர்த்தம்.

உள்ளத்தி னுள்ளே யுளபல தீர்த்தங்கள், மெள்ளக் குடைந்துநின் றாடார் வினைகெடப், பள்ளமு மேடும் பரந்து திரிவரோ, கள்ள மனமுடைக் கல்வியி லோரே. (௧)

தளியறி வாளர்க்குத் தண்ணிதாய்த் தோன்றுங், குளியறி வாளர்க்குக் கூடவு மொண்ணான், வளியறி வாளர்க்கு வாய்க்கிலும் வாய்க்குந், தெளிவறி வாளர்தஞ் சிந்தையுள் ளானே.

உள்ளத்தி னுள்ளே யுளரு மொருவனைக், கள்ளத்தி னாருங் கலந்தறி வாரில்லை, வெள்ளத்தை நாடி விடுமவர் தீவினைப், பள்ளத்தி லிட்டதோர் பத்தலுள் ளாமே. (௩)

அறிவார மரர்க ளாதிப் பிரானைச், செறிவா னுறைபதஞ் சென்று வலங்கொண், மறிவார் வளைக்கை வருபுனற் கங்கைப், பொறிபார் புனன்மூழ்கப் புண்ணிய ராமே. (௪)

கடலிற் கொடுத்துக் குளத்தினிற் காண்ட, லுடலுறத் தேடுவார் தம்மையொப் பாரிலர், திடமுற்ற நந்தி திருவரு ளாற்சென், றுடலிற் புகுந்தமை யொன்றறி யாரே. (௫)

கலந்தது நீர தடம்பிர் கறுக்குங், கலந்தது நீர தடம்பிற் சிவக்குங், கலந்தது நீர தடம்பில் வெளுக்குங், கலந்தது நீர்நிலங் காற்றது வாமே. (௬) ஆ ௧௭௮.

திருக்கோயிலழிவு.

தாபர லிங்கம் பறித்தொன் றிற் றபித்தா, லாவதன் முன்னே யரசு நிலைகெடுஞ், சாவதன் முன்னே பெருநோ யடுத்திடுங், காவலன் பேர்நந்தி கட்டுரைத் தானே. (௧)

கட்டுவித் தார்மதிற் கல்லொன்று வாங்கிடில், வெட்டுவிக் கும்மபி டேகத் தரசனை, முட்டுவிக் கும்முனி வேதிய ராயினும், வெட்டுவித் தேவிடும் விண்ணவ னாணையே. (௨)

ஆற்றரு நோய்மிக் கவனி மழையின்றிப், போற்றரு மன்னரும் போர்வலி குன்றுவர், கூற்றுதைத் தான்றிருக் கோயில்க ளானவை, சாற்றிய பூசைகள் தப்பிடிற் றானே. (௩)

முன்னவ னார்கோயில் பூசைகண் முட்டிடின், மன்னர்க்குத் தீங்குள வாரி வளங்குன்றுங், கன்னங் களவு மிகுத்திடுங் காசினி, யென்னரு நந்தி யெடுத்துரைத் தானே. (௪)

பேர்கொண்ட பார்ப்பான் பிரான்றனை யர்ச்சித்தாற், போர்கொண்ட வேந்தர்க்குப் பொல்லா வியாதியாம், பார்கொண்ட நாட்டுக்குப் பஞ்சமு மாமென்றே, சீர்கொண்ட நந்தி தெரிந்துரைத் தானே. (௫) ஆ ௧௮௩.

அதோமுகதரிசநம்.

எப்பெருமானிறை வாமுறை யோவென்று, வம்பவிழ் வா னோ ரசுரன் வலிசொல்ல, வம்பவள மேனி யறுமுகா போயவ ர், தம்பகை கொல்லென்ற தற்பரன் றானே. (க)

அண்டமொ டெண்டிசை தாங்கு மதோமுகங், கண்டங் கறுத்த கறுத்தறி வாரில்லை, யுண்டது நஞ்சென் றுணாப்ப ரு ணர்விலோர், வெண்டலை மாலை விரிசடை யோற்கே. (உ)

செய்தா னறிவன் செழுங்கடல் வட்டத்துப், பொய்யே யுரைத்துப் புகலு மனிதர்காள், மெய்யே யுரைக்கில் விண்ணோ ர் தொழச்செய்வன், மைதாழ்ந் திலங்கு மிடறுடை யானே ()

நந்தி யெழுந்து நடுவுற வோங்கிய, செந்தி கலந்துட் சிவ னென நிற்கு, முந்திக் கலந்தங் குலகம் வலம்வரு, மந்தி யிறை வ னதோமுக மாமே. (ச)

அதோமுகங் கீழண்ட மான புராண, னதோமுகந் தன் னொடு மெங்கு முயலுஞ், சதோமுகத் தொண்மலர்க் கண்ணிப் பிரானு, மதோமுக னூழித் தலைவனு மாமே. (ரு)

அதோமுக மாமல ராயது கேளு, மதோமுகத் தாலொரு நூறாய் விரிந்து, வதோமுக மாகிய வந்தமில் சத்தி, வதோமுக மாகி யமர்ந்திருந் தாளே. (௬) ஆ கஅ௬.

---

சிவநிந்தை.

தெளிவுறு ஞானத்துச் சிந்தையி னுள்ளே, யளிவுறு வார ம ராபதி நாடி, யெளியனென் றீசனை நீச ரிகழில், கிளியொன் று பூனையிற் கிழது வாகுமே. (க)

முளிந்தவர் வானவர் தானவ ரெல்லாம், விளிந்தவர் மெ ய்ந்நின்ற ஞான முணரா, ரளிந்தமு துறிய வாதிப் பிரானைத், தளிந்தவர்க் கல்லது தாங்கவொண் ணாதே. (உ)

அப்பகை யாலே யசுரருந் தேவரு, நற்பகை செய்து நடு வே முடிந்தனர், எப்பகை யாகிலு மெய்தா ரிறைவனைப், பொ ய்ப்பகை செய்யினு மொன்றுபத் தாமே. (௩)

போகமு மாதர் புலவி யதுநினைந், தாகமு மூர்கலந் தங் குள ராதலில், வேதிய ராயும் விகிர்தனு மென்கின்ற, நீதியு ளீ ச னினைப்பொழி வாரே. (௪) ஆ கசுரு.

---

குருநிந்தை.

பெற்றிருந் தாணையும் பேணார் கயவர்க, ளுற்றிருந் தாரை யுளைவன சொல்லுவர், கற்றிருந் தார்வழி யுற்றிருந் தாரவர், பெற்றிருந் தாரன்றி யார்பெறும் பேறே. (க)

ஓரெழுத் தொருபொரு ளுணரக் கூறிய, சீரெழுத் தாள ரைச் சிதையச் செப்பினோ, ரூரிடைச் சுணங்களாய்ப் பிறந்தங் கோருகம், பாரிடைக் கிருமியாய்ப் படிவர் மண்ணிலே. (உ)

பத்தினி பத்தர்கள் தத்துவ ஞானிகள், சித்தங் கலங்கச் சிதைவுகள் செய்தவ, ரத்தமு மாவியு மாண்டொன்றின் மாய் ந்திடுஞ், சத்திய மீது சதாநந்தி தாளே. (௩)

மந்திர மோரெழுத் துரைத்த மாதவர், சிந்தையி னொந் திடத் தீமைகள் செய்தவர், நூந்திய சுணங்களாய்ப் பிறந்து நூ றுரு, வந்திடும் புலையராய் மாய்வர் மண்ணிலே. (௪)

ஈச னடியா ரிதயங் கலங்கிடத், தேசமு நாடுஞ் சிறப்பு மழிந்திடும், வாசவன் பீடமு மாமன்னர் பீடமு, நாசம தாகு மே நம்நந்தி யாணையே. (௫)

சன்மார்க்கச் சற்குரு சந்நிதி பொய்வரி, னன்மார்க்க மு ங்குன்று ஞானமுந் தங்காது, தொன்மார்க்க மாய தூறையு ம றந்திட்டுப், பன்மார்க்க முங்கெட்டுப் பஞ்சமு மாமே. (சு)

கைப்பட்ட மாமணி தானிடை கைவிட்டு, வெய்ப்பட்ட

கல்லைச் சுமப்போன் விதிபோன்றுங் ,கைப்பட்ட செய்யா ரயி
நிற்கத் தானறக், கைப்பிட்டுண் பான்போன்றுங் கன்மிஞா
னிக்கொப்பே. (எ) ஆ உ௱.

மயேசுரநிந்தை.

ஆண்டா னடியவ ரார்க்கும் விரோதிக, ளாண்டா னடிய
வரையமேற் றுண்பவ, ராண்டா னடியாரை வேண்டாது பே
சினர், தாந்தாம் விழுவது தாழ்வாநரகமே. (க)

ஞானியை நிந்திப் பவனு நலனென்றே, ஞானியை வந்தி
ப்பவனுமெய் நல்வினை, யான கொடுவினை தீர்வா ரவன்வயம்,
போன பொழுதே புகுஞ்சிவ போகமே. (அ) ஆ உ௱உ.

பொறையுடைமை.

பற்றிநின் றார்நெஞ்சிற் பல்விதா னொன்றுண்டு, முற்றிக் கி
டந்தது மூக்கையு நாவையுந், தெற்றிக் கிடந்து சிதைக்கின்ற சி
ந்தையுள், வற்று தொழிவது மாசதை யாமே. (க)

ஓலக்கஞ் சூழ்ந்த வுலப்பிலி தேவர்கள், பாலொத்த மே
னியன் பாதம் பணிந்துய்ய, மாலுக்கு மாதி பிரமற்கு மன்னவ
ன், ஞாலத் திவர்மிக நல்லனொன் றானே. (உ)

ஞானம் விளக்கவர் நம்மிட மன்னவர், சேனை வளைந்து
திசைதொருங் கைதொழ, வூனை விளைந்திடு மும்பர்தம் மாதி
யை, யேனை விளைந்தரு ளெட்டலு மாமே. (ங)

வல்வகை யாலு மனையிலு மன்றிலும், பல்வகை யாலும் ப
யிற்றிப் பதஞ்செயுங், கொல்லையி னின்று குதிகொள்ளுங் கூத்
தனுக், கெல்லை யிலாத விலபமுண் டாமே. (ச) ஆ உ௱சு.

பெரியோரைத் துணைக்கோடல்.

ஓடவல் லார்தம ரோடு நடாவுவன், பாடவல் லாரொலி
பார்மிசை வாழ்குவன், றேடவல் லார்க்கருள் தேவர் பிரானு

டெ், கூடவல் லாரடி கூடுவன் யானே. (௧)

தாமிடர் பட்டுத் தளிர்போற் றயங்கினு, மாமனத் தங்க ன்புவைத் ததிலையாகு, நீயிடர் பட்டிருந் தென்செய்வாய் நெஞ்சமே, போமிடத் தென்னொடும் போதுகண் டாயே. (௨)

அறிவா ரமரர் தலைவனை நாடிச், செறிவார் பெறுவர் சிவதத் துவத்தை, நெறிதான் மிகமிக நின்றருள் செய்யும், பெரியா ருடன்கூடல் பேரின்ப மாமே. (௩)

தார்சடை யான்றன் றமரா யுலகினிற், போர்புக ழாவெந்தை பொன்னடி சேருவர், வாயடை யாவுள்ளந் தேர்வார்க் கருள்செய்யுங், கோவடைந் தந்நெறி கூடலு மாமே. (௪)

உடையா னடியா ரடியா ருடன்போய்ப், படையா ரழன்மேனிப் பதிசென்று புக்கேன், கடையார நின்றவர் கண்டறி விப்ப, வுடையான் வருகென வோலமென் றாரே. (௫)

அருமைவல் லான்கலை ஞாலத்துட் டோன்றும், பெருமைவல் லோன்பிற விச்சுழி நீந்து, முரிமைவல் லானுணர்ந் துழியிருக்கு, திருமைவல் லாரொடுஞ் சேர்ந்தன்னி யானே. (௬)

ஆக அதிகாரம்-௨௫-க்குத் திருமந்திரம்-௨௧௨.

இரண்டாந்தந்திர முற்றும்.

ஆக சிறப்புப்பாயிரமுட்பட - அதிகாரம்-௫௮-க்குக் கூடிய திருமந்திரம்—௫௪௮.

---

# மூன்றாந்தந்திரம்.

## அட்டாங்கயோகம்.

உரைத்த னவற்கரி பொன்று மூடிய, நிரைத்த விராசி நிரைமுறை யெண்ணி, பிரைச்சத மெட்டும் பேசிய நந்தி, நிலைத்த வியம நியமஞ்செய் தானே. (௧)

செய்த வியம நியமஞ் சமாதிசென், றுய்யப் பராசத்தி யுத்தர பூருவ, மெய்த கவச நியாசங்கண் முத்திரை, யெய்த வுரைசெய்வ னிந்நிலை தானே. (௨)

அந்நெறி யிந்நெறி யென்னாதட் டாங்கத், தன்னெறி சென்று சமாதியி லேநின்மின், நன்னெறி செல்வார்க்கு ஞானத்திலேகலாம், புன்னெறி யாகத்திற் போக்கில்லை யாகுமே. (௩)

இயம நியமமே யெண்ணிலா வாதன, நயமுறு பிராணா யாமஞ்பிரத் தியாகாரஞ், சயமிகு தாரணை தியானஞ் சமாதி யடமுறு மட்டாங்க மாவது மாமே. (௪) ஆ ௪

---

## இயமம்.

எழுந்துநீர் பெய்யினு மெட்டுத் திசையுஞ், செழுந்த ணியமங்கள் செய்மினென் றண்ணற், கொழுந்தண் பவளக் குளிர்சடை யோடே, யழுந்திய நால்வர்க் கருள்புரிந் தானே. (௧)

கொல்லான் பொய்கூறான் களவிலா னெண்குண, னல்லா னடக்க முடையா னடுச்செய்ய, வல்லான் பகுந்துண்பான் மாசிலான் கட்காம, மில்லா னியமத் திடையினின் றானே. (௨)

ஆ ௬.

---

## நியமம்.

ஆதியை வேதத்தி னப்பொரு ளாளனைச், சோதியை யங்கே சுடுகின்ற வங்கியைப், பாதியுண் மன்னும் பராசத்தி யோடே, னீதி யுணர்ந்த நியமத்த னாமே. (௧)

தூய்மை யருளூண் சுருக்கம் பொறைசெம்மை, வாய்மை நிலைமை வளர்த்தலே மற்றிவை, காமங் களவு கொலையெனக் காண்பவை, நேமி யீரைந்து நியமத்த னாமே. (௨)

தபஞ் சபஞ் சந்தோட மாத்திகந் தானஞ், சிவன்றன் வி

ரதமே சித்தாந்தக் கேள்வி, மகஞ்சிவ பூசையொண் மதிசொ
ல்லீ ரைந்து, நிவம்பல செய்யி னியமத்த னாமே. (௩) ஆ. ௬.

---

## ஆதனம்.

பங்கய மாதி பரந்தபல் லாதன, மங்குள வாமிரு நாலும
வற்றினுள், சொங்கில்லை யாகச் சுவத்திக மெனமிகத், தங்க வி
ருப்பத் தலைவனு மாமே. (௧)

ஓரணைப் பாத மூருவின் மேலேறிட், டார வலித்ததன்
மேல்வைத் தழகுறச், சீர்திகழ் கைக ளதனைத்தன் மேல்வைக்
கப், பார்திகழ் பத்மா சனமென லாகுமே. (௨)

துரிசில் வலக்காலைத் தோன்றவே மேல்வைத்து, வரிய மு
ழந்தாளி லங்கை கலைநீட்டி, யுருகி யிடமுடற் செவ்வே யிருத்
திட், பரிசு பெறுமது பத்திரா சனமே. (௩)

ஒக்க வடியிணை யூருவி லேறிட்டு, முக்கி யுடலை முழங்கை
களிலேற்றித், தொக்க வறிந்து துளங்கா திருந்திடிற், குக்கிட
வாசனங் கொள்ளலு மாகுமே. (௪)

பாத முழந்தாளிற் பாணி கலைநீட்டி, யாதர வோடும்வா
யங்காந் தழகுறச், கோதி னயனங் கொடிமூக்கி லேயுறச், சீர்
திகழ் சிங்கா தனமெனச் செப்புமே. (௫)

பத்திரங் கோமுகம் பங்கயங் கேசரி, சொத்திகம் வீரஞ்
சுகாதன மோரேழு, முத்தம மாமுது வாசன மெட்டெட்டுப்
பத்தொடு நூறு பலவா சனமே. (௬) ஆ. ௧௫.

---

## பிராணாயாமம்.

ஐவர்க்கு நாயக னவ்வூர்த் தலைமக, னுய்யக்கொண் டேறு
ங் குதிரைமற் றொன்றுண்டு, மெய்யர்க்குப் பற்றுக் கொடுக்கு
ங் கொடாதுபோய்ப், பொய்யரைத் துள்ளி விழுத்திடுந் தா
னே. (௧)

ஆரிய நல்ல குதிரை யிரண்டுள, வீசிப் பிடிக்கும் விரக றி வாரில்லை, கூரிய நாதன் குருவி னருள்பெற்றால், வாரிப் பிடிக்க வசப்படுந் தானே. (உ)

புள்ளினு மிக்க புரவியை மேற்கண்டாற், கள்ளுண்ண வேண்டாந் தானே களிதரு‌ந், துள்ளி நடப்பிக்குஞ் சோம்பு தவிர்ப்பிக்கு, முள்ளது சொன்னே முணர்வுடை யோருக்கே. (௩)

பிராணன் மனத்தொடும் போகா தடங்கிப், பிராண னிருக்கிற் பிறப்பிறப் பில்லை, பிராணன் மடைமாறிப் பேச்சறி வித்துப், பிராண னடைபேறு பெற்றுண் டீரே. (௪)

ஏறுதல் பூரக மீரெட்டு வாமத்தா, லாறுதல் கும்பக மறுபத்து நாலதி, லூறுதல் முப்பத் திரண்டதி ரேசக, மாறுத லொன்றின்கண் வஞ்சக மாமே. (௫)

வளியினை வாங்கி வயத்தி லடக்கில், பளிங்கொத்துக் காயம் பழுக்கினும் பிஞ்சாந், தெளியக் குருவின் றிருவருள் பெற்றால், வளியினும் வேட்டு வளியனு மாமே. (௬)

எங்கே யிருக்கினும் பூரி யிடத்திலே, யங்கே யதுசெய்ய வாக்கைக் கழிவில்லை, யங்கே பிடித்தது விட்டளவுஞ் செல்லச், சங்கே குறிக்கத் தலைவனு மாமே. (௭)

ஏற்றி யிறக்கி யிருகாலும் பூரிக்குங், காற்றைப் பிடிக்குங் கணக்கறி வாரில்லை, காற்றைப் பிடிக்குங் கணக்கறி வாளர்க்குக், கூற்றை யுதைக்குங் குறியது வாமே. (௮)

மேல்கீழ் நடுப்பக்க மிக்குறப் பூரித்துப், பாலாம் இரேசகத் தாலுட் பதிவித்து, மாலாகி யுந்தியுட் கும்பித்து வாங்கவே, யாலால முண்டா னருட்பெறலாமே. (௯)

வாமத்தி லீரெட்டு மாத்திரை பூரித்தே, யேமுற்ற முப்பத் திரண்டு மிரேசித்துக், காமுற்ற பிங்கலைக் கண்ணாக விவ்விரண்டோமத்தா லெட்டெட்டு கும்பிக்க வுண்மையே. (௧௦)

இட்டது அவ்வீ டிளகா திரேசித்துப், புட்டிபடத்தச நாடியும் பூரித்துக்,கொட்டிய பிராண னபானனுங் கும்பித்து, நட்ட மிருக்க நமனில்லை தானே. (கக)

புறப்பட்டுப் புக்குத் திரிகின்ற வாயுவை, நெறிப்பட வுள்ளே நின்மல மாக்கி, லுறுப்புச் சிவக்கு முரோமங் கறுக்கும், புறப்பட்டுப் போகான் புரிசடை யோனே. (சஉ)

கூட மெடுத்துக் குடிபுக்க மங்கைய, ரோடுவர் மீளுவர் பன்னிரண் டங்குல, நீடுவ ரெண்விரற் கண்டிப்பர் நால்விரற், கூடிக் கொளிற்கோல வஞ்செழுத் தாமே. (சங)

பன்னிரண் டானைக்குப் பகலிர வுள்ளது, பன்னிரண் டானையைப் பாக னறிகிலன், பன்னிரண் டானையைப் பாக னறிந்தபின், பன்னிரண் டானைக்குப் பகலிர வில்லையே. (சச)

ஆ உகூ.

---

## பிரத்தியாகாரம்.

கண்டுகண் டுள்ளே கருத்துற வோங்கிடிற், கொண்டுகொண் டுள்ளே குணம்பல காணலாம், பண்டுகந் தெங்கும் டமழமறை தேடியை, யின்றுகண் டிங்கே யிருக்கலு மாமே. (க)

நாபிக்குங் கீழே பன்னிரண் டங்குலந், தாபிக்கு மந்திரந் தன்னை யறிகிலர், தாபிக்கு மந்திரந் தன்னை யறிந்தபின், கூவிக்கொண் டீசன் குடிபுகுந் தானே. (உ)

மூலத் திருவிரல் மேலுக்கு முன்னின்ற, பாலித்த யோனிக் கிருவிரற் கீழ்நின்ற, கோலித்த குண்டலி யுள்ளே யெழுஞ்சுடர், ஞாலத்து நாபிக்கு நால்விரற் கீழே. (ங)

நாசிக் கதோமுகம் பன்னிரண் டங்குல, நீசித்தும் வைத்து நினையவும் வல்லையேன், மாசித்தி மாயோகம் வந்து தலைப்பெய்துந், தேகத்துக் கென்றுஞ் சிதைவில்லை யாகுமே. (ச)

சோதி யிரேகைச் சுடரொளி தோன்றிடிற், சோதில் பரா
னந்தமென்றே குறிக்கொண்மின், னேர்திகழ் கண்டத்தே நில
வொளி யெய்தினு, லோதுவ துன்னுட லுன்மத்த மாமே. (௫)

மூலத் துவாரத்தை முக்கார மிட்டிரு, மேலைத் துவாரத்
தின் மேன்மனம் வைத்திரு, வேலொத்த கண்ணை வெளியிற்
விழித்திரு, காலத்தை வெல்லுங் கருத்தது தானே. (௬)

எருவிடும் வாச லிருவிரன் மேலே, கருவிடும் வாச லிருவி
ரற் கீழே, யுருவிடு சோதியை யுள்கவல் லார்க்குக், கருவிடுஞ்
சோதி கலந்துநின் றானே. (௭)

ஒருக்கா லுபாதியை யொண்சோதி தன்னைப், பிரித்துணர
வந்த வுபாதிப் பிரிவைக், கரைத்துணர் வுன்னல் கரைதலு
ண் ணோக்கல், பிரத்தியா காரப் பெருமைய தாமே. (௮)

புறப்பட்ட வாயுப் புகவிடா வண்ணந், திறப்பட்ட நிச்ச
யஞ் சேர்ந்துட னின்று, லுறப்பட்டு நின்றது வுள்ளமு மங்கே
புறப்பட்டுப் போகான் பெருந்தகை யானே. (௯)

குறிப்பினி னுள்ளே குவலயந் தோன்றும், வெறுப்பிருணீ
ங்கி விகிர்தனை நாடுஞ், சிறப்புறு சிந்தையைச் சிக்கென் றுணரி
ல், அறிப்புறு காட்சி யமரரு மாமே. (௧௦) ஆ ௩௧.

---

தாரணை.

கோணு மனத்தைக் குறிக்கொண்டு கீழ்க்கட்டி, வீணுத் த
ண்டூடே வெளியுறத் தானோக்கிக், காணுக்கண் கேளாச் செவி
யென் றிருப்பார்க்கு, வாணு ளடைக்கும் வழியது வாமே. (௧)

மலையார் சிரத்திடை வானீ ரருவி, நிலையாரப் பாயு நெடு
நாடி யூடுபோய்ச், சிலையார் பொதுவிற் றிருநட மாடுந், தொ
லையாத வானந்தச் சோதிகண் டேனே. (௨)

மேலை நிலத்தினுள் வேதகப் பெண்பிள்ளை, மூல நிலத்தி

லெழுகின்ற மூர்த்தியை, யேல வெழுப்பி யிவளுடன் சந்திக்க
ப், பாலனு மாவான் பார்நந்தி யாணையே. (ந)

கடைவாசலைக்கட்டிக் காலை யெழுப்பி, யிடைவாசனோ
க்கி யினிது ளிருத்தி, மடைவாயிற் கொக்குபோல் வந்தித் திரு
ப்பா, ருடையாம ஞூழி யிருக்கனு மாமே. (ச)

கலந்த வுயிருடன் கால மறியில், கலந் தலையாது காலி
னெருக்கங், கலந்த வுயிரது காலது கட்டிக், கலந்த வுயிருட
ன் காலமு நிற்குமே. (ரு)

வாய்திற வாதார் மனத்திலோர் மாடுண்டு,வாய்திறப் பா
ரே வளியிட்டுப் பாச்சுவர், வாய்திற வாதார் மதியிட்டு மூட்டு
வர், கோய்திற வாவிடிற் கோழையு மாமே. (சா)

வாழலு மாம்பல காலு மனத்திடை, போழ்கின்ற வாயு
புறம்படாப் பாச்சுறி, லேழுசா லோக மிரண்டு பெருவாய்தல்,
பாழி பெரியதோர் பள்ளி யறையிலே. (எ)

நிரம்பிய வீரைந்தி லைந்திவை போனு, லிரங்கி விழித்திரு
ந் தென்செய்வை பேதாய், வரம்பினுட் கோலி வழிசெய்கு வா
ர்க்குக், குரங்கினைக் கோட்டைப் பொதியலு மாமே. (அ)

முன்னம் வந்தன ரெல்லா முடித்தனர், பின்னை வந்தவ
ர்க் கென்ன பிரமாண' முன்னுறு கோடி யுறுகதி பேசிடி, லெண்
ணமாய மிடிகரை நிற்குமே. (கூ)

அரித்த வுடலை யைம்பூதத் தில்வைத்துப், பொருத்த வை
ம்பூதஞ் சத்தாதி யிற்போந்து, தெரித்த மனுதி சத்தாதி யிற்
செல்லத், தரித்தது தாரணை தற்பரத் தோடே. (க0)ஆ சகூ.

---

## தியானம்.

வருமாதி யீரெட்டுள் வந்த தியானம், பொருவாத புந்தி
புலன்போக மேவ, வுருவாய சத்தி பரத்தியான முன்னுங்,
குருவாய் சிவத்தியானம் யோகத்திற் கூறே. (க)

கண்ணுக்கு மூக்குச் செவிஞானக் கூட்டத்துட், பண்ணுக்கி நின்ற பழம்பொரு ளொன்றுண்டு, வண்ணக்கி னுள்ளே யகண்ட வொளிகாட்டிப், புண்ணுக்கி நம்மைப் பிழைப்பித்த வாறே. (உ)

ஒண்ணு நயனத்தி லுற்ற வொளிதன்னைக், கண்ணாரப் பார்த்துக் கலந்தங் கிருந்திடில், விண்ணாறு வந்து வெளிகண் டிடவோடிப், பண்ணும னின்றது பார்க்கலு மாமே. (ங)

ஒருபொழு துன்னா ருடலோ டுயிரை, யொருபொழு துன்னா ருயிருட் சிவனை, யொருபொழு துன்னார் சிவனுறை சிந்தையை, யொருபொழு துன்னார் சந்திரப் பூவையே. (ச)

மனத்து விளக்கினை மான்பட வேற்றிச், சினத்து விளக்கினைச் செல்ல நெருக்கி, யனைத்து விளக்குந் திரியொக்கத் தூண்ட, மனத்து விளக்கது மாயா விளக்கே. (ரு)

எண்ணாயிரத் தாண்டு யோக மிருக்கினுங், கண்ணா ரமுதனைக் கண்டறி வாரில்லை, யுண்ணாடி யுள்ளே யொளிபெற நோக்கிற், கண்ணாடி போலே கலந்திருந் தானே. (சு)

நாட்ட மிரண்டு நடுமூக்கில் வைத்திடில், வாட்டமு மில்லை மனைக்கு மழிவில்லை, யோட்டமு மில்லை யுணர்வில்லை தானில்லை, தேட்டமு மில்லை சிவனவ னாமே. (எ)

நயன மிரண்டு நாசிமேல் வைத்திட், டுயர்விழா வாயுவை யுள்ளே யடக்கித், துயரற நாடியே தூங்கவல் லார்க்குப், பயனிது காயம் பயமில்லை தானே. (அ)

மணிக்கடல் யானை வளர்குழன் மேக, மணிவண்டு தும்பி வளைபே ரிகையாழ், தணிந்தெழு நாதங்க ளாமிவை பத்தும், பணிந்தவர்க் கல்லது பார்க்கவொண் ணாதே. (கூ)

கடலொடு மேகக் களிறொடு மோசை, யடவொடு மவ்வினை யண்டாண் டத்துச், சுடர்மன்னு வேணு சுரிசங்கி னோசை, திடமறி யோகிக் கல்லாற்றெறி யாதே. (கO)

ஈச னியல்பு மிமையவ ரீட்டமும், பாச மிரங்கப் பரந்து யி ராய்நிற்கு, மோசை யதன்மணம் போல விடுவதோ, ரோசையு மீச னுணரவல் லாருக்கே. (கக)

நாத முடியிலே நல்லா ளிருப்பது, நாத முடிவிலே நல்யோக மிருப்பது, நாத முடிவிலே நாட்ட மிருப்பது, நாதமுடிவிலே நஞ்சுண்ட கண்டனே. (கஉ)

உதிக்கின்ற வாறினு முள்ளங்கி யைந்துந், துதிக்கின்ற தேசுடைத் தூங்கிரு ளிங்கி, பதிக்கின்ற வைவரு ளைதை மொடுங்கச், கதிக்கொன்றை யீசன் சழற்சேர லாமே. (கங)

பள்ளி யறையிற் பகலே யிருளில்லை, கொள்ளி யறையிற் கொளுந்தாமற் காக்கலா, மொள்ளி தறியிலோ ரோசனை நீளிது, வெள்ளி யறையில் விடிவில்லை தானே. (கச)

கொண்ட விரதங் குறையாமற் றொன்றித், தண்டுடே னேடித் தலைப்பட்ட யோகிக்கு, மண்டல மூன்றினு மொக்க வளர்ந்தபின், பிண்டமு மூழி பிறியா திருக்குமே. (கரு)

அவ்வவர் மண்டல மாம்பரி சொன்றுண்டு, வவ்வவர் மண்டலத் தவ்வவர் தேவரா, மவ்வவர் மண்டல மவ்வவர்க் கேவரி, லவ்வவர் மண்டல மாயமற் றோர்க்கே. (கசு)

இளைக்கின்ற நெஞ்சத் திருட்டறை யுள்ளே, முளைக்கின்ற மண்டல மூன்றினு மொன்றித், துளைட்பெரும் பாசத் துருவிமொகி, விளைப்பின்றி மார்கழி யேற்றம தாமே. (கஎ)

முக்குண மூடற வாயுவை மூலத்தே, சிக்கென மூடித் திரித்துப் பிடித்திட்டுத், தக்க வலமிட நாழிகை சாதிக்க, வைக்கு முயிர்நிலை வானவர் கோனே. (கஅ)

நடலித்த நாபிக்கு நால்விரன் மேலே, மடலித்து வாணிக் கிருவிர லுள்ளே, கடலித் திருந்து கருதவல் லார்கள், சடலத் தலைவனைத் தாமறிந் தாரே. (கக)

அறிவா யசத்தென்னு மாறு ரகன்று, செறிவான மாயை சிதைத்தரு ளாலே, பிறியாத பேரரு ளாயிடும் பெற்றி, நெறி யான வன்பர் நிலையறிந் தாரே. (உ0) ஆ-சுக

சமாதி.

சமாதி யமாதியிற் றான்சொல்லக் கேட்கிற், சமாதி யமா தியிற் றானெட்டுஞ் சித்தி, சமாதி யமாதியிற் றங்கினோர்க் க ன்றோ, சமாதி யமாதித் தலைப்படுந் தானே. (க)

விந்துவு நாதமு மேருவி லோங்கிடிற், சந்தியி லான ச மாதியிற் கூடிடு, மந்த மிலாத வறிவி னரும்பொருள், சுந்தரச் சோதியுந் தோன்றிடுந் தானே. (உ)

மன்மன மெங்குண்டு வாயுவு மங்குண்டு, மன்மன மெங்கி ல்லை வாயுவு மங்கில்லை, மன்மனத் துள்ளே மகிழ்ந்திருப் பார்க் கு, மன்மனத் துள்ளே மனோலய மாமே. (ங)

விண்டலர் கூபமும் விஞ்சத் தடவியுங், கண்டுணர் வாக க் கருதி யிருப்பார்கள், சென்று வெளியிற் செழுங்கிரி யத்தி டை, கொண்டு குதிரைக் குசைச்செறுத் தானே. (ச)

மூல நாடி முக்கட் டலகுச்சியு, ளாலு வாச னடுவு ளிருப் பிர்காள், மேலை வாசல் வெளியுறக் கண்டபின், காலன் வார்த் தை கனவிலு மில்லையே. (ரு)

மண்டல மைந்து வரைகளு மீராறு, கொண்டிட நிற்குங் குடிகளு மாறெண்மர், கண்டிட நிற்குங் கருத்து நடுவாக, வு ண்டு நிலாவிடு மோடும் பதத்தையே. (சு)

பூட்டொத்து மெய்யிற் பொறிப்பட்ட வாயுவைத், தேட் டற்ற வந்நிலஞ் சேரும் படிவைத்து, நாட்டத்தை மீட்டு நய னத் திருப்பார்க்குத், தோட்டத்து மாம்பழந் தூங்கலு மா மே. (எ)

உருவறி யும்பரி சொன்றுண்டு வானோர், கருவரைப் பற்றி

க் கடைந்தமு துண்டா, ரருவரை யேறி யமுதுண்ண மாட்டார், திருவரை யாமனந் தீர்ந்தற்ற வாறே. (அ)

நம்பனை யாதியை நான்மறை யோதியைச், செம்பொனி னுள்ளே திகழ்கின்ற சோதியை, யன்பினை யாக்கி யருத்தி யொடுச்சிப்போய்க், கொம்பேறிக் கும்பிட்டுக் கூட்டமிட் டாரே. ()

மூலத்து மேலது முச்சது ரத்தது, காலத் திசையிற் கலக்கின்ற சந்தினில், மேலைப் பிறையினுள் நெற்றிநேர் நின்ற, கோலத்தின் கோலங்கள் வெவ்வேறு கொண்டதே. (கഠ)

கற்பனை யற்றுக் கனல்வழி யேசென்று, சிற்பனை யெல்லாஞ் சிருட்டித்த பேரொளிப், பொற்பினை நாடிப் புணர்மதி யோடுற்று, தற்பர மாகத் தகுந்தண் சமாதியே. (கக)

தலைப்பட் டிருந்திடத் தத்துவங் கூடும், வலைப்பட் டிருந்திடு மாதுநல் லாளுங், குலைப்பட் டிருந்திடுங் கோப மகலுந், துலைப்பட் டிருந்திடுந் தூங்கவல் லார்க்கே. (கஉ)

சோதித் தனிச்சுட ராய்நின்ற தேவனு, மாதியு முண்ணின்ற சீவனு மாகுமா, லாதிப் பிரமன் பெருங்கடல் வண்ணனு, மாதி யடிபணிந் தன்புறு வாரே. (கங)

சமாதிசெய் வார்க்குத் தகும்பல யோகஞ், சமாதிகள் வேண்டா மிறையுட னேகிற், சமாதிதா னில்லைத் தானவ னாகிற், சமாதியி லெட்டெட்டுச் சித்தியு மெய்துமே. () ஆ. அங.

---

## அட்டாங்கயோகப்பேறு.

### இயமம்.

போதுகந் தேறும் புரிசடை யானடி, யாதுகந் தாரம ராபதிக் கேசெல்வ, ரோதுகந் தானிவ னென்றருள் செய்திடு, மாதுகந் தாடிடு மால்விடை யோனே. (க)

நியமம்.

பற்றிப் பதத்தன்பு வைத்துப் பரன்புகழ், சற்றிருந் தாங்கே கருது மவர்கட்கு, முற்றெழுந் தாங்கே முனிவ ரெதிர்வரத், தெற்றுஞ் சிவபதஞ் சேர்தலு மாமே. (உ)

ஆதனம்.

வருந்தித் தவஞ்செய்து வானவர் கோவாய்த், திருந்தமராபதிச் செல்வ னிவனெனத், தருந்தண் முழவங் குழலு மியம்ப, விருந்தின்ப மெய்துவ ரீச னருளே. (௩)

பிராணாயாமம்.

செம்பொற் சிவகதி சென்றெய்துங் காலத்துக், கும்பத் தமரர் குழாம்வந் தெதிர்கொள்ள, வெம்பொற் றலைவ னிவனு மெனச்சொல்ல, வின்பக் கலவி யிருக்கலு மாமே. (௪)

பிரத்தியாகாரம்.

சேருறு காலந் திசைநின்ற தேவர்க, ளாரிவ னென்ன வரனு மவனென்ன, வேருறு தேவர்க ளெல்லா மெதிர்கொள்ளக், காருறு கண்டனை மெய்கண்ட வாறே. (௫)

தாரணை.

நல்வழி நாடி நமன்வழி மாற்றிடுஞ், சொல்வழி யாளர் சுருங்காப் பெருங்கொடை, யில்வழி யாள ரிமையவ ரெண்டிசைப், பல்வழி யெய்தினும் பார்வழி யாகுமே. (௬)

தியானம்.

தூங்கவல் லார்க்குந் துணையேழ் புவனமும், வாங்கவல் லார்க்கும் வலிசெய்து நின்றிட்டுத், தேங்கவல் லார்க்குந் திளைக்கு மமுதமுந், தாங்கவல் லார்கட்குந் தன்னிட மாமே. ()

சமாதி.

காரிய மான வுபாதியைத் தான்கடந், தாரிய காரண மேழுந்தன் பாலுற, வாரிய காரண மாயத் தவத்திடைத், தாரியல்தற்பரஞ் சேர்தல் சமாதியே. (அ) ஆக கக.

## அட்டமாசித்தி.

### பரகாயப்பிரவேசம்.

பணிந்தெண் டிசையும் பரமனை நாடித், துணிந்தெண் டிசையுந் தொழுதெம் பிரானை, யணிந்தெண் டிசையு மட்டமா சித்தித், தணிந்தெண் டிசைச்சென்று தாபித்த வாறே. (௧)

பரிசறி வானவர் பண்ப னடியெனத், துரிசற நாடியே தூவெளி கண்டேன், னரிய தெனக்கில்லை யட்டமா சித்தி, பெரிதருட் செய்து பிறப்பறுத் தானே. (௨)

குரவ னருளிற் குறிவழி மூலப், பரையின் மணமிகு சங்கட்டம் பார்த்துத், தெரிதரு சாம்பவி கேசரி சேரப், பெரிய சிவகதி பேறெட்டாஞ் சித்தியே. (௩)

காயாதி பூதங் கலைகால மாயையி, லாயாதகல வறிவொன் றனுதியே, யோயாப் பதியத னுண்மையைக் கூடினால், வீயாப் பரகாய மேவலு மாமே. (௪)

இருபதி னாயிரத் தெண்ணூறு பேத, மருவிய கன்ம மாமந்த யோகந், தருமிவை காய வுழைப்பாகுந் தானே, யருமிரு நான்கா யடங்குமா சித்திக்கே. (௫)

மதிதனி லீராறாய் மன்னுங் கலையி, னுதய மதுநா லொழியவோ ரெட்டுப், பதியு மீராறாண்டு பற்றறப் பார்க்கிற், றிதமான வீராறு சித்திக ளாமே. (௬)

நாடும் பிணியால் நஞ்சனஞ் சூழ்ந்தக்கால், நீடுங் கலைகல்வி நின்பேதை கூர்ஞானம், நீடொன்றி னல்வா யாச்சித்தி பேதத்தி, னீடுந் தூரங்கேட்டல் நீண்முடி வீராறே. (௭)

ஏழா னதிற்சண்ட வாயுவின் வேகியாந், தாழா நடைபல யோசனை சார்ந்திடுஞ், சூழான வோரொட்டிற் றேன்று நரைதிரை, தாழான வொன்பதிற் றன்பர காயமே. (௮)

ஈரைந்திற் பூரித் தியான வுருத்திர, னேரொன்று பன்னொன்றி லீராறு மெண்சித்தி, சீரொன்று மேலேழ் கீழேழ் பு

விச்சென்று, வோரொன்று வியாபியாய் நிற்றலீ ராறே. (கூ)

தானே யணுவுஞ் சகத்துந்தன் னுண்மையு, மானுக் கக ணமும் பரகாயத் தேகமுந், தானுவ தும்பர காயஞ்சேர் தன் மையு, மானுத வுண்மையும் வியாப்பியு மாமெட்டே. (கം)

தாங்கிய தண்மையுந் தானணுப் பல்லுயிர், வாங்கிய காலத்து மற்றோர் குறையில்லை, யாங்கே யெழுந்தோ மவற்றுளெழுந்துமிக், கோங்கிய வாமுத்தி முந்திய வாறே. (கக)

முந்திய முந்நூற் றறுபது காலமும், வந்தது நாழிகை வாண்முத லாயிடச், சிந்தைசெய் மண்முதற் றேர்ந்தறி வார்வல, முந்தியு ணின்று வுதித்தெழு மாறே. (கஉ)

சித்தந் திரிந்து சிவமய மாகியே, முத்தந் தெரிந்துற்ற மோனர் சிவமுத்தர், சுத்தம் பெறலாக வைந்திற் றுடக்கற்றோர், சித்தம் பரத்திற் றிருநடத் தோரே. (கங)

ஒத்தவிவ் வொன்பது வாயுவு மொத்தன, வொத்தவிவ் வொன்பதின் மிக்க தனஞ்செய, னொத்தவிவ் வொன்பதி லொக்க விருந்திட, வொத்த வுடலு முயிரு மிருந்ததே. (கச)

இருக்குந் தனஞ்செய னென்பது காலி, லிருக்கு மிருநூற் றிருபத்து மூன்று, யிருக்கு முடலி லிருந்தில் வாகி, லிருக்கு முடலது வீங்கி வெடித்ததே. (கரு)

வீங்கு கழலை சிரங்கொடு குட்டமும், வீங்கும் வியாதிகள் சோகை பலவதாய், வீங்கிய வாதமுங் கூனு முடமதாம், வீங்கு வியாதிகள் கண்ணின் மருவியே. (கசு)

கண்ணில் வியாதி யுரோகந் தனஞ்செயன், கண்ணிலிவ் வாணிகள் காச மவனல்லன், கண்ணினிற் கூர்மன் கலந்தில னுதலாற், கண்ணினிற் சோதி கலந்தது மில்லையே. (கஎ)

நாடியி னோசை நயன மிருதயந், தூடி யளவுஞ் சுடர்விடு சோதியைத், தேவருளீசன் றிருமால் பிரமனு, மோவற நின் றங் குணர்ந்திருந் தார்களே. (கஅ)

ஒன்பது வாச லுடையதோர் பிண்டத்து, வொன்பது நாடி யுடையதோ ரோரிட, மொன்பது நாடி யொடுங்கவல் லார்கட்கு, வொன்பது வாச லுலைநல வாமே. (௧௯)

ஓங்கிய வங்கிக்கீ ழொண்சுழி னைச்செல்ல, வாங்கி யிரவி மதிவழி யோடிடத், தாங்கியுலகங்க ளேழுந் தரித்திட, வாங்கது சொன்னே மறிவுடை யோர்க்கே. (௨0)

தலைப்பட்ட வாறண்ண றையலை நாடி, வலைப்பட்ட பாசத்து வன்பிணை மான்போ, றலைப்பட்ட நாடியைத் தூவழி செய்தால், விலைக்குண்ண வைத்ததோர் வித்தது வாமே. (௨௧)

ஓடிச்சென் றங்கே யொருபொருள் கண்டவர், நாடியி னுள்ளாக நாத மெழுப்புவர், தேடிச்சென் றங்கே தேனை முகந்துண்டு, பாடியு ணின்ற பகைவரைக் கட்டுமே. (௨௨)

கட்டிட்ட தாமரை ஞாளத்தி லொன்பது, மட்டிட்ட கன்னியர் மாதுடன் சேர்ந்தனர், தட்டிட்டு நின்று தளங்கனி யூடுபோய், பொட்டிட்டு நின்றது பூரண மானதே. (௨௩)

பூரண சத்தி யெழுமூன் றறையாக, வேரணி கன்னிக ளெழுநூற் றஞ்சாயினர், நாரண னான்முக னாதிய வைந்துக்குங், காரண னாகிக் கலந்து விரிந்ததே. (௨௪)

விரிந்து குவிந்து விளைந்த விம்மங்கை, கரந்து ளெழுந்து கரந்தங் கிருக்கிற், பரந்து குவிந்தது பார்முதற் பூத, மிரைந்தெழு வாயு விடத்தி லொடுங்கே. (௨௫)

இடையொடு பிங்கலை யென்னு மிரண்டு, மடைபடு வாயுவு மாறியே நிற்குந், தடையவை யாறெழுந் தண்சுட ருள்ளே, மிடைவளர் மின்கொடி தன்னி லொடுங்கே. (௨௬)

ஒடுங்கி பொருங்கி யுணர்ந்தங் கிருக்கின், மடங்கி மடங்கிடும் வாயு வதனுண், மடங்கி மடங்கிடு மன்னுயி ருள்ளே, நடங்கொண்ட கூத்தனை நாடுகின் றேனே. (௨௭)

நாடியி னுள்ளே நாதத் தொலியுடன், றேடி யுடன்சென் றத் திருவினைக் கைக்கொண்டு, பாடியு ணின்ற பகைவரைக் க ட்டிட்டு, மாடி லொருகை மணிவிளக் கானதே. (உஅ)

அணுமாதி சித்திக ளானவை கூறி, லணு வி லணுவின் பெ ருமையி னேர்மை, யிணுகாத வேகார் பரகாய மேவ, லணுவ த் தினையெங்குந் தானாத லென்றெட்டே. (உகூ)

எட்டாகிய சித்தி யோரெட் டியோகத்தாற், கிட்டாப் பிராணன் செய்தாற் கிடைத்திடு, மொட்டா நடுநாடி மூலத் தனற்பானு, விட்டான் மதியுண்ண வும்வரு மேலதே. (௩0)

சித்திக ளெட்டன்றிச் சேரெட் டியோகத்தாற், புத்திக ளானவை யெல்லாம் புலப்படுஞ், சித்திக ளெண்சித்தித் தானா ந் திரிபுரைச், சத்தி யருடரத் தானுள வாகுமே, (௩க)

அணுமா.

எட்டிவை தன்னோ டெழிற்பரங் கைகூடப், பட்டவர் சித்தர் பரலோகஞ் சேர்தலா, லிட்டம துள்ளே யிருக்கல் ப ரகாட்சி, யெட்டு வரப்பு மிடந்தானின் றெட்டுமே (௩உ)

மந்தர மேறு மதிபானுவை மாற்றக், சந்தாய்க் குழியிற் கசடற வல்லார்க்குத், தந்தின்றி நற்காமிய லோகஞ்சார் வா ர்க்கு, மந்த வுலக மணுமாதி யாமே. (௩௩)

முடிந்திட்டு வைத்து முயங்கிலோ ராண்டி, லணிந்த வ ணுமாகை தானா மிவனுந், தணிந்தவப் பஞ்சினுந் தானொய்ய தாகி, மெலிந்தங் கிருந்திடும் வெல்லவொண் ணாதே. (௩௪)

லகுமா.

ஆகின்ற வத்தனி நாயகி தன்னுடன், போகின்ற தத்துவ மெங்கும் புகலதாய்ச், சாய்கின்ற காலங்க டன்வழி நின்றிடி ன், மாய்கின்ற வையாண்டின் மாலகு வாகுமே. (௩௫)

மாலகு வாகிய மாயனைக் கண்டபின், முன்னொளி யாகித் தழைத்தங் கிருந்திடும், பாலொளி யாகிப் படர்ந்தெங்கு நின்றது, மேலொளி யாகிய மெய்ப்பொருள் காணுமே. (ரு௬)

மகிமா.

மெய்ப்பொருட் சொல்லிய மெல்லிய லாளுடன், நற்பொருளாகிய தத்துவங் கூடிடக், கைப்பொரு ளாகக் கலந்திடுமோராண்டின், மைப்பொரு ளாகு மகிமாவ தாகுமே. (ரு௭)

ஆகின்ற காலொளி யாவது கண்டபின், போகின்ற காலங்கள் போவது மில்லையா, மேனின்ற காலம் வெளியுற நின்றபின், தானின்ற காலங்க டன்வழி யாகுமே. (ரு௮)

தன்வழி யாகத் தழைத்திடு ஞானமுந், தன்வழி மீதாகத் தழைத்திடும் வையகந், தன்வழி யாகத் தழைத்த பொருளெல்லாந், தன்வழித் தன்னரு ளாகிநின் றானே. (ரு௯)

பிராத்தி.

நின்றன தத்துவ நாயகி தன்னுடன், கண்டன பூதப் படையா னவையெலாங், கொண்டவை யோராண்டில் கூடவிருந்திடிற், விண்டது வேநல்ல பிராத்திய தாகுமே. (௬௰)

கரிமா.

ஆகின்ற மின்னொளி யாவது கண்டபின், பாகின்ற பூவிற் பரப்பவை காணலா, மேகின்ற காலம் வெளியுற நின்றது, போகின்ற காலங்கள் போவது மில்லையே. (௬௧)

போவதொன் றில்லை வருவது தானில்லை, சாவதொன் றில்லை தழைப்பது தானில்லை, தாமத மில்லை தமரகத் தின்னொளி, யாவது மில்லை யறிந்துகொள் வார்க்கே. (௬௨)

அறிந்த பராசத்தி யுள்ளே யமரிற், பறிந்தது பூதப் படையவை யெல்லாங், குறிந்தவை யோராண்டு கூட விருக்கில், விரிந்தது பரகாய மேவலு மாமே. (௬௩)

பிராகாமியம்.

ஆன விளக்கொளி யாவ தறிகிலர், மூல விளக்கொளி மு
ன்னே யுடையவர், கான விளக்கொளி கண்டுகொள் வார்கட்
கு, மேலை விளக்கொளி வீடெளி தாநின்றே. (௪௪)

ஈசத்துவம்.

நின்ற சதாசிவ நாயகி தன்னுடன், கண்டன பூதப் படை
யவை யெல்லாங், கொண்டவை யோராண்டு கூடி யிருந்திடி
ற், பண்டை யவ்வீசன் தத்துவ மாகுமே. (௪௫)

ஆகின்ற சந்திரன் றண்ணொளி யாயவ, னாகின்ற சந்திரன்
றட்பமு மாயிடு, மாகின்ற சந்திரன் றன்கலை கூடிடி, லாகின்
ற சந்திரன் றானவ னாகுமே. (௪௬)

தானே படைத்திட வல்லவ னாயிடுந், தானே யளித்திட
வல்லவ னாயிடுந், தானே சங்காரத் தலைவனு மாயிடுந், தானே
யிவனெனுந் தன்மைய னாகுமே. (௪௭)

தன்மைய தாகத் தழைத்த கலையினுள், பன்மைய தாக
ப் பரந்த வைம்பூதத்தை, வன்மைய தாக மறித்திடி லோரா
ண்டின், மென்மைய தாகிய மெய்ப்பொருள் காணுமே. (௪௮)

வசித்துவம்.

மெய்ப்பொரு ளாக விளைந்தது வேதெனி, னற்பொரு
ளாகிய நல்ல வசித்துவங், கைப்பொரு ளாகக் கலந்த வுயிர்க்
கெல்லாந், தற்பொரு ளாகிய தன்மைய னாகுமே. (௪௯)

தன்மைய தாகத் தழைத்த பகலவன், மென்மைய தாகி
ய மெய்ப்பொருள் கண்டிடின், பொன்மைய தாகப் புலன்களு
ம் போயிட, நன்மைய தாகிய நற்கொடி காணுமே. (௫௰)

நற்கொடி யாகிய நாயகி தன்னுட, னற்கொடி யாக மறி
ந்திடி லோராண்டு, பொற்கொடி யாகிய புவனங்கள் போய்
வருங், கற்கொடி யாகிய காமுக னாமே. (௫௧)

காமரு தத்துவ மானது வந்தபின், பூமரு கந்தம் புவ

ணாம தாயிடு, மாமரு வுன்னிட மெய்திடு மானரூய், நாமரு வுமொளி நாயக மானதே. (ருஉ)

நாயக மாகிய நலஜெளி கண்டபின், ரூயக மாகத் தழைத்தங் கிருந்திடும், போயக மான புவனங்கள் கண்டபின், பேயக மாகிய பேரொளி காணுமே. (ருங)

பேரொளி யாகிய பெரியவவ் வேட்டையும், பாரொளி யாகப் பதைப்பறக் கண்டவன், ரூரொளி யாகத் தரணி முழுதுமா, மோரொளி யாகிய காலொளி காணுமே. (ருச)

காலோ டுயிருங் கலக்கும் வகைசொல்லி, ரூலது வக்கொடி நாயகி தன்னுடன், காலது வைஞ்ஞூற் ரூருபத்து மூன்றையும், காலது பெண்மண்டிக் கொண்டவிவ் வாறே. (ருரு)

ஆறது வாகு மமிர்தத் தலையினு, ளாறது வாயிர முன்னூற்றெ டஞ்சுள, வாறது வாயிர மாகு மருவழி, யாறது வாக வளர்ப்ப திரண்டே. (ருசு)

இரண்டினின் மேலே சதாசிவ நாயகி, யிரண்டது கால் கொண் டெழுவகை சொல்லி, லிரண்டது வாயிர வைம்பத்தோ டொன்றுய்த், திரண்டது கால மெடுத்தது மஞ்சே. (ருஎ)

அஞ்சுட னஞ்சு முகமுள நாயகி, யஞ்சுட னஞ்சது வாயுத மாவது, வஞ்சது வின்றி யிரண்டது வாயிர, மஞ்சது கால மெடுத்துரு மொன்றே. (ருஅ)

ஒன்றது வாகிய தத்துவ நாயகி, யொன்றது கால்கொண் டேர்வகை சொல்லிடி, னொன்றது வென்றிகொ ளாயிர மாயிர, மொன்றது கால மெடுத்துரு முன்னே. (ருகூ)

முன்னெழு மக்கலை நாயகி தன்னுடன், முன்னூறு வாயு முடிவகை சொல்லிடின், முன்னூறு மைம்பதொ டொன்றுட னஞ்சுமாய், முன்னூறு வாயு முடிவகை யாமே. (சுo)

ஆய்வரு மத்தனி நாயகி தன்னுட, ஞய்வரு வாயு வளப்ப

து சொல்லிடி, லாய்வரு மைஞ்ஞூற்று முப்பதொ டொன்பது, வாய்வரு வாயு வளப்புள் ளிருந்ததே. (௬௧)

இருநிதி யாகிய வெந்தை யிடத்து, விருநிதி வாயு வியங்கு நெறியி, லிருநூற்று முப்பத்து மூன்றுட னஞ்சா, யிருநிதி வாயு வியங்கு மெழுத்தே. (௬௨)

எழுகின்ற சோதியுண் ணாயகி தன்பா, லெழுகின்ற வாயுவி டமது சொல்லி, லெழுநூற் றிருபத்தொன் பானது நாலா, யெழுந்துட னங்கி யிருந்ததிவ் வாறே. (௬௩)

ஆறது கால்கொண் டிரதம் விளைத்திடு, மேழது கால்கொண் டிரட்டி யிறக்கிட, வெட்டது கால்கொண் டிடவகை யேற்றபி, னொன்பது மாநில மொத்தது வாயுவே. (௬௪)

சந்திரன் சூரியன் றற்பரன் றானுவிற், சந்திரன் றானுந் தலைப்படுந் தன்மையைச், சந்தியி லேகண்டு தானுஞ் சகமுகத், துந்திச் சமாதி யுடையொளி யோகியே. (௬௫)

அணங்கற்ற மாத லருஞ்சன நீவல், வணங்குற்ற கல்வி மா ஞான மிகுத்தல், சிணுங்குற்ற வாயர் சித்திதாங் கேட்டல், நுணங்கற் றிரோதல்கால் வேகத்து நுந்தலே. (௬௬)

மரணஞ் சிறைவிடல் வண்பர காய, மிரணஞ்சேர் பூமியி றந்தோர்க் களித்த, லரணன் றிருவுரு வாதன்மூ வேழாங், கரணுறு கேள்விக் கணக்கறிந் தோனே. (௬௭)

ஓத மொலிக்கு முலகை வலம்வந்து, பாதங்க ளோவ நடந்தும் பயனில்லை, காதலி லண்ணலைக் காண வினியவர், நாத னிருந்த நகரறி யோரே. (௬௮)

மூல முதல்வேதா மாலரன் முன்னிற்கக், கோலிய வைம்முகன் கூறப் பரவிந்து, சாலப் பரநாதம் விந்துத் தனிநாதம், பாலித்த சத்தி பரைபரன் பாதமே. (௬௯)

ஆதார யோகத் ததிதே வொடுஞ்சென்று, மீதான தற்பரை மேவும் பரனொடு, மேதாதி யீரெண் கலைசெல்ல மீதொளி,

யோதாவ சிந்த மிகாணந்த யோகமே. (எ0)

மதியமு ஞாயிறும் வந்துடன் கூடித், துதிசெய் பவரவர் தொல்வா னவர்கள், விதியது செய்கின்ற மெய்யடி யார்க்குப், பதியது காட்டும் பரமனின் றுனே. (எக)

கட்டவல் லார்கள் கரந்தெங்குந் தானவர், மட்டவிழ் தாமரை யுள்ளே மனஞ்செய்து, பொட்டெழக் குத்திப் பொறியெழத் தண்டிட்டு, நட்டிடு வார்க்கு நமனில்லை தானே. (எஉ)

ஆகூ கசுங.

---

## கலைநிலை.

காதல் வழிசெய்த கண்ணுத லண்ணலைக், காதல் வழிசெய்து கண்ணுற நோக்கிடிற், காதல் வழிசெய்து கங்கை வழிதரும், காதல் வழிசெய்து காக்கலு மாமே. (க)

காக்கலு மாகுங் கரணங்க ளைன்ஐயுங், காக்கலு மாகுங் கலைபதி னாறையுங், காக்கலு மாகுங் கலந்தநல் வாயுவுங், காக்கலு மாகுங் கருத்துற நில்லே. (உ)

நிலைபெற நின்றது நேர்தரு வாயு, சிலைபெற நின்றது தீபமு மொத்துச், கலைவழி நின்ற கலப்பை யறியில், மலைவறி வாகும் வழியிது வாமே. (ங)

புடையொன்றி நின்றிடும் பூதப் பிரானை, மடையொன்றி நின்றிட வாய்த்த வழியிற், சடையொன்றி நின்றவச் சங்கர நாதன், விடையொன்றி லேறியே வீற்றிருந் தானே. (ச)

இருக்கின்ற காலங்க ளேது மறியார், பெருக்கின்ற காலப் பெருமையை நோக்கி, யொருக்கின்ற வாயு வெளிப்பெற நிற்கத், தருக்கொன்றி நின்றிடுஞ் சாதக னாமே. (ரு)

சாதக மானவத் தன்மையை நோக்கியே, மாதவ மான வழிபாடு செய்திடும், போதக மாகப் புகலுறப் பாச்சிறல், வேதக மாக விளைந்து கிடக்குமே. (சு)

கிடந்தது தானே கிளர்பயன் மூன்று, நடந்தது தானே யுண் ணாடியைப நோக்கிப், படர்ந்தது தானே பங்கய மாகத், து டர்ந்தது தானேயச் சோதியு ணின்றே. (எ)

தானே யெழுந்தவத் தத்துவ நாயகி, யூனே வழிசெய்தெ ம் முள்ளே யிருந்திடும், வானோ ருலகின்ற வம்மை மதித்திடத், தேனே பருகிச் சிவாலய மாகுமே. (அ)

திகழும் படியே செறிகரு வாயு, வழியும் படியை யறிகில ராரு, மழியும் படியை யறிந்தபி னந்தி, திகழ்கின்ற வாயுவைச் சேர்தலு மாமே. (௯)

சோதனை தன்னிற் றூரிசறக் காணலா, நாதனு நாயகி தன் னிற் பிரியுநாள், சாதக மாகுங் குருவழிப் பட்டு, மாதன மாக மதித்துச்கொள் ளீரோ. (௧௦)

ஈராறு காற்கொண் டெழுந்த புரவியைப், பேராமற் கட் டிப் பெரிதுண வல்லிரோ, னீரா யிரமு நிலமா யிரத்தாண்டும், பேராது காயம் பிரானந்தி யாணையே. (௧௧)

ஓசையி லேழு மொளியின்க ணைந்து, நாசியின் மூன்று நா வி லிரண்டுங், தேசியுந் தேசனுந் தன்னிற் பிரியுநாண், மாசறு சோதி வகுத்துவைத் தானே. (௧௨) ஆ௨ ௧எ௫.

---

சரீரசித்தியுபாயம்.

உடம்பா ரழியி லுயிரா ரழிவர், திடம்பட மெய்ஞ்ஞான ஞ் சேரவு மாட்டா, ருடம்பை வளர்க்கு முபாய மறிந்தே, யுட ம்பை வளர்த்தே னுயிர்வளர்த் தேனே. (௧)

உடம்பினை முன்ன மிழுக்கென் றிருந்தே, னுடம்பினுக் கு ள்ளே யுறுபொருள் கண்டே, னுடம்புளே யுத்தமன் கோயிற் கொண் டானென், னுடம்பினை யானிருந் தோம்புகின் றேனே.

சுழித்துக் கொடுக்கவே சுத்திக் கழியுங், கழற்றி மலத்தை க் கமலத்தைப் பூரித், தழற்றிக் கொடுக்கு முபாய மறிவார்க்,

கழற்றித் தவிர்ந்துட லஞ்சன மாமே. (ங)

அஞ்சனம் போன்றுட லையறு மந்தியில், வஞ்சக வாத மறுமத் தியானத்திற், செஞ்சிறு காலையிற் செய்திடிற் பித்தறு, நஞ்சறச் சொன்னேன் நரைதிரை நாசமே. (ச)

மூன்று மடக்குடைப் பாம்பிரண் டெட்டுள, வேன்ற வியந்திரம் பன்னிரண் டங்குல, நான்றவிழ் முட்டை யிரண்டையுங் கட்டியிட், டூன்றி யிருக்க வுடலழி யாதே. (ரு)

நூறு மறுபது மாறும் வலம்வர, நூறு மறுபது மாறு மிடம்வர, நூறு மறுபது மாறு மெதிரிட, நூறு மறுபது மாறும் புகுவரோ. (சு)

சத்திடார் கோயி லிடம்வலஞ் சாதித்தான், மத்தியானத்திலே வாக்கியங் கேட்கலாந், சித்தித்த கூத்துஞ் சிவனும் வெளிப்படுஞ், சத்தியஞ் சொன்னேஞ் சதாநந்தி யாணையே. ()

திறத்திறம் விந்து திகழு மகார, முறப்பற வேயினை தோறுஞ் சகார, மறிப்பது மந்திர மன்னிய நாத, மறப்பற யோகிக் கறநெறி யாமே. (அ)

உந்திச் சுழியி னுடனேர் பிராணனைச், சிந்தித் தெழுப்பிச் சிவமந் திர்த்தினுன், முந்தி முகட்டி னிறுத்தி யபானனைச், சிந்தித் தெழுப்பச் சிவனவ னாமே. (கூ)

மாரு மலக்குதந் தன்மே லிருவிரற், கூரு விலிங்கத்தின் கீழே குறிக்கொண்மின், றூரு வுடம்பிடை யண்ணலு மங்குளன், கூரு வுபதேசங் கொண்டது காணுமே. (கப)

நீல நிறனுடை நேரிழை யாளொடுஞ், சாலவும் புல்லிச் சதமென் றிருப்பார்க்கு, ஞால மறிய நரைதிரை மாறிடும், பாலனு மாவர் பராநந்தி யாணையே. (கக)

அண்டஞ் சுருங்கி லதற்கோ ரழிவில்லை, பிண்டஞ் சுருங்கிற் பிராண னிலைபெறு, முண்டி சுருங்கி லுபாயம் பல்வுள, கண்டங் கறுத்த கபாலியு மாமே. (கஉ)

பிண்டத்து ளூற்ற பிழக்கடை வாசலே, யண்டத்து ளூற்று வடுத்தடுத் தேகிடில், வண்டுச் சிக்கு மலர்க்குழன் மாதரார், கண்டிச் கிக்குநற் காயமு மாமே. (கங)

சுழலும் பெருங்கூற்றுத் தொல்லைமுன் சீறி, யழலு மிரதத்து ளங்கியு ளீசன், கழல்கொ டிருவடிக் காண்குறி லாங்கே, நிழலினுந் தெற்றினு நிற்றலு மாமே. (கச)

நான்கண்ட வன்னியு நாலு கலையேழுந், தான்கண்ட வாயுவுஞ் சரீர முழுதொடு, மூன்கண்டு கொண்ட வுணர்வு மருந்தாக, மான்கன்று நின்று வளர்கின்ற வாறே. (கரு)

அருகுஞ் சமவேத சத்தியை யன்புற, நீகொள்ளி னெல்லின் வளர்கின்ற நேர்மையைப், பாகு படுத்திப் பல்கோடி களத்தினூழ்கொண்ட மந்திரந் தன்னொ லொடுங்கே. (கசு) ஆக சகக

---

## காலசக்கரம்.

மதிவட்ட மாக வரையஞ்சு நாடி, யிதுவிட்டிங் கோரா றமர்ந்த வரனூர், பதிவட்டத் துண்ணின்று பாலிக்கு மாறு, மதுவிட்டுப் போமாறு மாயலுற் றேனே. (க)

உற்றறி வைந்து முணர்ந்தறி வாறேழுங், கற்றறி வெட்டுங் கலந்தறி வொன்பதும், பற்றிய பத்தும் பலவகை நாழிகை, யற்ற தறியா தழிகின்ற வாறே. (உ)

அழிகின்ற வாண்டவை யையஞ்சு மூன்று, மொழிகின்ற முப்பது மூன்றென்ப தாகுங், கழிகின்ற காலறு பத்திரண் டென்ப, தெழுகின்ற வீரைம்ப தெண்ணற் றிருந்தே. (ங)

திருந்து தினமத்தி னத்தினத் தோடுநின், றிருந்தறி நாளொன் றிரண்டெட்டு மூன்று, பொருந்திய நாளொடு புக்கறிந் தோங்சி, வருந்துத லின்றி மனைபுக லாமே. (ச)

மனைபுகு வீரும் மனத்தினை நாடி, லெவ்விரு பத்தஞ்சு மீரா றத்தூற், றனையறிந் தோரெட்டுத் தற்குறி யாறு, வினைப்பிரா து விளங்கிய நாலே. (ரு)

நாலுங் கடந்தது நால்வரு நாலஞ்சு, பாலங் கடந்தது பத்திப் பதினஞ்சு, கோலங் கடந்த குணத்தாண்டு மூவிரண், டாலங் கடந்தசொன் னூறறி வாரே. (சு)

ஆறு மிருபது மையஞ்சு மூன்றுக்குந், தேறு மிரண்டு மிருபத்தொ டாறிவை, கூறு மதுபொன்றி னுக்கிரு பத்தேழு, வேறு பூதியங்க ளுன்விதித் தானே. (எ)

விதித்த விருபத்தெட் டொடு மூன்றறை யாகத், தொகுத்தறி முப்பத்து மூன்று தொகுமின், பதித்தறி பத்தெட்டுப் பாரா திகளு, லுதித்தறி மூன்றிரண் டொன்றின் முறையே. ()

முறைமுறை யாய்ந்து முபன்றில வாகி, விறையிறை யார்க்கு மிருக்க வரிது, வறையது காரண மற்றொன்று மில்லை, பறையறை யாது பணிந்து முடியே. (கூ)

முடிந்த தறியார் முயல்கின்ற மூர்க்க, ரிடிஞ்சி லிருக்க விளக்கெரி கொண்டு, கடிந்தனன் மூளக் கதுவவல் லார்க்கு, நடந்திடும் பாரினி னண்ணலு மாமே. (௧௦)

நண்ணுஞ் சிறுவிர லாணுக மூன்றுக்கும், பின்னிய மார்பிடைப் பேராம லொத்திடுஞ், சென்னியின் மூன்றுக்குஞ் சேரயே நின்றிடு, லுன்னி யணைந்திடு மோவியந் தானே. (௧௧)

ஓவிய மான வுணர்வை யறிமின்கள், பாவிக ளித்தின் பயனறி வாரில்லை, தீவினை யாமுடன் மண்டல மூன்றுக்கும், பூவி லிருந்திடும் புண்ணியத் தண்டே. (௧௨)

தண்டுடன் ஓடித் தலைப்பெய்த யோகிக்கு, மண்டல மூன்று மகிழ்ந்துட லொத்திடுங், கண்டவர் கண்டனர் காணார் வினைப்பயன், பிண்டம் பிரியப் பிணங்குகின் றாரே. (௧௩)

பிணங்கி யழிந்திடும் பேறது கேளீர், யணங்குள றிதத்துறு விரியின், வணங்குட னேவந்த வாழ்வு குலைந்து, சுணங்கனுக் காகச் சுழல்கின்ற வாறே. (௧௪)

சுழல்கின்ற வாறின் றுணைமலர் காணுன், ரழலிடைப் புக்

டுேந் தன்னு ளிலாமற், கழல்கண்டு போம்வழி காணவல் லார்க்குக், குழல்வழி நின்றிடுங் கூத்தனு மாமே. (கரு)

கூத்தன் குறியிற் குணம்பல கண்டவர், சாத்திரந் தன்னைத் தலைப்பெய்து நிற்பர்கள், பார்த்திருந் துள்ளே யநுபோக நோக்கிடி, லாத்தனு மாகி யலர்ந்திரு மொன்றே. (கசு)

ஒன்றில் வளர்ச்சி யுலப்பில கேளினி, நன்றென்று மூன்றுக்கு நாளது சென்றிடுஞ், சென்றிடு முப்பதுஞ் சேர விருந்திடிற், குன்றிடைப் பொன்றிகழ் கூத்தனு மாமே. (கஎ)

கூத்தவ னொன்றிடுங் கூர்மை யறிந்தங், கேத்துவர் பத்தினி லெண்டிசை தோன்றிடப், பார்த்து மகிழ்ந்து பதுமனை நோக்கிடிற், சாத்திடு நூறு தலைப்பெய்த லாமே. (கஅ)

சாத்திடு நூறு தலைப்பெய்து நின்றவர், காத்துட லாயிரங் கட்டுறக் காண்பர்கள், சேர்த்துட லாயிரஞ் சேர விருந்தவர், மூத்துடன் கூடி யுகமது வாமே. (கக)

யுகங்கோடி கண்டு மொசிவறநின்று, வகங்கோடி கண்டுள யலறக் காண்பர்கள், சிவங்கோடி விட்டுச் செறிய விருந்தங், குகங்கோடி கண்டங் குயறுரு வாரே. (உ0)

உயருறு வாருல கத்தொடுங் கூடிப், பயனுறு வார்பலர் தாமறி யாமற், செயலுறு வார்சிலர் சிந்தை யிலாமற், கயலுறு கண்ணியைக் காணகி லாரே. (உக)

காணகி லாதார் கழிந்தோடிப் போவர்க, ணாணகி லாதார் நயம்பேசி விடுவர்கள், காணகி லாதார் கழிந்த பொருளெல்லாங், காணகி லாமற் கழிகின்ற வாறே. (உஉ)

கழிகின்ற வப்பொருள் காணகி லாதார், கழிகின்ற வப்பொருள் காணலு மாகுங், கழிகின்ற வுள்ளே கருத்துற நோக்கிற், கழியாத வப்பொருள் காணலு மாமே. (உங)

கண்ணன் பிறப்பிலி காணந்தி யாயுள்ளே, யெண்ணுந் திசையுட னேகாந்த னாயிடும், இன்னொன் றிருக்குஞ் சிவகதி யா

நீர்கு, நண்ணும் பதமிது நாடவல் லார்கட்கே. (உச)

நாடவல் லார்க்கு நமனில்லை கேடில்லை, நாடவல் லார்க ணரபதி யாய்நிற்பர், தேடவல் லார்க டெரிந்த பொருளிது, கூடவல் லார்கட்குக் கூறலு மாமே. (உரு)

கூறும் பொருளி தகார வுகாரங்க, டேறும் பொருளிது சிந்தையு ணின்றிடக், கூறு மகாரஞ் சுழல்வழி யோடிட, மா று மமர்ந்திடு மண்ணலு மாமே. (உசு)

அண்ண லிருப்பிட மாரு மறிகில, ரண்ண லிருப்பிட மாய்ந்துகொள் வார்களுக், கண்ண லழிவின்றி யுள்ளே யமர்ந்திடு, மண்ணலைக் காணி லவனிவ னாகுமே. (உஎ)

அவனிவ னாகும் பரிசறி வாரில்லை, யவனிவ னாகும் பரிச து கேணி, யவனிவ னோசை யொளியினு ளொன்றிடு, மவனிவ ன் வட்டம தாகிநின் றானே. (உஅ)

வட்டங்க ளேழு மலர்ந்திடு மும்முளே, கிட்ட விருப்பிடஞ் சேர வறிகிலீ, ரொட்டி யிருந்துள் ளுபாய முணர்ந்திடக், சட்டி யிருப்பிடங் காணலு மாகுமே. (உகூ)

காணலு மாகும் பிரம னரியென்று, காணலு மாகுங் கறைக்கண்ட னீசனைக், காணலு மாகுஞ் சதாசிவ சத்தியுங், காணலு மாகுங் கலந்துடன் வைத்ததே. (கூ0) ஆ உஉக)

---

## ஆயுள்பரிட்சை.

வைத்தகை சென்னியி னேரிதாய்த் தோன்றிடி, லுத்தம மிக்கிடி லோரறு திங்களா, மத்த மிகுத்திட் டிரட்டிய தாயிடி, லித்த லுயிர்க்கொரு திங்களி லோசையே. (க)

ஓசையு மீசனு மொக்கு முணர்வின்கண், ணோசை யிறந்தவ ரீசனை யுள்குவ, ரோசை யிறந்தவர் நெஞ்சினு ளீசனு, மோசை யுணர்ந்த வுணர்விது வாமே. (உ)

ஆமே யழிகின்ற வாயுவை நோக்கிடி, லாமே லுறைக்கின்

றநன்மை யளித்திடும், பூமே லுறைகின்ற போதகம் வந்திடு
ங், தாமே யுலகிற் றலைவனு மாமே. (௩)

தலைவ னிடம்வலஞ் சாதிப்பா ரில்லை, தலைவ னிடம்வல
மாயிடிற் றையற், றலைவ னிடம்வலந் தன்வழி யஞ்சிற், றலைவ
னிடம்வலந் தன்வழி நூறே. (௪)

ஏறிய வாறினி லெண்பது சென்றிடுந், தேறிய வேழிற் சி
றக்கும் உகையெண்ணி, லாறொரு பத்தா யமர்ந்த விரண்டை
யுந், தேறியே நின்று தெளியிவ் வகையே. (௫)

இவ்வகை யெட்டு மிடம்பெற வோடிடி, லவ்வகை யொ
ன்பதே யென்ன வறியலாஞ், செவ்வகை யொன்பதுஞ் சேர
வே நின்றிடின், முவ்வகை யாமது முப்பத்து மூன்றே. (௬)

மும்மூன்று மொன்று முடிவுற நின்றிடி, லெண்மூன்றி ரு
லு மிடவகை யாய்நிற்கு, மைம்மூன்று மோடி யகலவே நின்றி
டிற், பன்மூன்றொ டீராறு பார்க்கலு மாமே. (௭)

பார்க்கலு மாகும் பகல்முப் பதுமாகி, லார்க்கலு மாகும
வ் வாறிரண் டுள்ளிட்டுப் போக்கலு மாகும் புகலற வொன்றெ
னிற், றேக்கலு மாகுந் திருந்திய பத்தே. (௮)

ஏயிரு நாளு மியல்புற வோடிடிற், பாயிரு நாளும் பகைய
ற நின்றிடுந், தேய்வுற மூன்றுந் திகழவே நின்றிடி, லாயுரு வா
மென் றளக்கலு மாமே. (௯)

அளக்கும் வகைநாலு மவ்வழி யோடிடில், விளக்கு மொருநா
லு மெய்ப்பட நிற்குந், துளக்கும் உகையைந்துந் தூய்நெறி யோ
டிற், களக்க மறமுன்றிற் காணலு மாமே. (௧௦)

காணலு மாகுங் கருதிய பத்தோடிற், காணலு மாகுங் க
லந்த விரண்டையுங், காணலு மாகுங் கலப்பற மூவைந்தேற்,
காணலு மாகுங் கருத்துற வொன்றே. (௧௧)

கருது மிருபதிற் காணவா றாகுங், கருதிய வையைந்திற்

காண்பது மூன்றுங், கருது மிருப தடனாறு காணிற், கருது மி ரண்டெனக் காட்டலு மாமே. (கஉ)

காட்டலு மாகுங் கலந்திரு பத்தேழில், காட்டலு மாகுங் கலந்தெழு மொன்றெனிற், காட்டலு மாகுங் கலந்திரு பத்தெ ட்டிற், காட்டலு மாகுங் கலந்தவி ரைந்தே. (கந)

ஈரைந்து மைந்து மிருமூன்று மெட்டுச்சேர்க்கும், பாரஞ்சி நின் ற பகைபத்து நாளாகும், வாரஞ்செய் கின்ற வகையாரஞ் சாமாகி, லோரஞ்சொ டொன்றுன் றெனவொன்று நாளே.()

ஒன்றிய நாள்க ளொருமுப்பத் தொன்றாகிற், கன்றிய நா ளுங் கருத்துற மூன்றாகுஞ், சென்றுயிர் நாலெட்டுஞ் சேரவே நின்றிடின், மன்றியல் பாகு மனையி லிரண்டே. (கரு)

மனையினி லொன்றாகு மாதமு மூன்றுஞ், சுனையினி லொ ன்றாகுந் தொகுத்தன னந்தி, வினையற வோங்கி வெளிசெய்து நின்றாற், றனையுற நின்ற தலைவனு மாமே. (கசு)

ஆரு மறியா ரளக்கின்ற வன்னியை, யாரு மறியா ரளக்கி ன்ற வாயுவை, யாருமறியா ரழிகின்ற வப்பொரு, ளாரு மறி யா வறிவறிந் தேனே. (கள)

அறிவது வாயுவொ டைந்தறி வாய, தறிவா யதுகா னுல குயி ரத்தின், பிறிவுசெய் யாவகை பேணியுண் ணுடிற், செறிவ து நின்று திகழு மதுவே. (கஅ)

அதுவரு ளும்மரு ளான துலகம், பொதுவரு ளும்புக ழா ளர்க்கு நாளு, மதுவரு ளும்மலர் மங்கையர் செல்வி, யிதுவரு ள் செய்யு மிறையவ னாமே. (கசு)

பிறப்பது சூழ்ந்த பெருந்தகை நந்தி, குறிப்பது கூடிய கோலக் குரம்பை, பழப்பதி யாவது பற்றறும் பாச, மழப்படி செய்வார்க் ககலு மதியே. (உ0) ஆ. உசக

## வாரசரம்.

வெள்ளிவெண் டிங்கள் விளங்கும் புதனிட, மொள்ளிய மந்த விரவிசெவ் வாய்வலம், வள்ளிய பொன்னே வளரும் பிறையிடந், தெள்ளிய தேய்பிறை தான்வல மாமே. (க)

வெள்ளிவெண் டிங்கள் விளங்கும் புதன்மூன்றுந், தள்ளியிடத்தே தயங்குமே யாமாகி, னொள்ளிய காயத்துக் கூனமிலையென்ன, வள்ள லெமக்கு மகிழ்ந்துரைத் தானே. (உ)

செவ்வாய் வியாழஞ் சனிஞாயி றேயென்னு, மிவ்வா றறிகின்ற யோகி யிறைவனே, யொவ்வாத வாயு வலத்துப் புரியவிட், டவ்வா றறிவார்க்கவ் வானந்த மாமே. (ங)

மாறி வருமிரு பான்மதி வெய்யவ, னேறி யிழியு மிடைபிங் கலையிடை, யூறு முயிர்நடு வேயுயி ருக்கிரந், தேறி யறிமின் றெரிந்து தெளிந்தே. (ச)

உதித்து வலத்திடம் போகின்ற போது, வதிர்த்தஞ்சி போடுத லாமகன் றானு, முதிர்த்தது வேமிக வோடிடு மாகி, லுதித்த விராசி யுணர்ந்துகொ ளூற்றே. (ரு)

நடுவு நில்லாம லிடம்வல மோடி, யடுகின்ற வாயுவை யங்கனன் கூடி, யிடுகின்ற வாறுசென் றின்பணி சேர, முடிகின்ற தீபத்தின் முன்னுண்டென் றானே. (சா)

ஆயும் பொருளு மணிமலர் மேலது, வாயு விதமும் பதினொருளவலி, போயம் மனத்தைப் பொருகின்ற வாதார, மாயுவு நாளு முகுர்த்தமு மாமே. (எ) ஆ உசஅ.

---

## வாரசூலம்.

வாரத்திற் சூலம் வரும்வழி கூறுங்கா, னேரொத்த திங்கள் சனிகிழக் கேயாகும், பாரொத்த செய்புத னுத்தரம் பானுநா, ளீரொத்த வெள்ளி குடக்காக நிற்குமே. (க)

தெக்கண மாகும் வியாழத்துச் சேர்திசை, யக்கணி சூல

மூ மாமிடம் பின்னாகிற், றக்கமு மில்லை வலமுன்னே தோன்றிடின், மிக்கது மேல்வினை மேன்மேல் விளையுமே. () ஆ உ௫

---

கேசரியோகம்.

கட்டக் கழன்றுகீழ் நான்று விழாம, லட்டத்திற் கட்டி யடுப்பை யணைகோலி, விட்டத்தைப் பூட்டி மேர்பையைத் தாட்கோத்து, நட்ட மிருக்க நமனில்லை தானே. (க)

வண்ணா னொலிக்குஞ் சதுரப் பலகைமேற், கண்ணாறு மோழை படாமற் கரைகட்டி, விண்ணாறு பாச்சிக் குளத்தை நிரப்பினா, லண்ணாந்து பார்க்க வழுக்கற்ற வாறே. (உ)

இடக்கை வலக்கை யிரண்டையு மாற்றித், துதிக்கையா லுண்பார்க்குச் சோரவும் வேண்டா, முறக்கத்தை நீக்கி யுணரவல் லார்கட், கிறக்கவும் வேண்டா மிருக்கலு மாமே. (ங)

ஆய்ந்துரை செய்யி லமுதநின் றூறிடுெ, வாய்ந்துரை செய்யும் வருகின்ற காலத்து, நீந்துரை செய்யு நிலாமண் டலமதாய்ப், பாய்ந்துரை செய்தது பாலிக்கு மாறே. (௪)

நாவி னுனியி னடுவே சிவிறிடிற், சீவனுமங்கே சிவனு முறைவிட, மூவரு முப்பத்து மூவருந் தோன்றுவர், சாவது மில்லை சதகோடி யூனே. (௫)

ஊனூறல் பாயு முபர்வரை யுச்சிமேல், வானூறல் பாயும் வகையறி வாரில்லை, வானூறல் பாயும் வகையறி வாளர்க்குத், தேனூற லுண்டு தெளிதலு மாமே. (௬)

மேலை யணாவில் விரைந்திரு காலிடிற், காலனு மில்லை கதவுந் திறந்திடு, ஞால மறிய நரைதிரை மாறிடும், பாலனு மாவான் பராநந்தி யாணையே. (௭)

நந்தி முதலாக நாமேலே யேறிட்டுச், சந்தித் திருக்கிற் றரணி முழுதாளும், பந்தித் திருக்கும் பகலோன் வெளியாகச், சிந்தித் திருப்பவர் தீவினை யாளரே. (அ)

தீவினை யாடத் திகைத்தங் கிருந்தவர், நாவினை நாடி ன
மறுக் கிடமில்லை, பாவினை நாடிப் பயனறக் கண்டவர், தேவி
னை யாடிய தீங்கரும் பாமே. (௯)

தீங்கரும் பாகவே செய்தொழி லுள்ளவ, ராங்கரும் பா
க வடையநா வேறிட்டுக், கோங்கரும் பாகிய கோணை நிமிர்
த்திட், டூன்கரும் பாகியே யூனீர் வருமே. (௰)

ஊனீர் வழியாக வுண்ணாவை யேறிட்டுத், தேனீர் பருகி
ச் சிவாய நமவென்று, கானீர் வரும்வழி கங்கை தருவிக்கும்,
வானீர் வரும்வழி வாய்ந்தறி வீரே. (௧௧)

வாய்ந்தறிந் துள்ளே வழிபாடு செய்தவர், காய்ந்தறி வா
கக் கருணை பொழிந்திடும், பாய்ந்தறிந் துள்ளே படிக்கத வொ
ன்றிட்டுக், கூய்ந்தறிந் துள்ளுறை கோயிலு மாமே. (௧௨)

கோயிலி னுள்ளே குடிசெய்து வாழ்பவர், தாயினு நல்லா
ர் தரணி முழுதுக்குங், காயினு நல்லவர் காய்ந்தவர் தம்மு
ளுந், தீயினுந் தீயரத் தீவினை யாளர்க்கே. (௧௩)

தீவினை யாளர்தஞ் சென்னியி னுள்ளவன், பூவினை யாள
ர்தம் பொற்பதி யானவன், பாவினை யாளர்தம் பாவகத் துள்
ளவன், மாவினை யாளர்தம் மதியினுள் ளானே. (௧௪)

மதியி னெழுங்கதிர் போலப் பதினாறாய்ப், பதிமனை நா
று நூற்றிருபத்து நாலாய்க், கதிமனை யுள்ளே கணைகள் பரப்பி,
யெதிர்மலை யாம மிருந்தனன் றானே. (௧௫)

இருந்தனள் சத்தியு மக்கலை சூழ, விருந்தனள் கன்னியு ம
ந்நடு வாக, விருந்தனள் மானே முகநில வார, விருந்தன டா
னு மமுதம் பொழிந்தே. (௧௬)

பொழிந்த விருவெள்ளி பொன்மண் ணடையில், வழிந்து
ள் ளிருந்தது வான்முத லங்குக், கழிந்தது போகாமற் காக்க
வல் லார்க்குக், கொழுந்தது வாகுங் குணமது தானே. (௧௭)

குணமது வாகிய கோமள வல்லி, மணமது வாக மகிழ்ந்தங் கிருக்கிற், றனமது வாகிய தத்துவ ஞான, மினமது வாக விருந்தனன் ருனே. (கஅ)

இருந்த பிராணனு முள்ளே யெழும்மாம், பரிந்தவித் தண்டு டனண்டம் பரிய, விரிந்தவப் பூவுடன் மேலெழ வைக்கின், மலர்ந்தது மண்டலம் வாழலு மாமே. (சக)

மண்டலத் துள்ளே மனவொட்டி யாணத்தைக், கண்டசத் தங்கே கருதியே கீழ்க்கட்டிற், பண்டகத் துள்ளே பகலே யொளியாகக், குண்டலக் காதனுங் கூத்தொழிந் தானே. (உ0)

ஒழிகின்ற வாயுவு முள்ளே யமருங், கழிகின்ற வாயுவுங் காக்கலு மாகும், வழிகின்ற காலத்து வட்டக் கழலைப், பழிகின்ற காலத்துப் பையகற் றீரே. (உக)

பையினி னுள்ளே படிக்கத வொன்றிடின், மெய்யினி னுள்ளே விளங்கு மொளியதாங், கையினுள் வாயு கதித்தங் கெழுந்திடின், மையணி கோயில் மணிவிளக் காமே. (உஉ)

விளங்கிடும் வாயுவை மேலெழ வுன்னி, நலங்கிடுங் கண்டத்து நாபியி னுள்ளே, வணங்கிடு மண்டலம் வாய்த்திடக் கும்பிச், சுணங்கிட நின்றவை சொல்லலு மாமே. (உங)

சொல்லலு மாயிடு மாகத்து வாயுவுஞ், சொல்லலு மாகு மண்ணீர்க் கடினமுஞ், சொல்லலு மாகு மிவையஞ்சுங் கூடிடிற், சொல்லலு மாந்தூர தரிசனந் தானே. (உச)

தூர தரிசனஞ் சொல்லுவன் காணலாங், காராருங் கண்ணி கடைஞான முட்பெய்தி, யோராருந் தீபத் தெழிற்சிந்தை வைத்திடிற், பாரா ருலகம் பகன்முன்ன தாமே. (உரு)

முன்னெழு நாபிக்கு முன்னால் விரற்கீழே, பன்னெழு வேதம் பகலொளி யுண்டென்ன, நன்னெழு நாதத்து நற்றீபம் வைத்திடத், தன்னெழு கோயிற் றலைவனு மாமே. (உசு)

திரு உஎசு.

———

## பரியங்கியோகம்.

பூசுவன வெல்லாம் பூசிப் புலர்த்திய, வாச நறுங்குழன் மாலையுஞ் சாத்திய, காயக் குழலி கலவி யொடுங்கலந், தூசித் துளையுறத் தூங்காது போகமே. (க)

போகத்தை யுன்னவே போகாது வாயுவு, மோகத்தை வெள்ளியு மீளும் வியாழத்தில், சூதொத்த மென்முலை யாளு நற் சூதனுந், தாதிற் குழைந்து தலைகண்ட வாறே. (உ)

கண்டனுங் கண்டியுங் காதல்செய் யோகத்து, மண்டலங் கொண்டிரு பாலும் வெளிநிற்கும், வண்டியை மேற்கொண்டு வானீ ருருட்டிடந், தண்டொரு காலுந் தளராது வங்கமே.

அங்கப் புணர்ச்சியு மாகின்ற தத்துவ, மங்கத்தில் விந்து வருகின்ற போகத்துப், பங்கப் படாமற் பரிகரித் துத்தமமைத், தங்கிக் கொடுக்கத் தலைவனு மாமே. (௪)

தலைவனு மாயிடுந் தன்வழி ஞானந், தலைவனு மாயிடுந் தன்வழி போகந், தலைவனு மாயிடுந் தன்வழி யுள்ளே, தலைவனு மாயிடுந் தன்வழி யஞ்சே. (௫)

அஞ்சு கடிகையி லாறுங் கடிகைமேற், றஞ்சுவ தொன்றத் துணைவி துணைவன்பா, னெஞ்சு நிறைந்தது வாய்கொளா தென்றது, பஞ்ச கடிகை பரியங்கி யோகமே. (௬)

பரியங்கி யோகத்துப் பஞ்ச கடிகை, யரியவிவ் வியோக மடைந்தவர்க் கல்லது, சரிவளை முன்கைச்சிச் சந்தனக் கொங்கை, யுருகத் தழுவ வொருவர்க் கொணாதே. (௭)

ஒண்ணாத போகத்தை யுற்றவ ராரொன்னில், விண்ணோர்ந்த கங்கை விரிசடை வைத்தவன், பண்ணா ரமுதினைப் பஞ்ச கடிகையி, லெண்ணு மெனவெண்ணி யிருந்தா னிருந்ததே. (௮)

ஏய்ந்த பிராய மிருபது முப்பதும், வாய்ந்த குழலிக்கு மன்னர்க்கு மானந்த, மாய்ந்த குழலியோ டைந்து மலர்ந

திடச், சோர்ந்தன சித்தமுஞ் சோர்வில்லை வெள்ளிக்கே. (௯)

வெள்ளி யுருக்கிப் பொன்வழி யோடாமுன், கள்ளத் தட்டாரு சரியிட்டு மூடினார், கொள்ளி பறியக் குழல்வழி யே சென்று, வள்ளிய னாவி லடக்கிவைத் தானே. (௧0)

வைத்த விருவருந் தம்மின் மகிழ்ந்துடன், சித்தங் கலங்காது செய்கின்ற வாநந்தம், பத்து வகைக்கும் பதினெண் கணத்துக்கும், வித்தக னாய்நிற்கும் வெங்கதி ரோனே. (௧௧)

வெங்கதி ருக்குஞ் சனிக்கு மிடைநின்ற, நங்கையைப் புல்கிய நம்பிக்கோ ரானந்தந், தங்களிற் பொன்னிடை வெள்ளி தாழாமுனந், திங்களிற் செவ்வாய்ப் புதைத்திருந் தானே. (௧௨)

திருத்தப் புதனைத் திருத்தல்செய் வார்க்குக், கருத்தழ காலே கலந்தங் கிருக்கில், வருத்தமு மில்லையா மங்கை பங்கற்குந், துருத்திபுள் வெள்ளியுஞ் சோரா தெழுமே. (௧௩)

எழுகின்ற தீயின்முன் னேகொண்டு சென்றிட்டால், மெழுகுரு கும்பரி செய்திடு மெய்யை, யுழுகின்ற தில்லை யொளியை யறிந்தபின், விழுகின்ற தில்லை வெளியறி வார்க்கே. (௧௪)

வெளியை யறிந்து வெளியி னடுவே, யொளியை யறியி னொளிமுறி யாமே, தெளிவை யறிந்து செழுநந்தியாலே, வெளியை யறிந்தனன் மேலறி யேனே. (௧௫)

மேலாந் தலத்தில் விரிந்தவ ராகினின், மாலாந் திசைமுகன் மாநந்தி யாயவர், நாலா நிலத்தி னடுவான வப்பொருண், மேலா யுரைத்தனர் மின்னிடை யாளுக்கே. (௧௬)

மின்னிடை யாளுமின் னாளுங் கூட்டத்துப், பொன்னிடை வட்டத்தி னுள்ளே புகப்பெய்து, தன்னொடு தன்னைத் தலைப்பெய்த வல்லிரேல், மண்ணிடைப் பல்லூழி வாழலு மாங்கே. (௧௭)

வாங்க லிருதலை வாங்கலில் வாங்கிய, வீங்க வலிக்கும் விரகறிவாரில்லை வீங்கவலிக்கும் விரகறி வாளரு, மோங்கிய தன்னை யுதம் பண்ணினுரே. (௧௮)

உதமறிந் தங்கே யொருசுழிப் பட்டாற், ககமறிந் தங்கே கபாலங் கறுக்கு, மிதமறிந் தென்று மிருப்பா ளொருத்தி, பதமறிந் தும்முளே பார்க்கிடந் தாளே. (௧௯)

பாரில்லை நீரில்லை பங்கய மொன்றுண்டு, தாரில்லை வேரில்லை தாமரை பூத்தது, ஊரில்லை காணு மொளியது வொன்றுண்டு, கீழில்லை மேலில்லை கேள்வியிற் பூவே. (௨௦) ஆ-உ௬௬.

---

அமுரிதாரணை.

உடலிற் கிடந்த வுறுதிக் குடிநீர்க், கடலிற் சிறுகிணற் றேற்றமிட் டாலொக்கு, முடலி லொருவழி யொன்றுக் கிறைக்கி, னடலைப் படாதுயிர் நாடலு மாமே. (௧)

தெளிதரு மிந்தச் சிவநீர் பருகி, லொளிதரு மோராண்டி லூனமொன் றில்லை, வளியுறு மெட்டின் மனமு மொடுங்குங், களிதருங் காயங் கனகம தாமே. (௨)

நூறு மிளகு நுகருஞ் சிவத்தினீர், மாறு மிதற்கு மருந்தில்லை மாந்தர்க, டேறி லிதனைத் தெளியுச்சி கப்பிடின், மாறு மிதற்கு மறுமயி ராமே. (௩)

கரையரு கேநின்ற கான லுவரி, வரைவரை யென்பர் மதியிலா மாந்தர், நுரைதிரை நீக்கி நுகரவல் லார்க்கு, நரைதிரை மாறு நமனுமங் கில்லையே. (௪)

அளக நன்னுத லாயோ ரதிசயங், களவு காயங் கலந்தவி நீரிலே, மிளகு நெல்லியு மஞ்சளும் வேம்பிடி, லிளகி மேனி யிருளுங் கபாலமே. (௫)

வீர மருந்தென்று விண்ணோர் மருந்தென்று, நாரி மருந்

தென்று நந்தி யருள்செய்தா, ளாதி மருந்தென் றறிவா ரகலிடஞ், சோதி மருந்திது சொல்லவொண் ணாதே. (௬) ஆ ௩0௨

---

சந்திரயோகம்.

எய்து மதிக்கலை சூக்கத்தி லேறியே, யெய்துவ தூல மிருவகைப் பக்கத்து, ளெய்துங் கலைபோல வேறி யிறங்குமாந், துய்யது சூக்கத்துக் காலத்த காயமே. (௧)

ஆகின்ற சந்திரன் சூரிய னங்கியு, ளாகின்ற வீரெட்டொ டாறிரண் டீரைந்து, மேகின்ற வக்கலை யெல்லா மிடைவழி, யாகின்ற யோகி யறிந்த வறிவே. (௨)

ஆறாற தாங்கலை யாதித்த சந்திர, னாறா நலங்கினா் ஞாலங் கவர்கொளப், பேறாங் கலைமுற்றும் பெருங்கா லீரெட்டு, மாறாக் கதிர்கொள்ளு மற்றங்கி கூடவே. (௩)

பத்து மிரண்டும் பகலோ னுயர்கலை, பத்தினொ டாறு முயர்கலை யான்மதி, யொத்தநல் லங்கிய தெட்டெட் டுயர்கலை, யத்திற னின்றமை யாய்ந்துகொள் வீரே. (௪)

எட்டெட் டனலின் கலையாகு மீராறுட், சுட்டப் படுங்கதி ரோனுக்குஞ் சூழ்கலை, கட்டப் படுமீரெட் டாகு மதிக்கலை யொட்டப் படாவிவை யொன்றொடொன் றாயே. (௫)

எட்டெட்டு மீராறு மீரெட்டுந் தீக்கதிர், சுட்டிட்ட சோமனிற் றோன்றுங் கலையெனச், சட்டப் படுந்தா ரகைகதிர் நாலுள, கட்டிட்ட தொண்ணூற்றொ டாறுங் கலாதியே. (௬)

எல்லாக் கலையு மிடைபிங் கலைநடுச், சொல்லா நடுநாடி யூடே தொடர்மூலன், செல்லா வெழுப்பிச் சிரத்துடன் சேர்தலா, னல்லோர் திருவடி நண்ணிநிற் போரே. (௭)

அங்கியிற் சின்ன கதிரிரண் டாட்டத்துத், தங்கிய தாரகை யாகுஞ் சசிபாநு, வங்கியத் தாரகை யாவும் பரையொளி, தங்கு நவசக்ர மாகுந் தரணிக்கே. (௮)

தரணி சலங்கனற் காற்றத்த வான, மரணிய பானு வருந்திங்க ளங்கி, முரணிய தாரகை மூன்னிய வொன்பான், பிரணவ மாகும் பெருநெறி தானே. (௯)

தாரகை மின்னுஞ் சசிதேயும் பக்கத்துத், தாரகை மின்னுச் சசிவளர் பக்கத்துத், தாரகை பூவிற் சகலத்தி யோனிகள், தாரகைத் தாரகை தானுஞ் சொருபமே. (௧0)

முற்பதி னஞ்சின் முளைத்துப் பெருத்திடும், பிற்பதி னஞ்சிற் பெருத்துச் சிறுத்திடு, மப்பதி னஞ்சு மறியவல் லார்கட்குச், செப்பரி யான்கழல் சேர்தலு மாமே. (௧௧)

அங்கி யெழுப்பி யருங்கதி ரூட்டத், தங்குஞ் சசியாற் றுமமைந் தைந்தாகிப், பொங்கிய தாரகை யாம்புலன் போக்கறத், திங்கள் கதிரங்கி சேர்கின்ற யோகமே. (௧௨)

ஒன்றிய வீரெண் கலையு முடலுற, நின்றது கண்டு நினைக்கிலர் நீதர்கள், கன்றிய காலன் கருத்துழி வைத்தபின், சென்றதில் வீழ்வர் திகைப்பொழி யாரே. (௧௩)

அங்கி மதிகூட வாகுங் கதிரொளி, யங்கி கதிர்கூட வாகு மதியொளி, யங்கி சிவத்தினிற் கூடவத் தாரகைத், தங்கி யதுவே சகலமு மாமே. (௧௪)

ஈராறு பெண்கலை யெண்ணிரண் டாண்கலை, பேராமற் புக்குப் பிடித்துக் கொடுவந்து, நேராகத் தோன்று நெருப்புற வேபெய்யி, லாராத வானந்த மானந்த மானதே. (௧௫)

காணும் பருதியின் காலை யிடத்திட்டு, மாணு மதியதன் காலை வலத்திட்டுப், பேணி யிவ்வாறு பிழையாமற் செய்வீரே, லாணி கலங்காதவ் வாயிரத் தாண்டே. (௧௬)

பாலிக்கு நெஞ்சம் பறையோசை யொன்பதி, லாலிக்கு மங்கே யமரர் பராபரன், மேலைக்கு முன்னே விளக்கொளி யாய்நிற்குங், காலைக்குச் சங்கு கதிரவன் றானே. (௧௭)

கதிரவன் சந்திரன் காலமளக்கும், பொதிரவனுள்ளே பொழிமழை நிற்கு, மதிரவ னண்டப் புறஞ்சென் றடர்ப்ப, வெதிரவனீச னிடமது தானே. (கஅ)

உந்திக் கமலத் துதித்தெழுஞ் சோதியை, யந்திக்கு மந்திர மாரு மறிகில, ரந்திக்கு மந்திர மாரு மறிந்தபின், றந்தைக்கு முன்னே மகன்பிறந் தானே. (கசு)

ஊதிய மேது மறியா ருரைப்பினு, மோதிய மேது மறியாதூமர்க, ளாதியுமந்தமு மந்திக்க வல்லிரேல்,வேதிய னங்கே வெளிப்படுந் தானே. (உo)

பாம்பு மதியைத் தினலுறும் பாம்பினைத், தீங்கு கதிரையுஞ் சோதித் தனலுறும், பாம்பு மதியும் பகைதீர்த் துடன்கொளீஇ, நீங்கல்கொ டானே நெடுந்தகை யானே. (உக)

அயின்றது வீழ்வள வுந்துயி லின்றிப், பயின்ற சசிவீழ் பொழுதிற் றுயின்று, நயந்தரு பூரணை யுள்ள நடத்தி, வியந்தரு பூரணை மேவுஞ் சசியே. (உஉ)

சசியுதிக் குமள வுந்துயி லின்றிச், சசியுதித் ததே தனதூணருந்திச், சசிசரிக் கின்றள வுந்துயி லாமற், சசிசரிப் பின்கட்டன் கண்டுயில் கொண்டதே. (உங)

ஊழி தரியா திருக்கின்ற யோகிக, ளுழிகை யாக நமனை யளப்பர்க, ளூழி முதலா யுயர்வா ருலகினிற், றுழவல் லாரிச் சசிவன்ன ராமே. (உச)

தண்மதி பானுச்சிச் சரிபூமி யேசென்று, மண்மதி காலங்கண் மூன்றும் வழிகண்டு, வெண்மதி தோன்றிய நாளில் விளைந்தபின். றண்மதி வீழ்வள விற்கணை யின்றே. (உரு)

வளர்கின்ற வாதித்தன் றன்கலை யாறுந், தளர்கின்ற சந்திரன் றன்கலை யாறு, மலர்ந்தெழு பன்னிரண் டங்குல மோடி, யலர்ந்து விழுந்தமை யாரறி வாரே. (உசு)

ஆருயிர்த் தேய்மதி நாளே யெனல்விந்து, போம்வழி யெங்கணும் போகாத யோகிக்குக், காமுற வின்மையிற் கட்டுண்ணு மூலத்தி, லோமதி யத்துள்விட் டோரையுணர் வாலே. (உஎ)

வேறுறச் செங்கதிர் மெய்க்கலை யாறெட்டுஞ், சூறுற நான்குந் துடர்ந்துற வேநிற்கு, மீறிலி னன்கலை யீரைந்தோ டேமதித், தாறுள் கலையுளகலுவா வாமே. (உஅ)

உணர்விந்துச் சோணி யுறவினன் வீசும், புணர்விந்து வீசுங் கதிரிற் குறையி, லுணர்வு முடம்பு முவையொக்க நிற்கி, லுணர்வு முடம்பு மொருக்கால் விடாவே. (உகூ)

விடாத மனபவ னத்தொடு மேவி, நடாவு சிவசங்க நாதங் கொளுவிக், கடாவிடா வைம்புலன் கட்டுண்ணும் வீடு, படாதன வின்பம் பருகா ரமுதமே. (௩0)

அமுதப் புலன்வரு மாற்றங் கரைமேற், குமிழிக்கத் தற்சட ரைந்தையுங் கூட்டிச், சமையத்தண் டோட்டித் தரிக்கவல் லார்க்கு, நமனில்லை நற்கலை நாளில்லை தானே. (௩௧)

உண்ணீ ரமுத முறுமூற லைத்திறந், தெண்ணீ ரிணையடித் தாமரைக் கேசெலத், தெண்ணீர்ச் சமாதி யமர்ந்துதீ ராநலக், கண்ணுற்றோ டேசென்று கால்வழி மாறுமே. (௩௨)

மாறு மதியுமா தித்தனு மாறின்றித், தாறு படாமல்தண் டோடே தலைப்படி, லூறு படாதுடல் வேண்டு முபாயமும், பாறு படாவின்பம் பார்மிசைப் பொங்குமே. (௩௩)

ஆவ அதிகாரம் - உகறு - திருமந்திரம் - ௩௩௫.

மூன்றாந்தந்திரம் - முற்றும்

ஆவ சிறப்புப்பாயிரமுட்பட - அதிகாரம்.

எகூ - இ - கூடிய - திருமந்திரம் - அஅ௩.

---

## நாலாந்தந்திரம்.

—o❀o—

### அசபை.

போற்றுகின் றேன்புகழ்ந் தும்புகல் ஞானத்தைத், தேற்றுகின் றேன்சிந்தை நாயகன் சேவடி, சாற்றுகின் றேனறை யோசிவ யோகத்தை, யேற்றுகின் றேனெம் பிரானோ ரெழுத்தே. (க)

ஓரெழுத் தாலே யுலகெங்குந் தானாகி, யீரெழுத் தாலே யிசைந்தங் கிருவராய், மூவெழுத் தாலே முளைக்கின்ற சோதியை, மாவெழுத் தாலே மயக்கமே யுற்றதே. (உ)

தேவ ருறைகின்ற சிற்றம் பலமென்றுந், தேவ ருறைகின்ற சிதம்பர மென்றுந், தேவ ருறைகின்ற திருவம் பலமென்றுந், தேவ ருறைகின்ற தென்பொது வாமே. (ங)

ஆமேபொன் னம்பல மற்புத மானந்த, மாமே திருக்கூத் தநவரத தாண்டவ, மாமே பிரளய மாகுமத் தாண்டவ, மாமே சங்காரத் தருந்தாண்ட வங்களே. (ச)

தாண்டவ மான தனியெழுத் தோரெழுத், தாண்டவ மான தநுக்கிர கத்தொழிற், றுண்டவங் கூத்துத் தனிநின்ற தற்பரந், தாண்டவங் கூத்துத் தமனியந் தானே. (ரு)

தானே பரஞ்சுடர் தத்துவ மாய்நிற்குந், தானே யகார வுகாரம தாய்நிற்குந், தானே பரஞ்சுடர் தத்துவக் கூத்தக்குத், தானே தனக்குத் தராதலந் தானே. (சு)

தராதல மூலைக்குத் தற்பர மாபரன், தராதலம் வெப்பு நமவா சியவாந், தராதலஞ் சொல்லிற் றுணவா சியவாகும், தராதல யோகந் தயாவாசி யாமே. (எ)

ஆமே சிவங்க ளகார வுகாரங்க, ளாமே பரங்க ளறியா விடமென்ப, வாமே திருக்கூத் தடங்கிய சிற்பர, மாமே சிவ

கதி யானந்த மாமே. (அ)

ஆனந்த மூன்று மறிவிரண் டொன்றாகு, மானந்தஞ் சிவாய வறிவார் பலரில்லை, யானந்த மோடு மறியவல் லார்கட்கு, வானந்தக் கூத்தா யகப்படுந் தானே. (கூ)

படுவ திரண்டும் பலகலை வல்லார், படுவ தோங்கார பஞ்சாக் கரங்கள், படுவது சங்காரத் தாண்டவப் பத்தி, படுவது கோணம் பரந்திடும் வாறே. (கO)

வாறே சதாசிவ மாறிலா வாகமம், வாறே சிவகதி வண்டுறை புன்னையும், வாறே திருக்கூத்தா கமவச னங்கள், வாறே பொதுவாகு மன்றி னமலமே. (கக)

அமலம் பதிபசு பாசங்க ளாகம, மமலந் திரோதாயி யாகுமா னந்தமா, மமலஞ்சொல் லாணவ மாய்கை காமிய, மமலந் திருக்கூத்தங் காடு மிடந்தானே. (கஉ)

தானே தனக்குத் தலைவனு மாய்நிற்குந், தானே தனக்குத் தன்மலை யாய்நிற்குந், தானே தனக்குத் தன்மய மாய்நிற்குந், தானே தனக்குத் தலைவனு மாமே. (கங)

தலைவனு மாய்நின்ற தற்பரக் கூத்தனைத், தலைவனு மாய்நின்ற சற்பாத் திரத்தைத், தலைவனு மாய்நின்ற தாதவிழ் ஞானத், தலைவனு மாய்நின்ற தாளிணை தானே. (கச)

இணையார் திருவடி யெட்டெழுத் தாகு, மிணையார் கழலிணை யீரைஞ்ச தாகு, மிணையார் கழலிணை யைம்பத்தொன் றாகு, மிணையார் கழலிணை யேழா யிரமே. (கரு)

ஏழா யிரமா யிருபதாய் முப்பதா, யேழா யிரத்து மெழுகோடி தானாகி, யேழா யிரத்துயி ரெண்ணிலா மந்திர, மேழா யிரண்டா யிருக்கின்ற வாறே. (கசு)

இருக்கின்ற மந்திர மேழா யிரமா, மிருக்கின்ற மந்திர மித்திற மில்லை, யிருக்கின்ற மந்திரஞ் சிவன்றிரு மேனி, யிருக்கின்ற மந்திர மிவ்வண்ணந் தானே. (கஎ)

தானே தனக்குத் தகுநட்டந் தானுகுந், தானே யகாரவு காரம தாய்நிற்குந், தானே ரீங்காரத் தத்துவக் கூத்துக்குத், தானே யுலகிற் றனிநடந் தானே. (௧அ)

நடமிரண் டொன்றே நளினம தாகு, நடமிரண் டொன்றே நமன்செய்யுங் கூத்து, நடமிரண் டொன்றே நகைசெயா மந்திர, நடஞ்சிவ லிங்க நலஞ்செம்பு பொன்னே. (௧௯)

செம்புபொன் னாகுஞ் சிவாயநமவென்னிற், செம்புபொன் னாகத்திரண்டது சிற்பரஞ், செம்புபொன் னாகும் ஸ்ரீயுங் கிரீயுமென, செம்புபொன் னான திருவம் பலமே. (௨0)

திருவம் பலமாகச் சீர்ச்சக் கரத்தைத், திருவம் பலமாக வீராறு கீறித், திருவம் பலமாக விருபத்தைஞ் சாக்கித், திருவம் பலமாகச் செபிக்கின்ற வாறே. (௨௧)

வாறே சிவாய நமசிவா யநம, வாறே செபிக்கில் வரும்பேர் பிறப்பில்லை, வாறே யருளால் வளர்கூத்துக் காணலாம், வாறே செபிக்கில் வருஞ்செம்பு பொன்னே. (௨௨)

பொன்னான மந்திரம் புகலவு மொண்ணாது, பொன்னான மந்திரம் பொறிகிஞ் சுகத்தாகும், பொன்னான மந்திரம் புகையுண்டு பூரிக்கிற், பொன்னாகும் வல்லார்க் குடம்புபொற் பாதமே. (௨௩)

பொற்பாதங் காணலாம் புத்திர ருண்டாகும், பொற்பாதத் தாணையே செம்புபொன் னாயிடும், பொற்பாதங் காணத் திருமேனி யாயிடும், பொற்பாத நன்னடஞ் சிந்தனை சொல்லுமே. (௨௪)

சொல்லு மொருகூட்டிற் புக்குச் சுகிக்கலா, நல்ல மடவார் நயந்துட னேவருஞ், சொல்லிலும் பாசச் சுடர்ப்பாம்பு நீங்கிடுஞ், சொல்லுந் திருக்கூத்தின் சூக்குமுந் தானே. (௨௫)

சூக்கும மெண்ணு யிரஞ்செபித் தாலுமேற், சூக்கும மான வழியிடைக் காணலாஞ், சூக்கும மான வினையைக் கெடுக் கலாஞ், சூக்கும மான சிவனதா னந்தமே. (உசு)

ஆனந்த மென்றென் றறைந்திட மானந்த, மானந்தம் ஆ - இ - ஊ எ - ஓமென் றறைந்திட, மானந்த மஞ்சு மாயிடு மானந்த, மானந்தம் அம் - ஹ்ரீம் அம் - க்ஷம் - ஆம் ஆகு மே. (உஎ)

மேனி யிரண்டும் விளங்காமல் மேற்கொள்ள, மேனி யிர ண்டுமிக்கார் விகாரியா, மேனி யிரண்டும் ஊம் - ஆம் - இ- எ- ஒ - என்னு, மேனி யிரண்டும் இ - ஒ - ஊ - ஆ - எ - கூத்து மே. (உஅ)

கூத்தே சிவாய நமசி வாயிடுங், கூத்தே - இ - ஊ - ஆ எ ஓம் - சிவாய நமவாயிடுங், கூத்தே இ - ஊ - ஆ - எ ஓம் - சிவாய நமவாயிடுங், கூத்தே இஊஆஎ ஓம்நமசிவாய கோளொ ன்றும்வாறே. (உகூ)

ஒன்றிரண் டாட வோரொன்று முடனாட, வொன்றினி ன் மூன்றாட வோரேழு மொத்தாட, வொன்றினு லீரடவோ ரொன்பது முடனாட, மன்றினி லாடினான் மாணிக்கக் கூத் தே. (௩0)

---

## திருவம்பலச்சக்கரம்.

இருந்தவிவ் வட்டங்க ளீரா றிரேகை, யிருந்தவி ரேகை மே லீரா றிருத்தி, யிருந்த மனைகளு மீராறு பத்தொன், றிரு ந்த மனையொன்றி லெய்துவன் றானே. (க)

தானொன்றி வாழிடந் தன்னெழுத் தேயாகுந், தானொன் று மந்நாலுந் தன்பே ரெழுத்தாகுந், தானொன்று கோணந் தன்னிந் தெழுத்தாகுந், தானொன்றி லேயொன்று மவ்வரன் றானே. (உ)

அரகர வென்ன வரியதொன் றில்லை, யரகர வென்ன வறிகிலர் மாந்த, ரரகர வென்ன வமரரு மாவ, ரரகர வென்ன வறும்பிறப் பன்றே. (௩)

எட்டு நிலையுள வெங்கோ னிருப்பிட, மெட்டினி லொன்று மிருமூன்று மீரேழு,மொட்டியல் விந்துவு நாதமு மோங்கிடப், பட்டது மந்திரம் பான்மொழி யாலே. (௪)

மட்டவிழ் தாமரை மாதுநல் லாளுட, னொட்டி யிருந்த வுபாய மறிகிலர், விட்ட வெழுத்தை விடாத வெழுத்துடன், கட்டவல் லாருயிர் காட்டவல் லாரே. (௫)

ஆலய மாக வமர்ந்த பஞ்சாக்கர, மாலய மாக வமர்ந்த வித் தாலம்பே, ராலய மாக வருகின்ற சூக்கும, மாலய மாக வமர்ந்திருந் தானே. (௬)

இருந்தவிவ் வட்ட மிருமூன் றிரேகை, யிருந்த வதனு ளிரேகையைந் தாக, விருந்த வறைக ளிருபத்தைஞ் சாக, விருந்த வறையொன்றி லெய்து மகாரமே. (௭)

மாகார நடுவே வளைத்திடுஞ் சத்தியை, யொகாரம் வளைத் திட் டும்பிளந் தேற்றி, யகாரந் தலையா யிருகண் சிகாரமாய், நகார வகாரநற் காலது நாடுமே. (௮)

நாடும் பிரணவ நடுவிரு பக்கமு, மாடு மவர்வா யமர்ந்தங் கு நின்றது, நாடு நடுவுள் முகநமசி வாய, வாடுஞ் சிவாயநம புறவட்டத் தாயதே. (௯)

ஆயுஞ் சிவய நமமசி வயந, வாயு நமசி வயய நமசிவ, வாயுமே வயநம சியெனு மந்திர, மாயுஞ் சிகாரந்தொட் டந்தந் தடைவிலே. (௧௦)

அடைவினி லையம்ப துமையைந் தறையி, னடையு மறை யொன்றுக் கீரெழுத் தாக்கி, யடையு மகாரத்தி லந்தமாம் க்ஷ

ய்வு, மடைவி னெழுத்தைம்பத் தொன்று மமர்ந்ததே. (௧௧)

அமர்ந்த வரகர வாம்புற வட்ட, மமர்ந்த வர்கரி யாமத னுள்வட்ட, மமர்ந்த வசபை யாமத னுள்வட்ட, மமர்ந்த விரேகையு மாகின்ற சூலமே. (௧௨)

சூலத் தலையினிற் றோற்றிடுஞ் சத்தியுஞ், சூலத் தலையினிற் சூழுமோங் காரத்தாள், சூலத் திடைவெளி தோற்றிடு மஞ்செழுத், தாலப் பதிக்கு மடைவது வாமே. (௧௩)

அதுவாம் அகார இகார உகாரம், அதுவாம் எகாரம் ஓகாரம தஞ்சா, மதுவாகுஞ் சக்கர வட்டமேல் வட்டம், பொதுவா மிடைவெளி பொய்குநம் பேரே. (௧௪)

பேர்பெற் றதுமூல மந்திரம் பின்னது, சேர்வுற்ற சக்கர வட்டத்துட் சந்தியி, னேர்பெற் றிருந்திட நின்றது சக்கரப், பேர்பெற் றிருந்த வியல்பிது வாமே. (௧௫)

இயலுமிம் மந்திர மெய்தும் வழியின், செயலு மறியத் தெளிவிக்கு நாதன், புயலும் புனலும் பொருந்தங்கி மண்விண், முயலு மெழுத்துக்கு முன்னு விருந்ததே. (௧௬)

ஆறெட் டெழுத்தின்மே லாறும் பதினாலு, மேறெட் டதின்மேலே விந்துவு நாதமுஞ், சீறிட்டு நின்று சிவாய நமவென்னக், கூறிட்டு மும்மலங் கூப்பிட்டுப் போமே. (௧௭)

அண்ண லிருப்ப தவளக் கரத்துளே, பெண்ணினல் லாளும் பிரானக் கரத்துளே, யெண்ணி யிருவ ரிசைந்தங் கிருந்திடம், புண்ணிய வாளர் பொருளறி வார்களே. (௧௮)

அவ்விட்டு வைத்தங் கரவிட்டு மேல்வைத்து,வ்விட்டுப் பார்க்கி லிலிங்கம தாய்நிற்கு, மவ்விட்டு மேலே வளியுறக் கண்டபின், ஒவ்விட்டு நின்ற சுடர்க்கொழுந் தாமே. (௧௯)

அவ்வுண்டு சவ்வுண் டனைத்துமங் குள்ளது, கவ்வுண்டு நிற்குங் கருத்தறி வாரில்லை, கவ்வுண்டு நிற்குங் கருத்தறி வாளர்க்குச், சவ்வுண்ட சத்தி சதாசிவன் றானே. (௨0)

அஞ்செழுத் தாலே யமர்ந்தன னந்தியு, மஞ்செழுத் தாலே யமர்ந்த பஞ்சாக்கர, மஞ்செழுத் தாகிய வக்கர சக்கர, மஞ்செழுத் துள்ளே யமர்ந்திருந் தானே. (உக)

கூத்தனைக் காணுங் குறிபல பேசிடிற், கூத்த னெழுத்தின் முதலெழுத் தோதினர், கூத்தனொ டொன்றிய கொள்கைய ராய்நிற்பர், கூத்தனைக் காணுங் குறியது வாமே. (உஉ)

அத்திசைக் குண்ணின்ற வனலை யெழுப்பியே, யத்திசைக் குண்ணின்ற தவ்வெழுத் தோதினா, லத்திசைக் குண்ணின்ற வந்த மறையனை, யத்திசைக் குள்ளுற வாக்கினன் றானே. (உந)

தானே யளித்திடுந் தையலை நோக்கினாற், றானே யளித்திட்டு மேலுற வைத்திடுந், தானே யளித்த மகாரத்தை யோதிடத், தானே யளித்ததோர் கல்லொளி யாகுமே. (உச)

கல்லொளி யேயென நின்ற வடதிசை, கல்லொளி யேயென நின்றன னிந்திரன், கல்லொளி யேயென நின்ற சிகாரத்தைக், கல்லொளி யேயென்க் காட்டினன் றானே. (உரு)

தானே யெழுகுணந் தண்சுட ராய்நிற்குந், தானே யெழுகுணம் வேதமு மாய்நிற்குந், தானே யெழுகுணம் வரவது வோதிடிற், றானே யெழுந்த மறையவ னாமே. (உசா)

மறையவ னாக மதித்த பிறவி, மறையவ னாக மதித்திடக் காண்பர், மறையவ னஞ்செழுத் துண்ணிற்கப் பெற்ற, மறையவ னஞ்செழுத் தாமது வாகுமே. (உஎ)

ஆகின்ற பாதமு மந்நவாய் நின்றிடு, மாகின்ற நாபியு ளங்கே மகாரமா, மாகின்ற சியிரு தோள்வவ்வாய்க் கண்டபின், னாகின்ற வச்சுடர் யவ்வியல் பாமே. (உஅ)

யவ்வியல் பாய விருமூன் றெழுத்தையுஞ், செவ்வியல் பாகச் சிறந்தன னந்தியு, மொவ்வியல் பாக வொளியுற வோங்கிடிற், றவ்வியல் பாகப் பரந்தநின் றானே. (உகூ)

பரந்தது மந்திரம் பல்லுயிர்க்கெல்லாம், வரந்தரு மந்திரம் வாய்த்திட வாங்கித், துரந்திடு மந்திரஞ் சூழ்பகை போக, வுரந்தரு மந்திர மோமென் றெழுப்பே. (௯௰)

ஓமென் றெழுப்பித்தன் னுத்தம நந்தியை, நாமென் றெழுப்ப நடுவெழு தீபத்தை, யாமென் றெழுப்பியவ் வாறறி வார்கண், மாமன்று கண்டு மகிழ்ந்திருந் தாரே. (௯௧)

ஆகின்ற சக்கரத் துள்ளே யெழுத்தைந்தும், பாகொன்றி நின்ற பதங்களில் வத்திக்கு, மாகொன்ற வைம்பத் தொருவெழுத் துண்ணிற்கப், பாகொன்றி நிற்கும் பராபரன் றானே. ()

பரமாய வஞ்செழுத் தண்ணடுவாக, பரமாய நவசிம பார்க்கில்ம வயநசி, பரமாய சியநம வாம்பரத் தோதிற், பரமாய வாசி மயநமாய் நின்றே. (௯௩)

நின்ற வெழுத்துக்கண் ணோர்தரு பூதமு, நின்ற வெழுத்துக்கண் ணோர்தரு வண்ணமு, நின்ற வெழுத்துக்கண் ணோர்தரு நின்றிடு, மின்ற வெழுத்துள்ளு நின்றனன் றானே. (௯௪)

நின்றன சக்கர நீளும் புவியெலா, மன்றது வாய்நின்ற மாயநன் றாடனைக், கண்டது வாகக் கரந்தன னந்தியுங், குன்றிடு நின்றிடு கொள்கைய னாமே. (௯௫)

கொண்டவிச் சக்கரத் துள்ளே குணம்பல, கொண்டவிச் சக்கரத் துள்ளே குறியைந்துங், கொண்டவிச் சக்கரங் கூத்த னெழுத்தைந்துங், கொண்டவிச் சக்கரத் துண்ணின்ற கூத்தே.

வெளியி லிரேகை யிரேகையி லத்தலை, சுளியி லுகாரமாஞ் சுற்றிய வன்னி, நெளிதரு கால்கொம்பு நேர்விந்து நாதந், தெளியும் பிரகாரஞ் சிவமந் திரமே. (௯௭)

அகார வுகார சிகார நடுவாய், வகாரமோ டாறும் வளியுடன் கூடிச், சிகார முடனே சிவன்சிந்தை செய்ய, யொகார முதல்வ னுவந்துநின் றானே. (௯௮)

அற்ற விடத்தே யகாரம தாவது. வுற்ற விடத்தே யுறு பொருள் கண்டிடச், செற்ற மறுத்த செழுஞ்சுடர் மெய்ப் பொருள், குற்ற மறுத்தபொன் போலுங் குளிகையே. (ருக)

அவ்வென்ற போதினி லுவ்வெழுத் தாலித்தா, லுவ்வெ ன்ற முத்தி யுருகிக் கலந்திடு, மவ்வென் றன் னுள்ளே வழிபட்ட நந்தியை, யெவ்வணஞ் சொல்லுகே னெந்தை யியற்கையே. ()

நீரி லெழுத்திவ் வுலகா ரறிவது, வானி லெழுத்தொன்று கண்டறி வாரில்லை, யாரிவ் வெழுத்தை யறிவா ரறிவர்க, ளூனி லெழுத்தை யுணர்கிலர் தாமே. (சக)

காலை நடுவுறக் காயத்தி லக்கர, மாலை நடுவுற வைம்பது மாவன, மேலு நடுவுற வேதம் விளம்பிய, மூல நடுவுற முத்தி தந் தானே. (சஉ)

நாவியின் கீழது நல்ல வெழுத்தொன்று, பாவிக ளத்தின் பயனறி வாரில்லை, யோவிய ராலு மறியவொண் ணாதது, தேவி யுந் தானுந் திகழ்ந்திருந் தானே. (சந)

அவ்வொடு சவ்வன் றரனுற்ற மந்திர, மவ்வொடு சவ்வெ ன்ற தாரு மறிகில, ரவ்வொடு சவ்வென் ற தாரு மறிந்தபின், ன வ்வொடு சவ்வு மனுதியு மாமே. (சச)

மந்திர மொன்று மலரா லுதிப்பது, வுந்தியி னுள்ளே யுத யம்பண் ணநிற்குஞ், சந்திசெய் யாநிற்பர் தாம தறிகிலர், நந்தி தொழுதுபோ யார்த்தகன் றார்களே. (சரு)

சேவிக்கு மந்திரஞ் செல்லுந் திசைபெற, வாவிக்குண் மந் திர மாதார மாவன, பூவுக்குண் மந்திரம் போக்கற நோக்கிடி, லாவிக்குண் மந்திர மங்குச மாமே. (சசு)

அருவினி லம்பர மங்கெழு நாதம், பெருகு துடியிடை பேணிய விந்து, மருவி யகார சிகார நடுவா, யுருவிட வூறு மூ றமந் திரமே. (சஎ)

விந்துவு நாதமு மேவி யுடன்கூடிச், சந்திர னோடே தலை
ப்படு மாயிடி, லந்தர வானத் தமுதம்வந் தூறிடு, மங்குதி ம
ந்திர மாகுதி யாமே. (௪௮)

ஆறெழுத் தோது மறிவா ரறிகிலா, றாறெழுத் தொனறாக
வோதி யுணரார்கள், வேறெழுத் தின்றி விளம்பவல் லார்கட்
கு, வோரெழுத் தாலே யுயிர்பெற லாமே. (௪௯)

ஓது மெழுத்தோ டுயிர்க்கலை மூவைஞ்சு, மாதி யெழுத்த
வை யைம்பத்தோ டொன்றென்பர், சோதி யெழுத்தி னிலையி
ரு மூன்றுள, நாத வெழுத்திட்டு நாடிக்கொ ளீரே. (௫௦)

விந்துவி லுஞ்சுழி நாத மெழுந்திட, பந்தத் தலைவி பதி
னாறு கலையதாய், கந்தர வாகரங் காலுடம் பாயினு, ளந்தமு
மின்றி யைம்பத்தோன் றாமே. (௫௧)

ஐம்ப தெழுத்தே யனைத்தும்வே தங்களு, மைம்ப தெழுத்
தே யனைத்தாக மங்களு, மைம்ப தெழுத்தேயு மாவ தறிந்தபி,
னைம்ப தெழுத் தும்போ யைஞ்செழுத் தாமே. (௫௨)

அஞ்செழுத் தாலைந்து பூதம் படைத்தன, னஞ்செழுத்
தாற்பல யோனி படைத்தன, னஞ்செழுத் தாலிவ் வகலிடந்
தாங்கின, னஞ்செழுத் தாலே யமர்ந்துநின் றானே. (௫௩)

வீழ்ந்தெழ லாம்விகிர் தன்றிரு நாமத்தைச், சேர்ந்தொ
ழி யாமற் றுடங்கு மொருவற்குச், சார்ந்த வினைத்துயர் போ
கத் தலைவனும், போந்திடு மென்னும் புரிசடை யோனே. (௫௪)

உண்ணு மருந்து மூலப்பிலி காலமும், பண்ணுறு கேள்விய
ம் பாடலு மாய்நிற்கும், விண்ணின் றமரர் விரும்பி யடிதொழ,
வெண்ணின் றெழுத்தஞ்சு மாகிநின் றானே. (௫௫)

ஐந்தின் பெருமை யகலிட மாவது, ஐந்தின் பெருமையே
யாலய மாவது, ஐந்தின் பெருமை யறவோன் வழக்கமு, மை
ந்தின் வகைசெயப் பாலனு மாமே. (௫௬)

வேரெழுத் தாய்விண்ணு யப்புற மாய்நிற்கு, நீரெழுத் தாய்நிலந் தாங்கியு மங்குள்ள, சீரெழுத் தாயங்கி யாயுயி ரா மெழுத், தோரெழுத் தீசனு மொண்சுட ராமே. (௫௭)

நாலா மெழுத்தோசை ஞால மூருவது, நாலா மெழுத்தி னுண் ஞால மடங்கிற்று, நாலா மெழுத்தே நவிலவல் லார்கட் கு, நாலா மெழுத்தது நன்னெறி தானே. (௫அ)

இயைந்தன ளேந்திழை யென்னுள்ள மேவி, நயந்தன ளங்கே நமசி வயவென்னும், பயந்தன்னை யோரும் பதமது பற் றும், பெயர்ந்தனன் மற்றும் பிதற்றறுத் தேனே. (௫௯)

ஆமத் தினிதிருந் தன்ன மயத்தினை, யோமத்தி லேயுதம் பண்ணு மொருத்திதன், ஞமநமசி வயவென் றிருப்பார்க்கு, நேமத் தலைவி நிலவிநின் றாளே. (௬௦)

பட்டம் பரிசே பரமஞ் செழுத்ததி, னிட்ட மறிந்திட் டிர வு பகல்வர, நட்டம தாடு நடுவே நிலயங்கொண், டட்டதே ச ப்பொரு ளாகிநின் றாளே. (௬௧)

அகார முயிரே யுகாரம் பரமே, மகார மலமாய் வருமுப் பதாறிற், சிகாரஞ் சிவமாய் வகாரம் வடிவமா, யகார முயி ரொன் றறையலு மாமே. (௬௨)

நகார மகாரஞ் சிகார நடுவாய், வகார மிரண்டும் வளியு டன் கூடி, வொகார முதற்கொண் டொருக்கா லுரைக்க, ம கார முதல்வன் மனத்தகத் தானே. (௬௩)

ஐஞ்சுள வானை யடவியுள் வாழ்வன, வஞ்சுக்கு மஞ்செ ழுத் தங்குச மாவன, வஞ்சையுங் கூடத் தடுக்கவல் லார்கட் கே, யஞ்சாதி யாதி யகம்புக லாமே. (௬௪)

ஐந்து கலையி லகராதி தன்னிலே, வந்த நகராதி மாற்றி ம கராதி, நந்திபை மூலத்தே நாடிப் பரையொடுஞ், சந்திசெய் வார்க்குச் சடங்கில்லை தானே. (௬௫)

மருவுஞ் சிவாயமே மன்னு முயிரு, மருமந்த யோகமு ஞானமு மாகுந், தெருள்வந்த சீவனார் சென்றிவர் முலே, யருடங்கி யச்சிவ மாவது வீடே. (சுசு)

அஞ்சக வஞ்செழுத் துண்மை யறிந்தபின், னெஞ்சகத் துள்ளே நிறையும் பராபரம், வஞ்சக மில்லை மனைக்கு மழிவில்லை, தஞ்ச மிதுவென்று சாற்றுகின் றேனே. (சுஎ)

சிவாயவொ டவ்வே தெளிந்துள்ளத் தோதச், சிவாயவொ டவ்வே சிவனுரு வாகுஞ், சிவாயவொ டவ்வுந் தெளியவல் லார்கள், சிவாயவொ டவ்வே தெளிந்திருந் தாரே. (சுஅ)

சிகார வகார யகார முடனே, நகார மகார நடுவுற நாடி யொகார முடனே யொருக்கா லுரைக்கு, மகார முதல்வன் மதித்துநின் றானே. (சுகூ)

நம்முத லோரைந்தி னாடுங் கருமஞ்ச. ளம்முத லைந்தி லடங்கிய வல்வினை, சிம்முத லுள்ளே தெளியவல் லார்கட்குத், தம்முத லாகுஞ் சதாசிவன் றானே. (எ0)

நவமுஞ் சிவமு முயிர்பர மாகுந், தவமொன் றிலாதன தத்துவ மாகுஞ், சியமொன்றி யாய்பவ ராதர வாலச், சிவமென்ப தானு மெனுந்தெளி வுற்றதே. (எக)

கூடிய வெட்டுமிரண்டுங் குவிந்தறி, நாடிய நந்திபை ஞானத்து ளேவைத்து, வாடிய வைவரு மங்குற வாவர்க, ட்டேடி யதனைத் தெளிந்தறி யீரே. (எஉ)

எட்டுமிரண்டு மினிதறி கின்றில, ரெட்டு மிரண்டு மறியாத வேழைய, ரொட்டு மிரண்டுமி நுமூன்று நான்கெனப், பட்டது சித்தாந்த சன்மார்க்க பாதமே. (எங)

எட்டு வரையின்மே லெட்டு வரைகீறி, யிட்ட நடுவு ளிறைவ னெழுத்தொன்றில், வட்டத்தி லேயறை நாற்பத்தெட் டுமி

ட்டுச், சிட்டஞ்செழுத்துஞ் சபிசிக் கிரமே. (எச)

தானவர் சட்டர் சதிர ரிருவர்க, ளானவிம் மூவரோ டா
ற்றவ ராதிக, ளேனைப் பதினேந்தும் விந்துவு நாதமுஞ், சேனை
யுஞ் செய்சிவ சக்கரந் தானே. (எரு)

பட்டண மாதவ மாற்றும் பராபரம், விட்டனர் தம்மை வி
கிர்தா நமவென்ப, ரெட்டனை யாயினு மீசன் றிறத்திற, மொட்
டுவன் பேசுவ னொன்றறி யேனே. (எசு)

சிவமுதன் மூவரோ டைவர் சிறந்து, வவைமுத லாறிர
ண் டொன்றொடொன் றுன, வவைமுதல் விந்துவு நாதமு மோ
ங்கச், சவைமுதற் சங்கரன் றன்பெயர் தானே. (எஎ)

வித்தாஞ் சகமய மாக வரைகிறி, நக்தார் கலைபதி னாறு
நாட் டிப்பின், னுத்தாரம் பன்னிரண் டாதி கலைதொறும், பத்
தாம் பிரம சடங்குபார்த் தோதிடே. (எஅ)

கண்டெழுந் தேன்கம லம்மல ருள்ளிடை, கொண்டொழி
ங் தேனுடன் கூடிய காலத்துப், பண்பழி யாத பதிவழி யே
சென்று, நண்பழி யாமே நமவென லாமே. (எகூ)

புண்ணிய வானவர் பூமழை தூவிநின், றெண்ணுவ ரண்ண வி
ணையடி மந்திர, நண்ணுவர் நண்ணி நமவென்னு நாமத்தைக்,
கண்ணென வுன்னிக் கலந்துநின் றுரே. (அ)

ஆறெழுத் தாலவ் வாறு சமயங்க, ளாறுக்கு நாலே யி
ருபத்து நாலென்பர், சாவித் திரியிற் றலையெழுத் தொன்று
ள, பேதிக்க வல்லார் பிறவியற் றுர்களே. (அக)

எட்டினி லெட்டறை யிட்டோ ரரையிலே, கட்டிய வொ
ன்றெட்டாய்க் காண நிறையிட்டுச், சூட்டி யிவற்றைப் பிரண
வஞ் சூழ்ந்திட்டு, மட்டு முயிர்கட் குமாபதி யானுண்டே. ()

நம்முத லவ்வொடு நாவின ராகியே, யம்முத லாகிய வெ

ட்டிடை யுற்றிட்டு, வும்முத லாசவே யுண்பவ ருச்சிமே, லும்
முத லாயவ னுற்றுநின் றனே. (௮௩)

நின்ற வரசம் பலகைமே னேராக, வொன்றி டமவ்விட்டு
வோலையிற் சாதகந், துன்று மெழுகையுள் பூசிச் சுடரிடைந்,
தன்ற வெதுப்பிடத் தம்பனங் காணுமே. (௮௪)

கரண் விரலிப் பலகை யமன்றிசை, மரணமிட் டெட்டி
ன் மகார வெழுத்திட்டு, வரணமி லிங்காயம் பூசி யடுப்பிடை,
முரணிற் புதைத்திட மோகன மாகுமே. (௮௫)

ஆங்கு வடமேற்கி லையனுர் கோட்டத்திற், யாங்கு பட
வே பலாசம் பலகையிற், காங்கரு மேட்டிற் கடுப்பூசி விந்து
விட், டோங்காரம் வைத்திடு முச்சா டனத்துக்கே. (௮௬)

உச்சியம் போதி லொளிவன்னி மூலையிற், பச்சோலை யிற்ப
ஞ்ச காயத்தைப் பாரித்து, முச்சதி ரத்தின் முதுகாட்டில் வை
த்திடு, வைச்சபின் மேலோர் மாரணம் வேண்டிலே. (௮௭)

ஏய்ந்த வரிதார மேட்டின்மே லேபூசி, யேய்ந்த உகார மு
கார மெழுத்திட்டு, வாய்ந்ததோர் வில்லம் பலகை வசியத்துக,
கேய்ந்தவைத் தெண்பதி னாயிரம் வேண்டிலே. (௮௮)

எண்ணுக் கருடனை யேட்டின் யகாரமிட், டென்னைப்
பொன்னுளி லெழுவெள்ளி பூசிடா, வெண்ணுவற் பலகை யிட்
டுமேற் சேநோக்கி, யெண்ணு வெழுத்தொடெண் ணாயிரம் வே
ண்டிலே. (௮௯)

---

அர்ச்சனை.

அம்புயு நீலங் கழுநீ ரணி நெய்தல், வம்பவிழ் பூகமு மாத
வி மக்காரந், தும்பை வகுளஞ் சுரபுன்னை மல்லிகை, செண்பக
ம் பாதிரி செவ்வந்தி சாத்திடே. (௯௦)

சாங்கம தாகவே சந்தொடு சந்தனஞ், தேங்கமழ் குங்கு மங் கற்பூரங் காரகிற், பாங்கு படப்பனி நீராற் குழைத்துவை த், தாங்கே யணிந் துநீ ரர்ச்சியு மன்பொடே. (கக)

அன்புட னேநின் றமுதமு மேற்றியே, பொன்செய் விள க்கும் புகைதீபந் திசைதொறுந், துன்ப மகற்றித் தொழுவோர் நினையுங்கா, லின்ப முடனேவந் தெய்திடு முத்தியே. (கஉ)

எய்தி வழிப்படி லெய்தா தனவில்லை. பெய்தி வழிப்படி னிந்திரன் செல்வமுன், னெய்தி வழிப்படி லெண்சித்தி யுண்டா கு, மெய்தி வழிப்படி லெய்திடு முத்தியே. (கங)

நண்ணும் பிறதார நீத்தா ரவித்தார், மண்ணிய நைவேத் தியமநு சந்தான, நண்ணிய பஞ்சாங்க நண்ணுஞ் ஜபமென்னு, மன்னு மனபவ னத்தொடு வைகுமே. (கச)

வேண்டார்கள் கன்மம் விமலனுக் காட்பட்டோர், வேண் டார்கள் கன்ம மதிலிச்சை யற்றபேர், வேண்டார்கள் கன்ம மிகுசிவ யோகிகள், வேண்டார்கள் கன்ம மிகுதியோ ராய்ந் தன்பே. (கரு)

அறிவரு ஞானத் தெவரு மறியார், பொறிவழி தேடிப் புல ம்புகின் றார்க, ணெறிமனை யுள்ளே நிலைபெற நோக்கி, லெறிம ணி யுள்ளே யிருக்கலுமாமே. (கசு)

இருளும் வெளிபோ லிரண்டா மிதய, மருளறி யாமையு மன்னு மறிவு, மருளிவை விட்டெறி யாமை மயங்கு, மருளுஞ் சிதைத்தோ ரவர்களா மன்றே. (கள)

தானவ னாக வவனேதா னாயிட, வான விரண்டி லறிவ ன் சிவமாக, போனவ னன்பிது நாலா மரபுரத், தானவ னாகு மோ ராதித்த தேவரே. (கஅ)

ஓங்கார முந்திக்கீ ழுற்றிடு மெங்நாளு, நீங்கா வகாரமு நீள்கண்டத் தாயிடும், பாங்கார் நகாரம் பயினெற்றி யுற்றிடும்

விங்காகும் விந்துவு நாதமே லாகுமே. (கூகூ)

நமவது வாசன மான பசுவே, சிவமது சித்திச் சிவமாம் பதியே, நமவற வாதி நாடுவ தன்றுஞ், சிவமாகு மாமோனஞ் சேர்தன்மெய் வீடே. (கூ00)

தெளிவரு நாளிற் சிவவமு தூறு, மொளிவரு நாளிலோ ரெட்டி லுசனு, மொளிவரு மப்பதத் தோரிரண் டாகில், வெளிதரு நாதன் வெளியா யிருந்தே. (க0க) ஆக சகூக.

---

நவகுண்டம்.

நவகுண்ட மானவை நானுரை செய்யி, னவகுண்டத் துள்ளெழு நற்றீபந் தானு, நவகுண்டத் துள்ளெழு நன்மைக ளெல்லா, நவகுண்ட மானவை நானுரைப் பேனே. (க)

உரைத்திடுங் குண்டத்தி னுள்ளே முக்காலு, நகைத்தெழு நாற்கோண நன்மைக ளைந்து, பகைத்திடு முப்புரம் பாரங்கி யோடே, மிகைத்திடு கண்டங்கண் மேலறி யோமே. (உ)

மேலறிந் துள்ளே வெளிசெய்த வப்பொருள், காலறிந் துள்ளே கருத்துற்ற செஞ்சுடர், பாரறிந் தண்டஞ் சிறகற நின்றது, நானறிந் துள்ளெழ நாடிக்கொண் டேனே. (ஙு)

கொண்டவிக் குண்டத்தி னுள்ளெழு சோதியா, யண்டங்க ளேழு மாக்கி யழிக்கலாம், பண்டையுள் வேதம் பரந்த பரப்பெலா, மின்றுசொல் நூலா யெடுத்துரைத் தேனே. (ச)

எடுத்தவக் குண்டத் திடம்பதி னாறிற், பதித்த கலைகளும் பாலித்து நிற்குங், கதித்தன னுள்ளெழக் கண்டுகொள் வார்க்கே, கொதித்தெழு வல்வினைக் கூடகிலாவே. (ரு)

கூடமுக் கூடத்தி னுள்ளெழு குண்டத்து, ளாடிய வைந்து முகம்புறம் பாய்நிற்கும், பாடிய பன்னி ரிராசியு மங்கெழு, நாடிக்கொள் வார்கட்கு நற்சுடர் தானே. (சு)

நற்சுட ராகுஞ் சிரமுக வட்டமாங், கைச்சுட ராகுங் கருத்துற்ற கைகளிற், பைச்சுடர் மேனி பதைப்புற் றிலிங்கமு, நற்சுட ராயெழு நல்லதென் றாளே (எ)

நல்லதென் றாளே நமக்குற்ற நாயகன், சொல்லதென் றாளே சுடர்முடிப் பாதமா, மெல்லநின் றாளை வினவகில் லாதவர், கல்லதன் றாளையுங் கற்றும்வின் னாளே. (அ)

வின்னா விளம்பிறை மேவிய குண்டத்துச், சொன்னா லிரண்டுஞ் சுடர்நாகந் திக்கெங்கும், பன்னாலு நாகம் பரந்த பரஞ்சுட, ரொன்னாகத் துள்ளோ யிடங்கொண்ட வாறே. (௯)

இடங்கொண்ட பாத மெழிற்சுட ரோக, நடங்கொண்ட பாதங்க ணண்ணா ரதற்குச், சகங்கொண்ட கையிரண் டாறுந் தழைப்ப, முகங்கொண்ட செஞ்சுடர் முக்கணனார்க்கே (௧௦)

முக்கணன் றானே முழுச்சுட ராயவ, னக்கணன் றானே யகிலமு முண்டவன், றிக்கண னாகித் திகையெட்டுங் கண்டவ, னெக்கணன் றானுக்கு மெந்தை பிரானே. (௧௧)

எந்தை பிரானுக் கிருமூன்று வட்டமாய்த், தந்தைதன் முன்னே சண்முகந் தோன்றலாற், கந்தன் சுவாமி கலந்தங் கிருத்தலான், மைந்த னிவனென்ன மாட்டிக்கொ ளீரோ. (௧௨)

மாட்டிய குண்டத்தி னுள்ளெழு வேதத்து, ளாட்டிய காலொன்று பிரண்டு மலர்ந்திடும், வாட்டிய கையிரண் டொன்று பதைத்தெழ, நாட்டுஞ் சுரரிவர் நல்லொளி தானே. (௧௩)

நல்லொளி யாக நடந்த வுலகெங்குங், கல்லொளி யாகக் கலந்து ளிருந்திடுஞ், சொல்லொளி யாகத் தொடர்ந்த வுயிர்க்கெல்லாங், கல்லொளி கண்ணுளு மாகிநின் றானே. (௧௪)

நின்றவிக் குண்ட நிலையாறு கோணமாய்ப், பண்டையில் வட்டம் பதைத்தழு மாறாறுங், கொண்டவித் தத்துவ முன்னே கலந்தெழு, விண்ணுளு மென்ன வெடுக்கலு மாமே. (௧௫)

எடுக்கின்ற பாதங்கண் மூன்ற தெழுத்தைக், கடுத்த முக மிரண் டாறுகண் ணுகப், படித்தெண்ணு நாவெழு கொம் பொரு நாலு, மடுத்தெழு கண்ணு னந்த மிலார்க்கே. (கசு)

அந்தமில் லானுக் ககலிடந் தானில்லை, யந்தமில்லானை ய ளப்பவர் தாமில்லை, யந்தமில் லானுக் கடுத்தசொற் றுனில்லை, யந்தமில் லானை யறிந்துகொள் பத்தே. (கள)

பத்திட்டங் கெட்டிட் டாறிட்டு நாலிட்டு, மட்டிட்ட குண்ட மலர்ந்தெழு தாமரை, கட்டிட்டு நின்று கலந்தமெய் யாகமும், பட்டிட்டு நின்றது பார்ப்பதி பாலே. (கஅ)

பார்ப்பதி பாகன் பரந்தகை நாலைஞ்சு, காற்பதி பத்து முகம்பத்துக் கண்களும், பூப்பதி பாத மிரண்டு சுடர்முடி, நாற்பது சோத்திர நல்லிரு பத்தைஞ்சே. (கக),

அஞ்சிட்ட கோல மளப்பன வையைந்து, மஞ்சிட்ட கு ண்ட மலர்ந்தங் கிருத்தலாற், பஞ்சிட்ட சோதிப் பரந்தப ஞ்சுடர், கொஞ்சிட்ட வன்னியைக் கூடுதன் முத்தியே. (உ0)

முத்தநற் சோதி முழுச்சுட ராயவன், கற்றற்று நின்றார் கருத்து ளிருந்திடும், பற்றற நாடிப் பரந்தொளி யூடேபோய், செ ற்றற் றிருந்தவர் சேர்ந்திருந் தாரே. (உக)

சேர்ந்த கலையஞ்சுஞ் சேருமிக் குண்டமு, மார்ந்த திசைக ளு மங்கே யமர்ந்திடும், பாய்ந்தவைம் பூதமும் பார்க்கின்ற வ ன்னியைக், காய்ந்தவ ரென்றுங் கலந்தவர் தாமே. (உஉ)

மெய்கண்ட மாம்விரி நூல கேழை, யுய்கண்டஞ் செய்த வொருவனைச் சேருமின், செய்கண்ட ஞானந் திருந்திய தேவர் கள், பொய்கண்ட மில்லாப் பொருள்கலந் தாரே. (உ௩)

கலந்திரு பாத மிருகர மாகு, மலர்ந்திரு குண்ட மகாரத் தோர் மூக்கு, மலர்ந்தெழு செம்முக மற்றைக்கண் ணெற்றி, யு ணர்ந்திரு குஞ்சியங் குத்தம னார்க்கே. (உச)

உத்தமன் சோதி யுளனொரு பாலனும், மத்திம னாகி மல ர்ந்தங் கிருந்திடும், பச்சிமத் திக்கும் பரந்து குழிந்தன, சத்தி மா னாகத் தழைத்த கொடியே. (௨௫)

கொடியாறு சென்று குலாவிய குண்ட, மடியிரு கோண மா யந்தமு மொக்கும், படியே மூலகும் பரந்த சுடரை, மடி யாது கண்டவர் மாதன மாமே. (௨௬)

மாதன மாக வளர்கின்ற வன்னியைச், சாதன மாகச் ச மைந்த குருவென்றும், போதன மாகப் பொருந்த வுலகாளும், பாதன மாகப் பரிந்தது பார்த்தே. (௨௭)

பார்த்திட மெங்கும் பரந்தெழு சோதியை, யாத்தம தா கவே யாய்ந்தறி வாரில்லை, காத்துட லுள்ளே கருதி யிருந்தவர், மூத்துடல் கோடி யுகங்கண்ட வாறே. (௨௮)

உகங்கண்ட வொன்பது குண்டமு மொக்க, வகங்கண்ட யோகியுண் ணாடி யெழுப்பும், பயங்கண்டு கொண்டவிப் பாய் கரு வொப்பச், சகங்கண்டு கொண்டது சாதக மாமே. (௨௯)

சாதனை நாலு தழன்மூன்று வில்வயம், வேதனை வட்டம் விளையாறு பூநிலை, போதனை போதைஞ்சு பொற்கய வாரண, காதனை நாடி நவகோடி தானே. (௩0) ஆ ௧௩௩.

---

## சத்திபேதம் - திரிபுரைச்சக்கரம்.

மாமாயை மாயை வயிந்தவம் வைகரி, யோமாயை யுள் ளொளி யோராறு கோடியிற், றுமான மந்திரஞ் சத்திதன் மூ ர்த்திக, ளாமா யலவாந் திரிபுரை யாங்கே (௧)

திரிபுரை சுந்தரி யந்தரி சிந்துரப், பரிபுரை நாரணி யாம் பால வன்னத்தி, யிருள்புரை யீசி மனோன்மணி யென்ன, வரு பல வாய்நிற்கு மாமாது தானே, (௨)

தாளு வமைந்தவம் முப்புரந் தன்னிடை, தானான மூவுரு வோருருத் தன்மையள், தானான பொன்செம்மை வெண்ணி றத் தாள்கல்வி, தானான போகமு முத்தியு நல்குமே. (ங)

நல்குந் திரிபுரை நாதநா தாந்தங்கள், பல்கும் பரவிந்து பாரண்ட மானவை, நல்கும் பரையபி ராமியகோசரி, புல்கு ம ருளுமப் போதந்தந் தாளுமே. (ச)

தாளணி நூபுரஞ் செம்பட்டுத் தானுடை, வாரணி கொங் கை மலர்க்கன்னல் வாளிவில், லேரணி யங்குச பாச மெழின் முடி, காரணி மாமணிக் குண்டலக் காதிக்கே. (ரு)

குண்டலக் காதி கொலைவிற் புருவத்தள், கொண்ட வரத் தினின் மன்னுகோ லத்தள், கண்டிகை யாரங் கதிர்முடி மாம திச், சண்டிகை நாற்றிசை தாங்கிநின் றுளே. (சா)

நின்ற திரிபுரை நீளும் புராதனி, குன்றலில் மோகினி மா திருக் குஞ்சிகை, நன்றறி கண்டிகை நாற்காற் கரீடணி, துன்றி ய நற்சுத்த தாமரைச் சுத்தையே. (எ)

சுத்தவம் பாரத் தனத்தி சுகோதயள், வத்துவ மாயா ளுமாசத்தி மாபரை, யத்தகை யான மனோன்மணி தானுமாய், வைத்தவக் கோல மதியவ ளாகுமே. (அ)

அவளை யறியா வமரரு மில்லை, யவளன்றிச் செய்யு மருந்த வமில்லை, யவளன்றி யைவரா லாவதொன் றில்லை, யவளன்றி யூர்புகு மாறறியேனே. (கூ)

அறிவார் பராசத்தி யானந்த மென்பா, ரறிவா ரறிவுரு வாமவ ளென்பா, ரறிவார் கரும மவளிச்சை யென்பா, ரறிவா ர் பரனு மவளிடந் தானே. (க0)

தானெங் குளதங் குளளையன் மாதேவி, யூனெங் குளவ் வங் குள்ளுயிர்க் காவலன், வானெங் குளவங் குளேவந் துமப் பாலாங், கோனெங்கு நின்ற குறிபல பாரே. (கக)

பராசத்தி மாசத்தி பல்வகை யாலுந், தராசத்தி யாய்நின்ற தன்மை யுணரா, வுராசத்தி யூழிக டோறு முடனே, புராசத்தி புண்ணிய மாகிய போகமே. (௧௨)

போகஞ்செய் சத்தி புரிகுழ லாளொடும், பாகஞ்செய் தாங்கே பராசத்தி யாய்நிற்கு, மாகஞ்செய் தாங்கே யடியவர் நாடொறும், பாகஞ்செய் ஞானம் படர்கின்ற கொம்பே. (௧௩)

கொம்பனை யாளைக் குவிமுலை மங்கையை, வம்பவிழ் கோதையை வானவர் நாடியைச், செம்பவ ளத்திரு மேனிச் சிறுமியை, நம்பியென் னுள்ளே நயந்துவைத் தேனே. (௧௪)

வைத்த பொருளு மருவுயிர்ப் பன்மையும், பத்து முகமும் பரையும் பராபரைச், சித்தக் கரணச் செயல்களுஞ் செய்திநிஞ், சத்தியும் வித்தைத் தலையவ ளாமே. (௧௫)

தலைவி தடமுலை மேனின்ற தையல், தொலைவிற் றவஞ்செய்யுந் தூய்நெறித் தோகை, கலைபல வென்றிடுங் கன்னியென னுள்ள, நிலைபெற விங்கே நிறைந்துநின் றாளே. (௧௬)

நின்றவ ளேரிழை நீள்கலை யோடற, வென்ற னகம்படிந் தேழுல கந்தொழ, மன்றது வொன்றி மனோன்மனி மங்கலி, யொன்றென்ன வொன்றிநின் றொத்தடைந் தாளே. (௧௭)

ஒத்தடங் குங்கம லத்திடை யாயிழை, யத்தகை செய்கின்ற வாய பெரும்பதி, மத்தடை கின்ற மனோன்மனி மங்கலி சித்தடைக் கும்வழி தேர்ந்துண ரார்களே. (௧௮)

உணர்ந்துட னேநிற்கு முள்ளொளி யாகி, மணங்கமழ் பூங்குழன் மங்கையுந் தானும், புணர்ந்துட னேநிற்கும் போதருங் காலைக், கணிந்தெழு வார்க்குக் கதியளிப் பாளே. (௧௯)

அளியொத்த பெண்பிள்ளை யானந்த சுந்தரி, புளியுறு புன்பழம் போலுள்ள நோக்கித், தெளியுறு சித்தச் சிவகதி காட்டி,

யொளியுற வைத்தென்னை யுய்யவுண் டாளே. (உ0)

உண்டில்லை யென்ற துருச்செய நின்றது, வண்டில்லை மன்றினுள் மன்னி நிறைந்தது, கண்டிலர் காரண காரணி தம்மொடு, மண்டல மூன்றுற மன்னிநின் ருளே. (உக)

நின்ருளவன் றன் னுடலு மூவிருமாய்ச், சென்றனள் சிவகதி சேரு பராசத்தி, யொன்ருக வென்னுட் புகுந்துணர் வாகியே, நின்ருள் பரஞ்சுட ரேடங்கை யாளே. (உஉ)

ஏடங்கை நங்கை யிறையெங்கண் முக்கண்ணி, வேடம் படிகம் விரும்பும்வெண் டாமரை, பாடுந் திருமுறை பார்ப்பினி பாதங்கள், சூடுமென் சென்னிவாய் தோத்திரஞ் சொல்லுமே.

தோத்திரஞ் செய்து தொழுது துணையடி, வாய்த்திட வேத்தி வழிபடும் வாறிரும், பார்த்திடு மங்குச பாசம் பசுங்கரும், பார்த்திடும் பூம்பிள்ளை யாகுமா மாதிக்கே. (உச)

ஆதி விதமிகுத் தண்டந்த மால்தங்கை, நீதி மலரின்மே னேரிழை நாமத்தைப், பாதியில் வைத்துப் பலகாற் பயில்வீரேற், சோதி மிகுத்துமுக் காலமுந் தோன்றுமே. (உ௫)

மேதாதி யீரெட்டு மாகிய மெல்லியல், வேதாதி நூலின் விளங்கும் பராபரை, யாதார மாகியே யாய்ந்த பரப்பினை, நாதாதி நாதத்து நல்லரு ளாளே. (உசா)

அருள்பெற் றவர்சொல்ல வாரீர் மனிதர், பொருள்பெற்ற சிந்தைப் புவனு பதியார், மருளுற்ற சிந்தையை மாற்றி யருமைப், பொருளுற்ற சேவடி போற்றுவ னானே. (உஎ)

ஆன வராக முகத்தி பதத்தினு, ளீன வராக மிடிக்கு முசலத்தோ டேனைய வேள்படை யேந்திய வெண்ணகை, யூன மறவுணர்ந் தாருளத் தோங்குமே. (உஅ)

ஓங்காரி யென்பா ளவளொரு பெண்பிள்ளை, நீங்காத பச்

சை நிரத்தை யுடையவ, ளாங்காரி யாகியே யைவரைப் பெற் றிட்டு, றீங்காரத் துள்ளே யினிதிருந் தாளே. (உகூ)

தானே தலைவி யெனநின்ற தற்பரை, தானே யுயிர்வித்தா ய்த் தந்த பதினாலும், வானோர் தலமு மனமுநற் புத்தியுந், தா னே சிவகதி தன்மையு மாமே. (௩0) ஆ கககக.

---

## வயிரவிமந்திரம்.

பன்னிரண் டாங்கலை யாதி பயிரவி, தன்னி லகாரமு மா யையுங் கற்பித்துப், பன்னிரண் டாதியோ டந்தப் பதினாலுஞ், சொன்னிலை சோடச மந்தமென் றோதிடே. (க

அந்தப் பதினாலு மதுவே வயிரவி, முந்து நடுவு முடிவு மு தலாகச், சிந்தை கலசத்தி லெழுகின்ற மாசத்தி, யந்தமு மா, தியு மாகிநின் றாளே. (உ)

ஆகின்ற மூவரு மங்கே யடங்குவர், போகின்ற பூதம் பொ ருந்து புராதரர், சார்கின்ற சார்வுழி சாரார் சதிபெறப், போ குந் திரிபுரை புண்ணியத் தோரே. (௩)

புண்ணிய நந்தி புனிதன் றிருவாகு, மெண்ணிய நாட்க ளிருபத்தேழ் சூழ்மதி, பண்ணிப வன்னி பகலோன் மதியீறு, திண்ணிய சிந்தைதன் றென்னனு மாமே. (௪)

தென்னன் றிருநந்தி சேவகன் றன்னொடும், பொன்னங் கிரியிற் பூதலம் போற்றிடும், பன்னும் பரிபிடி யந்தம் பகவனோ, டுன்னுந் திரிபுரை யோதிநின் றானுக்கே. (௫)

ஓதியநந்தி யுணருந் திருவரு, ணீதியில் வேத நெறிவந் து ரைசெய்யும், போத மிருபத் தெழுநாள் புணர்மதி, சோதி வ யிரவி சூலம்வந் தானே. (௬)

சூலங் கபாலங்கை யேந்திய சூலிக்கு, நாலாங் கரமுள

நாகபா சாங்குச, மாலங் கயனறி யாத வடிவுக்கு, மேலங்க மாய்நின்ற மெல்லிய லாளே. (எ)

மெல்லியல் வஞ்சி விடமி கலைக்கியானி,சொல்லிய கிஞ்சுக நிறமன்னு சேயிழை, கல்லிய லொப்பது காணுந் திருமேனி, பல்லிய வாடையும் பன்மணித் தானே. (அ)

பன்மணி சந்திர கோடி திருமுடி, சொன்மணி குண்டலக் காதி யுழைக்கண்ணி,நன்மணி சூரிய சோம நயனத்தள்,பொன்மணி வன்னியும் பூரிக்கின் றாளே. (க)

பூரித்த பூவித ழெட்டினுக் குள்ளேயோ, ராரியத் தாளுண் டங்கெண்மர் கன்னியர், பாரித்த பெண்க ளறுபத்து நால்வருஞ், சாரித்துச் சத்தியைத் தாங்கள்கண் டாரே. (கo)

கண்ட சிலம்பு வளைசங்கு சக்கர, மெண்டிசை யோகி யிறைவி பராசத்தி, யண்டமொ டெண்டிசை தாங்கு மருட்செல்வி, புண்டரி கத்தினுள் பூசனை யாளே. (கக)

பூசனை கந்தம் புனைமலர் மாகோடி, யோசனை பஞ்சத் தொலிவந் துரைசெய்யும், வாச மிலாத மணிமந்திர யோகந், தேசந் திகழுந் திரிபுரை காணே. (கஉ)

காணும் பலபல தெய்வங்கள் வெவ்வேறு, பூணும் பலபல பொன்போலத் தோற்றிடும், பேணுஞ் சிவனும் பிரமனு மாயனுங், காணுந் தலைவிநற் காரணி தானே. (கங)

காரண மந்திர மோதுங் கமலத்துப், பூரண கும்ப விரேசம் பொருந்திய, நாரணி நந்தி நடுவங் குரைசெய்த, வாரண வேத நூ லந்தமு மாமே. (கச)

அந்த நடுவிர லாதி சிறுவிரல், வந்த வழிமுறை மாறி யுரைசெய்யுஞ், செந்தமி ழாதி தெளிந்து வழிபடு, நந்தி யிதனை நவமுரைத் தானே. (கரு)

உரைத்த நவசத்தி யொன்று முடிய, நிரைத்த விராசி நெடுமுறை யெண்ணிப், பிரைச்சத மெட்டுமுன் பேசிய நந்தி, நிரைத்து நியதி நியமஞ்செய் தானே. (கசு)

தாமக் குழலி தயைக்கண்ணி யுண்ணின்ற, வேமத் திருளற வீசு மிளங்கொடி, போமப் பெருஞ்சுட ருள்ளொழு நுண்புகை, மேவித் தழுதொடு மீண்டது காணே. (கஎ)

காணு மிருதய மந்திர முங்கண்டு, பேணு நமவென்று பேசுந் தலைமேலே, வேணு நடுவு மிகநின்ற வாகுதி, பூணு நடுவென்ற வந்தஞ் சிகையே. (கஅ)

சிகைநின்ற வந்தக் கவசங்கொண் டாதி, பகைநின்ற வங்கத்தைப் பாரொன்று மாறித், தொகைநின்ற நேத்திர முத்திரை சூலம், வகைநின்ற யோனி வருத்தலு மாமே. (கசு)

வருத்த மிரண்டுஞ் சிறுவிரன் மாறிப், பொருத்தி யணிவிரற் சுட்டிப் பிடித்து, நெறித்தோன்ற வைத்து நெடிது நடுவே, பெருத்த விரலிரண் டுள்புக்குப் பேசே. (உ0)

பேசிய மந்திர மிகாரம் பிரித்துரை, கூச மிலாத சகாரத்தை முன்கொண்டு, வாசிப் பிரான னுபதேச மாகைக்குக், கூசிய விந்து வுடன்கொண்டு கூவே. (உக)

கூவிய சீவன் பிராணன் முதலாகப், பாவியல் சவ்வுடன் பண்ணும் யகாரத்தை, மேவிய மாயை விரிசங்கு முத்திரை, தேவி நடுவுட் டிகழ்ந்து நின்றாளே. (உஉ)

நின்ற வயிரவி நீலி நிசாசரி, யிரண்டு மிரண்டு மொருங்கிய வுள்ளத்துச், சென்றரு ளயகி தேவர் பிரானுக்கே, நன்றருண் ஞாலத்து நாடிடுஞ் சாற்றியே. (உங)

சாற்றிய வேதஞ் சராசர மைம்பூத, நாற்றிசை முக்கண்

ணி நாடுமிருள் வெளி, தோற்று முயிர்ப்பன்மை சோதிப் பரா
பரை, யாற்றலொ டாய்நிற்கு மாதி முதல்வியே. (உச)

ஆதி வயிரவி கன்னித் துறைமன்னி, யோதி யுணரி லுடனு
யி ரீசனும், பேதை யுலகிற் பிறவிக ணுசமா, மோத வுலவாத
கோலமொன் றாகுமே. (உரு)

கோலக் குழலி குலாய புருவத்த, ணீலக் குவளை மலரன்
ன கண்ணினு, ளாலிக்கு மின்னமு தானந்த சுந்தரி, மேலிச் சி
வத்தை வெளிப்படுத் தாளே. (உசா)

வெளிப்படு வித்து விளைவறி வித்துத், தெளிப்படு வித்தெ
ன் சிந்தையி னுள்ளே, களிப்படு வித்துக் கதிர்ப்படு சோதியை
யொளிப்படு வித்தென்னை யுய்யக்கொண் டாளே. (உஎ)

கொண்டனள் கோலங் கோடி யநேகங்கள். கண்டன
ளொண்ணொண் கலையின்கண் மாலைகள், விண்டன்ன மேலை வி
ரிகதிர் மூன்றையுந், தண்டலை மேனின்ற தையனல் லாளே. ()

தையனல் லாளைத் தலத்திற் றலைவியை, மையலை நோக்
கு மனோன்மணி மங்கையை, பையநின் றேத்திப் பணிமின் ப
ணிந்தபின், வெய்ய பவமினி யேறகி லாவே. (உகூ)

வேயன தோளி விரையுறு மென்மல, ரேய குழலி யிளம்
பிறை யேந்திழை, தூய சடைமுடி சூலினி சுந்தரி, யேயென
துள்ளத் தினிதிருந் தாளே. (௩௦)

இனியதென் மூல யிருக்குங் குமரி, தனியொரு நாயகி தா
னே தலைவி, தனிபடு வித்தனள் சார்வு படுத்து, நனிபடு வித்
துள்ள நாடிநின் றாளே. (௩க)

நாடிய கண்மூன்று நடுவெழு ஞானத்துக், கூடி யிருந்த கு
மரி குலக்கன்னி, யாடகச் சீறடி யம்பொற் சிலம்பொலி, சூட
க மேவி யுறங்குகின் றாளே. (௩உ)

உறங்கு மளவின் மனோன்மனி வந்து, கறங்கு வளைக்கை
க் கழுத்தாரப் புல்லி, பிறங்கொளித் தம்பலம் வாயி லுமிழ்ந்தி
ட், டுறங்கலை யாவென் றுபாயஞ் செய் தாளே. (௩௩)

உபாய மளிக்கு மொருத்தியென் னுள்ளத், தபாய மறக்
கெடுத் தன்பு விளைத்துச், சுவாவை விளக்குஞ் சுழியகத் துள்
ளே, யவாவை யடக்கிவைத் தஞ்சலென் றாளே. (௩௪)

அஞ்சொன் மொழியா ளருந்தவப் பெண்பிள்ளை, செஞ்சொ
ன் மடமொழி சீருடைச் சேயிழை, தஞ்சமென் றெண்ணித்த
ன் சேவடி போற்றுவார்க், கிஞ்சொ லளிக்கு மிறைவியென்
றோர். (௩௫)

ஆருயி ராயு மருந்தவப் பெண்பிள்ளை, காரியல்கோதையள்
காரணி நாரணி, யூரு முயிரு முலகு மொடுங்கிங், கோரியென்
னுள்ளங் குலாவிநின் றாளே. (௩௬)

குலாவிய கோலக் குமரியென் னுள்ள, நிலாவி யிருந்து
நெடுநா ளணைந்து, முலாவி யிருந்துணர்ந் துச்சியி னுள்ளே, க
லாவி யிருந்த கலைத்தலை யாளே. (௩௭)

கலைத்தலை நெற்றியோர் கண்ணுடைக் கன்னுள், முலைத்
தலை மங்கை முயங்கி யிருக்குஞ், சிலைத்தலை யாய தெரிவினை
நோக்கி, யலைத்தபூங் கொம்பின ளங்கிருந் தாளே. (௩௮)

இருந்தன ளேந்திழை யென்னுள்ள மேவிப், பொருந்திரு
நால்விரல் புக்கனள் புல்கித், திருந்திய தாணுவில் சேர்ந்துட
னொன்றி, யருந்தவ மெய்தின ளாதியி னாளே. (௩௯)

ஆதி யநாதி யகாரணி காரணி, சோதி யசோதி சுகம்பர
சுந்தரி, மாது சமாதி மனோன்மனி மங்கலி, யோதியென் னு
ள்ளத் துடனியைந் தாளே. (௪௦)

இயைந்தன ளேந்திழை யென்னுள மேவி, நயந்தன ளங்
கே நமசிவ வென்னும், பயன்றன்னை யோரும்பதமது பற்றும்,

பெயர்ந்தனள் மற்றும் பிதற்றறுத் தாளே. (சக)

பிதற்றிக் கழிந்தனர் பேதை மனிதர், முயற்றியின் முத்தி யருளு முதல்வி,கயற்றிகழ் முக்கண்ணுங் கம்பலைச் செவ்வாய், முகத்தரு ளோக்கமு முன்னுள்ள தாமே. (சஉ)

உள்ள திதயத்து நெஞ்சத் தொருமூன்றுள், பிள்ளைத் த டமுளை பேசப் பிறந்தது,வள்ளத் திருவின் வயத்தினுண் மா மாயக், கள்ள வொளியின் கருத்தாகுங் கன்னியே. (சங)

கன்னியுங் கன்னி யழிந்திலள் காதலி, துன்னியங் கைவ ரைப் பெற்றன டேய்மொழி, பன்னிய நன்னூற் பகவரு மங்குள, வென்னவிம் மாயை யிருளது தானே. (சச)

இருளது சூத்தி வெளியதெம் மன்னால், பொருளது புண் ணியர் போகத்து ளின்பந், தெருளது சிந்தையைத் தெய்வமெ ன் றெண்ணி, யருளது செய்யுமெம் மாதிப் பிரானே. (சரு)

ஆதி யநாதியு மாய பராசத்தி, பாதி பராபரை மேலுறை பைந்தொடி, மாது சமாதி மனோன்மனி மங்கலி, யோதுமென் னுள்ளத் துடன்முகிழ்ந் தாளே. (சசு)

ஓதிய வண்ணங் கலையி னுயர்கலை, யாதியில் வேதமே யா மென் றறிகிலர், சாதியும் பேசமுந் தத்துவ மாய்நிற்ப, ளாதி யென் றோதின ளாவின் கிழத்தியே. (சஎ)

ஆவின் கிழத்திநல் லாவடு தண்டுறை, நாவின் கிழத்தி நல ம்புகழ்ந் தேத்திடுந், தேவின் கிழத்தி திருவாஞ் சிவமங்கை, மே வுங் கிழத்தி வினைகடிந் தாளே. (சஅ)

வினைகடிந் தாருள்ளத் துள்ளொளி மேவித், தனையடைந் தோர்க்கெல்லாந் தத்துவ மாய்நிற்பா, ளெனையடிமை கொண் ட வேந்திழை யீசன், கனவனைக் காண வநாதியு மாமே. (சக)

ஆதி யநாதி யகாரணி காரணி, வேதம தாய்த்தனள் வேதியர்க் காய்நின்ற, சோதி தனிச்சுடர் சொரூபமாய் நிற்கும், பாதிபராபரை பன்னிரண் டாதியே. (௫0) ஆ உ௪௧.

---

## பூரணசத்தி.

அளந்தே னகலிடத் தந்தமு மீறு, மளந்தே னகலிடத் தாதிப் பிரானை, யளந்தே னகலிடத் தாணொடு பெண்ணு, மளந்தே னவனரு ளாய்ந்துணர்ந் தேனே. (௧)

உணர்ந்தில ரீசனை யூழிசெய் சத்தி, புணர்ந்தது பூரணம் புண்ணியர் தங்கள், கணங்களைத் தன்னருட் செய்கின்ற கன்னி, குணர்ந்த வழிகொண்டு கும்பக மாகுமே. (௨)

கும்பக் களிறைந்துங் கோலொடு பாகனும், வம்பிற் றிகழு மணிமுடி வண்ணனு, மின்பக் கலவி யினிதுறை தையலு, மின்பக் கலவியு ளாயொழிந் தாரே. (௩)

இன்பக் கலவியி லிட்டெழு கின்றதோ, ரன்பிற் புகவல் லவனெங்க ளப்பனுந், துன்பக் குழப்பிற் றுயருறும் பாசத்து, ளொன்பிற் பராசத்தி யென்னம்மை தானே. (௪)

என்னம்மை யென்னப்ப னென்னுஞ் செருக்கற்று, வுன்னம்மை யூழித் தலைவனு மங்குள்ன், மன்னம்மை யாகி மருவி யுரைசெயும், பின்னம்மை யாய்நின்ற பேர்நந்தி தானே. (௫)

தார்மே லுறைகின்ற தண்மலர் நான்முகன், பார்மே லிருப்ப தொருநூறு தானுள, பூமே லுறைகின்ற போதகம் வந்தன, ளூமே லுறைகின்ற நாயகி யாணையே. (௬)

ஆணைய மாய்வருந் தாது ளிருந்தவர், மாணைய மாய மனத்தை யொருக்கிப்பின், பாணைய மாய பரத்தை யறிந்தபின், றூணைய மாய தருதனந் தானே. (௭)

தானே யெழுந்தவித் தத்துவ நாயகி, வானே ரொழுந்து மதிளை விளக்கின, டேனே ரொழுகின்ற தீபத் தொளியுடன், மானே கடமுடை மன்றறி யீரோ. (அ)

அறிவான மாயையு மைம்புலக் கூட்டத், தறிவான மங்கை யருளது சேரில், பிறியா வறிவறி வாருள்ளம் பேணு, நெறியாய சித்த நினைந்திருந் தானே. (கூ)

இரவும் பகலு மிலாத விடத்தே, குரவஞ் செய்கின்ற குழலியை நாடி, யரவஞ்செய் யாம லவளுடன் றூங்கப், பருவஞ்செய் யாததோர் பாலனு மாமே. (௧௦)

பாலனு மாகும் பராசத்தி தன்னொடு, மேலனு காவிந்து நாதங்கள் விட்டிட, மூலமதா மெனு முத்திக்கு நேர்படச், சாலவு மாய்நின்ற தற்பரத் தானே. (கக)

நின்ற பராசத்தி நீள்பரன் றன்னொடு, நின்றறி ஞானமு மிச்சையு மாய்நிற்கு, நன்றறி யுங்கிரி யாசத்தி நண்ணவே, மன்றன வற்றுண் மருவிடுந் தானே. (கஉ)

மருவொத்த மங்கையுந் தானு முடனே, யுருவொத்து நின்றமை யொன்று முணராக், கருவொத்து நின்று கலக்கின்ற போது, திருவொத்த சிந்தைவைத் தெந்தைநின் றானே. (கரு)

சிந்தையி னுள்ளே திரியுஞ் சிவசத்தி, விந்துவு நாதமு மாயே விரிந்தனள், சந்திர பூமி சடாதரி சாத்தவி, யந்தமொ டாதிய தாம்வண்ணத் தானே. (கசு)

ஆதி யிருந்த வமுத பயோதரி, மாதி யிருக்க வழியறி வாரில்லை, தேறி யிருந்துநற் றீபத் தொளியுட, னூறி யிருந்தன ளுள்ளுடை யார்க்கே. (கரு)

உடையவ னங்கி யுருத்திர சோதி, விடையவ னேறி விளங்கி யிருக்குங், கடையவர் போயிடுங் கண்டவர் நெஞ்சத், தடையது வாகிய சாதகர் தாமே. (கசா)

தாமே லுறைவிட மாறித மூானது, பார்மே லிதழ்பதி னெட்டிரு நூருள, பூமே லுறைகின்ற புண்ணியம் வந்தனள், பார்மே லுறைகின்ற பைங்கொடி யாளே. (கஎ)

பைங்கொடி யாளும் பரம னிருந்திடந், திண்கொடி யாகத் திகழ்தரு சோதியாம், விண்கொடி யாகி விளங்கி வருதலாற், பெண்கொடி யாக நடந்த துலகே. (கஅ)

நடந்தது வம்மலர் நாலுட னஞ்சா, யிருந்தனர் கன்னிக ளொட்டட னொன்ருய்ப், படர்ந்தது தன்வழிப் பங்கயத் துள்ளே, துடர்ந்தது வுள்வழி சோதி யடுத்தே. (கக)

அடுக்குந் தாமரை யாதியிருப்பிட, மெடுக்குந் தாமரை யிலக்கத் துள்ளது, மடுக்குந் தாமரை மத்தகத் தேசெல, முடிக்குந் தாமரை முச்சதி ரத்தே. (உ0)

முச்சதி ரத்தே யெழுந்த முளைச்சுட, ரெச்சதி ரத்து மிடம்பெற வோடிடக், கைச்சதி ரத்துக் கடந்து ளொளிபெற, வெச்சதி ரத்து மிருந்தன டானே. (உக)

இருந்தன டன்முக மாறொரு நாலாய்ப், பரந்தன வாயு திசைதிசை தோறுங், குவிந்தன முத்தின் முகவொளி நோக்கி, நடந்தது தேற லதோமுக மம்பே. (உஉ)

அம்பன்ன கண்ணி யரிவை மனோன்மனி, கொம்பன்ன நுண்ணிடைக் கோதை குலாவிய, செம்பொன்செய் யாக்கை செறிகமழ் நாடொறு, நம்பனை நோக்கி நவிலுகின் ருளே. ()

நவிலும் பெருந்தெய்வ நான்மறைச் சத்தி, துகிலுடை யாடை நிலம்பொதி பாத, மகிலமு மண்ட முழுதுஞ்செம் மாந்து, புகலுமுச் சோதி புனையநிற் பாளே. (உச)

புனையவல் லாள்புவ னத்திறை யெங்கள், வினையவல் லாளண்ட கோடிக ளுள்ளே, புனையவல் லாள்மண் டலத்தொளி

தன்னை, புனையவல் லாளையும் போற்றியென் பேனே. (உரு)

போற்றியென் பேன்புவ னாபதி யம்மையென், னாற்றலு ணிற்கு மருந்தவப் பெண்பிள்ளை, சீற்றங் கடிந்த திருநுதற் சேயிழை, கூற்றந் துரக்கின்ற கொள்ளைந் தொடியையே. ()

தொடியார் தடக்கைச் சுகோதய சுந்தரி, வடிவார் திரிபுரா யாமங்கை கங்கைச், செடியார் வினைகெடச் சேர்வனை யென்றென், றடியார் வினைகெடுத் தாதியு மாமே. (உஎ)

மெல்லிசைப் பாவை வியோமத்தின் மென்கொடிப், பல்லிசைப் பாவைப் பயன்தரு பைங்கொடி, புல்லிசைப் பாவை யைப் போகத் துரந்திட்டு, வல்லிசைப் பாவை மனம்புகுந் தாளே. (உஅ)

தாவித்த வப்பொருட் டானவ னெம்மிறை, பாவித் துலகம் படைக்கின்ற காலத்து, மேவிப் பராசத்தி மேலொடு கீழ்துடர்ந், தாவிக்கு மப்பொருட் டாமது தானே. (உகூ)

அதுவிது வென்ப ரவனை யறியார், கதிவா நின்றதோர் காரணங் காணார், மதுவிரி பூங்குழன் மாமங்கை நங்கை, திமது வுன்னார்க டேர்ந்தவர் தாமே. (கூ0) ஆ. உஎச.

---

ஆதாரவாதேயம்.

காலித மூறி லவிர்க்கது தொண்ணூறு, தாளித மூனவை நாற்பத்து நாலுள, பாலித மூனவப் பங்கய மூலமாய்த், தாளித மாகித் தரித்திருந் தாளே. (க)

தரித்திருந் தாளவ டன்னொளி நோக்கி, விரித்திருந் தாளவள் வேதப் பொருளைக், குறித்திருந் தாளவள் கூறிய வைந்து, மறித்திருந் தாளவள் மாது நல்லாளே. (உ)

மாதுநல் லாளு மணாள னிருந்திடப், பாதிநல் லாளும் பகவரு மானது, சோதிநல் லாளைத் துணைப்பெய்ய வல்லிரேல், வேதனை தீர்தரும் வெள்ளடை யாமே. (ங)

வெள்ளடை யானிரு மாமிகு மாமலர்க், கள்ளடை யாரகம் புகழ லார்மன, மள்ளடை யானும் வகைத்திற மாய்நின்ற, பெண்ணொரு பாகம் பிறவிபெண் ணாமே. (ச)

பெண்ணொரு பெண்ணைப் புணர்ந்திடும் பேதமை, பெண்ணிடை யானும் பிறந்து கிடந்தது, பெண்ணுடை யாணென் பிறப்பறிந் தீர்க்கின்ற, பெண்ணுடை யாணிடைப் பேச்சற்ற வாறே. (ரு)

பேச்சற்ற நன்பொருள் காணும் பெருந்தகை, மாச்சற்ற சோதி மனோன்மனி மங்கையாங், காச்சற்ற சோதி கடவுளு டன்புணர்ந், தாச்சென்ற னுள்புகுந் தாலிக்குந் தானே. (சு)

ஆலிக்குங் கன்னி யருமை மனோன்மனி, பாலித் துலகிற் பரந்துபெண் ணாகும், வேலைத் தலைவியை வேத முதல்விபைப், பாலித் தொருவ னுகந்துநின் ருனே. (எ)

உகந்துநின் ருனம்பி யொண்ணுதற் கண்ணோ, டுகந்துநின் ருனம் முழைபுக நோக்கி, யுகந்துநின் ருனிவ் வுலகங்க ளெல்லா, முகந்துநின் ருனவ டன்ருே டொகுத்தே. (அ)

குத்து முலைச்சி குழைந்த மருங்கின, டுத்தி விரிந்த சுணங்கின டுமொழி, புத்தகச் சீறடிப் பாவை யுணர்வினைத், தொத்த கருத்துச் சொல்லகி லேனே. (கூ)

சொல்ல வொண்ணாத வழற்பொதி மண்டலஞ், சொல்ல வொண்ணாது திகைத்தங் கிருப்பார்கள், வெல்லவொண் ணாத வினைத்தனி நாயகி, மல்லவொண் ணாத மனோன்மனி தானே.

தானே யிருநிலந் தாங்கிவிண் ணாய்நிற்குந், தானே சுடுமங்கி ஞாயிறுந் திங்களுந், தானே மழைபொழி தையலு மா

யிநிற்குந், தானே வடவரைத் தன்கடற் கண்ணே. (௧௧)

கண்ணுடை யானைக் கலந்தங் கிருந்தவர், மண்ணுடை யாரை மனிதரிற் கூட்டொணுப், பண்ணுடை யார்கள் பதைப் பற் றிருந்தவர், விண்ணுடை யார்களை மேலுறக் கண்டே. (௧௨)

கண்டெண் டிசையுங் கலந்து வருங்கன்னி, பண்டெண் டிசையும் பராசத்தி யாய்நிற்கும் விண்டெண் டிசையும் விரை மலர்க் கைக்கொண்டு, தொண்டெண் டிசையுந் தொழநின்ற கன்னியே. (௧௩)

கன்னி யொளியென நின்றவிச் சந்திரன், மன்னி யிருக் கின்ற மாளிகை செந்நிறஞ், சென்னி யிருப்பிடஞ் சேர்பதி ஞாறுடன், பன்னி யிருப்பர் பராசத்தி யாமே. (௧௪)

பராசத்தி யென்றென்று பல்வகை யாலுந், தராசத்தி யான தலைப்பிர மாணி, யிராசத்தி யாமளை யாகமத் தாளாகு ங்; குராசத்தி கோலம் பலவுணர்ந் தேனே. (௧௫)

உணர்ந்துல கேழையும் யோகினி சத்தி, யுணர்துயி ராய் நிற்கு முன்னதனீசன், புணர்ந்தொரு காலத்துப் போகம தா கி, யிணைந்து பரமென் றிசைந்தித தானே. (௧௬)

இதுவப் பெருந்தகை யெம்பெரு மானும், பொதுவக் கல வியும் போகமு மாகி, மதுவக் குழலி மனோன்மனி மங்கை, யதுவக் கலவியு ளாயுழி யோகமே. (௧௭)

யோகநற் சத்தி யொளிபீடந் தானாகும், யோகநற் சத் தி யொளிமுகந் தெற்காகும், யோகநற் சத்தி யுதர நடுவாகும், யோகநற் சத்திதா ளுத்தரந் தேரே. (௧௮)

தேர்ந்தெழு மேலாஞ் சிவனங்கி யோடுற, வார்ந்தெழு மீரையு மந்தம தாய்நிற்கு, மோர்ந்தெழு விந்துவு நாதமு மோங்கிடக், கூர்ந்தெழு கின்றனள் கோல்வளை தானே. (௧௯)

தானான வாரெட்ட தாம்பரைக் குண்மிசை, தானான வாறுமீ ரொழுஞ் சமைகலை, தானான விந்து சகமே பரமெனுந், தானும் பரவா தனையெனத் தக்கதே. (உ0)

தக்க பராவித்தை தானிருப் பானெழிற், றக்கெழு மோருத் திரஞ்சொல்லச் சொல்லவே, மிக்கிடு மெண்சத்தி வெண்ணிற முக்கண்ணி, தொக்கத்தை யோடுதோண் முத்திரையாளே. (உக)

முத்திரை மூன்றின் முடிந்தமெய்ஞ் ஞானத்தா, ளத்துவ மாயல்ல வாய சகலத்தள், வைத்த பராபர னாய பராபரை, சத்தியு மானந்த சத்தியுங் கொங்கே. (உஉ)

கொங்கின்ற கொம்பின் குரும்பைக் குலாங்கன்னி, பொங்கிய குங்குமத் தோளி பொருந்தின, ளங்குச பாச மெனுமகிலங்கனி, தங்கு மவள்மனை தானறி வாயே. (உங)

வாயு மனமுங் கடந்த மனோன்மனி, பேயுங் கணமும் பெரிதுடைப் பெண்பிள்ளை, யாயு மறிவுங் கடந்த வரனுக்குத், தாயு மகளுநற் றாரமு மாமே. (உச)

தாரமு மாகுவ டத்துவ மாய்நிற்பள், காரண காரிய மாகுங் கலப்பினள், பூரண விந்து பொதிந்த புராதனி, பாரள வாந்திசை பத்துடை யாளே. (உரு)

பத்து முகமுடை யாணம் பராசத்தி; வைத்தன ளாறங்க நாலுடன் றான்வேத, மொத்தன ளாதார மொன்றுட னோங்கியே, நித்தமாய் நின்றாளெம் னேரிழை கூறே. (உசு)

கூரியல் கண்ணி குலாய புருவத்தள், சீரிய ளாயுல கேழுங் கிடந்தவ, ளாரிய நங்கை யமுத பயோததி, பேருயி ராளி பிறிவறுத் தாளே. (உஎ)

பிறிவின்றி நின்ற பெருந்தகைப் பேதை, குறிபொன்றி நின்றிடுங் கோமளக் கொம்பு, பொறியொன்றி நின்று புணர்ச்சி

செய் தாங்கே, யறிவொன்ற நின்றன ளாருயி ருள்ளே. (உஅ)

உள்ளத்தி னுள்ளே யுடனிருந் தைவர்தங், கள்ளத்தை நீக்கிக் கலந்துட னேபுல்கிக், கொள்ளத் தவநெறி கூடிய வின்பத்து, வள்ளற் றலைவி மருட்டிப் புரிந்தே. (உகூ)

புரிந்தருள் செய்கின்ற போகமா சத்தி, யிருந்தருள் செய்கின்ற வின்ப மறியார், பொருந்தி யிருந்த புதல்வி பூவண்ணத், திருந்த விலக்கி யினிதிருந் தாளே. (கூ0)

இருந்தன ளேந்திழை யென்னுள்ள மேவித், திருந்து புணர்ச்சியிற் றேர்ந்துணர்ந் துன்னி, நிரந்தர மாகிய நிரதிசய மொடு, பொருந்த விலக்கின் புணர்ச்சி யதுவே. (கூக)

அதுவிது வென்னு மவாவினை நீக்கித், துதியது செய்து சுழியுற நோக்கில், விதியது தன்னையும் வென்றிட லாகு, மதிமல ராள்சொன்ன மண்டல மூன்றே. (கூஉ)

மூன்றுள மண்டல மோகினி சேர்விட, மேன்றுள விராறெழுகலை யுச்சியிற், றோன்று மிலக்குற வாகுதல் மாமாயை, யேன்றன ளேழிரண் டிந்துவோ டிறே. (கூகூ)

இந்துவி னின்றெழு நாத மிரவிபோல், வந்தபின் னுச்சியின் மதித்தெழுங் கண்டத்தி, லுந்திய சோதி யிதயத் தெழுமொளி, யிந்துவின் மேலுற்ற விறது தானே. (கூச)

ஈறது தான்முத லெண்ணிரண் டாயிர, மாறுத லின்றி மனோவச மாயெழிற், றூறது செய்யுஞ் சுகந்தச் சுழியது, பேறது செய்து பிறந்திருந் தாளே. (கூரு)

இருந்தன ளேந்திழை யீறதி லாகத், திருந்தியவாந்தஞ் செந்நெறி கண்ணிப், பொருந்து புவனங்கள் போற்றிசெய் தேத்தி, விருந்த விருந்தனள் மங்கைநல் லாளே. (கூசு)

மங்கையு மாரனுந் தம்மொடு கூடிநின், றங்குலி கூடி யகம்புறம் பார்த்தனர், கொங்கைநல் லாளுங் குமாரர்களைவருங்

தங்தளின் மேவிச் சடங்குசெய் தாரே. (௩எ)

சடங்சது செய்து தவம்புரி வார்கள், கடந்தனி னுள்ளே க ருதுவ ராகிற், னுடர்ந்தெழு சோதி துணைவழி யேறி, யடங்கி டு மன்பின தாயிழை பாலே. (௩அ)

பாலித் திருக்கும் பனிமல ராறினு,மாலித் திருக்கு மவற்றி னகம்படி, சீலத்தை நீக்கத் திகழ்ந்தெழு மந்திர, மூலத்து மே லது முத்தது வாமே. (௩கூ)

முத்து வதநத்தி முகந்தொறு முக்கண்ணி, சத்திச் சதி ரி சகளி சடாதரி, பத்துக் கரத்தி பராபரன் பைந்தொடி, வி த்தகி யென்னுள்ள மேவிநின் றுளே. (சO)

மேவிய மண்டல மூன்றுடன் கீழெரி, தாவிய நற்பதத் த ண்மதி யங்கதிர், மூவருங் கூடி முதல்வியாய் முன்நிற்பா, ரோவினு மேவிடு முள்ளொளி யாமே. (சக)

உள்ளொளி மூவிரண் டோங்கிய வங்கங்கள், வெள்ளொ ளி யங்கியின் மேவி யவரொடுங், கள்ளவிழ்கோதைக் கலந்துட னேநிற்குங், கொள்ள விசுத்திக் கொடியமு தாமே. (சஉ)

கொடியதி ரேகை குருவுள் ளிருப்பப், படியது வாருளைப் பைங்கழ லீசன், வடிவது வானந்தம் வந்து முறையே, யிடு முத லாறங்க மேந்திழை யாளே. (சங)

ஏந்திழை யாளு மிறைவர்கண் மூவருங், காந்தார மாறு ங் கலைமுத லீரெட்டு, மாந்த குளத்தியு மந்திர ராயுவுஞ், சார் ந்தன ரேத்த விருந்தனள் சத்தியே. (சச)

சத்திபென் பாளொரு சாதகப் பெண்பிள்ளை, முத்திக் கு நாயகி யென்ப தறிகிலர், பத்தியைப் பாழி லுகுத்தவப் பா விகள், கத்திய நாய்போற் கதறுகின் றுரே. (சரு)

ஆரே திருவின் றிருவடி காண்பர்க, ணேரேநின் றேத்தி நி னையவல் லார்க்குக், காரே குழலி கமல மலரன்ன, சீரேயுஞ் சேவடி சிந்தைவைத் தாளே. (சசு)

சிந்தையில் வைத்துச் சிராதியி லேவைத்து, முந்தையில் வைத்துத்தம் மூலத்தி லேவைத்து, நிந்தையில் வையா நினைவதி லேவைத்துச், சந்தையில் வைத்துச் சமாதிசெய் வீரே. ()

சமாதிசெய் வார்கட்குத் தான்முத லாகிச், சிவாதியி லாருஞ் சிலைநுத லாளை, நவாதியி லாக நயந்தது வோதி, லுவாதி யவளுக் குறைவில தாமே. (சஅ)

உறைபதி தோறு முறைமுறை மேவி, நறைகமழ் கோதையை நாடொறு நண்ணி, மறையுட னேநிற்கு மற்றுள்ள நான்கு, மிறைதினைப் போதினி லெய்திட லாமே. (சகூ)

எய்திட லாகு மிருவினை யின்பயன், செய்களிர் மேனி குமரி குலாங்கன்னி, மைதவழ் கண்ணிநன் மாரிதூர்க் கையொடு, கைதவ மின்றிக் கருத்துறும் வாறே. (ருo)

கருத்துறுங் காலங் கருது மனமுந், திருத்தி யிருந்தவை சேரு நிலத்து, வொருத்தியை யுன்னி யுணர்ந்திடு மண்மே, விருத்திடு மெண்குண மெய்தலு மாமே. (ருக)

ஆமைபொன் றேறி யகம்படி யானென, வோமவென் றோதியெம் முள்ளொளி யாய்நிற்கு, நாம நறுங்குழற் றையலைக் கண்டபின், சோம நறுமலர் சூடிநின் றாளே. (ருஉ)

சூடிடு மங்குச பாசந் துணைவழி, கூடு மிருவளைக் கோலக் கைக் குண்டிகை, நாடு மிருபத நன்னெடு ருத்திர, மாடிடுஞ் சீர்புனை யாடக மாமே. (ருங)

ஆமயன் மாலர னீசன் சதாசிவன், றாமடி சூடிநின் றெய்தினர் தம்பதங், காமனுஞ் சாம னிரவி கனலுடன், சோமனும் வந்தடி சூடநின் றாளே. (ருச)

சூடுமிளம்பிறை சூலி கபாலினி, நீடு மிளங்கொடி நின்மலி நேரிழை, நாடி நடுவிடை ஞான முருவநின், றாடு மதன்வழி யண்ட முதல்வியே. (ருரு)

அண்ட முதலா யவனி பரியந்தங், கண்டதொன் றில்லை கணங்குழை யல்லது, கண்டனுங் கண்டியு மாகிய காரணங், குண்டிகை கோளிகை கண்டத றாலே. (ருசு)

ஆலமுண் டானமு தாங்கவர் தம்பகஞ், சாலவந் தெய்துந் தவத்தின்பந் தான்வருங், கோலிவந் தெய்துங் குவிந்த பகவையோ, டேலவந் தீண்டி யிருந்தனள் மேலே. (ருஎ)

மேலா மருந்தவ மேன்மேலும் வந்தெய்தக், காலால் வருந்திக் கழிவர் கணத்திடை, நாலா நளினநின் றேத்திநட் டுச்சிதன், மேலா மெழுத்தின ளாமத்தி றாளே. (ருஅ)

ஆமத் தினிதிருந் தன்ன மயத்தின, ளோமத்தி லேயு மொருத்தி பொருந்தின, ணம நமசிவ வென்றிருப் பார்க்கு, கேமத் துணைவி நிலாவிநின் றாளே. (ருகூ)

நிலாமய மாகிய நீள்படி கத்தின், சிலாமய மாகுஞ் செழுந்தர ளத்தின், சுலாமய மாகுஞ் சுரிகுழற் கோதை, கலாமய மாகக் கலந்துநின் றாளே. (சூ0)

கலந்துநின் றாள்கன்னி காதல னோடுங், கலந்துநின் றாளுயிர் கற்பனை யெல்லாங், கலந்துநின் றாள்கலை ஞானங்க ளெல்லாங், கலந்துநின் றாள்சன்னி காலமு மாயே. (சூக)

காலவி யெங்குங் கருத்த மருத்தியுங், கூலவி யொன்றுங் கூட விழைத்தனள், மாலினி மாகுலி மந்திர சண்டிகை பாலினி பாலவன் பாகம தாமே. (சூஉ)

பாகம் பராசத்தி பைம்பொன் சடைமுடி, யேக மிருதய மீரைந்து திண்புய, மோக முகமைந்து முக்கண் முகந்தொறு, நாக முரித்து நடஞ்செய்யு நாதர்க்கே (சூந)

நாதனு நாலொன் பதின்மருங் கூடிநின், றோதிடுங் கூட்டங்க ளோரைந் துளவவை, வேதனு மீரொன் பதின்மரு மேவநின், றுதியு மந்தமு மாகிநின் றாளே. (சூச)

ஆகின்ற நாள்கலை யைம்பத் தொருவர்க, ளாகிநின் றார்க
ளிலாருயி ராமவ, ளாகிநின் றாளுட னாகிய சக்கரத், தாகிநின்
றானவ னாயிழை பாடே. (௬௫)

ஆயிழை யாளொடு மாதிப் பரமிட, மாயதொ ரண்டமவை
யாறு மிரண்டுள, வாய மனந்தொ றறுமுக மவைதனி, லேய
வார் குழலி யினிதுநின் றாளே. (௬௬)

நின்றன ணேரிழை யோடுட னேர்பட, வின்றெ னகம்ப
டி யேழு முயிர்ப்பெய்துந், துன்றிய வோரொன் பதின்மரு
ஞ் சூழலு, மொன்றுயர் யோதி யுணர்ந்துநின் றாளே. (௬௭)

உணர்ந்தெழு மந்திர மோமெனு முள்ளே, மணந்தெழு
மாங்சதி யாகிய தாகுங், குணர்ந்தெழு சூதனுஞ் சூதியுங் கூ
டிக், கணந்தெழுங் காணுமக் காமுகை யாமே. (௬௮)

ஆமது வங்சியு மாதியு மீசனு, மாமது மண்டல மாருத
மாதியு, மேமது சேவன் சிகையங் கிருண்டிடக், கோமலர்க்
கோதையுங் கோதண்ட மாகுமே. (௬௯)

ஆகிய கோதண்டத் தாகு மனோன்மனி, யாகிப் வைம்பத்
துடனே யடங்கிடு, மாகும் பராபரை யோடப் பரையவ, ளா
கு மவளங் கருமத்தள் தானே. (௭௦)

தானிகழ் மோகினி சார்வான யோகினி, போன மயமு
டை யாரடி போற்றுவ, ரானவ ராவியி னாகிய வச்சிவந், தா
னும் பரசிவ மேலது தானே. (௭௧)

தானந்த மேலே தருஞ்சிகை தன்னுட, னானந்த மோகினி
யம்பொற் றிருவொடு, மோனையில் வைத்து மொழிதரு கூறது,
வானவை யோமெனு மவ்வுயிர் யார்க்கமே. (௭௨)

மாணிக்கங்க ளீன்ற மனோன்மனி மங்கலி, யாக்கு மறிய வ
ரியர் எவளாகும், வாக்கு மனமு மருவியொன் றய்விட்ட,
நோக்கும் பெருமைக்கு நுண்ணறி வாமே. (௭௩)

நுண்ணறி வாகு நுழைபுலன் மாந்தர்க்குப், பின்னறி வா கும் பிரானறி வத்தடஞ், சென்னெறி யாகுஞ் சிவகதி சேர்வா ர்க்குத், தன்னெறி யாவது சன்மார்க்க மாமே. (எ௪)

சன்மார்க்க மாகச் சமைதரு மார்க்கமுந்,துன்மார்க்க மா னவை யெல்லாந் துரந்திடு, நன்மார்க்கத் தேவரு நன்னெறி யாவதுஞ், சன்மார்க்கத் தேவியுஞ் சத்தியென் பாளே. (எரு)

சத்தியு நானுஞ் சயம்புவு மல்லது, முத்தியை யாரு முதல றி வாரில்லை, யத்திமேல் வித்திடி லத்தி யமுத்தக்கான், மத்தி யி லேற வழியது வாமே. (எசு)

அதுவிது வென்றவ மேகழியாதே, மதுவிரி பூங்குழன் ம ங்கைநல் லாளைப், பதிமது மேவிப் பணியவல் லார்க்கு, விதிவ ழி தன்னையும் வென்றிட லாமே. (எஎ)

வென்றிட லாகும் விதிவழி தன்னையும், வென்றிட லாகும் வினைப்பெரும் பாசத்தை, வென்றிட லாகும் விழைபுலன் றன் னையும், வென்றிடு மங்கைதன் மெய்யுணர் வோர்க்கே. (எஅ)

ஓரைம் பதின்மரு மொன்றியே நின்றது, பாரம் பரியத்து வந்த பரமிது, மாரங் குழலாளு மப்பதி தானுமுன், சாரும் ப தமிது சத்திய மாமே. (எகூ)

சத்தியி னோடு சயம்புவு நேர்படில், வித்தது வின்றியே யெல்லாம் விளைந்தன, வத்தகை யாகிய வைம்பத் தொருவரு ஞ், சித்தது மேவித் திருந்திடு வாரே. (அ0)

திருந்து சிவனுஞ் சிலைநுத லாளும், பொருந்திய வானவர் போற்றிசெய் தேத்த, வருந்திட வவ்விட மாரமு தாக, விருந் தன டானங் கிளம்பிறை யென்றே. (அக)

என்று மெழுகின்ற வேரினை யெய்தினர், தன்றூறது வாகு வர் தார்குழ லாளொடு, மன்றரு கங்கை மதியொடு மாதவர், துன்றிய தாரகை சோதிநின் றுளே. (அ௨)

நின்றன ணேரிழை யாளொடு நேர்பட, வொன்றிய வுள்ளொளி யாலே யுணர்ந்தது,சென்ற பிராணிகள் சிந்தையில் வேண்டிய, துன்றிடு ஞானங்க டோன்றிடுந் தானே. (அ௩)

தோன்றிடும் வேண்டுரு வாகிய தூய்நெறி, யீன்றிடு மாங்கவ ளெய்திய பல்கலை, மான்றடி சண்ணியு மாரணும் வந்தெதிர் சான்றது வாகுவர் தாமவ ளாயுமே. (அ௪)

ஆயு மறிவுங் கடந்தணு வாரணி, மாயமதாகி மனோமதி யாயிடுஞ், சேய வரிவை சிவானந்த சுந்தரி, நேயம தாநெறி யாகிநின் ருளே. (அ௫)

நெறியது வாய்நின்ற நேரிழை யாளைப், பிறிவது செய்யாது பிஞ்ஞக னோடுங், குறியது கூடிக் குறிக்கொண்டு நோக்கு, மறிவொடு மாங்கே யடங்கிட லாமே. (அ௬)

ஆமயன் மாலர னீசன்மா லாங்கதி, யோமய மாகிய வொன்பது மொன்றிடத், தேமய னுந் தெனுதென வென்றிடு, மாமய மானது வந்தெய்த லாமே. (அ௭)

வந்தடி போற்றுவர் வானவர் தானவ, ரிந்து முதலாக வெண்டிசை யோர்களுங், கொந்தணி யுங்குழ லாளொடு கோனையும், வந்தனை செய்யும் வழிநவில் வீரே. (அ௮)

நவிற்றுநன் மந்திர நன்மலர் தூபங், கவற்றிய கந்தங் கவர்ந்தெரி தீபம், பயிற்று முலகினிற் பார்ப்பதி பூசை, யவிக் கொண்ட சோதிக்கோ ரர்ச்சனை தானே, (அ௯)

தாங்கி யுலகிற் றரித்த பராபர, னோங்கிய காலத் தொருவ னுலப்பிலி, பூங்கிளி தங்கும் புரிகுழ லாளன்று, பாங்குடனேற்பப் பராசத்தி போற்றே. (௯௰)

பொற்கொடி மாதர் புனைகழ லேத்துவ, ரற்கொடி மாதுமை யார்வத்தலைமக, ணற்கொடி மாதை நயனங்கண் மூன்றுடை,விற்கொடி மாதை விரும்பி விளங்கே. (௯௧)

விளங்கொளி யாய விரிசுடர் மாலை, துளங்கு பராசத்தித் துங்கிரு ணீங்கக், களங்கொண் மணியுடன் காம விநோத, மு ளங்கொ ளிலம்பிய மொன்று துடரே. (கூஉ)

தொடங்கி யுலகினிற் சோதி மனுள, னடங்கி யிருப்பதென் னன்பின் பெருமை, விடங்கொள் பெருஞ்சடை மேல்வரு கங் கை யொடுங்கி யுமையொடு மோருரு வாமே. (கூங)

உருவம் பலவுயி ராய்வல்ல நந்தி, தெருவம் புகுந்தமை தேர்வுற நாடிற், புரிவளைக் கைச்சியெம் பொன்னணி மாதை, மருவி யிறையவன் மகிழ்வன மாயமே. (கூச)

மாயம் புணர்க்கும் வளர்சடை யானடி, தாயம் புணர்க்குஞ் சலநதி யமலனைக், காயம் புணர்க்குங் கலவியுண் மாசத்தி, யாயம் புணர்க்குமவ் வியோனியு மாமே. (கூரு)

உணர்ந்தொழிந் தேனவ னுமெங்க ளீசனைப், புணர்ந்தொழிந் தேன்புவ னுபதி யானை, யணைந்தொழிந் தேனெங்க ளாதிதன் பாதம், பிணைந்தொழிந் தேன்ற னருள்பெற்ற வாறே.()

பெற்றுள் பெருமை பெரிய மனோன்மனி, நற்று ளிறைவ னே நன்பய னேயென்பர், சற்று ணறியுங் கருத்தறி வார்கட்குப், பொற்று ளுலகம் புகல்தனி யாமே. (கூஎ)

தனிநா யகன்றனோ டென்னெஞ்ச நாடி, யினியா ரிருப்பிட மேழுலகென்பர், பனியான் மலர்ந்தபைம் போதுகை யேந்தி,கனியாய் நினைவதென் காரண மம்மையே. (கூஅ)

அம்மனை யம்மை யரிவை மனோன்மனி, செம்மனை செய்து திருமங்கை யாய்நிற்கு, மிம்மனை செய்த விந்நில மங்கையு, மம்மனை யாதி யமர்ந்துநின் றுளே. (கூகூ)

அம்மையு மத்தனு மன்புற்ற தல்லது, வம்மையு மத்தனு

மாறறி வாரென்னை, யம்மையொ டத்தனு மியானு முடனிருந்,
தம்மையொ டத்தனை யான்புரிந் தேனே. (க00) ஆ ௩௭க.

---

## ஏரொளிச்சக்கரம்.

ஏரொளி யுள்ளெழு தாமரை நாலிதழ், ஏழொளி விந்துவி
னெலெழு நாதமா, மேரொளி யக்கலை யெங்கு நிறைந்தபின்,
னேரொளிச் சக்கர மந்நடு வன்னியே, (க)

வன்னி யெழுத்தவை மாபல முள்ளன, வன்னி யெழுத்
தவை வானுற வோங்கின, வன்னி யெழுத்தவை மாபெருஞ் ச
க்கரம், வன்னி யெழுந்திடு வாறது சொல்லுமே. (உ)

சொல்லிய விந்துவு மீராறு நாதமாஞ், சொல்லிடு மப்பதி
யவ்வெழுத் தாவன, சொல்லிடு நூறொடு நாற்பத்து நாலுந்,
சொல்லிடு சக்கர மாய்வரு மேலதே. (௩)

மேல்வரும் விந்துவு மவ்வெழுத் தாய்விடு, மேல்வரு நா
தமு மோங்கு மெழுத்துடன், மேல்வரு மப்பதி யவ்வெழுத் தே
வரின், மேல்வருஞ் சக்கர மாய்வரு ஞாலமே. (௪)

ஞாலம தாக விரிந்தது சக்கர, ஞாலம தாய்விடும் விந்து
வு நாதமு, ஞாலம தாயிடு மப்பதி யோசனை, ஞாலம தாக வி
ரிந்த தெழுத்தே. (௫)

விரிந்த வெழுத்தது விந்துவு நாதமும், விரிந்த வெழுத்
தது சக்கர மாக, விரிந்த வெழுத்தது மேல்வரும் பூமி, விரிந்த
வெழுத்தினி லப்புற மப்பே. (௬)

அப்பது வாக விரிந்தது சக்கர, மப்பினி லப்புற மவ்வன
லாயிடு, மப்பினி லப்புற மாருத மாயெழ, வப்பினி லப்புற மா
காச மாமே. (௭)

ஆகாச வக்கர மாவது சொல்லிடி, லாகாச வக்கரத் து

ல்ளே யெழுத்தவை, யாகாச வவ்வெழுத் தாகிச் சிவானந்த, மாகாச வக்கர மாவ தறிமினே. (அ)

அறிந்திடு சக்கர மையஞ்சு விந்து, வறிந்திடுஞ் சக்கர நாத முதலா, வறிந்திடு மவ்வெழுத் தப்பதி யோர்க்கு, மறிந்திடு மப்பக லோனிலை யாமே. (கூ)

அம்முத லாறுமவ் வாதி யெழுத்தாகும், மம்முத லாறும வ் வம்மை யெழுத்தாகு, மம்முத ளுறு மிருநடு வன்னியே, யி ம்முத லாகு மெழுத்தவை யெல்லாம். (கo)

எழுத்தவை நூறொடு நாற்பத்து நாலு, மெழுத்தவை யா றது வந்நடு வன்னி, யெழுத்தவை யந்நடு வச்சுட ராகி, யெழு த்தவை தான்முத லந்தமு மாமே. (கக)

அந்தமு மீறு முதலான வையற, வந்தமு மப்பதி னெட் டுட னுதலா, லந்தமு மப்பதின் மூன்றி லமர்ந்தபி, னந்தமு மி ந்துகை யாருட மானதே. (கஉ)

ஆவின மானவை முந்நூற் றறுபது, மாவின மப்பதி னை ந்தின மாயுறு, மாவின மப்பதி னெட்டுட னுயுறு, மாவின ம க்கதி ரோன்வர வந்ததே. (கந)

வந்திடு மாகாச மாறது நாழிகை, வந்திடு மக்கர முப்பதி ராசியும், வந்திடு நாளது முந்நூற் றறுபதும், வந்திடு மாண்டு வகுத்தறை யவ்வியே. (கச)

அவ்வின மூன்றுமவ் வாடது வாய் வருங், கெவ்வின மூ ன்றுங் கிளர்தரு வேரதாஞ், செவ்வின மூன்றுந் தழைத்திடு ந் தண்டதா, மிவ்வின மூன்று மிராசிக ளெல்லாம். (கரு)

இராசியுட் சக்கர மெங்கு நிறைந்தபின், னிராசியுட் சக்கர மென் றறி விந்துவா, மிராசியுட் சக்கர நாதமு மொத்தபி, னி ராசியுட் சக்கர நின்றிடு மாறே. (கசு)

நின்றிடு விந்துவென் றுள்ள வெழுத்தெல்லா, நின்றிடு நா தமு மோங்கு மெழுத்துட, னின்றிடு மப்பதி யவ்வெழுத் தே

வரி, வின்றிடு மப்புரந் தாரகை யானதே. (கஎ)

தாரகை யாகச் சமைந்தது சக்கரந், தாரகை மேலோர் தழைத்தது பேரொளி, தாரகை சந்திர னற்பக லோன்வறத், தாரகை தாரகை தாரகை கண்டதே. (கஅ)

கண்டிடு சக்கரம் விந்து வளர்வதாங், கண்டிடு நாதமுந் தன்மே லெழுந்திடக், கண்டிடு வன்னிக் கொழுந்தன வொத்தபின், கண்டிடு மப்புறங் காரொளி யானதே. (ககூ)

காரொளி யண்டம் பொதிந்துல கெங்கும், பாரொளி நீரொளி சாரொளி காலொளி, வாரொளி யொக்க வளர்ந்து கிடந்தபின், னேரொளி யொன்றாய் நிறைந்தங்கு நின்றதே.

நின்றது வண்டமு நீளும் புவியெலா, நின்றவிவ் வண்ட நிலைபெறக் கண்டிட, நின்றவிவ் வண்டமு மூல மலமொக்கு, நின்றவிவ் வண்டம் பலமது விந்துவே. (உச)

விந்துவு நாதமு மொக்க விழுந்திடில், விந்துவு நாதமு மொக்க வினையதாம், விந்திற் குறைந்திடு நாத மெழுந்திடில், விந்துவை யெண்மடி கொண்டது வீசமே. (உஉ)

வீச மிரண்டுள நாதத் தெழுவன, வீசமு மொன்று விரைந்திடு மேலுற, வீசமு நாதமு மெழுந்துட னொத்தபின், வீசமும் விந்து விரிந்தது காணுமே. (உங)

விரிந்தது விந்துவுங் கெட்டது வீசம், விரிந்தது விந்துவு நாதத் தளவினில், விரிந்தது வுட்கட்ட வெட்டெட்டு மாகில், விரிந்தது விந்து வினையது வாமே. (உச)

வினையது விந்து விளைந்தன வெல்லாம், வினையது விந்து விளைந்த வுயிரும், வினையது விந்து விளைந்த விஞ்ஞானம், வினையது விந்து விளைந்தவன் றானே. (உரு)

விளைந்த வெழுத்தது விந்துவு நாதமும், விளைந்த வெழுத்தது சக்கர மாக, விளைந்த வெழுத்தவை மெய்யினி னிற்கு

ம், விளைந்த வெழுத்தவை மந்திர மாமே. (உசு)

மந்திர சக்கர மானவை சொல்லிடிற், றந்திரத் துள்ளெ ழு தோன்றெரி வட்டமாங், கந்தரத் துள்ளு மிரேகையி லொ ன்றில்லை, பந்தம தாகும் பிரணவ முன்னிடே. (உஎ)

உன்னிட்ட வட்டத்தி லொத்தெழு மந்திரம், பின்னிட்ட ரேகைப் பிழைப்பது தானில்லை, தன்னிட் டெழுந்த தகைப்ப றப் பின்னிற்கப், பன்னிட்ட மந்திரம் பார்க்கலு மாமே. (உஅ)

பார்க்கலு மாகும் பகையறு சக்கரங், காக்கலு மாகுங் கருத்திற் றடமெங்கு, நோக்கலு மாகு நுணக்கற்ற நுண்பொ ரு, ளாக்கலு மாகு மறிந்துகொள் வார்க்கே. (உகூ)

அறிந்திடுஞ் சக்கர மாதி யெழுத்து, விரிந்திடுஞ் சக்கர மேலெழுத் தம்மை, பரிந்திடுஞ் சக்கரம் பாரங்கி நாலும், கு விந்திடுஞ் சக்கரங் கூறலு மாமே. (௩0)

கூறிய சக்கரத் துள்ளெழு மந்திர, மாறிபல் பாக வமை ந்து விரிந்திடுந், தேறிய வஞ்சுடன் சேர்ந்தெழு மாரண, மாறி யல் பாக மதித்துக்கொள் வார்க்கே. (௩க)

மதித்திடு மம்மையு மாமாது மாகு, மதித்திடு மம்மையு ம ங்கன லொக்கு, மதித்தங் கெழுந்தவை காரண மாகில், கொ தித்தங் கெழுந்தவை கட்டகி லாவே. (௩உ)

கட்டிய தம்பன மாரண வசிய, மாடியல் பாக வமைந்து செறிந்திடும், பாடியுள் ளாகப் பகைவரும் வந்துறுந், தேடி யுள் ளாகத் தெளிந்துகொள் வார்க்கே. (௩௩)

தெளிந்திடுஞ் சக்கர மூலத்தி னுள்ளே, யளிந்த வகாரத் தை யந்நடு வாக்கிக், குளிந்த வரவினைக் கூடியுள் வைத்து, வ ளிந்தவை யங்கெழு நாடிய காலே. (௩ச)

காலரை முக்கான் முழுதெனு மந்திர, மாலித் தெழுந்த மைந் தூறி யெழுந்ததாய்ப், பாலித் தெழுந்து பகையற நின்ற

பின், மாலுற்ற மந்திர மாறிக்கொள் வார்க்கே. (ரு௫)

கொண்டவிம் மந்திரங் கூத்த னெழுத்ததாய்ப், பண்டையுணர்விற் பகையற விண்டபின், மன்று ணிறைந்த மணிவிளக்காயிடு, மின்று மிதயத் தெழுந்த நமவெனே. (ருசு) ஆ ௪௰௭.

## வயிரவச் சக்கரம்.

அறிந்த பிரதமை யோடாறு மறிஞ்ச, வறிந்தவச் சத்தமி மேலிவை குற்ற, மறிந்தவை யொன்றுவிட் டொன்றுபத் தாக, வறிந்து வலமது வாக நடவே. (க)

நடந்த வயிரவன் சூலகபாலி, கடந்து பகைவனைக் கண்ணது போக்கித், துடர்ந்த வுயிரது வுண்ணும் பொழுது, படர்ந்த வுடல்கொடு பந்தாட லாமே. (உ)

ஆமேவப் பூண்டரு ளாதி வயிரவ, னாமே கபாலமுஞ் சூலமுங் கைக்கொண்டங், காமே தமருக பாசமுங் கையது, வாமே சிரத்தொடு வாளது கையே. (ரு)

கையது வாறுங் கருத்துற நோக்கிடு, மெய்யது செம்மை விளங்கு வயிரவன், றுய்ய ருளத்திற் றுளங்குமெய் யுற்றதாய்ப், பொய்வகை விட்டுநீ பூசனை செய்யே. (ச)

பூசனை செய்யப் பொருந்தியோ ராயிரம், பூசனை செய்யு மதவுட னுடுமா, பூசனை சாந்து சவாது புழுகுநெய், பூசனை செய்துநீர் பூசலை வேண்டுமே. (ரு)

வேண்டிய வாறு கலசமு மாயிடும், வேண்டிய வாறினுன் மெய்யது பெற்றபின், வேண்டிய வாறு வரும்வழி நீநட, வேண்டிய வாறது வாகுங் கருத்தே. (சு)　　ஆ ௪௰ரு.

## சாம்பவிமண்டலச்சக்கரம்.

*சாம்பவி மண்டலச் சக்கரஞ் சொல்லிடி, லாம்பத மெட்டாக விட்டிடின் மேலதாங், காண்பதந் தத்துவ நாலு னைய

னமு, நாம்பதங் கண்டபி னுடறிந் தோமே. (க)

நாடறி மண்டல நல்லவிக் குண்டத்துக், கோடற வீதி யுங் கொடர்ந்துள் ளிரண்டழி, பாடறி பத்துட னாறு நடுவீதி, யேடற நாலுந் திடவகை யாமே. (உ)

நாலுந் திடவகை யுள்ளதோர் மண்டல, நாலுநல் வீதியு ணல்ல விலிங்கமாய், நாலுநற் கோணமு நந்நா விலிங்கமாய், நாலுநற் பூநடு நண்ணலவ் வாறே. (ந)

ஆறிரு பத்துநா லஞ்செழுத் தஞ்சையும், வேறுரு வாக விளைந்து கிடந்தது, தேறுநி ரும்மில் சிவாய நமவென்று, கூறு மின் கூறிற் குறைகளு மில்லையே. (ச)

குறைவது மில்லை குரைகழற் கூடு, மறைவது மாரண மவ் வெழுத் தாகித், திறமது வாகத் வெளியவல் லார்க்கு, விறவி ல்லை யென்றென் றியம்பினர் காணே. (ரு)

காணும் பொருளுங் கருதிய தெய்வமும், பேணும் பதியும் பெருகிய தீர்த்தமு, மூணு முணர்வு முறக்கமுந் தானாகக், கா ணுங் கனகமுங் காரிகை யாமே. (சு)

ஆமே யெழுத்தஞ்சு மாம்வழி யேயாகப், போமே யது தானும் போம்வழி யேபோனு, ளாமே நினைத்தன செய்யலு மா குமப், பார்மே லொருவர் பகையில்லை தானே. (எ)

பகையில்லை யென்றும் பணிந்தவர் தம்பா, னகையில்லை காணு நன்மைக ளாகும், வினையில்லை யென்றும் விருத்தமு மி ல்லை, தகைவில்லை தானுஞ் சலமது வாமே. (அ)

ஆரு முரைசெய்ய லாமஞ் செழுத்தாலே, யாரு மறியாத வானந்த ரூபமாம், பாரும் விசும்பும் பகலு மதியதி, யூனு மு யிரு முணர்வது வாமே. (க)

உணர்ந்தெழு மந்திர மோமெனு முள்ளே, யணைந்தெழு

மாங்கத நாதிய தாகும், குணர்ந்தெழு சூதனுஞ் சூதியுங் கூடிக், கணந்தெழுங் காணுமக் காமுகை யாலே. (௪௦) ஆ சஉ௩.

---

புவனாபதிசக்கரம்.

சகராதி யோரைந்துங் காணிய பொன்மை, யகராதியோ ராறரத்தமே போலுஞ், சகராதி யோர்நாலருந் தான்சுத்த வெண்மை, ககராதி மூவித்தை காமிய முத்தியே. (௧)

ஒரி லிதுவே யுரையுமித் தெய்வத்தைத், தேரிற் பிறிதில்லை யாதென்று செப்பக்கேள், வாரித் திரிகோண மனமின்ப முத்தியுந், தேரி லறியுஞ் சிவகாயந் தானே. (௨)

ஏக பராசத்தி யீசற்கா மங்சமே, யாகம் பராவித்தை யா முத்தி சித்தியே, யேகம் பராசத்தி யாகச் சிவகுரு, யோகம் பராசத்தி யுண்மையெட் டாமே. (௩)

எட்டாகிய சித்தி யெட்டாகும் யோகத்துக், கட்டாகு நாதாந்தத் தெட்டுங் கலப்பித்த, தொட்டாத விந்துவுந் தானற் றெழுந்தது, கிட்டா தொழிந்தது கீழான மூடர்கே. (௪)

ஏதும் பலமா மியந்திரா சன்னடி, யோதிக் குருவி னுபதேச முட்கொண்டு, நீதங்கு மங்கநி யாசந் தனைப்பண்ணிச், சாதங் கெடச்செம்பிற் சட்கோணந் தானிடே. (௫)

சட்கோணந் தன்னில் ஸ்ரீம்ஹ்ரீம் தானிட்டு, வட்கோண மாறின் றலையில்ரீங் காரமிட், டெக்கோணமுஞ்சூழ வெழில்வட்ட மிட்டுப்பின், மிக்கிரெட் டக்கர மம்முதன் மேலிடே. ()

இட்ட விதழ்க ளிடையந் தரத்திலே, யட்டஹவ் விட்ட தின் மேலே யுவ்விட்டுக், கிட்ட விதழ்களின் மேலே கிரோம்சிரோ, மிட்டு வாமத்தாங் கிரோங்கென்று மேவிடே. (எ)

மேவிய சக்கர மீது வலத்திலே, கோவை யடைவே குரோங்சிரோங் கென்றிட்டுத், தாவில் ரீங்காரத்தாற் சக்கரஞ்

சூழ்ந்து, பூவைப் புவனா பதியைப்பின் பூசியே. (அ)

பூசிக்கும் போது புவனா பதிதன்னை, யாசற் றகத்தினி லாவா கநம்பண்ணிப், பேசிப் பிராணைப் பிரதிட்டை யதுசெய்து, தேசுற் றிடவே தியாந மதுசெய்யே. (கூ)

செய்ய திருமேனி செம்பட் டுடைதானுங், கையிற் படையங் குசபாசத் தோடபய, மெய்யி லணிகல மிரத்தின மாமேனி, துய்ய முடியும வயவத்திற் றேற்றமே. (கo)

தோற்போர்வை நீக்கித் துதித்தடைவிற் பூசித்துப், பாற்போ னகமந்தி ரத்தாற் பயின்றேத்தி, நாற்பால நாரதா யாசுவாகா வென்று,சீர்ப்பாகச் சேடத்தை மாற்றிப்பின் சேவியே.

சேவிப்ப தன்முன்னே தேவியையுத் வாகனத்தார், பாவித் திதய கமலம் பதிவித்தங், கியாவர்க்கு மெட்டா வியந்திர ராசனை, நீவைத்துச் சேவி நினைந்தது தருமே. (கஉ)

ஆகூ சகூரு.

---

## நவாக்கரி சக்கரம்.

நவாக்கரி சக்கர நானுரை செய்யி, னவாக்கரி யொன்று நவாக்கரி யாக, நவாக்கரி யெண்பத் தொருவகை யாக, நவாக்கரி யக்கிலீ சௌமுத லீறே. (க)

சௌமுத லவ்வொடு ஹௌவுட ஞங்கிரீம், கௌவுஞை மையுஞங் கலந்திரீம் சிரீமென், ரெவ்வி லெழுங்கிலீ மந்திர பாதமாச், செவ்வு ளெழுந்து சிவாய நமவென்னே. (உ)

நவாக்கரி யாவது நானறி வித்தை, நவாக்கரி யுள்ளொழு நன்மைக ளெல்லா, நவாக்கரி மந்திர நாவுளே யோத, நவாக்கரி சத்தி நலந்தருந் தானே. (கூ)

நலந்தரு ஞானமுங் கல்வியு மெல்லா, முரந்தரு வல்வினை யும்மைவிட் டோடுஞ், சிரந்தரு தீவினை செய்வ தகற்றி, வரந்தரு சோதியும் வாய்த்திடுங் காணே. (ச)

கண்டிடுஞ் சக்கரம் வெள்ளிபொன் செம்பிடை, கொண்டிடு முள்ளே குறித்த வினைகளை, வென்றிடு மண்டலம் வெற்றி தருவிக்கு, நின்றிடுஞ் சக்கர நினைக்கு மளவே (௫)

நினைத்திடு மச்சிரீ மக்கிலீ பீரு, நினைத்திடுஞ் சக்கர மாதியு பீறு, நினைத்திடு நெல்லொடு புல்லினை யுள்ளே, நினைத்திடு மர்ச்சனை நேர்தரு வாளே. (௬)

நேர்தரு மத்திரு நாயகி யானவள், யாதொரு வண்ண மறிந்திடும் பொற்பூவை, கார்தரு வண்ணங் கருதின கைவரு, நார்தரு வண்ண நடந்திடு நீயே. (௭)

நடந்திடும் பாரினி னன்மைக ளெல்லாங், கடந்திடுங் காலனு மெண்ணிய நாளும், படர்ந்திடு நாமமும் பாய்கதிர் போல, வடைந்திடு வண்ண மடைந்திடு நீயே. (௮)

அடைந்திடும் பொன்வெள்ளி கல்லுட னெல்லா, மடைந்திடு மாதி யருளுந் திருவு, மடைந்திடு மண்டத் தமரர்கள் வாழ்வு, மடைந்திடும் வண்ண மறிந்திடு நீயே. (௯)

அறிந்திடு வார்க ளமரர்க ளாகத், தெரிந்திடு வானோர் தேவர்கள் தேவன், பரிந்திடும் யானவன் பாய்புனல் சூடி, முரிந்திடு வானை முயன்றிடு நீரே. (௧0)

நீர்பணி சக்கரம் நேர்தரு வண்ணங்கள், பாரணி யும்ஹிரீ மூன்ஸ்ரீ பீருங், தாரணி யுர்புகழ்த் தையனல் லாடனைக், காரணி யும்பொழிற் கண்டுகொ ளீரே. (௧௧)

கண்டுகொ ளுந்தனி நாயகி தன்னையு, மொண்டுகொ ளும்முக வசியம தாயிடும், பண்டுகொ ளும்பர மாய பரஞ்சுடர், நின்றுகொ ளும்நிலை பேறுடை யாளையே. (௧௨)

பேறுடை யாடன் பெருமையை யெண்ணிடி, லூறுடை யார்சனு நம்வச மாயிடு, மாறுடை யார்களும் வாழ்வது தானில்லை, கூறுடை யாளையுங் கூறுமி னீரே. (௧௩)

கூறுமி னெட்டுத் திசைக்குந் தலைவனை, யாறுமி னண்டத் தமரர்கள் வாழ்வென, மாறுமின் வையம் வரும்வழி தன்னையுந், தேறுமின் னாயகி சேவடி சேர்ந்தே. (௧௪)

சேவடி சேரச் செறிய விருந்தவர், நாவடி யுள்ளே நவின்றுநின் றேத்துவர், பூவடி யிட்டுப் பொலிய விருந்தவர், மாவடி காணும் வகையறி வாரே. (௧௫)

ஐம்முத லாக வளர்ந்தெழு சக்கரம், மைம்முத லாக வமர்ந்திரீ மீருகு, மம்முத லாகி யவர்க்குடை யாடனை, மைம்முத லாக வழுத்திடு நீயே. (௧௬)

வழுத்திடு நாவுக் கரசிவ டன்னைப், பகுத்திடும் வேதமெய் யாகம மெல்லாந், தொகுத்தொரு நாவினை சொல்லவல் லாளை, முகத்துளு முன்னெழக் கண்டுகொ ளீரே. (௧௭)

கண்டவிச் சக்கர நாவி லெழுதிடிற், கொண்டவிம் மந்திரங் கூத்தன் குறியதா, மன்றினுள் வித்தையு மானுடர் கையதாய், வென்றிடும் வையக மெல்லியல் மேவியே. (௧௮)

மெல்லிய லாகிய மெய்ப்பொரு ளாடனைச், சொல்லிய லாலே தொடர்ந்தங் கிருந்திடும், பல்லியல் பாகப் பரந்தெழு நாட்பல, நல்லியல் பாலே நடந்திடும் தானே. (௧௯)

நடந்திடு நாவினு ணன்மைக ளெல்லாந், றுடர்ந்திடுஞ் சொல்லொடு சொற்பொரு டானுங், கடந்திடுங் கல்விக் கரசிவ ளாகப், படர்ந்திடும் பாரிற் பகையில்லை தானே. (௨௦)

பகையில்லை கௌமுத லையது வீரு, நகையில்லை சக்கர நல்லறி வார்க்கு, மிகையில்லை சொல்லிய பல்லுரு வெல்லாம், வகையில்லை யாக வணங்கிடுந் தானே. (௨௧)

வணங்கிடுந் தத்துவ நாயகி தன்னை, நலங்கிடு நல்லுயி ரானவை யெல்லாங், கலங்கிடுங் காம வெகுளி மயக்கந், துடங்கிடுஞ் சொல்லிய சூழ்வினை தானே. (௨௨)

தானே கழறித் தணியவும் வல்லனாய்த், தானே நினைத்த வை சொல்லவும் வல்லனாய்த், தானே தனிநடங் கண்டவ டன்னையுந், தானே வணங்கித் தலைவனு மாமே. (உரு)

ஆமே யனைத்துயி ராகிய வம்மையுந், தாமே சகலமு மின் றவத் தையனு, மாமே யவ்வடி போற்றி வணங்கிடிற், போமே வினைகளும் புண்ணிய னாகுமே. (உச)

புண்ணிய னாகிப் பொருந்தி யுலகெங்குங், கண்ணிய னாகிக் கலந்தங் கிருந்திடுந், தண்ணிய னாகித் தரணி முழுதுக்கு: ம ண்ணிய னாக வமர்ந்திருந் தானே. (உரு)

தானது கிரீம் கௌவது வீரு, நானது சக்கர நன்றறிவா ர்க் கெலாங், கானது கன்னி கலந்த பாராசத்தி, கேளது வை யங் கிளரொளி யானதே. (உசு)

ஒளிக்கும் பராசத்தி யுள்ளே யமரிற், களிக்குமிச் சிந்தை யிற் காரணங் காட்டித், தெளிக்கு மழையுடன் செல்வ முண்டா க்கு, மளிக்கு மிவளை யறிந்துகொள் வார்க்கே. (உஎ)

அறிந்திடுஞ் சக்கர மர்ச்சனை யோடே, வெறிந்திடும் வை யத் திடரவை காணல், மறிந்திடு மன்னனும் வந்தனை செய்யு ம், பொறிந்திடுஞ் சிந்தை புகையில்லை தானே. (உஅ)

புகையில்லை சொல்லிய பொன்னொளி யுண்டாங், குகை யில்லை கொல்வ திலாமையி னாலே, வகையில்லை வாழ்கின்ற ம ன்னுயிர்க் கெல்லாஞ், சிகையில்லை சக்கரஞ்சேர்ந்தவர் தாமே.

சேர்ந்தவ ரென்றுந் திசையொளி யானவர், காய்ந்தெழு மேல்வினை காணகி லாதவர், பாய்ந்தெழு முள்ளொளி பாரிற் பரந்தது, மாய்ந்தது காரிருள் மாறொளி தானே. (ரு௦)

ஒளியது ஹௌமுன் கிரீமது வீருங், களியது சக்கரங்க ண்டறி வார்க்குத், தெளிவது ஞானமுஞ் சிந்தையுந் தேறப், ப ணிவது பஞ்சாக் கரமது வாமே. (ருக)

ஆமே சதாசிவ நாயகி யானவ, ளாமே யகோரமுகத் தி ள்ளறி வானவ, ளாமே சுவையொளி யூருசை கண்டவ, ளா மே யனைத்துயிர் தன்னுளு மாமே. (௩உ)

தன்னுளு மாகித் தரணி முழுதுங்கொண், டென்னுளு மா கி யிடம்பெற நின்றவள், மண்ணுளு நீரனல் காலுளும் வானு ளுங், கண்ணுளு மெய்யுளுங் காணலு மாமே. (௩௩)

காணலு மாகுங் கலந்துயிர் செய்வன, காணலு மாகுங் கருத்து ளிருந்திடிற், காணலு மாகுங் கலந்து வழிசெயக், காணலு மாகுங் கருத்துற நில்லே. (௩௪)

நின்றிடு மேழு புவனமு மொன்ருக், கண்டிடு முள்ளங் கலந்தெங்குந் தாளுகக், கொண்டிடு வையங் குணம்பல த ன்னையும், விண்டிடும் வல்வினை மெய்ப்பொரு ளாகுமே. (௩௫)

மெய்ப் பொருளௌமுதல் ஹௌவது வீருக், கைப்பொ ருளாகக் கலந்தெழு சக்கரந், தற்பொரு ளாகச்சமைந்தமு தேஸ்வரி, நற்பொரு ளாக நடுவிருந் தாளே. (௩௬)

தாள்தி னுள்ளே சமைந்தமு தேஸ்வரி, காலது கொண்டு கலந்துற வீசிடில், நாளது நாளும் புதுமைகள் கண்டபின், கே ளது காயமுங் கேடில்லை காணுமே. (௩௭)

கேடில்லை காணுங் கிளரொளி கண்டபின், ஞடில்லை கா ணு நாண்முத லற்றபின், மாடில்லை காணும் வரும்வழி கண்ட பின, காடில்லை காணுங் கருத்துற் றிடத்துக்கே. (௩௮)

உற்றிட மெல்லா முலப்பில்பா ழாக்கிக், கற்றிட மெல்லா ங் கடுவெளி யானது, மற்றிட மில்லை வழியில்லை தானில்லை, ச ற்றிட மில்லை சலிப்பற நின்றிடே. (௩௯)

நின்றிடு மேழ்கடலேழ்புவி யெல்லா, நின்றிடு முள்ள நி னைத்தவை தானெருக்கு, நின்றிடுஞ் சத்தி நிலைபெறக் கண்டிட

நின்றிடு மேலை விளக்கொளி தானே. (௪0)

விளக்கொளி சௌமுத லௌவது வீரு, விளக்கொளி சக்கர மெய்ப்பொரு ளாகும், விளக்கொளி யாகிய மின்கொடியாளை, விளக்கொளி யாகி விளங்கிடு நீயே. (௪௧)

விளங்கிடு மேல்வரு மெய்ப்பொருள் சொல்லில், விளங்கிடு மெல்லிய லானது வாகும், விளங்கிடு மெய்ந்நின்ற ஞானப் பொருளை, விளங்கிடு வார்கள் விளங்கினர் தானே. (௪௨)

தானே வெளியென வெங்கு நிறைந்தவ, டானே பரம வெளியது வானவ, டானே சகலமு மாகி யழித்தவ, டானே யனைத்துள வண்ட சகலமே. (௪௩)

அண்டத்தி னுள்ளே யளப்பரி தானவள், பிண்டத்தி னுள்ளே பெருவெளி கண்டவள், குண்டத்தி னுள்ளே குணம்பல காணிலுங், கண்டத்தி னின்ற கலப்பறி யார்களே. (௪௪)

கலப்பறி யார்கடல் சூழுல கெல்லா, முலப்பறி யாருட லோடுயிர் தன்னைச் சிலப்பறி யார்சில தேவரை நாடித், தலைப்பறி யாகச் சமைந்தவர் தானே. (௪௫)

தானே யெழுந்தவச் சக்கரஞ் சொல்லிடின், மானே மதிவரை பத்திட்டு வைத்தபின், றேனே யிரேகை திகைப்பற வொண்டதிற், ருனே கலந்த வரையெண்பத் தொன்றுமே. (௪௬)

ஒன்றிய சக்கர மோதிடும் வேளையில், வென்றிகொண் மேனி மதிவட்டம் பொன்மையாங், கன்றிய ரேகை கலந்திடுஞ் செம்மையி, லென்றிய லம்மை யெழுத்தவை பச்சையே. (௪௭)

ஏய்ந்த மரவுரி தன்னி லெழுதிய, வாய்ந்தவிப் பெண்ணெண்பத் தொன்றில் நிரைத்தபின், காய்ந்தவி நெய்யெட் கலந்திட நேமமு, மாந்தலத் தாமுயி ராகுதி பண்ணுமே. (௪௮)

பண்ணிய பொன்னைப் பரப்பற நீபிடி, யெண்ணிய நாட்

களி லின்பமு மெய்திடு, நண்ணிய நாமமு நான்முக னொத்தி
பின், றுண்ணென நேயநற் சேர்க்கலு மாகுமே, (சக)

ஆகின்ற சந்தநங் குங்குமங் கத்தூரி, போகின்ற சாந்து
சவாது புழுகுநெ, யாகின்ற கற்பூர மாகோ சனநீருஞ், சேர்
கின்ற வொன்பதுஞ் சேரநீ வைத்திடே. (ருo)

வைத்திடும் பொன்னுடன் மாதவ நோக்கிடிற், கைச்சிறு
கொங்கை கலந்தெழு கன்னியைத், தச்சிது வாகச் சமைந்த
விம் மந்திர, மர்ச்சனை யாயிர மாயிரஞ் சிந்தியே. (ருக)

சிந்தையி னுள்ளே திகழ்தரு சோதியா, வெந்தை கரங்க
ளிருமூன்று முள்ளது, பந்தமா சூலம் படைபாசம் வில்லம்பு,
முந்தகி லீமெழ முன்னிரு தாளே. (ருஉ)

இருந்தனர் சத்திக ளறுபத்து நால்வ, ரிருந்தனர் கன்னிக
ளெண்வகை யெண்ம, ரிருந்தனர் சூழ வெதிர்சக் கரத்தே, யி
ருந்த கரமிரு வில்லம்பு கொண்டே. (ருங)

கொண்ட கனகங் குழைமுடி யாடையாய்க், கண்டவிம்
முத்தங் கனல்திரு மேனியாய்ப், பண்டமர் சோதிப் படிக
மானவ, ளுண்டங் கொருத்தி யுணரவல் லாருக்கே. (ருச)

உணர்ந்திருந் துள்ளே யொருத்தியை நோக்கிற், கலந்திருந்
தெங்குங் கருணை பொழியு, மணங்தெழு மோசை யொளியது
காணுந், தணந்தெழு சக்கரந் தான்றரு வாளே. (ருரு)

தருவழி யாகிய தத்துவ ஞானங், குருவழி யாகுங் குண
ங்களு ணின்று, கருவழி யாகுங் கணக்கை யறுத்துப், பெருவ
ழி யாக்கும் பேரொளி தானே. (ருசு)

பேரொளி யாய பெரிய பெருஞ்சுடர், சீரொளி யாகித்
திகழ்தரு நாயகி, காரொளி யாகிய கன்னிகை பொன்னிறம்,
பாரொளி யாகப் பரந்துநின் றாளே. (ருஎ)

பரந்த கரமிரு பங்கய மேந்திக், குவிந்த கரமிரு கொய்த

கிர்ப்பாணி, பரிந்தருள் கொங்கைகண் முத்தார் பவள, மிரு ந்தநல் லாடை மணிபொருந் தன்றே. (ருஅ)

மணிமுடி பாதஞ் சிலம்பணி மங்கை, பணிபவ ளன்றி யரு ளில்லை யாகுந், தணிபவர் நெஞ்சினுட் டன்னரு ளாகிப், பணிப வர்க் கன்றே பரகதி யாமே. (ருக)

பரந்திருந் துள்ளே யறுபது சத்தி, கரந்தன கன்னிக ளப் படி சூழ, மலர்ந்திரு கையின் மலரவை யேந்திச், சிறந்தவ ரேத்துஞ் சிரீம்தன மாமே. (கூ௦)

தனமது வாகிய தையலை நோக்கி, மனமது வோடி மரிக் கிலோ ராண்டிற், கனமிவை யற்றுக் கருதிய நெஞ்சந், தினகர ருறிட செய்திய தாமே. (கூக)

ஆகின்ற மூலத் தெழுந்த முழுமலர், போகின்ற பேரொ ளியாய மலர்த்தாய், போகின்ற பூரண மாக நிறைந்தபின், சேர்கின்ற செந்தழன் மண்டல மானதே. (கூஉ)

ஆகின்ற மண்டலத் துள்ளே யமர்ந்தவ, ளாகின்ற வைம்ப த் தறுவகை யானவ, ளாகின்ற வைம்பத் தறுசத்தி நேர்தரு, வாகின்ற வைம்பத் தறுவகை சூழவே. (கூங)

சூழ்ந்தெழு சோதி சுடர்முடி பாதமா, யாங்கணி முத்த மழகிய மேனியுந், தாங்கிய கையவை தார்கிளி ஞானமா, யேந் து கரங்க ளொடுத்தமர் பாசமே. (கூச)

பாசம தாகிய வேரை யறுத்திட்டு, நேசம தாக நினைந்தி ரு முழுமுளே, நாசம தெல்லா நடந்திடு மையாண்டிற், காசினி மேலமர் கண்ணுத லாகுமே. (கூரு)

கண்ணுடை நாயகி தன்னரு ளாம்வழி, பண்ணுறு நாதம் பகையற நின்றிடில், விண்ணமர் சோதி விளங்க ஹிரீங்கார, மண்ணுடை நாயகி மண்டல மாகுமே. (கூகூ)

மண்டலத் துள்ளே மலர்ந்தெழு தீபத்தைக், கண்டகத்

துள்ளே கருதி யிருந்திடும், விண்டகத் துள்ளே விளங்கி வருத லாற், றண்டகத் துள்ளவை தாங்கலு மாமே. (சுஎ)

தாங்கிய நாபித் தடமலர் மண்டலத், தோங்கி யெழுங்க லைக் குள்ளுணர் வானவ, ளோங்க வரும்பிறப் பெண்ணி யறுத் திட, வாங்கிய நாதம் வலியுட னுகுமே. (சுஅ)

நாவுக்கு நாயகி நன்மணி பூணாரம், பூவுக்கு நாயகி பொ ன்முடி யாடையாம், பாவுக்கு நாயகி பாலொத்த வண்ணத்தா, ளாவுக்கு நாயகி யங்கமர்ந் தாளே. (சுக)

அன்றிரு கையி லளந்த பொருண்முறை, யின்றிரு கையி லெடுத்தவெண் குண்டிகை, மன்றது காணும் வழியது வாகவே, கண்டங் கிருந்தவர் காரணி காணுமே. (எ0)

காரணி சத்திக ளைம்பத் திரண்டெனக், காரணி கன்னிக ளைம்பத் திருவராய்க், காரணி சக்கரத் துள்ளே கரந்தெங்கும், காரணி தன்னரு ளாகிநின் றுளே. (எக)

நின்றவிச் சத்தி நிலைபெற நின்றிடிற், கண்டவிவ் வன்னி கலந்திடு மோராண்டிற், கொண்ட விரதநீர் குன்றும னின்றி டின், மன்றினி லாடு மணியது காணுமே. (எஉ)

கண்டவிச் சத்தி யிருதய பங்கயங், கொண்டவித் தத்து வ நாயகி யானவள், பண்டையவ் வாயுப் பகையை யறுத்திட, வின்றென் மனத்து ளினிதிருந் தாளே. (எங)

இருந்தவிச் சத்தி யிருநாலு கையிற், பரந்தவிப் பூங்கிளி பாச மழுவாள், கரந்திடு கேடகம் வில்லம்பு கொண்டங், குரந்தங் கிருந்தவள் கூத்துகந் தாளே. (எச)

உகந்தனள் பொன்முடி முத்தார மாகப், பரந்த பவள மும் பட்டாடை சாத்தி, மலர்ந்தெழு கொங்கை மணிக்கச் சணிந்து, தழைந்தங் கிருந்தவ டான்பச்சை யாமே. (எரு)

பச்சை யிவளுக்குப் பாங்கிமா ராறெட்டு, கொச்சையா

ரெண்மர்கள் கூடி வருதலார், கச்சணி கொங்கைகள் கையிரு காப்பதா, யெச்ச விடைச்சி யினிதிருந் தாளே. (எசு)

தாளதி னுள்ளே தாங்கிய சோதியைக், காலது வாகக் க லந்துகொள் ளென்று, மாலது வாக வழிபாடு செய்துநீ, பால து போலப் பரந்தெழு விண்ணிலே. (எ௭)

விண்ணமர் நாபி யிருதய மாங்கிடைக், கண்ணமர் கூப ங் கலந்து வருதலாற், பண்ணமர்ந் தாதித்த மண்டல மான து, தண்ணமர் கூபந் தழைத்தது காணுமே. (எஅ)

கூபத்துச் சத்தி குளிர்முகம் பத்துள், தாபத்துச் சத்தித் தயங்கி வருதலா, லாபத்துக் கைக ளடைந்தன நாலைந்து, பா ச மறுக்கப் பரந்தன சூலமே. (எகூ)

சூலந்தண் டொள்வாள் சுடர்பறை ஞானமாய், வேலம் பு தமருக மாகிளி விற்கொண்டு,காலம்பூப் பாச மழுகத்தி கைக் கொண்டு, கோலஞ்சேர் சங்கு குவிந்தகை யெண்ணதே. (அ௦)

எண்ணமர் சத்திக ளெற்பத்து நாலுட,னெண்ணமர் சத்தி க ளெற்பத்து நால்வரா, மெண்ணிய பூவித முள்ளே யிருந்தவ, ளெண்ணிய வெண்ணங் கடந்துநின் றாளே. (அக)

கடந்தவள் பொன்முடி மாணிக்கத் தோடு, தொடர்ந்த ணி முத்து பவளங்கச் சாகப், படர்ந்தல்குற் பட்டாடை பா தச் சிலம்பு, மடந்தை சிறியவள் வந்துநின் றாளே. (அ௨)

நின்றவிச் சத்தி நிரந்தர மாகவே, கண்டிடு மேரு வணி மாகி தானுகிப், பண்டைய வானின் பகட்டை யறுத்திட, வொ ன்றிய தீப முணர்ந்தார்க்குண் டாமே, (அ௩)

உண்டோ ரதோமுக முத்தம மானது, கண்டவிச் சத்தி சதாசிவ நாயகி, கொண்ட முகமைந்து கூறுங் கரங்களு, மொ ன்றிரண் டாகவே மூன்றுநா லானதே. (அச)

நன்மணி சூலங் கபாலங் கிளியுடன், பன்மணி நாக மழு கத்தி பந்தாகுங், கன்மணி தாமரைக் கையிற் றமருகம், பொன்மணி பூணாரம் பூசனை யானதே. (அரு)

பூசனை சத்திக ளெண்ணைவர் சூழவே, நேசவள் கன்னிக ளொற்பத்து நேரதாய்க், காசினி சக்கரத் துள்ளே கலந்தவள், மாசடை யாமன் மகிழ்ந்திருந் தார்களே. (அசு)

தாரத்தி னுள்ளே தங்கிய சோதியைப், பாரத்தி னுள்ளே பரந்து ளெழுந்திட, வேரது வொன்றிநின் றெண்ணு மனோமயங், காரது போலக் கலந்தெழு மண்ணிலே. (அஎ)

மண்ணி லெழுந்த அகார உகாரங்கள், விண்ணி லெழுந்து சிவாய நமவென்று, கண்ணி லெழுந்தது காண்பரி தன்று கொல், கண்ணி லெழுந்தது காட்சி தரவென்றே. (அஅ)

என்றங் கிருந்த வமுத கலையிடை, சென்றங் கிருந்த வமுத பயோதரி, கண்டங் கரமிரு வெள்ளிபொன் மண்ணடை, கொண்டங் கிருந்தது வண்ண மமுதே. (அகூ)

அமுதம தாக வழகிய மேனி, படிகம தாகப் பரந்தெழு முள்ளே, குமுதம தாகக் குளிர்ந்தெழு முத்து, கெமுதம தாகிய கேடிலி தானே. (கூ0)

கேடிலி சத்திகண் முப்பத் தறுவரு, நாடிலி கன்னிக ளொலான் பதின்மரும், பூவிலி பூவித முள்ளே யிருந்திவர், நாளிலி தன்னை நணுகிநின் றார்க்கே. (கூக)

நின்றது புந்தி நிறைந்திடும் வன்னியுங், கண்டது சோதி கருத்து ளிருத்திடக், கொண்டது வோராண்டு கூடி வருகைக்கு, விண்ட வௌகாரம் விளங்கின வன்றே. (கூஉ)

விளங்கிடு வானிடை நின்றவை யெல்லாம், வணங்கிடு மண்டல மன்னுயி ராக, நலங்கிளர் நன்மைக ளாரண ளொத்துச், சுலங்கிடை நின்றிவை சொல்லலு மாமே. (கூங)

ஆமே யதோமுக மேலே யமுதமாய்த், தாமே யுகாரந் த ழைத்தெழுஞ் சோமனும், காமேல் வருகின்ற கற்பக மானது, பூமேல் வருகின்ற பொற்கொடி யானதே. (கூச)

பொற்கொடி யாளுடை பூசனை செய்திட, வக்களி யா கிய வாங்காரம் போயிடு, மற்கட மாகிய மண்டலந் தன்னுளே, விற்கொடி யாகிய பேதையைக் காணுமே. (கூரு)

பேதை யவளுக்குப் பெண்மை யழகாகுந், தாதை யிவளு க்குத் தாணுவு மாய்நிற்கு, மாதை யவளுக்கு மண்ணுந் திலத மாய்க், கோதையர் சூழக் குவிந்திடங் காணுமே. (கூகு)

குவிந்தன சத்திகண் முப்பத் திருவர், நடந்தனர் கன்னிக ளெலெண்மர் சூழப், பரந்தித ழாகிய பங்கயத் துள்ளே, யிரு ந்தனள் காணு மிடம்பல கொண்டே. (கூஎ)

கொண்டங் கிருந்தனர் கூத்த னொளியினைக், கண்டங்கி ருந்தனர் காரணத் துள்ளது, பண்டை மறைகள் பரந்தெங்குந் தேடுமா, லின்றென் மனத்துளே யில்லடைந் தாளுமே. (கூஅ)

இல்லடைந் தானுக்கு மில்லாத தொன்றில்லை, யில்லடை ந் தானுக் கிரப்பது தானில்லை, யில்லடைந் தானுக் கிமையவர் தாமொவ்வா, ரில்லடைந் தானுக்கு வில்லாதில் லானையே. ()

ஆனை மயக்கு மறுபத்து நாற்றறி, யானை யிருக்கு மறுப த்து நாலொளி, யானை யிருக்கு மறுபத்து நாலறை, யானையுங் கோடு மறுபத்து நாலிலே. (சoo)

ஆக அதிகாரம் - கஙஇ-திருமந்திரம்-ருஙரு.

நாலாந்தந்திரம் முற்றும்.

ஆக சிறப்புப்பாயிரமுட்பட - அதிகாரம்-கூஉஇ.

கூடிய திருமந்திரம்-கசகஅ.

# ஐந்தாந்தந்திரம்.



## சுத்தசைவம்.

ஊரு முலசமு மொக்கப் படைக்கின்ற, பேரறி வாளன் பெருமை குறித்திடின், மேருவு மூவுல காளி யிலங்கெழுந், தாரணி நால்வகைச் சைவமு மாமே. (௧)

சத்து மசத்துஞ் சதசத்துந் தான்கண்டு, சித்து மசித்துஞ் சேர்வுறு மேநீத்த, சுத்த மசுத்தமுந் தோய்வுறு மேநின்று, நித்தம் பரஞ்சுத்த சைவர்க்கு நேயமே. (௨.)

கற்பன கற்றுக் கலைமன்னு மெய்யோக, முற்பத ஞான முறைமுறை நண்ணியே, தொற்பத மேவித் துரிசற்று மேலான, தற்பரங் கண்டுளோர் சைவசித் தாந்தரே. (௩)

வேதாந்தஞ் சுத்தம் விளங்கிய சித்தாந்த, நாதாந்தங் கண்டோர் நடுக்கற்ற காட்சியர், பூதாந்த போதாந்த மாகப் புனஞ்செய்ய, நாதாந்த பூரணர் ஞானநே யத்தரே. (௪)

---

## அசுத்தசைவம்.

இணையார் திருவடி யேத்துஞ் சீரங்கத், திணையா ரிணைக்குழை யீரணை முத்திரை, குணமா ரிணைக்கண்ட மாலையுங் குன்று, தணைவாஞ் சரியை கிரியையி னார்க்கே. (௧)

காதுப்பொ னார்ந்த கடுக்க னிரண்டுசேர்த், தோதுந் திருமேனி யுட்கட் டிரண்டுடன், சோதனை செய்து வுபதேச மார்க்கரா, யோதி யிருப்பா ரொருசைவ ராகுமே. (௨)

கண்டங்க ளொன்பதுங் கண்டவர் கண்டனர், கண்டங்க ளொன்பதுங் கண்டா யரும்பொருள், கண்டங்க ளொன்பதுங் கண்டவர் கண்டமாங், சண்டங்கள் கண்டோர் கடுஞ்சுத்த சைவரே. (௩)

ஞானி புவியெழு நன்னூ லனைத்துடன், மோன திசையு முழுவெண்ணெண் சித்தியு, மேனை நிலமு மெழுதா மறையீறுங், கோனொடு தன்னையுங் காணுங் குணத்தரே. (௪) ஆ அ

---

## மார்க்கசைவம்.

பொன்னாற் சிவசா தனம்பூதி சாதன, நன்மார்க்க சீதன மாஞான சாதனந், துன்மார்க்க சாதனந் தோன்றாத சாதனஞ், சன்மார்க்க சாதன மாஞ்சுத்த சைவர்க்கே. (க)

கேடறு ஞானி கிளர்ஞான பூடணி, பாடறு வேதாந்த சித்தாந்த பாகத்தி, னூடுறு ஞானோ தயனுண்மை முத்திபோன், பாடுறு சுத்தசை வப்பத்த நித்தனே. (உ)

ஆகம மொன்பா னதிலான நாலேழு, மோகமி லேலேழு முப்பேத முற்றுடன். வேகமில் வேதாந்த சித்தாந்த மெய்மையொன், றாக முடிந்த வருஞ்சுத்த சைவமே. (ங)

சுத்த மசுத்தந் துரியங்க ளோரேழுஞ், சத்து மசத்துந் தணந்த பராபரை, யுத்த பராபரை யுள்ளாம் பராபரை, யத்தனருட்சத்தி யாயெங்கு மாமே. (௪)

சத்து மசத்துந் தணந்தவர் தானாகிச், சித்த மசித்துந் தெரியாச் சிவோகமாய், முத்தியு ளானந்த சத்தியுண் மூழ்கினோர், சித்தியு மங்கே சிறந்துள தானே. (ரு)

தன்னைப் பரனைச் சதாசிவ னென்கின்ற, மன்னைப் பதிபசு பாசத்தை மாசற்ற, முன்னைப் பழமல முன்கட்டை வீட்டினை, யுன்னத் தகுஞ்சுத்த சைவ ருபாயமே. (சு)

பூரணந் தன்னிலே வைத்தற்ற வப்போத, மாரண மந்த மதித்தானந் தத்தோடு, நேரென வீரா றுந்தி நெடும்போகங், காரண மாஞ்சுத்த சைவர்க்குக் காட்சியே. (௭)

மாறுத ஞான மதிப்பற மாயோகந், தேறுது சிந்தையை

த் தேற்றிச் சிவமாக்கிப், பேரான பாவனை பேணி நெறிநிற்றல், கூறுகு ஞானி சரிதை குறிக்கிலே. (அ)

வேதாந்தங் கண்டோர் பிரமமித் தியாதரர், நாதாந்தங் கண்டோர் நடுக்கற்ற யோகிகள், வேதாந்த மில்லாத சித்தாந்தங் கண்டுளோர், சாதாரண மன்ன சைவ ருபாயமே. (கூ)

விண்ணினைச் சென்றணு காவியன் மேகங்கள், கண்ணினைச் சென்றணு காப்பல காட்சிக, ளெண்ணினைச் சென்றணு காமலெனப்படு, மண்ணலைச் சென்றணு காப்பசு பாசமே. ()

ஒன்று மிரண்டு மிலதுமா யொன்றாக, நின்று சமய நிராகார நீங்கியே, நின்று பராபரை நேயத்தைப் பாதத்தாற், சென்று சிவமாதல் சித்தாந்த சித்தியே. (கக) ஆ கக.

---

கடுஞ்சுத்தசைவம்.

வேடங் கடந்து விகிர்தன்றன் பான்மேவி, யாடம் பரமின்றி யாசாபா சஞ்செற்று, பாடொன்று பாசம் பசுத்துவம் பாழ்படச், சாடுஞ் சிவபோ தகர்சுத்த சைவரே. (க)

உடலான வைந்தையு மோராறு மைந்து, மடலான மாமாயை மற்றுள்ள நீவப், படலான கேவல பாசந் துடைத்துத், திடமாய்த் தனையுற்றல் சித்தாந்த மார்க்கமே. (உ)

சுத்தச் சிவனுறை தானத்திற் றோயாமல், முத்தர் பதப்பொருண் முத்திவித் தாமூல, மத்தகை யான்மா வரனையடைந் தற்றூற், சுத்தச் சிவமாவ ரேசுத்த சைவரே. (ங)

நானென்றுந் தானென்று நாடிநான் சாரவே, தானென்று நானென் றிரண்டிலாத் தற்பதந், தானென்று நானென்ற தத்துவ நல்கலாற், றானென்று நானென்றுஞ் சாற்றகிலேனே. (ச)

சாற்றரி தாகிய தத்துவஞ் சித்தித்தா, லாற்றரி தாகிய

வைந்து மடங்கிடு, மேற்றிகழ் ஞானம் விளக்கொளி யாய்நிற்கும், பாற்பர சாயுச்சிய மாகும் பதியே. (ரு) ஆ உ௲.

---

சரிதை.

நேர்ந்திடு மூல சரிதை நெறியிதென், றாய்ந்திடுங் காலங்கி கஞ்ச மலயமா, ஞேர்ந்திடுங் கந்துரு கேண்மின்கள் பூதலத், தோர்ந்திடுஞ் சுத்த சைவத்துக் குயிரதே, (க)

உயிர்க்குயி ராய்நிற்ற லொண்ஞான பூசை, யுயிர்க்கொளி நோக்கின் மகாயோக பூசை, யுயிர்ப்பெறு மாவா கனம்புறப் பூசை, செயிற்கடை நேசஞ் சிவபூசை யாமே. (உ)

நாடு நகரமு நற்றிருக் கோயிலுந், தேடித் திரிந்து சிவபெரு மானென்று, பாடுமின் பாடிப் பணிமின் பணிந்தபின், கூடிய நெஞ்சத்துக் கோயிலாய்க் கொள்வனே. (ங)

பத்தர் சரிதை படுவோர் கிரியையோ, ரத்தகு தொண்டருள்வேடத் தாகுவோர், சுத்த வியமாதி சாதகர் தூயோகர், சித்தர் சிவஞானஞ் சென்றெய்து வோர்களே. (ச)

சார்ந்தமெய்ஞ் ஞானத்தோர் தானவ னுயினோர், சேர்ந்தவெண் யோகத்தர் சித்தர் சமாதியோ, ராய்ந்த கிரியையோ ரர்ச்சனை தப்பாதோர், நேர்ந்த சரிதையோர் நீணிலத் தோரே. (ரு)

கிரியை யோகங்கள் கிளர்ஞான பூசை, யரிய சிவனுரு வமரு மருபந், தெரியும் பருவத்துத் தேர்ந்திடும் பூசை, யுரியன நேயத் துயர்பூசை யாமே, (சு)

சரிதாதி நான்குந் தருஞான நான்கும், விரிவான வேதாந்த சித்தாந்த மாறும், பொருளானது நந்தி பொன்னகர் போந்து, மருளாகு மாந்தர் வணங்கவைத் தானே. (எ)

சமையம் பலசுத்தித் தன்செய லற்றிடு, மமையும் விசே

டமு மரன்மந் திரசுத்தி, சமைய நிருவாணங் கலாசுத்தி யாகு, மமைமன்னு ஞான மார்க்கம் மபிடேகமே. (அ)ஆ ௫உ.

---

## கிரியை.

பத்துத் திசையும் பரமொரு தெய்வமுண், டெத்திக் கிலரில்லை யென்பதி னமலர்க், கொத்துத் திருவடி நிழல் சரணெனத், தத்தும் வினைக்கடல் சாராது காணுமே. (க)

காணுறு கோடி கடிகமழ் சந்தனம், வானுறு மாமல ரிட்டு வணங்கினு, மூனினை நீக்கி யுணர்பவர்க் கல்லது, தேனமர் பூங்குழல் சேரவொண் ணாதே. (உ)

கோனக்கன் றாயே குரைகழ லேத்துமின், ஞானக்கன் றாகிய நடுவே யுழிதரும், வானக்கன் றாகிய வானவர் கைதொழு, மானக்கன் றீச னருள்வள்ள மாமே. (௩)

இதுபணிந் தெண்டிசை மண்டல மெல்லா, மதுபணி செய்கின் றவனொரு கூற, னிதுபணி மானுடர் செய்பணி யீசன், பதிபணி செய்வது பத்திமை காணே. (௪)

பத்தன் கிரியை சரிகை பயில்வுற்றுச், சுத்த வருளாற் றுரிசற்ற யோகத்தி, லுய்த்த நெறியுற் றுணர்கின்ற ஞானத்தாற், சித்தங் குருவரு ளாற்சிவ மாகுமே. (௫)

அன்பின் னுருகுவ னாளும் பணிசெய்வன், செம்பொன் செய்மேனி கமலத் திருவடி, முன்புநின் றங்கே மொழிவ தெனக்கரு, ளன்பினுட் சோதி யிலங்குகின் றானே. (௬)

ஆ ௫அ.

---

## யோகம்.

நெறிவழி யேசென்று நேர்மையு ளொன்றித், தறியிருந் தாப்போலத் தம்மை யிருத்திச், சொறியினுந் தாக்கினுந் துண்ணென் றுணராக், குறியறி வாளர்க்குக் கூடலு மாமே. ()

ஊழிதோ றூழி யுணர்ந்தவர்க் கல்லது, வூழிதோ றூழி யுணரவுந் தானொட்டா, னூழி யமரு மரியய னென்றுளா, ரூழி முயன்றுமொ ருச்சியு ளானே. (உ)

பூவினிற் கந்தம் பொருந்திய வாறுபோற், சீவனுக் குள்ளே சிவமணம் பூத்தது, வோவியம் போல வுணர்ந்தறி வாளர்க்கு, நாவி யணைந்த நடுதறி யாமே. (௩)

உய்ந்தன மென்றீ ருறுபொருள் காண்கிலீர், கந்த மலரிற் கரக்கின்ற நந்தியைச், சிந்தை யுறவே தெளிந்திரு ளீங்கினால் முந்தப் பிறவிக்கு மூலவித் தாருமே. (௪)

எழுத்தொடு பாடலு மெண்மெண் கலையும், பழித்தலைப் பாசப் பிறவியு நீங்கா, வழித்தலைச் சோமனோ டங்கி யருக்கன், வழித்தலை செய்யும் வகை யுணர்ந் தேனே. (௫)

விரும்பிநின் றேசெய்யில் மெய்த்தவ ராகும், விரும்பிநின் றேசெய்யின் மெய்யுரை யாகும், விரும்பிநின் றேசெய்யின் மெய்த்தவ மாகும், விரும்பிநின் றேசெயில் விண்ணவ னாகுமே. ()

பேணிற் பிறவா வுலகருட் செய்திடுங், காணிற் றனது கலவியு ளேநிற்கு, நாணி னரக நெறிக்கே வழிசெயு, மூனிற் சுடு மங்கி யுத்தமன் றானே. (எ)

ஒத்தசெங் கோலா ருலப்பிலி மாதவ, ரெத்தனை யாயிரம் கீழ்ந்தவ ரெண்ணிலி, சித்தர்க டேவர்கள் மூவர் பெருமையா மத்த னிவனென்றே யன்புறு வார்களே. (அ)

யோகிக்கு யோகாதி மூன்றுள கொண்டுற்றோ, ராகத் தகு கிரியாதி சரிதையாந், தாகத்தை விட்ட சரிதையொன் றுமொன்று, ளாதித்தன் பத்தியு ளன்புவைத் தேனே. (௯)

யோகச் சமயமே யோகம் பலவுன்னல், யோக விசேடமே யட்டாங்க யோகமாம், யோகநிர் வாணமே யுற்ற பரோதயம், யோகவபி டேகமே யொண்சித்தி யுற்றலே. (௧௦) ஆ சஅ,

ஞானம்.

ஞானத்தின் மிக்கவறநெறி நாட்டில்லை, ஞானத்தின் மிக்க சமயமு நன்றது, ஞானத்தின் மிக்கவை நன்முத்தி நல்காவா, ஞானத்தின் மிக்கார் நரரின்மிக் காரே. (க)

சத்தமுஞ் சத்த மனனுந் தருமனை, முய்த்த வுணர்வு முணர்த்து மகந்தையுஞ், சித்தமென் றிம்மூன்றுஞ் சிந்திக்குஞ் செய்கையுஞ், சத்தங் கடந்தவர் பெற்றசன் மார்க்கமே. (உ

தன்பா லுலகுந் தனக்கரு காவது, மன்பா லெனக்கரு ளாவது மாவன,வென்பார்கண் ஞானமு மெய்துஞ் சிவோகமும், பின்பாலி னேயமும் பெற்றிடுந் தானே. (ங)

இருக்குஞ் செம்மி யிடம்பிரம மாகும், வருக்கஞ் சராசர மாகு முலகந், தருக்கிய வாசார மெல்லாந் தருமே, திருக்குமில் ஞானத்தைத் தேர்ந்துணர்ந் தோர்க்கே. (ச)

அறிவு மடக்கமு மன்பு முடனே, பிறியா நகர்மன்னும் பேரரு ளாளன், குறியுங் குணமுங் குரைகழ னீங்கா, நெறியறி வார்க்கிது நீர்த்தொனி யாமே. (ரு)

ஞானம் விளைந்தெழு கின்றதோர் சிந்தையு, ளேனம் விளைந்தெதி ரேகாண் வழிதொறுங், கூனல் மதிமண்ட லத்தெதிர் நீர்கண்டு, வூன மறுத்துநின் றொண்சுட ராகுமே. (சு)

ஞானிக் குடன்குண ஞானத்தி னன்குமா, மோனிக் கிவையொன்றுங் கூடாமுன் மோகித்து,மேனிற்ற லாஞ்சத்தி வித்தை விளைத்திடுந், தானிக் குலத்தோர் சரிதை கிரியையே. (எ)

ஞானத்தின் ஞானாதி நான்குமா ஞானிக்கு, ஞானத்தின் ஞானமே நானென தென்னுமல், ஞானத்தில் யோகமே நாதாந்த நல்லொளி, ஞானக் கிரியையே நன்முத்தி நாடலே. (அ)

நண்ணிய ஞானத்தின் ஞானாதி நண்ணுவோன், புண்ணிய பாவங் கடந்த பிணக்கற்றோன், கண்ணிய நேயங் கரைஞானங் கண்டுளோன், திண்ணிய சுத்தன் சிவமுத்தன் சித்தனே. ()

ஞானச் சமயமே நாடுந் தனைக்காண்டன், ஞான விசேடமே நாடு பரோதய, ஞான நிர்வாணமே நன்றறி வானருள், ஞானபிடேகமே நற்குரு பாதமே. (கo) ஆ௲ ௫அ.

---

சன்மார்க்கம்.

சாற்றுஞ்சன் மார்க்கமாந் தற்சிவ தத்துவத், தோற்றங் களான சுருதி சுடர்க்கண்டு, சீற்ற மொழிந்து சிவயோக சித்தராய்க், கூற்றத்தை வென்றார் குறிப்பறிந் தார்களே. (க)

சைவப் பெருமைத் தனிநா யகனந்தி, யுய்ய வகுத்த குருநெறி யொன்றுண்டு, தெய்வச் சிவநெறி சன்மார்க்கஞ் சேர்ந் துய்ய, வையத்து ளார்க்கு வகுத்துவைத் தானே. (உ)

தெரிசிக்கப் பூசிக்கச் சிந்தனை செய்யப், பரிசிக்கக் கீர்த்திக்கப் பாதுகஞ் சூடக், குருபத்தி செய்யுங் குவலயத் தோர்க்குத், தருமுத்தி சார்பூட்டுஞ் சன்மார்க்கந் தானே. (ங)

தெளிவறி யாதார் சிவனை யறியார், தெளிவறி யாதார் சீவனு மாகார், தெளிவறி யாதார் சிவமாக மாட்டார், தெளிவறி யாதவர் தீரார் பிறப்பே. (ச)

தானவ னாகித் தானைந்தா மலஞ்செற்று, மோனம தாமொழிப் பான்முத்த ராவது, மீனமில் ஞானானு பூதியி லின்பமுந், தானவ னுயற்ற லானசன் மார்க்கமே. (ரு)

சன்மார்க்கத் தார்க்கு முகத்தொடு பீடமுஞ், சன்மார்க்கத் தார்க்கு மிடத்தொடு தெய்வமுஞ், சன்மார்க்கத் தார்க்கு வருக்கந் தரிசந, மெம்மார்க்கத் தார்க்கு மியம்புவன் கேண்மினோ. (சு)

சன்மார்க்க சாதநந் தான்ஞான ஞேயமாம், பின்மார்க்க சாதநம் பேதையர்க் காய்நிற்குந், துன்மார்க்கம் விட்டதுரிபத் துரிசற்றார், சன்மார்க்கந் தானவ னுகுஞ்சன் மார்க்கமே. (எ)

சன்மார்க்க மெய்த் வருமருஞ் சீடர்க்குப், பின்மார்க்க மூன்றும் பெறவியல் பாமென்று, னன்மார்க்கந் தானே சிவ னொடு நாடலே, சொன்மார்க்க மென்னச் சுருதிகை கொள் ளுமே. (அ)

அன்னிய பாசமு மாகுங் கருமமு, முன்னு மவத்தையு மூலப் பகுதியும், பின்னிய ஞானமும் பேதாதி பேதமுந், த ன்னொடுங் கண்டவர் சன்மார்க்கத் தோரே. (கூ)

பசுபாச நீக்கிப் பதியுடன் கூட்டிக், கசியாத நெஞ்சங் கசிபக் கசிவித், தொசியாத வுண்மைச் சொருபோ தயத்துற், றசைவான தில்லாமை யானசன் மார்க்கமே. (கல)

மார்க்கஞ்சன் மார்க்கிகள் கிட்ட வகுப்பது, மார்க்கஞ்ச ன் மார்க்கமே யன்றிமற் றொன்றில்லை, மார்க்கஞ்சன் மார்க்க மெனுநெறி வைகாதோர், மார்க்கஞ்சன் மார்க்க மாஞ்சித்த யோகமே. (கக) ஆகூகூ.

சகமார்க்கம்.

சன்மார்க்கந் தானே சகமார்க்க மானது, மன்மார்க்க மாமுத்தி சித்திக்குள் வைப்பதாம், பின்மார்க்க மானது பே ராப் பிறந்திறந், துன்மார்க்க ஞானத் துறுதியு மாமே. (க)

மருவுந் துவாதச மார்க்கமில் லாதார், குருவுஞ் சிவனுஞ் சமயமுங் கூடார், வெருவுந் திருமகள் வீட்டில்லை யாகு, முரு வுங் கிளையு மொருங்கிழப் போரே. (உ)

யோகச் சமாதியி னுள்ளே யகலிடம், யோகச் சமாதியி னுள்ளே யுளரொளி, யோகச் சமாதியி னுள்ளே யுளசத்தி, யோ கச் சமாதி யுகந்தவர் சித்தரே. (ங)

போகமும் போகமும் யோகியர்க் காகுமால், யோகஞ் சி வரூப முற்றிடு முள்ளத்தோர், போகம் புவியிற் புருடார்த்த சி த்திய, தாகு மிரண்டு மழியாத யோகிக்கே. (ச)

ஆதார சோதனை யாறுடி சுத்திகள், மேதாதி யீரெண் கலந்தது விண்ணொளி, போதா லயத்துட் புலன்கர ணம்புந்தி, சாதா ரணங்கெட லாஞ்சகமார்க்கமே. (ரு)

பிணங்கிநிற் கின்றவை யைந்தையும் பின்னை, யணங்கி யெறிவ னயிர்மன வாளாற், கணம்பதி னெட்டுங் கருது மொருவன், வணங்கவல் லான்சிந்தை வந்துநின் றானே. (சு)

வளங்கனி யொக்கும் வளநிறத் தார்க்கும், வளங்கனி யொப்பதோர் வாய்மைய னாகு, முளங்கனித் துள்ள முகந்திருப் பார்க்குப், பழங்கனித் துள்ளே பகுந்துநின் றானே. (எ)

ஆ. எசு.

---

## சற்புத்திரமார்க்கம்.

மேவிய சற்புத்திர மார்க்கமே யத்தொழி, றாவிப்ப தாஞ்சக மார்க்கஞ் சகத்தொழி, லாவ திரண்டு மகன்று சகமார்க்கத், தேவியோ டொன்றல் சன்மார்க்கத் தெளிவதே, (க)

பூசித்தல் வாசித்தல் போற்றல் சபித்திட, லாசற்ற நற்றவம் வாய்மை யழுக்கின்மை,நேசித்திட் டன்னமு நீசுத்தி செய்தன்மற், றாசற்ற சற்புத் திரமார்க்க மாகுமே. (உ)

அறுகாற் பறவை யலர்ந்தோர்ந் துழலு, மறுகா நறையன்னந் தாமரை நிலங், குறுகா நறுமலர் கொய்வன கண்டுஞ், சிறுகா லறநெறி சேரகி லாரே. (ந)

அருங்கரை யாவது வவ்வடி நீழற், பெருங்கரை யாவது பிஞ்ஞக னானை, வருங்கரை யேகின்ற மன்னுயிர்க் கெல்லா மொருங்கரை யாயுல கேழினொத் தானே. (ச)

உயர்ந்தும் பணிந்தும் முகந்துந் தழுவி, வியர்ந்து மரனடிக் கேமுறை செய்யின், பயந்தும் பிறவிப் பயனது வாகும், பயந்து பரிக்கிலப் பான்மைய னாமே. (ரு)

நின்று தொழுவன் கிடந்தெம் பிரான்றன்னை, யென்றுந் தொழுவ னெழிற்பரஞ் சோதியைத், துன்று மலர்தூவித் தொழுமின் றொழுந்தோறுஞ், சென்று வெளிப்படுந் தேவர் பிரானே. (சு)

திருமன்னுஞ் சற்புத்திர மார்க்கச் சரிதை, யுருமன்னி வாழு முலகத்தீர் கேண்மின், கருமன்னு பாசங்கை கூம்பத் தொழுது, விருமன்னு நாடோறு மின்புற் றிருந்தே. (எ) ஆ அங.

---

தாசமார்க்கம்.

எளியன தீப மிடமலர் கொய்த, லளிதின் மெழுக லதுதூர்த்தல் வாழ்த்தற், பளிமணி பற்றல் பன்மஞ் சனமாதி, தளிதொழில் செய்வது தான்றாச மார்க்கமே. (க)

அதுவிது வாதிப் பரமென் றகல்வ, ரிதுவழி யென்றங் கிறைஞ்சின ரில்லை, விதிவழி யேசென்று வேந்தனை நாடு, மதுவிது நெஞ்சிற் றணிக்கின்ற வாறே. (உ)

அந்திப்பன் றிங்க ளதன்பின்பு ஞாயிறு, சிந்திப்ப னென்று மொருவன் சேறிகழல், வந்திப்ப வானவர் தேவனை நாடொறும், வந்திப்ப தெல்லாம் வகையின் முடிந்ததே. (ங)

அண்ணலை வானவ ராயிரம் பேர்சொல்லி, யுன்னுவ ருன்மகிழ்ந் துண்ணின் றடிதொழக், கண்ணவ னென்று கருதுமவர்கட்குப், பண்ணவன் பேரன்பு பற்றிநின் றானே. (ச)

வாசித்துப் பூசித்து மாமலர் கொய்திடும், பாசிக் குளத்தில்வீழ் கல்லா மனம்பார்க்கின், மாசற்ற சோதி மணிமிடற் றண்ணலை, நேசத் திருந்த நினைவறி யாரே. (ரு) ஆ அச

---

சாலோகம்.

சாலோக மாதி சரிதாதி யிற்பெறுஞ், சாலோக சாமீபந் தங்குஞ் சரிதையா, மாலோகஞ் சேரில் வழியாகுஞ் சா

ரூபம், பரலோக மில்லாப் பரனுரு வாமே. (க)

சமயங் கிரிகையிற் றன்மனங் கோயிற், சமய மனுமுறை தானே விசேடஞ், சமயத்து மூலந் தனைத்தேறன் மூன்றாஞ், சமயாபி டேகமே தானுஞ் சமாதியே. (உ) ஆ கூ.

சாமீபம்.

பாசம் பசுவான தாகுமிச் சாலோகம், பாச மருளான தாகுமிச் சாமீபம், பாசஞ்சிவமான தாகுமிச் சாரூபம், பாசங் கரைபதி சாயுச் சியமே. (க) ஆ கூக.

சாரூபம்.

தங்கிய சாரூபந் தானெட்டாம் யோகமாந், தங்குஞ் சன்மார்க்கந் தனிலன்றிக் கைகூடா, வங்கத் துடல்சித்தி சாதந ராகுவ, ரிங்கிவ ராக விழிவற்ற யோகமே. (க)

சயில லோகத்தினைச் சார்ந்த பொழுதே, சயிலம தாகுஞ் சராசரம் போலப், பயிலுங் குருவின் பதிப்புக்க போதே, கயிலை யிறைவன் கதிர்வடி வாமே. (உ) ஆ கூ௩.

சாயுச்சியம்.

சைவஞ் சிவனுடன் சம்பந்த மாவது, சைவந் தனையறிந் தேசிவஞ் சாருதற், சைவஞ் சிவந்தன்னைச் சாராம னீவுதற், சைவஞ் சிவானந்தஞ் சாயுச் சியமே. (க)

சாயுச் சியஞ்சாக்கி ராதீதஞ் சாருதல், சாயுச்சியமுப சாந்தத் துத் தங்குதற், சாயுச்சியஞ்சிவ மாதல் முடிவிலாச், சாயுச் சியமனத் தானந்த சத்தியே. (உ) ஆ கூ௪.

சத்திநிபாதம்-மந்தம்.

இருட்டறை மூலை யிருந்த குமரி, குருட்டுக் கிழவனைக்

கூடற் குறித்துக், குருட்டினை நீக்கிக் குணம்பல காட்டி, மரு ட்டி யவனை மணம்புரிந் தானே. (க)

நீம்புல ஞான நிசையது சிந்திக்கி, லாம்புல ஞயறி வார்க்கமு தாய்நிற்குந், தேம்புல ஞான தெளிவறி வார்கட்குக், கோம்புல ஞடிய கொல்லையு மாமே. (உ)

இருணீக்கி யெண்ணில் பிறவி கடத்தி, யருணீங்கா வண் ணமே யாதி யருளு, மருணீங்கா வானவர் கோனொடுங் கூடிப், பொருணீங்கா வின்பம் புலம்பயில் தானே. (ங)

இருள்சூ ழறையி லிருந்தது நாடிற், பொருள்சூழ் விளக் கது புக்கெரிந் தாப்போன், மருள்சூழ் மயக்கத்து மாமலர் நந்தி, யருள்சூ ழிறைவனு மம்மையு மாமே. (ச) ஆ கக

---

மந்தரம்.

மருட்டிப் புணர்ந்து மயக்கமு நீக்கி, வெருட்டி வினையறு த் தின்பம் விளைத்துக், குருட்டினை நீக்கிக் குணம்பல காட் டி, யருட்டிகழ் ஞான மதுபுரிந் தானே. (க)

கன்னித் துறைபடிந் தாடிய வாடவர், கன்னித் துறை படிந் தாடுங் கருத்திலர், கன்னித் துறைபடிந் தாடுங் கருத் துண்டேற், பின்னைப் பிறவிப் பிறிதில்லை தானே. (உ)

செய்யன் கரியன் வெளியனற் பச்சைய, னெய்த வுணர் ந்தவ ரேய்வ ரிறைவனை, மைவென் றகன்ற பகடுரி போர்த்த வெங், கைய னிவனென்று காதல்செய் வீரோ. (ங)

எய்திய காலங்க ளெத்தனை யாயினுந், தையலுந் தானுந் தனிநா யகமென்பர், வைகலுந் தன்னை வணங்கு மவர்கட்குக், கையிற் கருமஞ்செய் காட்டது வாமே. (ச)

கண்டுகொண் டோமிரண் டுந்தொடர்ந் தாங்கொளி, ப ண்டுபண் டோயும் பரமன் பரஞ்சுடர், வண்டுகொண் டாடு ம

லர்வார் சடையண்ணலின்றுகண் டார்க்கிருணீக்கிநின் ருனே
ஆ கoச.

## தீவிரம்.

அண்ணிக்கும் பெண்பிள்ளை யப்பனார் தோட்டத்தி, லெண்ணிக்கு மேழேழ் பிறவி யுணர்விக்கு, முண்ணிற்ப தெல்லா மொழிய முதல்வனைக், கண்ணுற்று நின்ற கனியது வாகுமே.

பிறப்பை யறுக்கும் பெருந்தவ நல்கு, மறப்பை யறுக்கும் வழிபட வைக்குங், குறப்பெண் குவிமுலை கோமள வல்லி, சிறப்பொடு பூசனை செய்யநின் றார்க்கே. (உ)

தாங்குமி னெட்டுத் திசைக்குந் தலைமகன், பூங்கமழ் கோதைப் புரிகுழ லாளொடு, மாங்கது சேரு மறிவுடை யார்கட்குத், தூங்கொளி நீலந் தொடர்தலு மாமே. (ரு)

நணுகினு ஞானக் கொழுந்தொன்று நல்கும், பணிகிலும் பன்மலர் தூவிப் பணிவ, னணுகிய தொன்றறி யாத வொருவ, னணுகு முலகெங்கு மாவியு மாமே. (ச) ஆ கoஅ.

## தீவிரதரம்.

இருவினை நேரொப்பி லின்னருட் சத்தி, குருவென வந்து குணம்பல நீக்கித், தருமெனு ஞானத்தாற் றன்செய லற்றுற், றிரிமலந் தீர்ந்து சிவனவ னாமே. (க)

இரவும் பகலு மிலாத விடத்தே, குரவஞ் செய்கின்ற குழலியை யுன்னி, யரவஞ் செய்யாம லவளுடன் சேரப், பரிவொன் றிலாளும் பராபரை தானே. (உ)

மாலை விளக்கு மதிபமு ஞாயிறுஞ், சால விளக்குந் தனிச்சுட ரண்ணலுள், ஞானம் விளக்கிய நாதனென் னுள்புகுந், தூனை விளக்கி யுடனிருந் தானே. (ரு) ஆ ககக.

## புறச்சமய தூஷணம்.

ஆயத்து ணின்றவறுசம யங்களுங், காயத் துணின்ற கட வுளைக் காண்கிலா, மாயக் குழியில் விழுவர் மனைமக்கள், பாச த்தி லுற்றுப் பதைக்கின்ற வாறே. (௧)

உள்ளத்து ளேதான் கரந்தெங்கு நின்றவன், வள்ளற் ற லைவன் மலருறை மாதவன், பொள்ளக் குரம்பைப் புகுந்து புற ப்படுங், கள்ளத் தலைவன் கருத்தறி யார்களே. (௨)

உள்ளத்து ளுள்ளன் புறத்துள்ள னென்பவர்க், குள்ளத் து ளுள்ளன் புறத்துள்ள னெம்மிறை, யுள்ளத்து மில்லை புறத் தில்லை யென்பவர்க், குள்ளத்து மில்லை புறத்தில்லை தானே.()

ஆறு சமயமுங் கண்டவர் கண்டில, ராறு சமயப் பொரு ளும் பயனில்லை, தேறுமின் றேறித் தெளிமின் றெளிந்தபின், மாறுத லின்றி மனைபுக லாமே. (௪)

சிவமல்ல தில்லை யறையோ சிவமாந், தவமல்ல தில்லை த லைப்படு வார்க்கிங், கவமல்ல தில்லை யறுசம யங்கள், தவம்வ ல்ல நந்திதாட் சார்ந்துய்ய நீரே. (௫)

அண்ணலை நாடிய வாறு சமயமும், விண்ணவ ராக மிகவு ம் விரும்பியே, முண்ணின் றழியு முயன்றில ராதலான், மண் ணின் றொழியும் வகையறி யார்களே. (௬)

சிவகதி யேகதி மற்றுள்ள வெல்லாம், பவகதி பாசப் பிற வியொன் றுண்டு, தவகதி தன்னொடு நேரொன்று தோன்றி, ல வகதி மூவரு மவ்வகை யாமே. (௭)

நூறு சமய முளவா றுவலுங்கா, லாறு சமயமவ் வாறுட் படுவன, கூறு சமயங்கள் கொண்ட நெறிநில்லா, நீறு பரநெறி யில்லா நெறியன்றே. (௮)

கற்றுங் கழுதைகள் போலுங் கலதிகள், சுத்த சிவனெங் குந் தோய்வுற்று நிற்கின்றான், குற்றந் தெரியாதார் குணங் கொண்டு கோதாட்டார், பித்தேறி நாளும் பிறந்திறப் பாரே.

மயங்குகின் றாரு மதிதெளிந் தாரு, முயங்கி யிருவினை மு
ழைமுகப் பாச்சி, யியங்கிப் பெறுவரோ லீறது காட்டிற், பயங்
கெட் டவர்க்கோர் பரநெறி யாமே. (கo)

சேய னணியன் பிணியிலன் பேர்நந்தி, தூயன் றுளக்கற
நோக்கவல் லார்கட்கு, மாயன் மயக்கிய மானுட ராமவர், கா
யம் விளக்குங் கருத்தறி யார்களே. (கக)

வழியிரண் டுக்குமோர் வித்தது வான, பழியது பார்மி
சை வாழ்க வுறுதல் சுழியறி வாளன்றன் சொல்வழி முன்னின்,
றழிவறி வார்நெறி நாடநில் லாரே. (கஉ)

மாதவ ரெல்லாமா தேவன் பிரானென்பர், நாதம தாக
வறியப் படுநந்தி, பேதஞ்செய் யாதே பிரானென்று கைதொ
ழி, லாதியு மந்நெறி யாகிநின் றானே. (கங)

அரனெறி யப்பனை யாதிப் பிரானை, யுரநெறி யாகியுளம்பு
குந் தானைப், பரநெறி தேடிய பத்தர்கள் சித்தம், பரனறி யா
விடிற் பல்வகை தூரமே. (கச)

பரிசற வானவன் பண்பன் பகலோன், பெரிசறி வானவ
ர் பேறிற் றிகழுந், தரிசற நின்னை தூய்மணி வண்ண, னரிதவன்
வைத்த வறநெறி தானே. (கரு)

ஆன சமய மதுவிது நன்றெனு, மாய மனிதர் மயக்க ம
துவொழி, கானங் கடந்த கடவுளை நாடுமின், ஞானங் கடந்த
வுருவது வாமே. (கசு)

அந்நெறி நாடிய வமரர் முனிவருஞ், சென்னெறி கண்டா
ர் சிவனெனப் பெற்றார்பின், முன்னெறி நாடி முதல்வ னருளி
லார், சென்னெறி செல்லார் திகைக்கின்ற வாறே. (கஎ)

உறுமா றறிவது முண்ணின்ற சோதி, பெறுமா றறியிற் பி
ணக்கொன்று மில்லை, யறுமா றதுவான வங்கியு ளாங்கே, யி
றுமா றறிகில ரேழைக டாமே. (கஅ)

வழிநடக் கும்பரி சொன் றுண்டு வையங், கழிநடக் குண் டவர் கற்பனை கேட்பர், சுழிநடக் குந்துய ரம்மது நீக்கிப், ப ழிநடப் பார்க்குப் பரவலு மாமே. (சகூ)

வழிசென்ற மாதவம் வைகின்ற போது, பழிசெல்லும் வ ல்வினைப் பற்றறுத் தாங்கே, வழிசெல்லும் வல்வினை யார்திற ம் விட்டிட், டுழிசெல்லி லும்பர் தலைவன்முன் னாமே. (உ0)

ஆஉ சஙக.

---

## நிராகாரம்.

இமையங்க ளாய்நின்ற தேவர்க ளாறு, சமையங்கள் பெ ற்றனர் சாத்திர மோதி, யமையறிந் தோமென்ப ராதிப்பிரா னுங், கமையறிந் தாருட் கலந்துநின் றானே. (க)

பாங்கமர் கொன்றைப் படர்சடை யானடி, தாங்கு மனி தர் தரணியி னேரொப்பர், நீங்கிய வண்ண நினைவுசெய் யாத வ, ரேங்கி யுலகி லிருந்தழு வாரே. (உ)

இருந்தழு வாரு மியல்புகெட் டாரு, மருந்தவ மேற்கொ ண் டங்கண் ணலையெண்ணில், வருந்தா வகைசெய்து வானவர் கோனும், பெருந்தன்மை நல்கும் பிரப்பில்லை தானே. (ங)

தூரறி வாளர் துணைவர் நினைப்பிலர், பாரறி வாளர் படுப யன் றுணுண்பர், காரறி வாளர் கரந்து பிறப்பார்க, ணீரறி வா ர்நெடு மாமுகி லாமே. (ச)

அறிவுடன் கூடி யழைத்ததோர் தோணி, பறியுடன் பார ம் பழம்பதி சிந்துங், குறியது கண்டுங் கொடுவினை யாளர், செ றிய நினைக்கிலர் சேவடி தானே. (ரு)

மன்னு மொருவன் மருவு மனோமய, னென்னின் மனித கழ்வரிவ் வேழைக, டுன்னி மனமே தொழுமின் றுணையிலி, த ன்னையு மங்கே தலைப்பட லாமே. (சு)

ஓங்காரத் துள்ளொளி யுள்ளே யுதயமுற், றுங்கார மற்ற வநுபவங் கைகூடார், சாங்கால முன்னூர் பிறவாமை சார்வு றூர், நீங்காச் சமயத்து ணின்றொழிந் தார்களே. (எ) ஆ. ௧௩அ

---

உட்சமயம்.

இமையவர் தம்மையு மெம்மையு முன்ன, மமைய வகுத்தவ னாதிப் புராணன், சமையங்க ளாறுந் தன்றா ளிணைநாட, வமையங் குழல்கின்ற வாதிப் பிரானே. (க)

ஒன்றது பேரூர் வழியா றதற்குள, வென்றது போல விருமுச் சமயமு, நன்றிது தீதிது வென்றுரை யாளர்கள், குன்று குரைத்தெழு நாயையொத் தார்களே. (உ)

சைவப் பெருமைத் தனிநா யகன்றன்னை, யுய்ய வுயிர்க்கின்ற வொண்சுடர் நந்தியை, மெய்ய பெருமையர்க் கன்பனை யின்பஞ்செய், வையத் தலைவனை வந்தடைந் துய்மினே. (ங)

சிவனவன் வைத்ததோர் தெய்வ நெறியிற், பவனவன் வைத்த பழவழி நாடி, யிவனவ னென்ப தறியவல் லார்கட், கவனவ னங்குள தாங்கட னாமே. (ச)

ஆமா றுரைக்கு மறுசம யாதிக்குப், போமாறு தானில்லை புண்ணிய மல்லதங், காமாம் வழியாக்கு மவ்வே றுயிர்கட்கும், போமாறவ் வாதாரப் பூங்கொடி யாளே. (ரு)

அரநெறி யாவ தறிந்தேனு நானுஞ், சிலநெறி தேடித் திரிந்தவ நாளு, முரநெறி யுள்ளக் கடல்கடந் தேறுந், தரநெறி நின்ற தனிச்சுடர் தானே. (சு)

தேர்ந்த வரனை யடைந்த சிவநெறி, பேர்ந்தவ ருன்னிப் பெயர்ந்த பெருவழி, யார்க்கவ ரண்டத்துப் புக்க வருணெறி, சேர்ந்து புனைந்து புணர்நெறி யாமே. (எ)

ஈரு மனத்தை யிரண்டற வீசுமின், னூருஞ் சகாரத்தை யோதுமின் னோதியே, வாரு மரனெறி மன்னியே முன்னியத்,

தூருஞ் சுடரொளி தோன்றலு மாமே. (அ)

மினற்குறி யாளனை வேதியர் வேதத், தனற்குறி யாளனை யாதிப் பிரான்றன்னை, நினைக்குறி யாளனை ஞானக் கொழுந்தி, னையக்குறி காணி லரனெறி யாமே. (கூ)

ஆய்ந்துணர் ரார்களி னுன்மாச் சதிர்பல,வாய்ந்துணர் ராவகை நின்ற வரனெறி, பாய்ந்துணர் வாரரன் சேவடி கைதொழு, தேர்ந்துணர் செய்வதோ ரின்பமு மாமே. (க0)

சைவச் சமயத் தனிநா யகனந்தி, யுய்ய வகுத்த குருநெறி யொன்றுண்டு, தெய்வச் சிவநெறி சன்மார்க்கஞ் சேர்ந்துய்ய, வையத்து ளார்க்கு வகுத்துவைத் தானே. (கக)

இத்தவ மத்வ மென்றிரு பேரிடும், பித்தரைக் காணி னகு மெங்கள் பேர்நந்தி, யெத்தவ மாகிலென் னெங்குப் பிறக்கிலென், னுத்துணர் வார்க்கொல்லை யூர்புக லாமே. (கஉ)

ஆமே பிரான்முக மைந்தொடு மாருயி, ராமே பிரானுக் கதோமுக மாறுள, தாமே பிரானுக்குந் தன்சிர மாலைக்கு, நாமே பிரானுக்கு நரரியல் பாமே. (கங)

ஆதிப் பிரானுல கேழு மளந்தவ, னோதக் கடலு முயிர்களு மாய்நிற்கும், பேதிப் பிலாமையி னின்ற பராசத்தி, யாதிக்கட் டெய்வமு மந்தமு மாமே. (கச)

ஆய்ந்தறி வார்களமரர்வித் தியாதர, ராய்ந்தறி யாவண நின்ற வரனெறி, வாய்ந்தறிந் தேனவன் சேவடி கைதொழக், காய்ந்தறிந் தேனிம்மை யம்மைகண் டேனே. (கரு)

அறியவொண் ணுதவ் வுடம்பின் பயனை, யறியவொண் ணுத வறுவகை யாக்கி, யறியவொண் ணுத வறுவகை கோசத், தறியவொண் ணுததோ ரண்டம் பதிந்ததே. (கசு)

ஆ அதிகாரம் - உங௲ - திருமந்திரம் - கருச.

ஐந்தாந்தந்திர முற்றும்.

ஆ சிறப்புப்பாயிரமுட்பட - அதிகாரம் - ககரு௲.

கூடியதிருமந்திரம் - கருளஉ.

# ஆறுந்தந்திரம்.



## சிவகுருதரிசநம்.

பத்திப் பணித்துப் பரவு மடிநல்கிச், சுத்த வுரையாற் றுரிசறச் சோதித்துச், சத்து மசத்துஞ் சதசத்துங் காட்டலாற், சித்த மிறையே சிவகுரு வாமே. (க)

பாசத்தைக் கூட்டியே கட்டிப் பறித்திட்டு, நேசித்த காயம் விடுவித்து நேர்நேரே, கூசற்ற முத்தியிற் கூட்டலா நாட்டத்த, தாசற்ற சற்குரு வம்பல மாமே. (உ)

சித்திக ளெட்டொடுந் திண்சிவ மாக்கிய, சுத்தியு மெண் சத்தித் தூய்மையும் போகத்துச், சத்தியு மந்திர சாதக போதமும், பத்தியு நாத னருளிற் பயிலுமே. (ங)

எல்லா வுலகிற்கு மப்பாலோ னிப்பாலாய், நல்லா ருள்ளத்து மிக்கரு ணல்கலா, லெல்லாரு முய்யக்கொண் டிங்கே யளித்தலாற், சொல்லார்ந்த நற்குரு சுத்த சிவமே. (ச)

தேவனுஞ் சுத்த குருவு முபாயத்துள், யாவையு மூன்று யுனக்கண் டுரையாலே, மூவாப் பசுபாச மாற்றியே முத்திப்பால், யாவையு நல்குங் குருபர னன்புற்றே. (ரு)

சுத்த சிவன்குரு வாய்வந்து தூய்மைசெய், தத்தனை நல்கருள் காணு வதிமூடர், பொய்த்தகு கண்ணு னமரென்பர் புண்ணிய, ரத்த னிவனென் றடிபணி வாரே. (சு)

உண்மையிற் பொய்மை யொழித்தலு முண்மைப்பார், திண்மையு மொண்மைச் சிவமாய வவ்வரன், வண்மையு மெட்டெட்டுச் சித்தி மயக்கமு, மண்ண லருளன்றி யாரறி திவாரே. (எ)

சிவனே சிவஞானி யாதலாற் சுத்த, சிவனே யெனவடி சேரவல் லார்க்கு, நவமான தத்துவ நன்முத்தி நண்ணும், பவ

திருவடி ஞானஞ் சிவமாக்கு விக்குந், திருவடி ஞானஞ் சிவலோகஞ் சேர்க்குந், திருவடி ஞானஞ் சிறைமல மீட்குந், திருவடி ஞானமே திண்சித்தி முத்தியே. (௯)

மேல்வைத்த வாறுசெய் யாவிடின் மேல்வினை, மால்வைத்த சிந்தையை மாயம தாக்கிடும், பால்வைத்த சென்னிப் படரொளி வானவன், றாள்வைத்த வாறு தரிப்பித்த வாறே (௧௦)

கழலார் கமலத் திருவடி யென்னு, நிழல்சேரப் பெற்றே னெடுமா லறியா, வழல்சேரு மங்கியு ளாதிப் பிரானுங், குழல்சேரு மின்னுயிர்க் கூடுங் குலைத்ததே. (௧௧)

முடிமன்ன ராகின்மூ வுலகம தாள்வ, ரடிமன்ன ரின்பத் தளவில்லை கேட்கின், முடிமன்ன ராய்நின்ற தேவர்க ளீசன், குடிமன்ன ராய்க்குற்ற மற்றுநின் றாரே. (௧௨)

வைத்தே னடிக்கண் மனத்தினுள் ளேநான், பொய்த்தே யெரியும் புலன்வழி போகாம, லெய்த்தே னுழலு மிருவினை மாற்றிட்டு, மெய்த்தே னறிந்தேனவ் வேதத்தி னந்தமே. (௧௩)

அடிசார லாமண்ணல் பாத மிரண்டு, முடிசார வைத்தனர் முன்னை முனிவர், படிசார்ந்த வின்பப் பழவடி வெள்ளக், குடிசார் நெறிகூடி நிற்பவர் கொள்கையே. (௧௩)

மந்திர மாவது மாமருந் தாவதுந், தந்திர மாவதுந் தானங்க ளாவதுஞ், சுந்தர மாவதுந் தூய்நெறி யாவது, மெந்தை பிரான்ற னிணையடி தானே. (௧௫) ஆ ௩௨.

---

ஞாதுருஞானஞேயம்.

ரீங்காச் சிவானந்த ஞேயத்தே நின்றிடப், பாங்கான பாசம் படரப் படரினு, மாங்கார நீங்கி யதனிலை நிற்கவே, நீங்கா வமுத நிலைபெற லாமே. (௧)

ஞேயத்தே நின்றோர்க்கு ஞானாதி நின்றிடு, ஞேயத்தின் ஞாதுரு ஞேயத்தில் வீடாகு, ஞேயத்தின் ஞேயத்தை ஞேயத்

தை யுற்றவ, ராயத்தி னின்ற வறிவறி வாரே. (உ)

தானென் றவனென் றிரண்டாகுந் தத்துவந், தானென் றவனென் றிரண்டுந் தனிற்கண்டு, தானென்ற பூவை யவனடி சாத்தினு, நானென் றவனென்கை நல்லதொன் றன்றே, (௩)

வைச்சன வாறுறு மாற்றி யெனைவைத்து, மெச்சப் பரன் றன் வியாப்துவ மேலிட்டு, நிச்சய மாக்கிச் சிவமாக்கி ஞேயத் தா, லச்சங் கெடுத்தென்னை யாண்டன னந்தியே. (ச)

முன்னை யறிவறி யாதவம் மூடர்போற், பின்னை யறிவறி யாமையைப் பேதித்தான், றன்னை யறியப் பரனுக்கித் தற்சிவ த், தென்னை யறிவித் திருந்தன னந்தியே. (ரு)

காணாத கண்ணுடன் கேளாத கேள்வியுங், கோணாத போகமுங் கூடாத கூட்டமு, நாணாத நாணமு நாதாந்த போதமு ங், காணா யெனவந்து காட்டின னந்தியே. (சு)

மோனங்கை வந்தோர்க்கு முத்தியுங் கைகூடு, மோனங் கை வந்தோர்க்குச் சித்தியு முன்னிற்கு, மோனங்கை வந் மை யரமொழி முற்றுங்காண், மோனங்கை வந்தைங் கருமமு முன்னுமே. (எ)

முத்திரை மூன்றின் முடிந்தது மூன்றின்பால், வைத்த கலைகால் நான்மடங் கான்மாற்றி,யுய்த்தவத் தானந்தத் தொண குரு பாதத்தே, பெத்த மறுத்தோர் பிறந்திற வாரே. (அ)

மேலைச் சொரூபங்கண் மூன்று மிகுசத்து, பாலித்த முத் திரை பற்றும் பரஞானி, யாலித்த நட்டமே ஞேயம் புகுந்தற் ற, மூலச் சொருபன் மொழிஞா துருவனே. (கூ) ஆ. சக.

---

துறவு.

இறப்பும் பிறப்பு மிருமையு நீங்கித், துறக்குந் தவங்கண் ட சோதிப் பிரானை, மறப்பில ராய்நித்தம் வாய்மொழி வார்

கட், கறப்பதி காட்டுமமரர் பிரானே. (க)

பிறந்து மிறந்தும்பல் பேதமை யாலே, மறந்து மலவிரு ணீங்க மறைந்து, சிறந்த சிவனருட் சேர்பரு வத்துத், துறந்த வுயிர்க்குச் சுடரொளி யாமே. (உ)

அறவன் பிறப்பிலி யாருமிலாதா, னுறைவது காட்டக முண்பது பிச்சை, துறவெனுங் கண்டீர் துறந்தவர் தம்மைப், பிறவி யறுத்திடும் பித்தன்கண் டீரே. (ங)

நெறியைப் படைத்தா னெருஞ்சில் படைத்தா, னெறியில் வழுவி னெருஞ்சில்முட் பாயு, நெறியில் வழுவா தியங்கவல் லார்க்கு, நெறியி னெருஞ்சின்முட் பாயகி லாவே. (ச)

கேடுங் கடமையுங் கேட்டுவந் தைவரு, நாடி வளைந்தது நான்கட வேனலே, னுடல் விடையுடை யண்ணல் திருவடி, கூடுந் தவஞ்செய்த கொள்கையன் றானே. (ரு)

உழவ னுழவுழ வானம் வழங்க, வுழவ னுழவினிற் பூத்த வேளை, யுழவ னுழத்தியர் கண்ணேனுக்கு மென்றிட், டுழவ னதனை யுழுதொழிந் தானே. (சு)

மேல்துறந் தண்ணல் விளங்கொளி கூற்றுவன், னாள்துறந் தார்க்கவ னண்பனல் லாவிலி, கார்துறந் தார்க்கவன் கண்ணுத லாய்நிற்கும், பார்துறந் தார்க்கே பதஞ்செய லாமே ()

நாகமு மொன்று படமைந்து நாலது, போகமுட் புற்றிற் பொருந்தி நிறைந்தது, வாக மிரண்டும் படம்விரித் தாட்டொழிந், தேகப் படஞ்செய் துடம்பிட மாமே. (அ)

அகன்றார் வழிமுத லாதிப் பிரானு, மிவன்றா னெனநின் றெளியனு மல்லன், சிவன்றாள் பலபல சீவனு மாகு, நயனமுன் வரும்வழி நாமறி யோமே. ௮ (கூ)

காம்பு திறந்தன வொன்பது வாய்தலு, மாம்பற் குழலியின் கஞ்சுளிப் பட்டது, வேம்பேறி நோக்கினன் மீகாமன் கூ

றயிற், கூம்பேறிக் கோயிலிற் பூக்கின்ற வாறே. (௪0) அ௨ருக.

---

## தவம்.

ஒடுங்கு நிலைபெற்ற வுத்தம ருள்ள, நடுங்குவ தில்லை நமனுமங் கில்லை, யிடும்பையு மில்லை யிராப்பக லில்லை, படும்பய னில்லை டறறுவிட் டோர்க்கே. (௧)

எம்மா ருயிரு மிருநிலத் தோற்றமுஞ், செம்மா தவத்தின் செயலின் பெருமையு, மம்மான் றிருவருட் பெற்றவர்க் கல்லா, திம்மா தவத்தி னியல்பட்றி யாரோ. (௨)

பிறப்பறி யார்பல பிச்சைசெய் மாந்தர், சிறப்பொடு வேண்டிய செல்வம் பெறுவர், மறப்பில ராகிய மாதவஞ் செய்வார், பிறப்பினை நீக்கும் பெருமைபெற் றாரே. (௩)

இருந்து வருந்தி யெழிற்றவஞ் செய்யும், பெருந்தன்மையாளரைப் பேதிக்க வென்றே, யிருந்திந் திரனே யெவரே வரினுந், திருந்துந்தன் சிந்தை சிவனவன் பாலே. (௪)

கரந்துங் கரந்திலன் கண்ணுக்குந் தோன்றான், பரந்த சடையன் பசும்பொன் னிறத்த, னருந்தவர்க் கல்லா லணுகலு மாகான், விரைந்து தொழப்படும் வெண்மதி யானே. (௫)

இன்னெய்த வைத்ததோ ரின்பப் பிறப்பினை, முன்னெய்த வைத்த முதல்வனை யெம்மிறை, தன்னெய்துங் காலத்துத் தானே வெளிப்படு, மன்னெய்த வைத்த மனமது தானே. (௬)

அமைச்சரு மானைக் குழாமு மரசும், பகைத்தெழும் பூசலுட் பட்டார் நடுவே, யமைத்ததோர் ஞானமு மாத்தமு நோக்கி, யிமைத்தழி யாதிருந் தார்தவத் தாரே. (௭)

சாத்திர மோதுஞ் சதிர்களை விட்டுநீர், மாத்திரைப் போது மறித்துள்ளே நோக்குமின், பார்த்தவிப் பார்வை பசுமாத் தானிடோ, லார்த்த பிறவி யகலவிட் டோடுமே. (அ)

தவம்வேண்டு ஞானந் தலைப்பட வேண்டிற், றவம்வேண் டா ஞான சமாதிகை கூடிற், றவம்வேண்டா மச் சகசமார்க் கத்தோர்க்குத், தவம்வேண்டா மாற்றந் தனையறி யாரோ. (கூ)

ஆ௨ கூ௦.

தவதூடணம்.

ஓதலும் வேண்டா முயிர்க்குயி ருள்ளூற்றாற், காதலும் வேண்டாமெய்க் காய மிடங்கண்டாற், சாதலும் வேண்டாஞ் சமாதிகை கூடினாற்,போதலும் வேண்டாம் புலன்வழி போகார்க்கே. (க)

கத்தவும் வேண்டாங் கருத்தறிந் தாறினாற், சத்தமும் வேண்டாஞ் சமாதிகை கூடினாற், சுத்தமும் வேண்டாந் துடக்கற்று நிற்றலாற், சித்தமும் வேண்டாஞ் செயலற் றிருக்கிலே.

வினைவறி வார்பண்டை மெய்த்தவஞ் செய்வார், வினைவறி வார்பண்டை மெய்யுரை செய்வார், வினைவறி வார்பண்டை மெய்யறஞ் செய்வார், வினைவறி வார்விண்ணின் மண்ணின்மிக் காரே. (ந)

கூடித் தவஞ்செய்து கண்டேன் குரைகழல், தேடித் தவஞ்செய்து கண்டேன் சிவகதி, வாடித் தவஞ்செய்வ தேதவ மிவைகளந், தூடிற் பலவுல கோரெத் தவரே. (ச)

மனத்துறை மாகட லேழுங்கை நீந்தித், தவத்திடை யாளர்தஞ் சார்வத் துவந்தார் பவத்திடை யாள ரவர்பணி கேட்கின், முகத்திடை நந்தியை முந்தலு மாமே. (ரு)

மனத்திடை நின்ற மதிவா ளுருவி, யினத்திடை நீக்கி யிரண்டற வீர்த்துப், புனத்திடை யஞ்சும் போகாமல் மறித்தாற், றவத்திடை யாருளி தன்னொளி யாமே. (சு)

ஒத்து மிகவுநின் றானை யுரைப்பது, பத்தி சொடுக்கும் பணிந்தடி யார்தொழ, முத்தி கொடுக்கு முனிவ னெனும்பதச்,

சத்தான செய்வதுந் தான்றவந் தானே. (எ)

இலைதொட்டுப் பூப்பறித் தெந்தைக்கென் றெண்ணி, மல ர்தொட்டுக் கொண்டே வரும்புனல் காணேன், றலைதொட்ட நூற்கண்டு தாழ்ந்ததென் னுள்ளந், தலைதொட்டுக் கண்டேன் றவங்கண்ட வாறே. (அ)

படர்சடை மாதவம் பத்திய பத்தர்க், கிடரடை யாவ ண்ண மீச னருளு, மிடரடை செய்தவர் மெய்த்தவ நோக்கி, லுடரடை செய்வ தொருமனைத் தாமே. (கூ)

ஆற்றிற் கிடந்த முதலைகண் டஞ்சிப்போ, யீற்றுக் கரடிக் கெதிர்ப்பட்ட தன்னொக்கு, நோற்றுத் தவஞ்செய்யார் நூலறி யாதவர், சோற்றுக்கு நின்று சுழல்கின்ற வாறே. (கய)

பழுக்கின்ற வாறும் பழமுண்ணு மாறுங், குழக்கன்று துள்ளியக் கோணியைப் புல்காற், குழக்கன்று கொட்டிலிற் கட்டவல் லார்க்குள், ளிழுக்காது நெஞ்சத் திடவொன்று மாமே. (கக)

சித்தஞ் சிவமாகச் செய்தவம் வேண்டாவாற், சித்தஞ் சிவானந்தஞ் சேர்ந்தோ ருறவுண்டாற், சித்தஞ் சிவமாக வே சித்தி முத்தியாஞ், சித்தஞ் சிவமாதல் செய்தவப் பேறே. ()

(கஉ) ஆ எஉ.

---

அருளுடைமையின் ஞானம்வருதல்.

பிரானரு ளுண்டெனி லுண்டுநற் செல்வம், பிரானரு ளுண்டெனி லுண்டுநன் ஞானம், பிரானரு ளிற்பெருந் தன்மையு முண்டு, பிரானரு ளாற்பெருந் தெய்வமு மாமே. (க)

தமிழ்மண் டலமைந்துந் தாவிய ஞான, முமிழ்வது போல வுலகந் திரிவா, ரவிழு மனமுமெம் மாதி யறிவுந், தமிழ்மண் டலமைந்துந் தத்துவ மாமே. (உ)

புண்ணிய பாவ மிரண்டுள பூமியி, னண்ணும் பொழுதறி வார்சில ஞானிக, ளெண்ணி யிரண்டையும் வேரறுத் தப்புறத், தண்ண லிருப்பிட மாய்ந்துகொள் வீரே. (௩)

முன்னின் றருளு முடிகின்ற காலத்து, நன்னின் றுலகி னவைமி ராய்நிற்கும், பின்னின் றருளும் பிறவியை நீக்கிடு, முன் னின் றெனக்கொரு முத்திதந் தானே. (௪)

சிவனரு ளாற்சிலர் தேவரு மாவர், சிவனரு ளாற்சிலர் தெய்வத்தோ டொப்பர், சிவனரு ளால்வினை சேரகி லாமை, சிவனருட் கூறிலச் சிவலோக மாமே. (௫)

புண்ணிய னெந்தை புனித னிணையடி, நண்ணி விளக்கெ, ன ஞானம் விளைந்தது, மண்ணவ ராவதும் வானவ ராவது, மண்ண லிறைவ னருட்பெற்ற போதே. (௬)

காலத்தே றேறி மனப்பாகன் கைகூட்ட, மாயத்தே றேறி மயங்கு மவையுணர், நேயத்தே றேறி நிமல னருட்பெற்று, லா யத்தே றேறி யவனிவ னாமே. (௭)

அவ்வுல கத்தே பிறக்கி லுடலொடு, மவ்வுல கத்தே யருந், தவர் நாடுவ், ரவ்வுல கத்தே யரனடி கூடுவ, ரவ்வுல கத்தே யருள்பெறு வாறே. (௮)

கதிர்கண்ட காந்தங் கனலின் வடிவா, மதிகண்ட காந்த மணிநீர் வடிவாஞ், சதிகொண்ட சாக்கி யெரியின் வடிவா, மெ ரிகொண்ட வீச னெழில்வடி வாமே. (௯)

நாடு முறவுங் கலந்தெங்க ணந்தியைத், தேடுவன் றேடிச் சிவபெரு மானென்று, கூடுவன் கூடிக் குரைகழற் கேசெல, வி டு மளவும் விடுகின்றி லேனே. (௧௦) ஆக அ௨.

---

அவவேடம்.

ஆடம் பரங்கொண் டடிசிலுண் பான்பயன், வேடங்கள்

கொண்டு வெருட்டிடும் பேதைகா, ளாடியும் பாடியு மழுது மர ற்றியுந், தேடியுங் காணீர் சிவனவன் றாள்களே. (க)

ஞான மிலார்வேடம் பூண்டிந்த நாட்டிடை, யீன மதே செய் திரந்துண் டிருப்பினு, மான நலங்கெடு மப்புவி யாதலா, லீனவர் வேடங் கழிப்பித்த லின்பமே. (உ)

இன்பமுந் துன்பமு நாட்டா ரிடத்தள, நன்செயல் புன் செய லாலந்த நாட்டிற்கா, மென்ப விறைநாடி நாடொறு நா ட்டினின், மன்பதை செப்பஞ் செயில்வையம் வாழுமே, (ங)

இழிகுலத் தார்வேடம் பூண்பர்மே லெய்த, வழிகுலத் தோர்வேடம் பூண்பர்தே வாகப், பழிகுலத் தாகிய பாழ்ச ண்ட ராளுர், கழிகுலத் தோர்கள் களையப்பட் டோரே. (ச)

பொய்த்தவஞ் செய்வார் புகுவார் நரகத்துப், பொய்த்த வஞ் செய்தவர் புண்ணிய ராகாரோற், பொய்த்தவ மெய்த்தவ ம் போசத்துட் போக்கியஞ், சத்திய ஞானத்தாற் றங்குந் தவ ங்களே. (ரு)

பொய்வேடம் பூண்பர் பொசித்தற் பயனாக, மெய்வேட ம் பூண்போர் மிகுமிச்சை கைக்கொள்வர், பொய்வேட மெய் வேடம் போதவே பூணினு, முய்வேட மாகு முணர்ந்தறிந் தோ ர்க்கே. (சு) ஆ அஅ.

---

## தவவேடம்.

தவமிக் கவரே தலையான வேட, மவமிக் கவரே யதிகொ லை வேட, ரவமிக் கவர்வேடத் தாகாரவ் வேடந், தவமிக்கவ ர்க்கன்றித் தாங்கவொண் ணாதே. (க)

பூதி யணிவது சாதந மாதியிற், காதணி தாம்பிர குண் டலங் கண்டிகை, யோதி யவர்க்கு முருத்திர சாதநந், தீதில் சிவயோகி சாதநந் தேரிலே. (உ)

யோகிக் கிடுமது வுட்கட்டு கஞ்சுளி, தோகைக்குப் பாசத்துச் சுற்றுஞ் சடையதொன், ருகத்த நீறணி யாங்கக்க பாலஞ், சீகத்த மாத்திரை திண்பிரம் பாகுமே. (ரு)

காதணி குண்டலங் கண்டிகை நாதமு, மூதுநற் சங்கு முயர்கட்டிக் கப்பரை, யேதமில் பாதுக மியோகாந்த மாதன, மேதமி லியோகப் படந்தண்ட மீரைந்தே. (௬) ஆ கஉ.

---

## திருநீறு.

நூலுஞ் சிகையு முணரார்நின் மூடர்கள், நூலது வேதாந்த நுண்சிகை ஞானமாம், பாலொன்று மந்தணர் பார்ப்பார் பரமுயி, ரோரொன் றிரண்டினி லோங்கார மோதிலே. (க)

கங்காளன் பூசுங் கவசத் திருநீற்றை, மங்காமற் பூச மகிழ்விரோ யாமாகிற், றங்கா வினைகளுஞ் சாருஞ் சிவகதி, சிங்கார மான திருவடி சேர்வரோ. (உ)

அரசுட ஞலத்தி யாகுமக் காரம், விரவு கனலில் வியனுரு மாறி, நிரவய னின்மலன் ருள்பெற்ற நீத, ருருவம் பிரம னுயர்குல மாமே. (௩) ஆ கரு.

---

## ஞானவேடம்

ஞான மிலார்வேடம் பூண்டு நரகத்தர், ஞான முள்ளோர் வேட மின்றெனி னன்முத்தர், ஞான முளதாக வேண்டுவோர் நக்கன்பான், ஞான முளவேட நண்ணிகிற் பாரே. (க)

புன்ஞானத் தோர்வேடம் பூண்டும் பயனில்லை, நன்ஞானத் தால்வேடம் பூண ருணண்ணித், தன்ஞானத் தோர்சமயத்துரி சுள்ளோர், பின்ஞானத் தோரொன்றும் பேசகில்லாரே. (உ)

சிவஞானி கட்குஞ் சிவயோகி கட்கு, மவமான சாதந மா காது தேரி, லவமா மவர்க்கது சாதந நான்கு, முவமான மி ல்பொரு ளுள்ளுற லாமே. (ங)

கத்தித் திரிவர் கழுவடி நாய்போற், கொத்தித் திரிவர் கு ரக்களி ஞானிக, ளொத்துப் பொறியு முடலு மிருக்கவே செத் துத் திரிவர் சிவஞானி யோர்களே. (ச)

அடியா ரவரே யடியா ரலாதா, ரடியாரு மாகாரவ் வே டமு மாகா, ரடியார் சிவஞான மானது பெற்றோ, ரடியா ர லாதா ரடியார்க ளன்றே. (ரு)

ஞானிக்குச் சுந்தர வேடமு நல்லவாந், தானுற்ற வேடமு ந் தற்சிவ யோகமே, யானவவ் வேட மருண்ஞான சாதந, மா னது மாமொன்று மாகா தவனுக்கே. (சு)

ஞானத்தி னுற்பத நண்ணுஞ் சிவஞானி, தானத்தில் வை த்த தனியா லயத்தனு, மோனத்த னுதலின் முத்தனுஞ் சித்த னு, மேனைத் தவசி யிவனென லாகுமே. (எ)

தானன்றித் தன்மையுந் தானவ னுதலு, மேனைய வச்சி வ மான வியற்கையுந், தானுறு சாதக முத்திரை சாத்தலு, மே னமு நந்தி பதமுத்தி பெற்றதே. (அ) ஆ சoங.

---

## சிவவேடம்.

அருளா லரனுக் கடிமைய தாகிப்,பொருளாந் தனதுடற் பொற்பதி நாடி, யிருளான தின்றி யிருஞ்செய லற்றோர், தெ ருளா மடிமைச் சிவவேடத் தாரே. (க)

உடலிற் றுவக்கிய வேடமுயிர்க் காகா, வுடல்கழன் றால் வேடமு முடனே கழலு, முடலுயி ருண்மையென் றோர்ந்துகொள் ளாதார், கடலி லகப்பட்ட கட்டையொத் தாரே. (உ)

மயலற் றிருளற்று மாமன மற்றுக், கயலுற்ற கண்ணியர் கையிணைக் கற்றுத், தயலற் றவரோடுந் தாமேதா மாகிச், செய லற் றிருந்தார் சிவவேடத் தாரே. (ங)

ஓடுங் குதிரைக் குசைதிண்ணம் பற்றுமின், வேடங்கொண் டென்செய்வீர் வேண்டா மனிதரே, நாடுமி னந்தியை நம்பெ ருமான்றன்னைத், தேடுமின் பப்பொருள் சென்றெய்த லாமே (ச) ஆ. கoஎ

---

## அபக்குவன்.

குருட்டினை நீக்குங் குருவினைக் கொள்ளார், குருட்டினை நீக்காக் குருவினைக் கொள்வர், குருடுங் குருடுங் குருட்டாட்ட மாடிக், குருடுங் குருடுங் குழிவிழு மாறே. (க)

மனத்தி லெழுந்ததோர் மாயக்கண் ணாடி, நினைப்பி னதனி னிழலையுங் காணார், வினைப்பயன் போக விளக்கியுங் கொள் ளார், புறக்கடை யிச்சித்திறப் போகின்ற வாறே. (உ)

ஏயெனி லென்னென மாட்டார் பிரசைகள், வாய்முலை பெய்ய மதுரநின் றூறிடுந், தாய்முலை யாவ தறியார் தமருளோ, ருனிலை செய்யு முருவிலி தானே. (ங)

வாபொன்று சொல்ல மனமொன்று சிந்திக்க, நீயொன்று செய்ய லுறுதி நெடுந்சகாய், தீயென்றிங் குன்னைத் தெளியவன் றெளிந்தபின், பேயென்றிங் கென்னைப் பிறர்தெளி யாரோ. (ச)

பஞ்சத் துரோகத்துப் பாதகர் தம்மை, பஞ்சச் சமயத் தோர் வேந்த னருந்தண்டம், விஞ்சச் செய்திப் புவிவேறே வி டாவிடிற், பஞ்சத்து ளாய்புவி முற்றும்பா ழாகுமே. (ரு)

தவத்திடை நின்றவர் தாமுண்ணுங் கன்மஞ், சிவத்திடை நின்றது தேவ ரறியார், தவத்திடை நின்றறி யாதவ ரெல்லா ம், பவத்திடை நின்றதோர் பாடது வாமே. (சு)

கன்றலுங் கருதலுங் கருமஞ் செய்தலுந், தின்றலுஞ் சுவைத்தலுந் தீமை செய்தலும், பின்றலும் பிறங்கலும் பெருமை கூறலு, மென்றிவை யிறைபா லியற்கை யல்லவே. (எ)

வெடிவ தறியார் வெளிகாண மாட்டார், வெடியில் வெளியில் விழிக்கவு மாட்டார், கடியதோ ருண்ணிமை கட்டுமின் காண்மின், விடியாமை காக்கும் விளக்கது வாமே. (அ)

வைத்த பசுபாச மாற்று நெறிவைகிப், பெத்த மரமுத்த ராகிப் பிறழ்வுற்றுத், தத்துவ முன்னித் தலைப்படா தவ்வாறு, பித்தான சீடனுக் கீயப் பெருதானே. (கூ)

மன்னு மலமைந்து மாற்றும் வகையோரான், றுன்னிய காமாதி நோயுந் தொழினீங்கான், பின்னிய பொய்யன் பிறப்பிறப் பஞ்சாதா, னன்னிய ருவனைசற்சீட ராமே. (க0)

ஆக கக எ.

---

பக்குவன்.

தொழிலறி வாளர் சுருதிகண் ணாகப், பழுதறி யாத பரம குருவை, வழியறி வார்நல் வழிபறி வாள, ரழிவறி வார்மற் றையல்லா தவரே. (க)

பதைத்தொழிந் தேன்பர மாவுன்னை நாடி, யதைத்தொழிந் தேனினி யாருடன் கூடேன், சிதைத்தடி யேன்வினை சிந்த நின்ற தீர, வுதைத்தனை யாயுகந் தாண்டரு ளாயே. (உ)

பதைக்கின்ற போதே பரமென்னும் வித்தை, விதைக்கின்ற வித்தினை மேனின்று நோக்கிச், சிதைக்கின்ற சிந்தையைச் செவ்வே நிறுத்தி, யிசைக்கின்ற வின்பருக் கீயலு மாமே. (ந)

கொள்ளினு நல்ல குருவினைக் கொள்ளுக, வுள்ள பொருளுட லாவி யுடனீக, வெள்ளத் தனையு மிடைவிடா தேநின்று, தெ

ள்ளி யறியச் சிவபதந் தானே. (௪)

சோதி விசாகந் தொடர்ந்திரு தேள்நண்டு, வோதிய நாளே யுணர்வது தானென்று, நீதியு ணீர்மை நினைந்தவர்க் கல்லது, வாதியு மேது மறியகி லானே. (௫)

தொழிலார மாமணித் தூய்தான சிந்தை, யெழிலா லிறைவ னிடங்கொண்ட போதே, விழலார் விறலாம் வினையது போகக், கழலார் திருவடி கண்டருளாமே. (௬)

சாத்திக ஞேயப்பர தத்துவந் தானுன்னி, யாத்திக பேத நெறிதோற்ற மாகியே, யார்த்த பிறவியி னஞ்சி யறநெறி, சாத்தவல் லானவன் சற்சீட ளுமே. (எ)

சத்து மசத்துமெவ் வாறெனத் தானுன்னிச். சித்தை யுருக்கிச் சிவனருட் கைகாட்டப், பத்தியின் ஞானம் பெறப்பணிந் தானந்தச், சத்தியி லிச்சைத் தகுவோன்சற் சீடனே. (அ)

அடிவைத் தருளுதி யாசானின் றுன்று, வடிவைத்த மாமுடி மாயப் பிறவி, யடிவைத்த காய வருட்சத்தி யாலே, யடிபெற்ற ஞானத்த ஞசற்று ளோனே. (௯)

சீராரு ஞானத்தி லிச்சை செலச்செல்ல, வாராத காதற் குருபரன் பாலாகச், சாராத சாதக நான்குந்தன் பாலுற்றோ, ஞராயு ஞானத்த ஞமடி வைக்கவே. (௧0)

உணர்த்து மதிபக் குவர்க்கே யுணர்த்தி, யிணக்கிற் பராபரத் தெல்லையு ளிட்டுக், குணக்கொடு தெற்குத் தரபச்சி மங்கொண்டு, வுணர்த்துமின் னுவுடை யான்றன்னை யுள்ளியே. ()

இறையடி தாழ்ந்தை வணக்கமு மெய்திக், குறையது கூறிக் குணங்கொண்டு போற்றச், சிறையுட னீயறக் காட்டிச் சிவத்தோ, டறிவுக் கறிவிப்போன் சன்மார்க்கி யாமே. (௧௨)

வேட்கை விடுநெறி வேதாந்த மாதலால், வாழ்க்கைப் பு

லன்வழி மாற்றிச்சித் தாந்தத்து, வேட்கை விடுவிக்க வேதா ந்தி பாதமே, தாழ்க்குந் தலைவினேன் சற்சீட னாமே. (௧௩)

சற்குணம் வாய்மை தயாவிவே கந்தன்மை,சற்குரு பாத மே சாயைபோ னீங்காமே, சிற்பர ஞானந் தெளியத் தெளி வோர்த, லற்புத மேதோன்ற லாகுஞ்சற் சீடனே. (௧௪)

ஆக அதிகாரம் ௧௪-இல் திருமந்திரம்-௧௩௧.
ஆறுந்தந்திர முற்றும்.

ஆக சிறப்புப்பாயிர முட்பட-அதிகாரம் ௬௨௯-இல் கூடிய திருமந்திரம்-௧௭0௩.

---

# ஏழாந்தந்திரம்.



## ஆறுதாரம்.

நாலு மிருமூன்று மீரைந்து மீராறுங், கோலிமே னின்ற குறிகள் பதினாறு, மூலங்கண் டாங்கே முடிந்து முதல்ரண்டு ங், காலங்கண் டானடி காணலு மாமே. (௧)

ஈராறு நாதத்தி லீரெட்டா மந்தத்தின்,மேதாதி நாதாந் த மீதாம் பராசத்தி, போதா லயத்தவி காரந் தனிற்போத, மேதாதி யாதார மீதான வுண்மையே. (௨)

மேலென்றுங் கீழென் றிரண்டறக் காணுங்கால், றுனெ ன்றுநானன்றுந் தன்மைக ளோராறும், பாரெங்கு மாகிப் பரந்த பராபரங், காரொன்று கற்பக மாகநின் றனே. (௩)

ஆதார சோதனை யாநாடி சுத்திகண், மேதாதி யீரெண் கலந்தது விண்ணொளி, போதா லயத்துப் புலன்கர ணம்புந் தி, சாதா ரணங்கெட்டான் றன்சக மார்க்கமே. (௪)

மேதாதி யாலே விடாதோ மெனத்தூண்டி, யாதார சோதனை யத்துவா சோதனை, தாதார மாகவே தானெழச் சாதித்தா, லாதாரஞ் செய்போக மாவது காயமே. (௫)

ஆறந்த முங்கூடி யாகு முடம்பினிற், கூறிய வாதார மற்றுங் குறிக்கொண்மி, னூறிய வக்கர மன்பதின் மேலே, யூறிய வாதாரத் தோரெழுத் தாமே. (௬)

ஆகு முடம்பு மழிகின்ற வவ்வுடல், போகு முடம்பும் பொருந்திய வாறுதா, னாகிய வக்கர மைம்பது தத்துவ, மாகு முடம்புக்கு மாறந்த மாமே. (௭)

ஆயு மலரி னணிமலர் மேலது. வாய விதழும் பதினாறு மங்குல, தூய வறிவு சிவானந்த மாகிப்போய், மேய வறிவாய் விளந்தது தானே. (௮)

---

அண்டலிங்கம்.

இலிங்கம தாவ தியாரு மறியா, ரிலிங்கம தாவது வெண்டிசை யெல்லா, மிலிங்கம தாவது வெண்ணெண் கலையு, மிலிங்கம தாக வெடுத்த துலகே. (௧)

உலகி லெடுத்தது சத்தி முதலா, வுலகி லெடுத்தது சத்தி வடிவா, யுலகி லெடுத்தது சத்தி குணமா, யுலக மெடுத்த சதாசிவன் றானே. (௨)

போகமு முத்தியும் புத்தியுஞ் சித்தியு, மாகமு மாறாறு தத்துவத் தப்பாலா, மேகமு கல்கி யிருக்குஞ் சதாசிவ, மாகம வத்துவா வாறுஞ் சிவமே. (௩)

ஏத்தின ரெண்ணிலி தேவரெம் மீசனை, வாழ்த்தினர் வாசப் பசுந்தென்றல் வள்ளலென், றார்த்தன ரண்டங் கடந்தப் புறநின்று, காத்தன னென்னுங் கருத்தறி யாரே. (௪)

ஒண்சுட ரோனயன் மால்பிர சாபதி, யொண்சுட ரான
விரவியொ டிந்திரன், கண்சுட ராகிக் கலந்தெங்குந் தேவர்க,
டண்சுட ராயெங்குந் தற் பர மாமே. (௫)

தாபரத் துண்ணின் றருளவல் லான்சிவன், மாபரத் து
ண்மை வழிபடு வாரில்லை, மாபரத் துண்மை வழிபடு வாளர்க்
கும், பூவகத் துண்ணின்ற பொற்கொடி யாகுமே. (௬)

தூய விமானமுந் தூலம தாகுமா, லாய சதாசிவ மாகு
நற் சூக்குமம், பாய பலிபீடம் பத்திர லிங்கமா, மாய வர
னிலை யாய்ந்துகொள் வார்கட்கே. (௭)

முத் துடன் மாணிக்க மொய்த்த பவளமுங், கொத்துமக்
கொம்பு சிலைநீறு கோமளம், மத்தன்றன் னாகம மன்ன மரிசியா,
முய்த்ததின் சாதநம் பூமண லிங்கமே. (௮)

துன்றுந் தயிர்நெய்பா லய்ய மெழுகுடன், கன்றிய செ
ம்புகனலிர தஞ்சலம், வன்றிறற் செங்கல் வடிவுடை வில்ல
ம்பொன், றென்றியங் கொன்றை தெளிசிவ லிங்கமே. (௯)

மறையவ ரர்ச்சனை வண்படி கந்தா, னிறையவ ரர்ச்சனை
யேய்பொன் னாகுங், குறைவிலா வயிசி யர்க்குக் கோமளமாக்,
துறையுடைச் சூத்திரர் தொல்வாண லிங்கமே. (௰)

அதுவுணர்ந் தோனொரு தன்மையை நாடி, யெதுவுண
ராவகை நின்றன னீசன், புதுவுணர் வான புவனங்க ளெட்டு,
மிதுவுணர்ந் தென்னுடல் கோயில்கொண் டானே. (௧௧)

அகலிட மாயறி யாம லடங்கு, முகலிட மாய்நின்ற வூன
தி னுள்ளே, பகலிட மாமுன்னம் பாவ விநாசன், புகலிட மாய்
நின்ற புண்ணியன் றானே. (௧௨)

போது புனைகழற் பூமிய தாவது, மாது புனைமுடி வானக
மாவது, நீதியு ளீச னுடல்விசும் பாய்நிற்கு, மாதி யுறநின்ற த
ப்பரி சாமே. (௧௩)

தரையுற்ற சத்தி தனிலிங்கம் விண்ணாந், திரைபெறு நீரா மஞ்சன சாலை, வரைதவழ் மஞ்சுநீர் வானுடு மாலை, கரையற்ற நந்திக் கலையுந்திக் காமே. (௧௪) ஆ உஉ.

---

பிண்டலிங்கம்.

மானுட ராக்கை வடிவு சிவலிங்க, மானுட ராக்கை வடிவு சிதம்பர, மானுட ராக்கை வடிவு சதாசிவ, மானுட ராக்கை வடிவு திருக்கூத்தே. (௧)

உலந்திலர் பின்னு முளரோன நிற்பர், நிலந்தரு நீர்தெளி யூனவை செய்யப், புலந்தரு பூதங்க ளைந்துமொன் றாக, வலந்தரு தேவரை வந்துசெய் வீரே. (உ)

கோயில்கொண் டன்றே குடிகொண்ட னைவரும், வாயில்கொண் டாங்கே வழிநின் றருளுவீர், தாயில்கொண் டாற்போற் றலைவனென் னுட்புக, வாயில்கொண் டீசனு மாளவந் தானே. (௩)

கோயில்கொண் டானடி கொல்லைப் பெருமறை, வாயில்கொண் டான்டி நாடிகள் பத்துள, பூசைகொண் டான்புவ னைந்தும் பிறகிட்டு, வாயில்கொண் டானெங்கள் மாநந்தி தானே. (௪) ஆ உ௬.

---

சதாசிவலிங்கம்.

கூடிய பாத மிரண்டும் படிமிசை, பாடிய கையிரண் டெட்டும் பரந்தெழுந், தேடு முகமைந்து செங்கையின் மூவைந்து, நாடுஞ் சதாசிவ நல்லொளி முத்தே. (௧)

வேதா நெடுமா லுருத்திரன் மேலீசன், மீதான வைம்முகன் விந்துவு நாதமு, மாதாக சத்தியு மந்தச் சிவனொடுஞ், சாதா ரணமாகுஞ் சதாசிவந் தானே. (உ)

ஆகின்ற சத்தியி னுள்ளே கலைநிலை, யாகின்ற சத்தியி னுள்ளே கதிரெழ, வாகின்ற சத்தியி னுள்ளே யமர்ந்தபின், ஞாகின்ற சத்தியு ளத்திசை பத்தே. (௩)

அத்திசைக் குள்ளே யமர்ந்தன வாறங்க, மத்திசைக் குள்ளே யமர்ந்தன நால்வேத, மத்திசைக் குள்ளே யமர்ந்த சரிதையோ, டத்திசைக் குள்ளே யமர்ந்த சமயமே, (௪)

சமயத் தெழுந்த வவத்தையீ ரைந்துள, சமயத் தெழுந்த விராசியீ ராறுள, சமயத் தெழுந்த சதிரீரா றெட்டுள, சமயத் தெழுந்த சதாசிவந் தானே. (௫)

நடுவு கிழக்கு தெற்குத் தரமேற்கு, நடுவு படிகநற் குங்கும வன்ன, மடையுள வஞ்சனஞ் செவ்வரத் தம்பா, லடியேற் கருளிய முகமிவை யஞ்சே. (௬)

அஞ்சு முகமுள வைம்மூன்று கண்ணுள, வஞ்சினொ டஞ்சு கரதலந் தானுள, வஞ்சுட னஞ்சா யுதமுள நம்பியென், னெஞ்சு புகுந்து நிறைந்துநின் றானே. (௭)

சத்தி தராதல மண்டஞ் சதாசிவஞ், சத்தி சிவமிக்க தாபர சங்கமஞ், சத்தி யுருவ மருவஞ் சதாசிவஞ், சத்தி சிவதத் துவமுப்பத் தாறே. (௮)

தத்துவ மாவ தருவஞ் சராசரந், தத்துவ மாவ தருவஞ் சுகோதயந், தத்துவ மெல்லாஞ் சகலமு மாய்நிற்குந், தத்துவ மாகுஞ் சதாசிவன் றானே. (௯)

கூறுமி னூறு சதாசிவ னெம்மிறை, வேறே றுணாசெய்து மின்கப்பொரு ளாய்நிற்கு, மேறுணா செய்தொழில் வானவர் தம்மொடு, மாறுசெய் வானென் மனம்புகுந் தானே. (௧0)

இருளார்ந்த கண்டமு மேந்து மழுவுஞ், சுருளார்ந்த செஞ்சடைச் சோதிப் பிறையு, மருளார்ந்த சிந்தையெம் மாதிப் பிரானைத், தெருளார்ந்தென் னுள்ளே தெளிந்திருந் தேனே. ()

சத்திதா னிற்கின்ற வைமுகஞ் சாற்றிடி, லுத்தமம் வாம முளையத் திருந்திடும், தத்துவம் பூருவந் தற்புரு டன்சிர, மத் தகு கோர மகுடத்தீ சானனே. (௧௨)

நாணுநல் லீசான னடுவுச்சி தானாகுந், தாணுவின் றன்முகந் தற்புருட மாகுங், காணு மகோர மிருதயங் குய்யமாம், வாணுற வாமமாஞ் சத்திநற் பாதமே. (௧௩)

நெஞ்சு சிரஞ்சிகை நீள்கவசங் கண்ணும், வஞ்சமில் விந்து வளர்நிறம் பச்சையாஞ், செஞ்சுறு செஞ்சுடர் சேகரி மின் னுருஞ், செஞ்சுடர் போலுந் தசாயுதந் தானே. (௧௪)

எண்ணி லிதய மிறைஞான சத்தியாம், விண்ணிற் பரைசிர மிக்க சிகைட்டாதி, வண்ணக் கவசம் வனப்புடை யிச்சையாம், பண்ணுங் கிரியை பரநேத் திரத்திலே. (௧௫)

சத்திநாற் கோணஞ் சலமுற்று நின்றிடுஞ், சத்தி யறுகோ ணஞ் சயனத்தை யுற்றிடுஞ், சத்திநல் வட்டஞ் சலமுற் றிருந்தி டுஞ், சத்தி யுருவாஞ் சதாசிவன் றானே. (௧௬)

மானந்தி யெத்தனை கால மழைக்கினுந், தானந்தி யஞ்சின் றனிச்சுட ராய்நிற்குங், கானந்தி யுந்தி கடந்து கமலத்தின், மேனந்தி யொன்பதின் மேவிநின் றானே. (௧௭)

ஒன்றிய வாறு முடலி னுடன்கிடந், தென்றுமெம் மீசன டக்கு மியல்பது, தென்றலைக் கேறத் திருந்து சிவனடி, நின்று தொழுதேனென் னெஞ்சத்தி னுள்ளே. (௧௮)

உணர்ந்தே னுலகினி லொண்பொரு ளானைக், குணர்ந்தேன் குவலயங் கோயிலென் னெஞ்சம், புணர்ந்தேன் புனிதனும் பொய்யல்ல மெய்யே, பணிந்தேன் பகலவன் பாட்டு மொலியே. ()

ஆங்கவை மூன்றினு மார்ழல் வீசிடத், தாங்கிடு மீரெழு தானடு வானதி, லோங்கிய வாதியு மந்தமு மாமென, வீங்கி வை தம்முட லிந்துவு மாமே. (உ0)

தன்மேனி தற்சிவ லிங்கமாய் நின்றிடுந், தன்மேனி தானுஞ் சதாசிவ மாய்நிற்குந், தன்மேனி தற்சிவன் றற்சிவா னந்தமாந், தன்மேனி தானுருந் தற்பரந் தானே. (உக)

ஆருமறியா ரகார மவனென்று, பாருமுகாரம் பரந்திட்ட நாயகி, தார மிரண்டுந் தரணி முழுதுமாய், மாறி யெழுந்திடுமோசைய தாமே. (உஉ)

இலிங்கநற் பீட மிசையுமோங் கார, மிலிங்கநற் கண்ட நிறையு மகார, மிலிங்கத்துள் வட்ட நிறையு முகார, மிலிங்க மகார நிறைவிந்து நாதமே (உங) ஆ சகூ.

---

ஆன்மலிங்கம்.

அகார முதலா யனைத்துமாய் நிற்கு, முகார முதலா வுயிர்ப்பெய்து நிற்கு, மகார வுகார மிரண்டு மறியி, லகார வுகார மிலிங்கம தாமே. (க)

ஆதார மாதேய மாகின்ற விந்துவு, மேதாதி நாதமு மீதே விரிந்தன, வாதார விந்து வதிபீட நாதமே, போதா விலிங்கப் புணர்ச்சிய தாமே (உ)

சத்தி சிவமா மிலிங்கமே தாபரஞ், சத்தி சிவமா மிலிங்கமே சங்கமஞ், சத்தி சிவமா மிலிங்கஞ் சதாசிவஞ், சத்தி சிவமாகுந் தாபரந் தானே. (ங)

தானே ரெழுகின்ற சோதியைக் காணலாம், வானே ரெழுகின்ற வைம்ப தமர்ந்திடம், பூனே ரெழுகின்ற பொற்கொடி தன்னுடன், ருனே ரெழுகின்ற வகாரமதாமே. (ச)

விந்துவு நாதமு மேவு மிலிங்கமாம், விந்துவ தேபீட நாத மிலிங்கமா, மந்த விரண்டையு மாதார தெய்வமாய், வந்த கருவைந்துஞ் செய்யு மவையைந்தே. (ரு)

சத்திநற் பீடந் தகுநல்ல வான்மாச், சத்திநற் கண்டந்

தருவித்தை தானுகுஞ், சத்திநல் லிங்கந் தருஞ்சிவ தத்துவஞ், சத்திநல் லான்மாச் சதாசிவந் தானே. (௬)

மனம்புகுந் தென்னுயிர் மன்னிய வாழ்க்கை, மனம்புகுந் தின்பம் பொழிகின்ற போது, நலம்புகுந் தென்னொடு நாதனை நாடோ மிலம்புகுந் தாதியு மேற்கொண்ட வாறே. (௭)

பராபர னெந்தை பனிமதி சூடி, தராபரன் றன்னடி யார்மனக் கோயிற், சிராபரன் றேவர்கள் சென்னியின் மன்னு, மராமரன் மன்னி மனத்துறைந் தானே. (௮)

பிரானல்ல நாமெனிற் பேதை யுலகங், குராலென்று மென்மனங் கோயில்கொ ளீச, னராநின்ற செஞ்சடை யங்கியு நீரும், பொராநின் றவர்செய்யப் புண்ணியன் றானே. (௯)

அன்றுநின் றுன்கிடந் தானவ னென்று, சென்றுநின் றெண்டிசை யேத்துவர் தேவர்க, ளொன்றுநின் றேத்துவ னெம்பெருமான்றன்னை, யொன்றியென் னுள்ளத்தி னுள்ளிருந் தானே. (௰)

ஆ ருக.

---

## ஞானலிங்கம்.

உருவு மருவு முருவோ டருவு, மருவு பரசிவன் மன்பல் லுயிர்க்குங், குருவு மெனநிற்குங் கொள்கைய னாகுந், தருவென நல்குஞ் சதாசிவன் றானே. (௧)

நாலான கீழ துருவ நடுநிற்க, மேலான நான்கு மருவு மிகுநாப்ப, ணூலான வொன்று மருவுரு நண்ணலாற், பாலா மிவையாம் பரசிவன் றானே. (௨)

தேவர் பிரானைத் திசைமுக நாதனை, நால்வர் பிரானை நடுவுற்ற நந்தியை, யேவர் பிரானென் றிறைஞ்சுவ ரவ்வழி, யாவர் பிரானடி யண்ணலு மாமே. (௩)

வேண்டிநின் றேதொழு தேன்வினை போயற, வாண்டொ

ரு திங்களு நாளு மளக்கின்ற, காண்டகை யாளொடுங் கன்னி யுணரினு, மூண்டகை மாறினு மொன்றது வாமே. (ரு)

ஆதி பரந்தெய்வ மண்டத்து நற்றெய்வஞ், சோதி யடியார் தொடரும் பெருந்தெய்வ, நீதியுண் மாதெய்வ நின்மல னெம்மிறை, பாதியுண் மன்னும் பராசத்தி யரமே. (ரு)

சத்திக்கு மேலே பராசத்தி தன்னுள்ளே, சுத்தச் சி... தந் தோயாத தூவொளி, யத்தன் றிருவடிக் கப்பாலைக் சப்பாலா, மொத்தவு மாமீசன் ருனுன வுண்மையே. (சூ)

கொழுந்தினைக் காணிற் குவலயந் தோன்று, மெழுந்திடங் காணி லிருக்கலு மாகும், பரந்திடங் காணிற் பார்ப்பதி மேலே, திரண்டெழுக் கண்டவன் சிந்தையு ளானே. (எ)

எந்தை பரமனு மென்னம்மை கூட்டமு, முந்த வுரைத்து முறைசொல்லின் ஞானமாஞ், சந்தித் திருந்த விடம்பெருங் கண்ணியை, யுந்தியின் மேல்வைத் துகந்திருந் தானே. (அ)

சத்தி சிவன்விளை யாட்டா முயிராகி, யொத்த விருமாயா கூட்டத் திடையூட்டிச், சுத்தம தாகுந் துரியம் பிறிவித்துச், சித்தம் புகுந்து சிவமக மாக்குமே. (கூ)

சத்தி சிவன்றன் விளையாட்டுத் தாரணி, சத்தி சிவமுமாஞ் சிவஞ்சத் தியுமாகுஞ், சத்தி சிவமன்றித் தாபரம் வேறில்லை சத்திதா னென்றுஞ் சண்மந்துரு வாகுமே. (க0) ஆ சுகூ

---

## சிவலிங்கம்

குரைக்கின்ற வாரிக் குவலய நீரும், பரக்கின்ற காற்றுப் பயில்கின்ற தீயு, நிரைக்கின்ற வாறிவை நீண்டகன் றானை, வரைத்து வலஞ்செயு மாறறி யேனே. (௧)

வரைத்து வலஞ்செய்யு மாறிங்கொன் றுண்டு, நிரைத்து வருகங்கை நீர்மல ரேந்தி, யுரைந்தவ னாம முணரவல் லார்

குப், புரைத்தெங்கும் போகான் புரிசடையோனே .(உ)

ஒன்றெனக் கண்டேயெம் மீச னொருவனை, நன்றென் றடி யிணை நானவ னைத்தொழ, வென்றைம் புலனு மிகக்கிடந் தின்பு ற, வன்றென் றருள்செய்யு மாதிப் பிரானே. (ங)

மலர்ந்த வயன்மா லுருத்திரன் மகேசன், பலந்தரு மைம் முகன் பரவிந்து நாத, நலந்தருஞ் சத்தி சிவன்வடி வாகிப், ப லந்தரு லிங்கம் பராநந்தி யாமே. (ச)

மேவி யெழுகின்ற செஞ்சுட ரூடுசென், றாவி யெழுமள வன்றே யுடலுற, மேவப் படுவதும் விட்டு நிகழ்வதும், பாவித் த டக்கிற் பரகதி தானே. (ரு) ஆ. எச.

---

சம்பிரதாயம்.

உடல்பொரு ளாவி யுதகத்தாற் கொண்டு,படர்வினைப் பற் றறப் பார்த்துகை வைத்து,நொடியி ன்டிவைத்து நுண்ணுண ர் வாக்கிக், கடியப் பிறப்பறக் காட்டின னந்தியே. (க)

உயிருஞ் சரீரமு மொண்பொரு ளான, வியவார் பரமும்பி ன் மேவும் பிராணன், செயலார் சிவமுஞ் சிற்சத்தி யாதிக்கே, யுயலார் குருபர னுய்யக்கொண் டானே. (உ)

பச்சிம திக்கிலே வைச்சவா சாரிய, னிச்சனு மென்னை நி னையென்ற வப்பொரு, ளுச்சிக்குங் கீழது வுண்ணாக்கு மேலது, வைச்ச பதமிது வாய்திற வாதே. (ங)

பொட்டடித் தெங்கும் பிதற்றித் திரிவேனை, பொட்டடி த் துள்ளமர் மாசெலாம் வாங்கிப்பின், றட்டொக்க மாறினன் றன்னையு மென்னையும், வட்டம தொத்தது வாணிபம் வாய்த்த தே. (ச)

தரிக்கின்ற பல்லுயிர்க் கெல்லாந் தலைவ, னிருக்கின்ற த ன்மையை யேது முணரார்,பிரிக்கின்ற விந்து பிணக்கறுத் தெல் லாங், கருக்கொண்ட வீசனைக் கண்டுகொண் டானே. (ரு)

கூடு முடல்பொரு ளாவி குறிக்கொண்டு, நாடி யடிவைத் தருண்ஞான சத்தியாற், பாட லுடலினிற் பற்றற நீக்கியே, கூடிய தானவ னுங்குளிக் கொண்டே. (சு)

கொண்டா னடியே னடிமை குறிக்கொள்ளக், கொண்டா னுயிர்பொருள் காயக் குழாத்தினைக், கொண்டான் பலமுற்றுந் தந்தவன் கோடலாற், கொண்டா னெனவொன்றுங் கூறகிலேனே. (எ)

குறிக்கின்ற தேகமுந் தேகியுங் கூடி, நெறிக்கும் பிராணனிலைபெற்ற சீவன், பறிக்கின்ற காயத்தைப் பற்றிய நேர்மை, பிறக்க வறியாதார் பேயுட னொப்பரே. (அ)

உணர்வுடை யார்கட் குலகமுந் தோன்று, முணர்வுடை யார்கட் குறுதுய ரில்லை, யுணர்வுடை யார்க ளுணர்ந்தவக் காலமு, முணர்வுடை யார்க ளுணர்ந்துகண் டாரே. (கூ)

காயப் பரப்பி லலைந்து திரியத்துச், சால விரிந்து குவிந்து சகலத்தி, லாயவவ் வாறு றடைந்து திரிந்தோர்க்குத், தூய வருடந்த நந்திக்கென் சொல்வதே. (கo)

நானென நீயென வேறில்லை நண்ணுத, லூனென வூனுயி ரென்ன வுடனின்று, வானென வானவர் நின்று மனிதர்க, டேனென வின்பந் திளைக்கின்ற வாறே. (கக)

அவனு மவனு மவனை யறியா, ரவனை யறியி லறிவானு மில்லை, யவனு மவனு மவனை யறியி, லவனு மவனு மவனிவ னாமே. (கஉ)

நானிது தானென நின்றிவ னாடோறு, மூனிது தானுயிர் போலுணர் வானுளன், வானிரு மாமுகில் போற்பொழி வானுளன், ஞானிது வம்பர நாதனு மாமே. (கங)

பெருந்தன்மை தானென யானென வேறா, யிருந்ததுமில்லைய தீச னறியும், பொருந்து முடலுயிர் போலுமை மெய்

யே, திருந்தமுன் செய்கின்றதேவர் பிரானே. (சச) ஆ௨ அ௮

---

## திருவருள்வைப்பு.

இருபத மாவ திரவும் பகலு, முருவது வாவ துயிரு முட லு, மருளது வாவ தறமுந் தவமும், பொருளது வுண்ணின்ற பேரறும தாமே. (க)

காண்டற் கரியன் கருத்தில னந்தியுந், தீண்டற்குஞ் சார் தறஞ் சேயனுத் தோன்றிடும், வேண்டிக் கிடந்த விளக்கொ ளி யானெஞ்ச, மீண்டிக் கிடந்தங் கிருளறு மாமே. (உ)

குறிப்பினி னுள்ளே குவலயந் தோன்றும், வெறுப்பிரு ணி ங்கில் விகிர்தனு நிற்குஞ், செறிப்புறு சிந்தையைச் சிக்கென நா டி, லறிப்புறு காட்சியமரரு மாமே. (௩)

தேர்ந்தறி யாமையின் சென்றன காலங்கள, பேர்ந்தறி வானெங்கள் பிஞ்ஞக னெம்மிறை, யார்ந்தறி வாரறி வேதுணை யாமெனச், சார்ந்தறி வான்பெருந் தன்மைவல் லானே. (ச)

தானே யறியும் வினைக ளழிந்தபி, ஞனே யறிகில னந்தி யறியுங்கொல், லூனே யுருகி யுணர்வை யுணர்ந்தபின், றேனே யனையனந் தேவர் பிரானே. (ரு)

நானறிந் தன்றே யிருக்கின்ற தீசனை, வானறிந் தாரறி யா து மயங்கின, ரூனறிந் துள்ளே யுயிர்க்கின்ற வொண்சுடர், கா னறி யான்பின்னை யாரறி வாரே. (சு)

அருளெங்கு மான வளவை யறியா, ரருளை நுகரமு தான துந் தேரா, ரருளெங் கருமத் ததிருக்க முன்னு, ரருளெங்குங் கண்ணான தாரறி வாரே. (எ)

அறிவி லணுக வறிவது நல்கிப், பொறிவழி யாசை புகுத் திப் புணர்ந்திட், டறிவது வாக்கி யடியரு ளல்குஞ், செறி வொடு நின்றார் சிவமாயி னாரே. (அ)

அருளிற் பிறந்திட் டருளில் வளர்ந்திட், டருளி லழிந்தி

ளைப்பாறி மறைந்திட், டருளான வானந்தத் தாரமு தூட்டி, யருளாலென் னந்தி யகம்புகுந் தானே (௯)

அருளா லமுதப் பெருங்கட லாட்டி, யருளா லடிபுனைந் தார்வமுந் தந்திட், டருளான வானந்தத் தாரமு தூட்டி, யருளாலென் னந்தி யகம்புகுந் தானே. (௧0)

பாசத்தி லிட்ட தருளந்தப் பாசத்தி, னேசத்தை விட்ட தருளந்த நேசத்திற், கூசற்ற முத்தி யருளந்தக் கூட்டத்தி, னேசத்துத் தோன்று நிலைபரு ளாமே. (௧௧)

பிறவா நெறிதந்த பேரரு ளாளன், மறவா வருடந்த மாதவ னந்தி, யறவாழி யந்தண னாதிப் பராபர, னுறவாகி வந்தென் னுளம்புகுந் தானே. (௧௨)

அகம்புகுந் தானடி யேற்கரு ளாலே, யகம்புகுந் துந்தெரி யானரு ளில்லோர்க், ககம்புகுந் தானந்த மாக்கிச் சிவமா, யகம்புகுந் தானந்தி யானந்தி யாமே. (௧௩)

ஆயு மறிவோ டறியாத மாமாயை, யாயகரணம் படைக் குமைம் பூதமு, மாய பலவிந் திரிய மவற்றுட, னாய வருளைந் து மாமருட் செய்கையே. (௧௪)

அருளே சகளமு மாய பவுதிக, மருளே சராசர மாய வமலமே, யிருளே வெளியே யெனுமெங்கு மீச, னருளே சகளத் த னன்றிபின் றுமே. (௧௫)

சிவமொடு சத்தி திகழ்நாதம் விந்து, தவமான வைம்முக னீச னரனும், பவமுறு மாலும் பதுமத்தோ னீறு, நவமவை யாகி நடிப்பவன் றானே. (௧௬)

அருட்கண் ணிலாதார்க் கரும்பொரு டோன்று, மருட்கண் ணுளோர்க்கெதிர் தோன்று மரனே, யிருட்கண்ணி னோர்க் கங் கிரவியுந் தோன்றுந், தெருட்கண்ணி னோர்க்கெங்குஞ் சீரொளி யாமே. (௧௭)

தானே படைத்திடுந் தானே யளித்திடுந், தானே துடை

த்திடுந் தானே மறைத்திடுந், தானே யிவைசெய்து தான்முத் தி தந்திடுந், தானே வியாபித் தலைவனு மாமே. (௧அ)

தலையான நான்குந் தனதரு வாகு, மலையா வருவுரு வாகு ஞ் சதாசிவ, நிலையான கீழ்நான்கு நீடுரு வாகுந், துலையா வி வைமுற்று மாயல்ல தொன்றே. (௧௯)

மூன்றது வாலே யுலப்பிலி தானாகி, நின்றது தான்போ லுயிர்க்குயி ராய்நிலை, துன்றி யவையல்ல வாகுந் துணையென்ன, நின்றது தான்விளை யாட்டென்னு ணேயமே. (உ௦)

நேயத்தே நின்றிடு நின்மலன் சத்தியோ, டாயக் குடிலை யு ளுத மடைந்திட்டுப், போயக் கலைபல வாகப் புணர்ந்திட்டு வியத் தகாவிந்து வாக விளையுமே. (உ௧)

விளையும் பரவிந்து தானே வியாபி, விளையுந் தனிமாயை மிக்கமா மாயை, கிளையொன்று தேவர் கிளர்மனு வேத, மள வொன் றிலாவண்ட கோடிக ளாமே. (உஉ) ஆ. ௧௩௦.

---

அருளொளி.

அருளிற் றலைநின் றறிந்தழுந் தாரு, ரருளிற் றலைநில்லா ரைம்பாச நீங்கா, ரருளிற் பெருமை யறியார் செறியா, ரரு ளிற் பிறந்திட் டறிந்தறி வாரோ. (௧)

வாரா வழிதந்த மாநந்தி பேர்நந்தி, யாரா வமுதளித் தானந்தி பேர்நந்தி, போரா யிரமுடைப் பெம்மான்பே ரொ ன்றிலி, லாரா வருட்கட லாடுகென் றுனே. (உ)

ஆடியும் பாடியு மழுது மரற்றியுந், தேடியுங் கண்டேன் சிவன்பெருந் தன்மையைக், கூடிய வாறே குறியாக் குறிதந் தென், ணூடுநின் றுனவன் றன்னரு ளுற்றே. (௩)

உற்ற பிறப்பு முறுமல மானதும், பற்றிய மாயாப் படல மனப்பண்ணி, யத்தனை நீயென் றடிவைத்தான் பேர்நந்தி,

கற்றன விட்டேன் கழல்பணிந் தேனே. (௪)

விளக்கினை யேற்றி வெளியை யறிமின், விளக்கினின் முன்னே வேதனை மாறும், விளக்கை விளக்கும் விளக்குடை யார்கள், விளக்கில் விளங்கும் விளக்கவர் தாமே. (௫)

ஒளியு மிருளு மொருக்காலுந் தீரா, வொளியுளோர்க் கன்றோ வொழியா தொளியு, மொளியிருள் கண்டகண் போலவே றாயுள், ளொளியிரு ணீங்க வுயிர்சிவ மாமே. (௬)

புறமே திரிந்தேனைப் பொற்கழல் சூட்டி, நிறமே புகுந்தென்னை நின்மல னாக்கி, யறமே புகுந்தெனக் காரமு தீந்த, திறமேதென் றெண்ணித் திகைத்திருந் தேனே. (௭)

அருளது வென்ற வகலிட மொன்றும், பொருளது வென்ற புகலிட மொன்று, மருளது நீங்க மனம்புகுந் தானைத், தெருளாரும் பின்னைச் சிவகதி யாமே.

கூறுமின் னீர்முன் பிறந்திங் கிறந்தமை, வேறொரு தெய்வத்தின் மெய்ப்பொரு ணீக்கிடும், பாறணி யும்முடல் வீழவிட் டாருயிர், தேறணி வோமிது செப்பவல் லீரோ. () ஆ௲ கஉ௲.

---

## சிவபூசை.

உள்ளம் பெருங்கோயி லூனுடம் பாலயம், வள்ளற் பிரானார்க்கு வாய்கோ புரவாசற், றெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கங், கள்ளப் புலனைந்துங் காளா மணிவிளக்கே.

வேட்டவி யுண்ணும் விரிசடை நந்திக்குக், காட்டவு மாமிலங் காலையு மாலையு, மூட்டவி யாவன வுள்ளங் குளிர்விக்கும், பாட்டவி காட்டுதும் பாலவி யாமே. (௨)

பான்மொழி பாகன் பராபரன் றானுகு, மான சதாசிவன் றன்னையா வாகித்து, மேன்முக மீசான மாகவே கைக்கொள,

ண்டு, சின்முகஞ் செய்யச் சிவனவ ளாகுமே. (ந)

நினைவதும் வாய்மை மொழிவது மல்லாற், கனைகழ லீசனைக் காண வரிதாங், கனைகழ லீசனைக் காண்குற வல்லார், புனைமலர் நீர்கொண்டு போற்றவல் லாரே. (ச)

மஞ்சன மாலை நிலாவிய வானவர், நெஞ்சினுள் ளீச னிலை பெறு காரண, மஞ்சமு தாமுப சாரமெட் டெட்டோடு, மஞ்சலி யோடுங் கலந்தர்ச்சித் தார்களே. (ரு)

புண்ணியஞ் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு, வண்ண லதுகண் டருள்புரி யாநிற்கு, மெண்ணிலி பாவிக ளெம்மிறை யீசனை, நண்ணறி யாம னழுவுகின் றாரே. (சு)

அத்த னவதீர்த்த மாடும் பரிசுகே, ளொத்த மெய்ஞ்ஞா னத் துயர்ந்தார் பதத்தைச், சுத்தம தாக விளக்கித் தெளிக்கவே, முத்தியா மென்றுநம் மூலன் மொழிந்ததே. (எ)

சிறப்புற்று விவ்வழி மன்னிநின் றாலுஞ், சிறப்பொடு பூநீர் திருந்தமுன் னேந்தி, மறப்பின்றி யுன்னை வழிபடும் வண்ண, மறப்பெற வேண்டு மமரர் பிரானே. (அ)

ஆரா தனையு மமர் குழாங்களுந், தீராக் கடலு நிலத்து மதாய்நிற்கும், பேரா யிரமும் பிரான்றிரு நாமமு, மாரா வழியெங்க ளாதிப் பிரானே. (கூ)

ஆனிந்து மாட்டி யமரர் கணந்தொழத், தானந்த மில்லாத் தலைவ னருளது, தேனுந்து மாமல ருள்ளே தெளிந்ததோர், பாரைங் குணமும் படைத்துநின் றானே. (க0)

உழைக்கொண்ட பூநீ ரொருங்குட னேந்தி, மழைக்கொண்ட மாமுகின் மேற்சென்று வானோர், தழைக்கொண்ட பாசந் தயங்கிநின் றேத்தப், பிழைப்பின்றி யெம்பெரு மானரு ளாமே.

வெள்ளக் கடலுள் விரிசடை நந்திக்கு, வுள்ளக் கடற்புக்கு வார்சுமை பூக்கொண்டு, கள்ளக் கடல்விட்டுக் கைதொழ மாட்டாதா, ரள்ளக் கடலு ளழுந்துகின் றாரே. (கஉ)

கழிப்படுந் தண்கடற் கௌவை யுடைத்து, வழிப்படுவார் மலர் மொட்டறி யார்கள், பழிப்படு வார்பல ரும்பழி வீழ, வெளிப்படு வோருச்சி மேவிநின் றானே. (கங)

பயனறி வொன்றுண்டு பன்மலர் தூவிப், பயனறி வார்க்கரன் றானே பயிலு, நயனங்கண் மூன்றுடை யானடி சேர, வயனங்க ளாலென்றும் வந்துநின் றானே. (கச)

ஏத்துவர் மாமலர் தூவித் தொழுதுநின், றார்த்தெம தீச னருட்சே வடியென்றன், மூர்த்தியை மூவா முதலுரு வாய்நின்ற, தீர்த்தனை யாருந் துதித்துண ராரே. (கரு)

தேவர்க ளோடிசை வந்துமண் ணோடும், பூவொடு நீர்சுமந் தேத்திப் புனிதனை, மூவரிற் பன்மை முதல்வனாய் நின்றரு, ணீர்மையை யாவர் நினைக்கவல் லாரே. (கசு)

உழைக்கவல் லோர்நடு நீர்மல ரேந்திப், பிழைப்பின்றி யீசன் பெருந்தவம் பேணி, யிழைக்கொண்ட பாதத் தினமலர் தூவி, மழைக்கொண்டல் போலவே மன்னிநில் லீரே. (கஎ)

வென்று விரைந்து விரைப்பணி யென்றனர், நின்று பொருந்த விறைபணி நேர்படத், துன்று சலமலர் தூவித் தொழுதிடிற், கொண்டிடு நித்தலுங் கூறிய வன்றே. (கஅ)

சாத்தியும் வைத்துஞ் சயம்புவென் றேத்தியு, மேத்தியு நாடு மிறையை யறிகிலா, ராத்தி மலக்கிட் டகத்திழுக் கற்றக்கான், மாத்திக்கே செல்லும் வழியது வாமே. (கக)

ஆவிக் கமலத்தி னப்புறத் தின்புற, மேவித் திரியும் விரிசடை நந்தியைக், கூவிக் கருதிக் கொடுபோய் சிவத்திடை, தாவிக்கு மந்திரந் தாமறி யாரே. (உ0)

சாணகத் துள்ளே யழுந்திய மாணிக்கங், காணு மளவுங் கருத்தறி வாரில்லை, பேணிப் பெருக்கிப் பெருக்கி நினைவோர்க்கு, மாணிக்க மாலை மனம்புகுந் தானே. (உக)

பெருந்தன்மை நந்தி பிணங்கிரு ணேமி, யிருந்தன்மை யாலுமென் னெஞ்சிடங் கொள்ள; வருந்தன்மை யாளனை வானவர்தேவர், தருந்தன்மை யாளனைத் தாங்கிநின் றாரே. (உஉ)

சமைய மலசுத்தி தன்செய லற்றிடு, மமையும் விசேடமு மானமந் திரசுத்தி, சமைய நிர்வாணங் கலாசுத்தி யாகு, மமை மன்னு ஞானமா ரூர்க்கபி டேகமே. (உங)

ஊழிதோ றூழி யுணர்ந்தவர்க் கல்லது, வூழி லுயிரை யுணரவுந் தானொட்டா, வாழி யமரு மரியய னென்றுளோ, ரூழி கடந்துமோ ருச்சியு ளானே. (உச) ஆ கசங.

---

குருபூசை

ஆகின்ற நந்தி யடித்தா மரைபற்றிப், போகின் றுபதேசம் பூசிக்கும் பூசையு, மாகின்ற வாதார மாறு றதனின்மேற், போகின்ற பொற்பையும் போற்றுவ னியானே. (க)

கானுறு கோடி கடிகமழ் சந்தனம், வானுற மாமல ரிட்டு வணங்கினு, மூனினை நீக்கி யுணர்பவர்க் கல்லது, தேனமர் பூங்கழல் சேரவொண் ணாதே. (உ)

மேவிய ஞானத்தின் மிக்கிடின் மெய்ப்பர, னாவையின் ஞான நெறிநிற்ற லர்ச்சனை, யோவற வுட்பூ சனைசெய்யி லுத்தமஞ், சேவடி சேரல் செயலறற் றானே. (ங)

உச்சியுங் காலையு மாலையு மீசனை, நச்சுமின் னச்சி நயவென்று நாமத்தை, விச்சுமின் விச்சி விரிசுடர் மூன்றினு, நச்சுமின் பேர்நந்தி நாயக னாகுமே. (ச)

புண்ணிய மண்டலம் பூசைநா லுகுமாம், பண்ணிய மேனியும் பத்து நா லுகுமா, மெண்ணிலிக் கைய மிடிற்கோடி யா

குமாற், பண்ணிடில் ஞானியூண் பார்க்கில் விசேடமே. (௫)

இந்துவும் பானுவு மிலங்குந் தலத்திடை, வந்தித்த தெல்லா மசுரர்க்கு வாரியா, மிந்துவும் பானு மிலங்காத் தலத்திடை, வந்தித்த நந்திக்கு மாபூசை யாமே. (௬)

இந்துவும் பானுவு மென்றெழு கின்றசோர், விந்துவு நாதமு மாகியீ தானத்தே, சிந்தனை சாக்கிரா தீதத்தே சென்றிட்டு, நந்தியைப் பூசிக்க நற்பூசை யாமே. (௭)

மனபவ நங்களை மூலத்தான் மாற்றி, யனித வுடற்பூசமாக்கி யகற்றிப், புனித னருடனிற் புக்கிருந் தின்பத், தனியுறு பூசை சதாசிவற் காமே. (௮)

பகலு மிரவும் பயிற்கின்ற பூசை, யியல்புடை யீசர்க் கிணைமல ராகப், பகலு மிரவும் பயிலாத பூசை, சகலமுந் தான்கொள்வன் றாழ்சடை யோனே. (௯)

இராப்பக லற்ற விடத்தே யிருந்து, பராக்கற வானந்தத் தேறல் பருகி, யிராப்பக லற்ற விறையடி யின்பத், திராப்பகன் மாயை யிரண்டடித் தேனே. (௧௦) ஆ-௨௧௫.

---

## மயேசுரபூசை.

படமாடக் கோயிற் பகவற்கொன் றீயி,னடமாடக் கோயி னம்பர்க்கங் காகா, நடமாடக் கோயி னம்பர்க்கொன் றீயிற், படமாடக் கோயிற் பகவற்க தாமே. (௧)

தண்டறு சிந்தை தபோதனர் தாமகிழ்ந், துண்டது மூன்று புவனமு முண்டது, கொண்டது மூன்று புவனமுங் கொண்டதென், றெண்டிசை நந்தி யெடுத்துரைத் தானே. (௨)

மாத்திரை யொன்றினின் மன்னி யமர்ந்துறை, யாத்தனுக் கீந்த வரும்பொரு ளானவை, மூர்த்திகண் மூவர்க்கு மூவேழ் குரவர்க்குந், தீர்த்தம தாமது தேர்ந்துகொள் வீரோ. (௨)

அகர மாயிர மந்தணர்க் கீயிலென், சிகர மாயிரஞ் செ
ய்து முடிக்கிலென், பகரு ஞானி பகலூண் பலத்துக்கு, நிகரில்
லென்பது நிச்சயந் தானே. (௪)

ஆறிடும் வேள்வி யருமறை நூலவர், கூறிடு மந்தணர் கோ
டிபே ருண்பதி, னீறிடுந் தொண்டர் நினைவின் பயனிலை, பேறெ
ளிலோர்பிடி பேறது வாகுமே. (௫)

ஏறுடை யாயிறை வாவெம் பிரானென்று, நீறிடு வாரடி
யார்நிகழ் தேவர்க, ளாறணி செஞ்சடை யண்ண லிவரென்
று, வேறணி வார்க்கு வினையில்லை தானே. (௬)

சீர்நந்தி கொண்டு திருமுக மாய்விட்ட, பேர்நந்தி யென்
னும் பிறங்கு சடையனை, நாளொக்து நொந்து வருமளவுஞ்
சொல்லப், பேர்நந்தி யென்னும் பிதற்றொழி யேனே. (௭)

அழிதக வில்லா வரனடி யாரைத், தொழுதகை ஞாலத்
துத் தூங்கிரு ணீங்கும், பழுது படாவண்ணம் பண்பனை நா
டித், தொழுதெழ வையகத் தோரின்ப மாமே. (௮)

பகவற்கே தாகிலும் பண்பில ராசிப், புகுமத்த ராய்நின்
று பூசனைசெய்யு, முகமத்தோ டொத்துநின் றூழிதோ றூ
ழி, யகமத்த ராகிநின் றுய்ந்தொழிந் தாரே. (௯)

வித்தக மாகிய வேடத்த ருண்டவூ, ணத்த னயன்மால
ருந்திய வண்ணமாஞ், சித்தந் தெளிந்தவர் சேடம் பருகிடின்,
முத்தியா மென்றுநம் மூலன் மொழிந்ததே. (௧0)

தாழ்விலர் பின்னு முயல்வ ரருந்தவ, மாழ்வினை யாழ வ
வர்க்கே யறஞ்செய்யு, மாழ்வினை நீக்கி யருவினை தன்னொடும்,
போழ்வினை தீர்க்குமப் பொன்னுல காமே. (௧௧) ஆ. ௪௬௪.

---

அடியார் பெருமை.

திகைக்குரி யானொரு தேவனை நாடும், வகைக்குரி யா
னொரு வாதி யிருக்கிற், பகைக்குரி யாரில்லை பார்மழை பெய்

யு, மகக்குறை கேடில்லை யவ்வுல குக்கே. (க)

அவ்வுல கத்தே பிறந்தவ் வுடலொடு, மவ்வுல கத்தே யருந்தவ நாடுவ, ரவ்வுல கத்தே யரனடி கூடுவ, ரவ்வுல கத்தே யருள்பெறு வாரே. (உ)

கொண்ட குறியுங் குலவரை யுச்சியு, மண்டரு மண்டத் தமரரு மாதியு, மெண்டிசை யோரும்வந் தென்கைத் தலத்தி னு, ளுண்டெனி லுமினி யுய்ந்தொழிந் தோமே. (ங)

அண்டங்க ளேழு மகண்டமு மாவியுங், கொண்ட சராசர முற்றுங் குணங்களும், பண்டை மறையும் படைத்தளிப் பாதியுங், கண்ட சிவனுமென் கண்ணன்றி யில்லையே. (ச)

பெண்ணல்ல வாணல்ல பேடல்ல மூடத்து, ளுண்ணின்ற சோதி யொருவர்க் கறியொண்ணுக், கண்ணின்றி காணுஞ்செ வியின்றிக் கேட்டிடு, மண்ணற் பெருமையை யாய்ந்தது மூப்பே. (ரு)

இயங்கு முலசினி லீச னடியார், மயங்கா வழிசெல்வர் வானுல காள்வர், புயங்களு மெண்டிசை போதுபா தாள, மயங்காப் பகிரண்ட மாமுடி தானே. (சு)

அகம்படி கின்றநம் மையனை யோரு, மகம்படி கண்டவ ரல்லலிற் சேரா, ரகம்படி யுள்புக் கறிகின்ற நெஞ்ச, மகம்படி கண்டா ரழிக்கலு மெட்டே. (எ)

கழிவு முதலுங் காதற் றுணையு, மழிவும தாய்நின்ற வாதிப் பிரானைப், பழியும் புகழும் படுபொருண் முற்று, மொழியுமென் மூவி யுழவுகொண் டானே. (அ)

என்றுயோ டென்னப்ப னேழேழ் பிறவியு, மன்றே சிவனுக் கெழுதிய வாவண, மொன்று யுலகம் படைத்தா னெழுதினி, னின்றுன் முகில்வண்ண னேரெழுத் தாயே. (கூ)

துணிந்தா ரகம்படி துன்னி யுறையும், பணிந்தா ரகம்படி

பாற்பட் டொழுகு, மணிந்தா ரகம்படி யாதிப் பிரானைச், சணிந்தா ரொருவர்க்குக் கைவிட லாமே. (௧௦)

தலைமிசை வானவர் தாழ்சடை நந்தி, நிலைமிசை வைத்தன் மெய்ப்பணி செய்யப், புலைமிசை நீக்கிய பொன்னுல கானும், பலமிசை செய்யும் படர்சடை யோனே. (௧௧)

அறியாப் பருவத் தரனடி யாரைக், குறியா லறிந்தின்பங் கொண்ட தடிமை, குறிபார் சடைமுடி கட்டி நடப்பார், மறியார் புனன்மூழ்க மாதவ மாமே. (௧௨)

அவன்பா லணுகியே யன்புசெய் வார்கள், சிவன்பா லணுகுதற் செய்யவும் வல்ல, னவன்பா லணுகியே நாடு மடியா, ரிவன்பாற் பெருமை யிலயம தாமே. (௧௩)

முன்னிருந் தார்முழு தெண்கணத் தேவர்க, ளெண்ணிறந் தன்பால் வருவ திருநிலந், தெண்ணிரு நாலு திசையந் தசமொக்கப், பன்னிரு காதம் பதஞ்செய்யும் பாரே. (௧௪)

சிவயோகி ஞானி செறிந்தவத் தேச, மவயோக மின்றிய திபேர்ருண் டாகு, நவயோகங் கைகூடு நல்லியல் காணும், பவயோக மின்றிப் பரலோக மாமே. (௧௫)

மேலுணர் வான்மிகு ஞாலம் படைத்தவன், மேலுணர் வான்மிகு ஞாலங் கடந்தவன், மேலுணர் வார்மிகு ஞாலத் தமரர்கள், மேலுணர் வார்சிவன் மெய்யடி யார்களே. (௧௬)

ஆக. ௧௮௭.

---

## போசநவிதி.

எட்டுத் திசையு மிறைவ னடியவர்க், கட்ட வடிசி லமுதென் றெதிர்கொள்வ, ரொட்டி யொருநில மாள்பவ ரந்நிலம், விட்டுக் கிடக்கில் விருப்பதி யாரே. (௧)

அச்சிவ னுண்ணின்ற வருளை யறிந்தவ,ருச்சியம் போதாக வுள்ளமர் கோவிற்குப், பிச்சை பிடித்துண்டு பேத மறநினைந், திச்சைகெட் டேகாந்தத் தேறி யிருப்பரோ. () ஆஉ சஅஉ

---

பிக்ஷாவிதி.

விச்சுக் கலமுண்டு வேலிச்செய் யொன்றுண்டு, வுச்சிக் குன்னே யுழவு சமைந்தது, வச்சங்கெட் டச்செய் யறுத்துண்ண மாட்டாதா, ரிச்சைக்குப் பிச்சை யிரக்கின்ற வாறே. (க)

பிச்சைய தேற்றான் பிரமன் றலைதன்னில், பிச்சைய தேற்றான் பிரியா வறஞ்செய்யப், பிச்சைய தேற்றான் பிரமன் சிரங்காட்டிப், பிச்சைய தேற்றான் பிரமன்பர மாகவே. (உ)

பரந்துல கேழும் படைத்த பிரானை, யிரந்துணி யென்பர்களொற்றுக் கிரக்கு, நிரந்தர மாக நினையு மடியா, ரிரந்துண்டு தன்கழ லெட்டச்செய் தானே. (ங)

வரவிருந் தான்வழி நின்றிடு மீசன், றரவிருந் தான்றன்னை நல்லவர்க் கின்பம், பொரவிருந் தான்புக லேபுக ளாக, வரவிருந் தாலறி யானென்ப தாமே. (ச)

அங்கார் பசியு மவாவும் வெகுளியுந், தங்கார் சிவனடியார்சரீ ரத்திடைப், பொங்கார் புவனத்தும் புண்ணிய லோகத்துந், தங்கார் சிவனைத் தலைப்படு வாரே. (ரு)

மெய்யக ஞான மிகத்தெளிந் தார்களுங், கையக நீண்டார் கடைத்தலைக் கேசெல்வ, ரையம் புகாம லிருந்த தவசியார், வையக மெல்லாம் வரவிருந் தாரே. (சு) ஆஉ சஅஅ.

---

முத்திராபேதம்.

காலேழு மாறவே கண்ணிய முத்திரா, பாலான மோன மொழியிற் பதிவித்து, மேலான நந்தி திருவடி மீதுய்யக்

கோலா கலங்கேட்டுக் கூடுநன் முத்தியே. (௧)

துரியங்கண் மூன்றுஞ் சொருகிட லாகி, யரிய வுரைத்தார மங்கே யடக்கி, மருவிய சாம்பவி கேசரி யுண்மை, பெருகிய ஞானம் பிறழ்முத் திரையே. (௨)

"சாம்பவி நந்தி தன்னருட் பார்வையா, மாம்பவ மில்லா வருட்பாணி முத்திரை, யோம்பயி லோங்கிய வுண்மை யகேச ரி, நாம்பயி லுதன்மெய்ஞ் ஞானமுத் திரையே. (௩)

தானத்தி னுள்ளே சதாசிவ னாயிடும், ஞானத்தி னுள்ளே நற்சிவ மாதலா, லேனைச் சிவமாஞ் சொரூப மறைந்திட்ட, மோனத்து முத்திரை முத்தாந்த முத்தியே. (௪)

வாக்கு மனமு மிரண்டு மவுனமாம், வாக்கு மவுனத்து வந்தாலு மூங்கையாம், வாக்கு மனமு மவுனமா சுத்தரோ, யாக்கு மச்சுத்தத்தை யாரறி வார்களே. (௫)

யோகத்தின் முத்திரை யோரட்ட சித்தியா, மேகத்த ஞானத்து முத்திரை யெண்ணுங்கா, லாகத் தகுவேத கேசரி சாம்பவி, யோகத்து கேசரி யோகமுத் திரையே. (௬)

யோகியெண் சித்தி யருளொலி வாதனை, போகிதன் புத்தி புருடார்த்த நன்னெறி, யாகுநன் சத்தியு மாதார சோதனை, யேகமுங் கண்டொன்றி லெய்திநின் றானே. (௭)

துவாதச மார்க்கமெண் சோடச மார்க்கமா, மவாவறு மீரை வகையங்க மாறு, தவாவறு வேதாந்த சித்தாந்தத் தன்மை, நவாவக மோடுன்ன னற்சுத்த சைவமே. (௮)

மோனத்து முத்திரை முத்தர்க்கு முத்திரை, ஞானத்து முத்திரை நாதர்க்கு முத்திரை, தேவிக்கு முத்திரை சித்தாந்த முத்திரை, காணிக்கு முத்திரை கண்ட சமையமே. (௯)

தூநெறி கண்ட சுவடு நடுவெழும், பூநெறி கண்டது பொ

ன்னக மாய்நிற்கு, பேரொறி கண்டது வெண்மதி மேதினி, நீ
னெறி கண்டுளை நின்மல ஞமே. (கo) ஆ௨ சகூஅ.

---

## பூரணக்குகைநெறிச்சமாதி.

வளர்பிறை யிற்றேவர் தம்பாலின் மன்னி, யுளரொளி பா
நுவி னுள்ளே யொடுங்கித், தளர்விற் பிதிர்பதந் தங்கிச் சசியு,
ளுளதுறும் யோகி யுடல்விட்டாற் ருனே. (க)

தானிவை பொக்குஞ் சமாதிகை கூடாது, போன வியோ
கி புகலிடம் போந்தபின், ஞனவை தீர நிரந்தர மாயோக, மா
னவை சேர்வா ரருளின்சார் வாகியே. (உ)

தானிவ் வகையே புவியோர் நெறிதங்கி, யான சிவயோக
த் தாமாரு மவ்விந்து, தானதி லந்தச் சிவயோகி யாகுமுன்,
ஞானத்தோர் சித்திவந் தோர்காய மாகுமே. (௩)

சிவயோகி ஞானி சிதைந்துடல் விட்டாற், றவலோகஞ்
சேர்ந்துபின் றுன்வந்து கூடிச், சிவயோக ஞானத்தாற் சேர்
ந்தவர் நிற்பர், புவலோகம் போற்றுனர் புண்ணியத் தோரே.

ஊனமின் ஞானிநல் யோகி யுடல்விட்டாற், ருனற மோா
னச் சமாதியுட் டங்கியே, தானவ ரும்பரகாயஞ் சாராதே,
யூனமின் முத்தராய் மீளா ருணர்வுற்றே. (௫)

செத்தார் பெறும்பய ருவது வேதெனிற், செத்துநீர் சே
ர்வது சித்தினைக் கூடிடிற், செத்தா ரிருந்தார் செகத்திற் றிரி
மலந், செத்தார் சிவமாகியேசித்தர் தாமே. (௬)

உன்னக் கருவிட் டேவோ னரனருட், பன்னப் பரனே ய
ருட்குலம் பாலிப்ப, னென்னப் புதல்வர்க்கும் வேண்டி யிடுஞா
னி, தன்னிச்சைக் கீச ஞருஞ்செய்யுந் தானே. (௭)

எங்குஞ் சிவமா யருளா மிதயத்துத், தங்குஞ் சிவஞானி

க்கெங்கு மாந் தற்பர, மங்காங் கெனநின்று சகமுண்ட வான்
றேய்த, விங்கே யிறந்தெங்கு மாய்நிற்கு மீசனே. (அ)

ஆ உ௭சு

---

### சமாதிக்கிரியை.

அந்தமின் ஞானிதன் னாகந் தீயினில், வெந்திடி னாடெலா
ம் வெப்புத் தீயினி, னொந்தது நாய்நரி நுகரி னுஞ்செரு, வந்து
நாய்நரிக் குணவாகும் வையமே. (க)

எண்ணிலா ஞானி யுடலெரி தாவிடி, லண்ணறங் கோயி
லழலிட்ட தாங்கொக்கு, மண்ணின் மழைவிழா வையகம் பஞ்
சமா, மெண்ணரு மன்ன ரிழப்பா ரரசே. (உ)

புண்ணிய மாமவர் தம்மைப் புதைப்பது, நண்ணி யனல்
கோக்கி னாட்டி லழிவாகு, மண்ணி லழியி லலங்கார பங்கமா,
மண்ணுல கெல்லா மயங்குமனன் மண்டியே. (௩)

அந்தமின் ஞானி யருளை யடைந்தக்கா, லந்த வுடனுன் கு
கைசெய் திருத்திடிற், சுந்தர மன்னருந் தொல்புவி யுள்ளோ
ரு, மந்தமி லின்ப வருள்பெறு வாரே. (ச)

நவமிகு சாணலே நல்லாழஞ் செய்து, குவைமிகு குழ
வைஞ் சாணகக் கோட்டித், தவமிகு குகைமுக் கோணமுச் சா
ணாக்கிப், பவமறு நற்குகை பத்மா சனமே. (ரு)

தன்மனை சாலை குளங்கரை யாற்றிடை, நன்மலர்ச் சோ
லை நகரிநற் பூமி, யுன்னருங் கான முயர்ந்த மலைச்சார, லிந்நில
ந் தான்குகைக் கெய்து மிடங்களே. (சு)

நற்குகை நால்வட்டம் பஞ்சாங்க பாதமாய், நிற்கின்ற
பாத நவபாத நேர்விழப், பொற்பம ரோசமும் மூன்றுக்கு மூ
ன்றணி, நிற்பவர் தாஞ்செய்யு நேர்மைய தாமே. (எ)

பஞ்ச லோகங்க ணவமணி பாரித்து, விஞ்சப் படுத்ததன்

மேலா சனமிட்டு, முஞ்சிப் படுத்துவெண் ணீறிட் டதன்மே
லே, பொன்செய்நற் சுண்ணம் பொதிபலு மாமே. (அ)

நன்குகை நால்வட்டம் படுத்ததன் மேற்சாரக், கள்ளவி
ழ் தாமங் களபங்கத் தூரியுந், தெள்ளிய சாந்து புழுகுபன் னீ
ர்சேர்த்து, வொள்ளிய தூப முவந்திடு வீரே. (௯)

ஓதிடும் வெண்ணீற்று ளுத்தூளங் குப்பாய, மீதினி லிட்
டா சனத்தினின் மேல்வைத்துப், போதறு சுண்ணமு நீறும்
பொலிவித்து, மீதி லிருத்தி யிருத்திடு வீரே. (௧0)

விரித்தபின் னூற்சாரு மேவுதல் செய்து, பொரித்த சறி
போனகமிள நீருங், குருத்தலம் வைத்தோர் குகைமுகம் பா
ர்வை, தரித்தபின் மேல்வட்டஞ் சாத்திடு வீரே. (௧௧)

மீது சொரிந்திடும் வெண்ணீறுஞ் சுண்ணமும், போது ப
லகொண்டு தர்ப்பைப்புல் வில்லமும், பாத வுதகத்தான் மஞ்ச
னஞ் செய்துபார், மீதுமூன் றுக்குமூன் றணிநிலஞ் செய்யுமே.

ஆதன மீதி லரசு சிவலிங்கம், போது மிரண்டினி லொன்
றைத்தா பித்து, மேதகு சந்நிதி மேவுத் தரம்பூர்வங், காதலிற்
சோடசங் காணுப சாரமே. (௧௩) ஆ உ௪௯.

---

## விந்துற்பநம்.

உதயத்தில் விந்துவி லோங்குண் டலியு, முதயக் குடிலில்
வயித்தவ மொன்பான், விதியிற் பிரமாதி கள்மிகு சத்தி, கதி
யிற் கரணங் கலைவை கரியே. (௧)

செய்திடும் விந்துபே தத்திற னையைந்தஞ், செய்திடு நா
தபே தத்திற னூலாறுஞ், செய்திடு மற்றிவை யிரிரண் டிற்றிற
ஞ், செய்திடு மாறுறு சேர்தத் துவங்களே. (௨)

வந்திடும் பேத மெலாம்பர விந்து, தந்திடு மாமாயை வா
கேசி தற்பரை, யுந்து குடிலைபோ ரேழுறு குண்டலி, விந்துவி
லிந்நான்கு மேவா விளங்குமே. (௩)

விளங்கு நிவிர்த்தாதி மேவக ராதி, வளங்கொ ளுகார ம காரத்துள் விந்து, களங்கமி லுதாந்தங் கண்ணினு ணண்ணி, யுளங்கொண் மனுதியு ளந்தமு மாமே. (ச)

அந்தமு மாதியு மாகிப் பராபரன், வந்த வியாபி யெனலாய வந்நெறி, கந்தம தாகிய காரண காரியந், தந்தைங் கருமமுந் தான்செய்யும் வியமே. (ரு)

வியம தாகிய விந்துவின் சத்திபா, லாய வகண்டமு ம ண்டமும் பாரிப்பக், காயவைம் பூதமுங் காரிய மாயையி, லாயிட விந்து வகம்புற மாகுமே. (சு)

புறமக மெங்கும் புகுந்தொளிர் விந்து, நிறமது வெண்மை நிகழ்நாதஞ் செம்மை, யுரமகிழ் சத்தி சிவபாத மாயுட், டிற னொடு வீடளிக் குஞ்செயற் கொண்டே. (எ)

கொண்டவிவ் விந்து பரமம்போற் கோதற, நின்ற படங்க டமாய்நிலை நிற்றலிற், கண்ட கலாதியின் காரண காரியத், தண்ட மனைத்துமாய் மாமாயை யாகுமே. (அ)

அதுவித்தி லேநின்றங் கண்ணிக்கு நந்தி, யிதுவித்தி லேயுள வாறை யுணரார், மதுவித்தி லேமல ரன்னம தாகிப், பொது வித்தி லேநின்ற புண்ணியன் றானே. (கூ)

வித்தினி லன்றி முளையில்லை யம்முளை, வித்தினி லன்றி வெளிப்படு மாறில்லை. வித்து முளையு முடனல்ல வேறில்லை, யு த்தன்மை யாகு மரனெறி காணுமே. (௧௦)

அருந்திய வன்ன மவைமூன்று கூறும், பொருந்து முடன்மனம் போமல மென்னத், திருந்து முடன்மன மாங்கூறு சேர்ந்திட், டிருந்தன மூன்று ளிரதம தாகுமே. (கக)

இரத முதலான வேழ்தாது மூன்றி, னுரிய தினத்தி னொருபுற் பனிபோ, லரிய துளிவிந்து மாகுமேழ் மூன்றின், மருவி யுவிந்து வளருங்கா யத்திலே. (கஉ)

காயத்திலேமூன்று நளிாற் கலக்ட்டுச், காயத்துட் டன்
மன மாருங் கலாவிந்து, நேயத்தே நின்றோர்க்கு நீங்கா விடா
மையின், மாயத்தே செல்வோர் மனத்தோ டழியுமே. (௧௩)

அழிகின்ற விந்து வளவை யறியார், கழிகின்ற தன்னையுள்
காக்கலுந் தேரா, ரழிகின்ற காயத் தழிந்தயர் வுற்றோ, ரழி
கின்ற தன்மை யறிந்தொழி யாரே. (௧௪) ஆ௨ ௨௫

---

விந்துஜயம்-போகசரவோட்டம்

பார்க்கின்ற மாதரைப்பாரா தகன்றுபோ, யோர்க்கின்
றவுள்ள முருக வழன்மூட்டிப், பார்க்கின்ற கண்ணுமை பாழ்
பட மூலத்தே, சேர்க்கின்ற போகி சிவயோகி தானே. (௧)

தானே யருளாற் சிவயோகந் தங்காது, தானேயக் கா
மாதி தங்குவோ னும்முட்டுந், தானே யதிகாரந் தங்கிற் சட
ங்கெடு, மூனே யவற்றுள் ளுயிரோம்பா மாயுமே. (௨)

மாயாள் வசத்தே சென்றி வரவேண்டி, லோயா விருபக்
கத் துள்வளர் பக்கத்து, ளேயாவெண் ணுளின்ப மேற்பனி
மூன்றிரன், டாயா வபரத்து ளாதிநா ளாருமே. (௩)

ஆறைந்து பன்னொன்று மன்றிச் சகமார்க்கம், வேறன்பு
வேண்டுவோர் பூவரிற் பின்னந்தோ, டேறு மிருபத் தொருநா
ளிடைத்தோங்கு, மாறின் மிகுத்தோங்கு மக்காலஞ் செய்
யவே. (௪)

செய்யு மளவிற் றிருநாள் முகுர்த்தமே, யெய்யுங் கலைகா
ல மீதுப் பருதிகா, லையு மிட்டதோடி னன்காம னானெறி,
செய்க வலமிடந் தீர்ந்து விடுக்கவே. (௫)

விடுங்காண் முனைந்திந் திரியங்க ளைப்போ, னடுங்கா திரு
ப்பானு மையைந்து நண்ணப், படுங்காதன் மாதின்பாற் பற்ற
ற விட்டுக், கடுங்காற் கரணங் கருத்துறக் கொண்டே. (௬)

கொண்ட குணனே நலனேநற் கோமளப், பண்டை யுருவே பகர்வாய் பவளமே, விண்டு தனமே மிடைய விடும்போதிற், சண்ட கரணமுட் செல்லக்கண் டேவிடே. (எ)

விட்டபின் கர்ப்பவுற் பத்தி விதியிலே,தொட்டுறுங் காலங்க டோன்றக் கருதிய, கட்டிய வாணுள்சா நாள்குணங் கிழ்மைசேர்ப், பட்ட நெறியிதென் றெண்ணியும் பார்க்கவே. (அ)

பார்த்திட்டு வையத்துப் பரப்பற் றுருப்பெற்று, வார்ச்செற்ற கொங்கை மடந்தையை நீக்கியே, சேர்த்தற் றிருதிங்கள் சேரா வகலினு, மூப்புற்றே பின்றுளி லாமெல்லா முள்ளவே. (௯)

வித்திடு வோர்க்கன்றி மேலோர் விளைவில்லை, வித்திடு வோர்க்கன்றி மிக்கோ ரறிவில்லை, வித்தினில் வித்தை விதறவுணர்வரேல், மத்தி லிருந்ததோர் மாங்கனி யாமே. (௧0)

கருத்தினி லக்கர மாயுவு மியாவுங், கருத்தாள னீசன் கருவுயி ரோடுங், கருத்தது வித்தாய்க் காரண காரியங், கருத்தற மாறிவை கற்பனை தானே. (௧௧)

ஒழியாத விந்து வுடனிற்க நிற்கு, மழியாப் பிராண னதிபலஞ் சத்தி, யொழியாத புத்தி தபஞ்சப மோன, மழியாத சித்தியுண் டாம்விந்து வற்றிலே. (௧௨)

வற்ற வனலைக் கொளுவி மதித்தேறித், துற்ற சுழிபனல் சொருகிச் சுடருற்று, முற்று மதியத் தமுதை முறைமுறை, செற்றுண் பவரே சிவயோகி யாவரே. (௧௩)

யோகியு ஞானியு முத்தம சித்தனும், யோகியு ஞானபுரந்தர னுவோனு, மோக முறினு முரையமிர் துண்யோனு மாகிய விந்து வழியாத வண்ணலே். (௧௪)

அவ்வனை லுடலாகி யவ்வனல் விந்துவு, மண்ணிடை மாய்க்கும் பிராணனும் விந்துவுங், கண்ணுங் கனலிடைக் கட்டிக்

கலக்கெரித், துண்ணி லமிர்தாகி யோகிக் கறிவாமே. (௧௫)

அறியா தழிகின்ற வாதலா னாளும், பொறியா லழிந்து புலம்புகின் றூர்க, ளறிவாய் நனவி லதீதம் புரியச், செறிவா யிருந்து சேரவே மாயுமே. (௧௬)

மாதரை மாய வருங்கூற்ற மென்றுன்னக், காதல தாகிய காமங் கழிந்திடுஞ், சாதலு மில்லை சதகோடி யாண்டினுஞ் சோதியி னுள்ளே துரிசறுங் காலமே. (௧௭)

காலங் கடந்தவன் காண்விந்து செற்றவன், காலங் கடந்தழிந் தான்விந்து செற்றவன், காலங்க ளின்விந்து செற்றுற்ற காரிகை, காலின்கண் வந்த கலப்பறி யாவமே. (௧௮)

கலக்குநாள் முன்னு டன்னிடைக் காத, னலத்தக வேண்டிலங் காரி யுதரக், கலத்தின் மலத்தைத்தண் சீதத்தைப் பித்தை, விலக்கு வனசெய்து மேவனை வீரோ. (௧௯)

மேலா நிலத்தெழு விந்துவு நாதமுங், கோலா லடத்திக் குறிவழி யேசென்று, பாலா மமிர்துண்டு பற்றறப் பற்றினன், மாலா னதுமாள மாளுமவ் விந்தே. (உ0)

விந்து விளைவும் விளைவின் பயன்முற்று, மந்த வழிவு மடக்கத்தி லாக்கமு, நந்திய நாசமு நாதத்தாற் பேதமுந், தந்துணர் வோர்க்குச் சயமாகும் விந்துவே. (உ௧)

விந்துவென் வீசத்தை மேவிய மூலத்து, நந்திய வங்கியி னாலே நயந்தெறித், தந்தமில் பானு வதிகண்ட மேலேற்றிச், சந்திரன் சார்புறத் தண்ணமு தாமே. (உ௨)

அமுதச் சவிந்து வாம்விந்து மாள, வமுதப் புனலோடி யங்கியின் மாள, வமுதச் சிவபோக மாதலாற் சித்தி, யமுதப் பலாவன மாங்குறும் யோகிக்கே, (உ௩)

யோகமவ் விந்து வொழியா வகைபுணர், தாக மிரண்டு

ங் கலந்தாலு மாங்கிருப், போகஞ் சிவபோகம் போகிநற் போகமா, மோகங் கெடமுயங் கார்மூடர் மாதர்க்கே. (உச)

மாத ரிடத்தே செலுத்தினு மவ்விந்து, காதலி னால்விடா ர் யோகங் கலந்தவர், மாத ருயிரானைக் கைக்கொண்டே வா டுவர், காதலர் போன்றங்ஙன் காதலாஞ் சாற்றிலே. (உரு)

சாற்றிய விந்து சயமாகுஞ் சத்தியா, லேற்றிய மூலத் தழலை யெழமூட்டி, நாற்றிசை யோடா நடுநாடி நாதத்தோ, டாற்றி யமுத மருந்தவிந் தாமே. (உசு)

விந்துவு நாதமு மேவக் கனன்மூல, வந்த வனன்மயிர்க் காற்று மன்னிடச், சிந்தனை மாறச் சிவமக மாகவே, விந்து வு மாளுமெய்க் காயத்தில் வித்திலே. (உஎ)

வித்துக்குற் றுண்பான் விளைவறி யாதவன், வித்துக்குற் றுண்ணமல் வித்துச்சுட் டுண்பவன், வித்துக்குற் றுண்பானில் வேறல னீற்றவன், வித்துக்குற் றுண்ணமல் வித்துவித் தானன்றே. (உஅ)

அன்னத்தில் விந்து வடங்கும் படிகண்டு, மன்னப் பிரா ணாலும், விந்து மறித்திட்டு, மின்னொத்த விந்துநா தாந்தத் து விட்டிட, வன்னத் திருவிந்து மாயுங்கா யத்திலே. (உகூ)

அன்னம் பிராணனென் றுர்க்கு மிருவிந்து, தன்னை யறிந் துண்டு சாதிக்க வல்லார்க்குச், சொன்னமு மாமுருத் தோன் றுமெண் சித்தியா, மன்னவ ரெல்லா மழிவற நின்றதே. (ஙா)

நின்ற சிகார நினைக்கும் பிராணனு, பொன்று மகார மொ ருமூன்றே டொன்றவை, சென்று பராசத்தி விந்து சயந்தன் னை, யொன்ற வுரைக்க வுபதேசந் தானே. (ஙக)

தானே யுபதேசந் தானல்லா தொன்றில்லை, வானே யுயர் விந்து வந்த பதினாலு, மானே ரடங்க வதன்பின் புத்தியர், தானே சிவகதி தன்மையு மாமே. (ஙஉ)

விந்துவு நாதமும் விளைய விளைந்தது, வந்தவிப் பல்லுயிர் மன்னுயி ருக்கெலா, மந்தமு மாதியு மாமந் திரங்களும், விந்து வடங்க விளையுஞ் சிவோகமே. (௩௩)

வறுக்கின்ற வாறு மனத்துலா வெற்றி, நிறுக்கின்ற வாறுமந் நின்வரை யொட்டிப், பொறிக்கின்ற வாறுமப் பொல்லா வினையை, யறுக்கின்ற நாள்வரு மத்திப் பழமே. (௩௪)

விந்துவு நாதமு மேவி யுடன்கூடிச், சந்திர னோடே தலைப்படு மாயிடி லந்தர வானத் தமுதம்வந் தூறிடு, மங்குதி மந்திர மாகுதி யாகுமே. (௩௫)

மனத்தொடு சத்து மனஞ்செவி யென்ன, வினத்தெழு வார்களிசைந்தன நாடி, மனத்தி லெழுகின்ற வாக்கு வசனங், கனத்த விரதமக் காமத்தை நாடிலே. (௩௬)

சத்தமுஞ் சத்த மனமு மனக்கருத், தொத்தறி கின்ற விடமு மறிகிலர், மெய்த்தறி கின்ற விடமறி வாளர்க்கு, வத்த விருப்பிட மவ்விடந் தானே. (௩௭)

உரமடி மேதினி யுந்தியி லப்பாம், விரவிய தன்முலை மேவிய கிழங்கி, கருமுலை மீமிசை கைக்கிழுக் காரும், விரவிய கந்தர மேல்வெளி யாமே. (௩௮) ஆக உஎக

---

ஆதித்தநிலை-அண்டாதித்தன்.

செஞ்சுட ரோன்முத லாகிய தேவர்கள், மஞ்சுடை மேரு வலம்வருங் காரண, மெஞ்சுட ரீச னிறைவ னிணையடி, தன்சுட ராக வணங்குந் தவமே. (௧)

பகலவன் மாலவன் பல்லுயிர்க் கெல்லாம், புகலவ னாய்நின்ற புண்ணிய நாத, னிகலற வேழுல கும்முற வோங்கும், பகலவன் பல்லுயிர்க் காதியு மாமே. (௨)

ஆதித்த னன்பினோ டாயிர நாமமுஞ், சோதியி னுள்ளே சுடரொளி யாய்நிற்கும், வேதியர் வேண்டிலும் விண்ணவர்

சொல்லினும், பாதியி லன்பு பழுக்கின்ற வாறே. (௩)

தானே யுலகுக்குத் தத்துவ னாய்நிற்குந், தானே யுலகுக்
குத் தையலு மாய்நிற்குந், தானே யுலகுக்குச் சம்புவு மாய்நி
ற்குந், தானே யுலகுக்குத் தண்சுட ராகுமே. (௪)

வலைய முக்கோணம் விட்ட மறுகோணந், தலையிரு வட்
டந் துய்ய விதமெட்டி, லலையுற்ற வட்டத்தி லீரெட் டிதழா,
மலையற் றுதித்தன னாதித்த னாமே. (௫)

ஆதித்த னுள்ளி லானமுக் கோணத்திற், சோதித் திரந்து
நற் சூரிய னுலாங், கேத முறுங்கேணி சூரிய னெட்டிற், சோ
திசன் னீட்டிற் சோடசந் தானே. (௬)

ஆதித்த னோடே யவனி யிருண்டது, பேதித்த நாலும்பி
தற்றிக் கழிந்தது, சோதிக்கு ணின்று துடியிடை செய்கின்ற,
வேதப் பொருளை விளங்குகி லீரோ. (௭)

பாருக்குக் கீழே பகலோன் வரும்வழி, யாருக்குங் காண
வொண் ணாத வரும்பொரு, ணீருக்குந் தீக்கு நடுவே யுதிப்பவ,
னூருக்கு மெட்டாத வாதித்தன் றானே. (௮)

மண்ணை யிடந்ததின் கீழொடு மாதித்தன், விண்ணை யிட
ந்து வெளிசெய்து நின்றிடுங், கண்ணை யிடந்து களிதந்த வா
னந்த, மெண்ணுங் கிழமைக் கிசைந்துநின் றானே. (௯)

பாரை யிடந்து பகலோன் வரும்வழி, யாரு மறியா ரருங்
கடை நூலவர், ஈர விருந்த திருமலை சூழென்பா, ரூரை யுண
ர்ந்தா ருணர்ந்திருந் தாரே. (௰) ஆ. ௨௮௪.

---

## பிண்டாதித்தன்.

நின்று மிருந்துங் கிடந்து நடந்தோதுங், கன்றாய நந்திக்
கருத்து ளிருந்தனன், கொன்று மலங்கள் குழல்வழி யோடிட,
வென்று விளங்கும் விரிசுடர் காணுமே. (௧)

ஆதித்த னோடி யடங்கு மிடங்கண்டு, சாதிக்க வல்லவர்

தம்மை யுணர்ந்தவர், பேதித் துலகம் பிதற்றும் பிதற்றெலா, மாதித்த ளேடே யடங்குகின் றானே. (உ)

உருவிப் புறப்பட் டுலகை வலம்வந்து, சொருகிக் கிடக்குந் துறையறி வாரில்லை, சொருகிக் கிடக்குந் துறையறி வாளர்க், குருகிக் கிடக்குமென் னுள்ளன்பு தானே. (௩) ஆ உ௲௪.

---

மனவாதித்தன்.

எறிகதிர் ஞாயிறு மின்பனி சோரு, மெறிகதிர் சோமனெ திர்நின் றெறிப்ப, விரிகதி ருள்ளே வியங்குமென் னாவி, யொரு கதி ராகி லுவாவது வாமே. (க)

சந்திரன் சூரியன் றுன்வரிற் பூசனை, முந்திய பாநுவி லிந்துவந் தேய்முறை, யந்த விரண்டு முபய நிலத்திற், சிந்தை தெளிந்தார் சிவமாயி னாரே. (உ)

ஆங்கு கலையோ டருக்க னனன்மதி, யாங்கு கலையிடை நான்கென லாமென்பா, ராங்கு மருக்க னனல்மதி யோடொன்ற, வாங்குமப் பூரணை யாமென் றறியுமே. (௩)

ஈரண்டத் தப்பா லியங்கிய வவ்வொளி, யோரண்டத் தார்க்கு முணரா வுணர்வது, பேரண்டத் தூடே பிறங்கொளி யாய்நின்ற, தாரண்டத் தக்கா ரறியத்தக் காரே. (௪)

ஒன்பதின் மேவி யுலகம் வலம்வரு, மொன்பது மீச னியல்பறி வாரில்லை, முன்பதின் மேவி முதல்வ னருளிலா, ரின்ப மிலாரிருள் சூழநின் றாரே. (௫) ஆ உ௲௯.

---

ஞானதித்தன்.

விந்து வபரம் பரமிரண் டாய்விரிந், தந்த வபரம் பரநாத மாகியே, வந்தன தம்மிற் பரங்கலை யாதிவைத், தந்த மருளே தயவென்ன வுள்ளத்தே. (க)

உள்ள வருணோ தயத்தெழு மோசைதான், றெள்ளும் பர
நாதத் தின்செய லென்பதால், வள்ளல் பரவிந்து வைகரி யாதி
வாக், குள்ளன வைங்கலைக் கொன்று முதயமே. (௨)

தேவர் பிரான்றிசை பத்துத யஞ்செய்யு, மூவர் பிரானெ
ன முன்னொரு காலத்து, நால்வர் பிரானடு வாயுரை யாமிற்கு,
மேவு பிரானென்பர் விண்ணவர் தாமே. (௩)

பொய்யிலன் மெய்யன் புவன பதியெந்தை, மெய்யிரு ணீ
க்கு மதியங்கி ஞாயிறு, செய்யிரு ணிக்குந் திருவுடை நந்தியெ
ன், கையிரு ணீங்கக் கலந்தெழுந் தானே. (௪)

தனிச்சுட ரெற்றித் தயங்கிரு ணீங்க, வனித்திடு மேலை ய
ருங்கனி யூறல், கனிச்சுட ராய்நின்ற கயிலையி லீச, னனிச்சுட
ர் மேல்கொண்ட வண்ணமு மாமே. (௫)

நேரறி வாக நிரம்பிய பேரொளி, போரறி யாத புவனங்
கள் போய்வருந், தேரறி யாத திசைபொளி யாயிடு, மாரறி
வாரிந்த நாயக மாமே. (௬)

மண்டலத் துள்ளே மலர்ந்தெழு மாதித்தன், கண்டிடத்
துள்ளே கதிரொளி யாயிடுஞ், சென்றிடத் தெட்டுத் திசைபெ
ங்கும் போய்வரு, நின்றிடத் தேநிலை நேரறி வார்க்கே. (௭)

நாபிக்கண் ணாசி நயன நடுவினுந், தூபியோ டைந்துஞ்
சுடர்விடு சோதியைத், தேவர்க ளீசன் றிருமால் பிரமனு, மூ
வரு மாக வுணர்ந்திருந் தாரே. (௮) ஆக உ௩௭.

---

## சிவாதித்தன்.

அன்றிய பாச விருளுமஞ் ஞானமுந், சென்றிடு ஞானச்
சிவப்பிர காசத்தா, லொன்று மிருசுட ராமரு ளோதயந், துன்
றிரு ணீங்குதல் போலத் தொலைந்ததே. (௧)

கடங்கடந் தோறுங் கதிரவ னொன்றி, லடங்கிட மூடி

லவற்றி லடங்கான், விடங்கொண்ட கண்டனு மேவிய காயத், தடங்கிட நின்றது மப்பரி சாமே. (உ)

தானே விரிசுடர் மூன்றுமொன் றாய்நிற்குந், தானே யய ன்மா லெனநின்று தாபிக்குந், தானே யுடலுயிர் வேறன்றி நின்றுளன், றானே வெளியொளி தானிருட் டாமே. (௩)

தெய்வச் சுடரங்கி ஞாயிறுந் திங்களும், வையம் புனலன ல் மாருதம் வானகஞ், சைவப் பெரும்பதி தாங்கிய பல்லுயி, ரைவர்க் கிடமிடை யாறங்க மாமே. (௪) ஆ ௩௰௯.

---

பசுவிலக்கணம்-பிராணன்.

உன்னு மளவி லுணரு மொருவனைப், பன்னு மறைகள் ப யிலும் பரமனை, யென்னு ளிருக்கு மிளையா விளக்கினை, யன்ன மயமென் றறிந்துகொண் டேனே. (க)

அன்ன மிரண்டுள வாற்றங் கரையினிற், றுன்னி யிரண் டுந் துணைப்பிரி யாதன்னந், தன்னிலை யன்னந் தனியொன்ற தென்றக்கால், பின்ன மடவன்னம் பேறணு காதே. (உ) ஆ ௩௰௫.

---

புருடன்.

வைகரி யாதியு மாயா மலாதியும், பொய்கரி யான புரு டாதி பேதமு, மெய்கரி ஞானங் கிரியா விசேடத்தச், செய் கரி யீச னநாதியே செய்ததே. (க) ஆ ௩௰௪.

---

அணு.

அணுவி லணுவினை யாதிப் பிரானை, யணுவி லணுவினை யா யிரங் கூறிட், டணுவி லணுவை யணுகவல் லார்கட், கணுவி

லணுவை யணுகலு மாமே. (௧)

படர்கொண்ட வாலதின் வித்தது போலச், சுடர்கொண் டணுவினைத் தூவழி செய்ப, விடர்கொண்ட பாச விருளற வோட்டி, நடர்கொண்ட நல்வழி நாடலு மாமே. (௨)

அணுவு ளவனு மவனு ளணுவுங், கணுவற நின்ற கலப்ப துணரா, ரிணையிலி யீச னவனெங்கு மாகித், தணிவற நின்ற சராசரந் தானே. (௩) ஆ ௩௭௭.

## சீவன்.

மேவிய சீவன் வடிவது சொல்லிடில், கோவின் மயிரொன்று நூறுடன் கூறிட்டு. மேவிய கூறது வாயிர மாயினு, லாவியின் கூறுநூ றாயிரத் தொன்றே. (௧)

ஏனோர் பெருமைய னாயினு மெம்பிறை, யூனே சிறுமையி னுட்கலந் தங்குளன், வானோ ரறியு மளவல்லன் மாதேவன், றானே யறியுந் தவத்தி னளவே. (௨)

உண்டு தெளிவ னுரைக்க வியோகமே, கொண்டு பயிலுங் குணமில்லை யாயினும், பண்டு பயிலும் பயில்சீவ னார்பின்னைக், கண்டு சிவனுருக் கொள்வர் கருத்துளே. (௩)

மாயா வுபாதி வசத்தாகுஞ் சேதகத், தாய குருவரு ளாலே யதிற்றாண்ட, வோயு முபாதியோ டொன்றிபொன் றுதயி, ராய துரியம் புகுந்தறி வாகவே. (௪) ஆ ௩௧௧.

## பசு.

கற்ற பசுக்கள் கதறித் திரியினுங், கொற்ற பசுக்கள் குழிகட்டி மேயினு, முற்ற பசுக்க ளொருகுடம் பால்போது, மற்றைப் பசுக்கள் வறள்பசு தானே. (௧)

கொல்லையின் மேயும் பசுக்களைச் செய்வதென், னெல்லை கடப்பித் திறைவ னடிகூட்டி, வல்லசெய் தாற்ற மதித்தபி னல்லது, கொல்லைசெய் நெஞ்சங் குறிப்பறி யாதே. (உ) ஆ ௩௪௩.

---

போதன்.

சீவ னெனச்சிவ னென்னவே றில்லை, சீவனார் சிவ னாரை யறிகிலர், சீவனார் சிவ னாரை யறிந்தபின், சீவனார் சிவ னாயிட் டிருப்பரே. (க)

குணவிளக் காகிய கூத்தப் பிரானு, மணவிளக் காகிய மன்னுயிர்க் கெல்லாம்; பணவிளக் காகிய பல்தலை நாகங், கணவிளக் காகிய கண்காணி யாகுமே. (உ)

அறிவா யறியாமை நீங்கி யவனே, பொறிவா யொழிந்தெ ங்குந் தானான போத, மறிவா யவற்றினுட் டானா யறிவன், செறிவாகி நின்றவச் சீவனு மாகுமே. (௩)

ஆருநின் றன்மை யறியா திருந்தேனுக், காருநின் றன்மை யறிவித்தான் பேர்நந்தி, யாருநின் றன்மை யருளா லறிந்தபி, னூருறுங் கப்புற மாகிநின் றானே. (௪)

சிவமா கியவரு ணின்றறிந் தோரா, ரவமா மலமைந்து மாவ தறியார், தவமான செய்து தலைப்பறி கின்றார், நவமான தத்துவ நாடகி லாரே. (௫)

நாடோறு மீச னடத்துந் தொழிலுன்னார், நாடோறு மீச னயந்தூட்ட லுடிடார், நாடோறு மீச னல்லோர்க்கரு ணலா, ருடோறு நாடார்க ளுள்வினை யாளரே. (௬)

ஆ ௩௪௬.

---

ஐந்திந்திரிய மடக்குமருமை.

ஆக மதத்தன வைந்து களிறுள, வாக மதத்தறி யோட

ணை கின்றில, பாகனு மெய்த்தவை தானு மிளைத்தபின், யோகு திருந்துத லொன்றறி யோமே. (க)

கருத்தினன் னூல்கற்றுக் கால்கொத்திப் பாகன், திருத்தலும் பாய்மாத் திகைத்தன்றிப் பாயா, வெருத்துற வேறி யிருக்கிலு மாங்கே, வருத்திலு மம்மா வழிநட வாதே. (உ)

புலமைந்து புள்ளைந்து புட்சென்று மேயு, நிலமைந்து நீரைந்து நீர்மையு மைந்து, குலமொன்று கோல்கொண்டு மேய்ப்பா னொருவ, னுலம்வந்து போம்வழி யொன்பது தானே. ()

அஞ்சுள சிங்க மடவியில் வாழ்வன, வஞ்சும்போய் மேய்ந்தகம் மஞ்சக மேபுகு, மஞ்சி னுகிரு மெயிறு மறுத்திட்டா, லெஞ்சா திறைவனை யெய்தலு மாமே. (௪)

ஐவை ரமைச்சருட் டொண்ணூற் றறுவர்க, ளைவரு மைந்தரு மாளக் கருதுவ, ரைவரு மைந்து சினத்தோடே நின்றிடி, லைவர்க் கிறையிறுத் தாற்றகி லோமே. (௫)

சொல்லகில் லேன்சுடர்ச் சோதியை நாடொறுஞ், சொல்லகில் லேன்றிரு மங்கையு மங்குள, வெல்லகில் லேன்புல னைந்துடன் றன்னையுங், கொல்லநின் றோடுங் குதிரையொத் தேனே. ()

எண்ணிலி யில்லி யுடைத்தவ் விருட்டறை, யெண்ணிலி யில்லியோ டேகிற் பிழைதரு, மெண்ணிலி யில்லியோ டேகாமை காக்குமே, லெண்ணிலி யில்லிதோ ரின்பம தாமே. (எ)

விதியின் பெருவலி வேலைசூழ் வையந், துதியின் பெருவலி தொல்வா னுலக, மதியின் பெருவலி மானுடர் வாழ்க்கை, நெதியின் பெருவலி நீர்வலி தானே. (அ) ஆ ௩உஎ.

ஐந்திந்திரியமடக்கு முறைமை.

குட்ட மொருமுழ முள்ள தரைமுழம், வட்ட மமைந்ததோர் வாவியுள் வாழ்வன, பட்டன மீன்பல பரவின் வலை

கொணர்ந், திட்டன மியாமினி யேதமி லோமே. (௧)

கிடக்கு முடலிற் கிளரிந் திரிய, மடக்க லுறுமவன் றனே யமரன், விடக்கிரண் டின்புற மேவுறு சிந்தை, நடக்கி னடக்கு நடச்கு மளவே. (௨)

அஞ்சு மடக்கடக் கென்ப ரறிவிலா, ரஞ்சு மடக்குமமர ரு மங்கிலை, யஞ்சு மடக்கிலசேதந மாமென்றிட், டஞ்சு மடக்கா வறிவறிந் தேனே. (௩)

முழக்கி யெழுவன மும்மத வேழ, மடக்க வறிவென்னுங் கோட்டையை வைத்தேன், பிழைத்தன வோடிப் பெருங்கேடு மண்டிக், கொழுத்தன வேழங் குலைக்கின்ற வாறே. (௪)

ஐந்தி லொடுங்கி லகலிட மாவது, வைந்தி லொடுங்கி னருந்தவ மாவது, வைந்தி லொடுங்கிலரன்பத மாவது, வைந்தி லொடுங்கி லருளுடை யாரே. (௫)

பெருக்கப் பிதற்றிலென் பேய்த்தேர் நினைந்தென், விரித்த பொருட்கெல்லாம் வித்தாவ துள்ளம், பெருக்கிற் பெருக்குஞ் சுருக்கிற் சுருக்கு, மருத்தமு மத்தனை யாய்ந்துகொள் வார்க்கே. (௬)

இளைக்கின்ற வாறறிந் தின்னுயிர் வைத்த, கிளைக்கொன்று மீசனைக் கேடில் புகழோன், றனைக்கொன்ற நாகமஞ் சாடலொடுக்கத், துளைக்கொண்ட தவ்வழி தூங்கும் படைத்தே. ()

பாய்ந்தன பூதங்க ளைந்தும் படரொளி, சார்ந்திடு ஞானத் தறியினிற் பூட்டிட்டு, வாய்ந்துகொ ளானந்த மென்னு மருள்செயில், வேய்ந்துகொண் மேலை விதியது தானே. (௮)

நடக்கின்ற நந்தியை நாடோறு முன்னில், படர்க்கின்ற சிந்தையைப் பைய வொடுக்கிக், குறிக்கொண்ட சிந்தை குறிவழி நோக்கில், வடக்கொடு தெற்கு மனக்கோயி லாமே. (௯)

சென்றன நாழிகை நாள்கள் சிலபல, நின்றது நீள்பொரு

ணர்மே னெருப்பொத்து, வென்று புலன்கள் விரைந்து விடுமி ன்கள், குன்று விழுவதிற் ருங்கலு மாமே. (கo)

போற்றிசைத் தும்புனி தன்றிரு மேனியைப், போற்றிசெ ய் மீண்டே புலனைந்தும் புத்தியா, லூற்றிசைக் கும்பின்னை யா ருக்கு நாதனை, யூற்றுகை யுள்ளத் தொருங்சலு மாமே. (கக)

தரிக்கின்ற நெஞ்சஞ் சகளத்தி னுள்ளே, யரிக்கின்ற வைவ ரை யாரு முணரார், சிரிக்கின்ற வாறு சிலபல பேசில், வரிக் கொண்ட மைசூழ் வரையது வாமே. (கஉ)

சைவிட லாவதொன் றில்லை கருத்தினு, ளெய்தி யவனை யி சையினு லேத்துமி, னைவ ருடைய வவாவினிற் றேன்றியே, பொய்வ ருடைய புலன்களு மைந்தே. (கங) ஆ ௩௪0.

---

## அசற்குருநெறி.

உணர்வொன் றிலாமூட னுண்மையோ ராதோன், கணுவி ன்றி வேதா கமநெறி காணுன், பணிவொன் றிலாதோன் பரநி ந்தை செய்வோ, னணுவின் குணத்தோ னசற்குரு வாமே. ()

மந்திர தந்திர மாயோக ஞானமும், பந்தமும் வீடுந் தரி சித்துப் பார்ப்பவர், சிந்தனை செய்யாத் தெளிவியா தூண் பொருட், டந்தக ராவோ ரசற்குரு வாமே. (உ)

ஆமா றறியாதோன் மூட னதிமூடன், காமாதி நீங்காக் கலதி கலதிகட், காமா றசத்தறி விப்போ னறிவிலோன், கோ மா னலசத் தாகுங் குரவனே. (உ)

கற்பாய கற்பங்க ணீக்காமற் கற்பித்தாற், றற்பாவங் கு ன்றுந் தனக்கே பகையாரு, நற்பா லரசுக்கு நாட்டுக்குங் கே டென்றே, முற்பாலே நந்தி மொழிந்துவைத் தானே. (ச)

குருடர்க்குக் கோல்காட்டிச் செல்லுங் குருடர், முரளும்

பழங்குழி வீழ்வரா முன்பின், குருடரும் வீழ்வரா முன்பின்
ன்றவே,குருடரும் வீழ்வார் குருடரோ டாகிபே. ()ஆ ருசரு.

---

சற்குருநெறி.

தாடந் தளிக்குந் தலைவனே சற்குரு, தாடந்து தன்னை ய
றியத் தரவல்லோன், ருடந்து தத்துவா தீதத்துச் சார்சிவன்,
ருடந்து பாசந் தணிக்கு மவன்சத்தே. (க)

தவிரவைத் தான்வினை தன்னடி யார்கோ, டவிரவைத்
தான்சிரத் தோடுதன் பாதந், தவிரவைத் தான்மன் றாதுவர்
கூட்டந், தவிரவைத் தான்பிற வித்துயர் தானே. (உ)

கறுத்த விரும்பே கனகம தானன், மறித்திரும் பாகா வ
கையது போலக், குறித்தவப் போதே குருவருள் பெற்றான், ம
றித்துப் பிறவியில் வந்தணு காரே. (ந)

பாசத்தை நீக்கிப் பரனோடு தன்னையு, நேசத்து நாடி மல
மற நீக்குவோ, ராசற்ற சற்குரு வாவோ ரறிவற்றுப், பூசற் கி
ரங்குவோர் போதக் குருவன்றே. (ச)

நேயத்தே நிற்கு நிமலன் மலமற்ற, நேயத்தை நல்கவல்
லோனித்தன் சுத்தனே, யாயத்து வாதத் துவமுணர்ந் தாங்க
ற்ற, நேயர்க் களிப்பவ னீடுங் குரவனே. (ரு)

பரிசன வேதி பரிசித்த தெல்லாம், வரிசை தரும்பொன் வ
கையாகு மாபோற், குருபரி சித்த குவலய மெல்லாந், திரிமல
ந் தீர்ந்து சிவகதி யாமே. (சு)

தானே யெனநின்ற சற்குரு சந்நிதி, தானே யெனநின்ற
தன்மை வெளிப்படிற், றானே தனைப்பெற வேண்டுஞ் சதிர்பெ
ற, வூனே யெனநினைந் தோர்ந்துகொ ளுன்னிலே. (எ)

வரும்வழி போம்வழி மாயா வழியைக், கருவழி கண்ட
வர் காணு வழியைய, பெரும்வழி யாநந்தி பேசும் வழியைச், கு
ருவழி யேசென்று கூடலு மாமே. (அ)

குருவென் பவனேவே தாகமங் கூறும், பரவின்ப னுகி
ச் சிவயோகம் பாவித், தொருசிந்தை யின்றி யுயர்பாச நீக்கி,
வருநல் குரவன்பால் வைக்கலு மாமே. (௯)

சத்து மசத்துஞ் சதசத்துந் தான்காட்டிச், சித்து மசித்
துஞ் சிவபரத் தேசேர்த்துச், சுத்த மசுத்த மறச்சுக மானசொ,
லத்த னருட்குரு வாமவன் கூறிலே. (௧௦)

உற்றிடு மைம்மலம் பாச வுணர்வினுற்; பற்றறு நாத னடி
யிற் பணிதலாற், சுற்றிய பேதந் துரியமூன் றுல்வாட்டித், தற்
பர மேவுவோர் சாதக ராமே. (௧௧)

எல்லா மிறைவ னிறைவி யுடனின்ப, மல்லார் புலனும் வ
ருங்கா லுயிர்தோன்றிச், சொல்லா மலமைந் தடங்கியிட் டோ
ங்கியே, செல்லாச் சிவகதி சேர்தல் விளையாட்டே. (௧௨)

ஈனப் பிறவியி லிட்டது மீட்டிட்டுத், தானத்து ளிட்டுத்
தனையூட்டித் தாழ்த்தலு, ஞானத்தின் மீட்டலு நாட்டலும் வீ
டுற்று, மோனத்துள் வைத்தலு முத்தன்தன் செய்கையே. ()

அத்த னருளின் விளையாட் டிடஞ்சடஞ், சித்தொ டசித்
தறத் தெளிவித்துச் சீவனைச், சுத்தனு மாக்கித் துடைத்து ம
லத்தினைச், சத்துட னெங்கரு மத்திடுந் தன்மையே. (௧௪)

ஈசத் துவங்கடந் தில்லையென் றப்புறம், பாசத்து ளேயெ
ன்றும் பாவியு மண்ணலை, நேசத்து ளேநின்ற நின்மல னெம்மி
றை, தேசத்தை யெல்லாந் தெளியவைத் தானே. (௧௫)

மாணிக்க மாலை மலர்ந்தெழு மண்டல, மாணிப்பொ னின்
றங் கமுதம் விளைந்தது, பேணிக்கொண் டுண்டார் பிறப்பற் றி
ருந்தார்க, ளூணுக் கிருந்தா ருணராத மாக்களே. (௧௬)

அசத்தொடு சத்து மசத்சத்து நீங்க, விசைத்திடு பாசப்
பற் றீங்கறு மாறே, யசைத்திரு மாயை யணுத்தானு மாங்கே,
யிசைத்தானு மொன்றறி விப்போ னிறையே. (௧௭)

ஏறு நெறியே மலத்தைப் பரித்தலா, லீறி லுரையா லிரு

ளை யறுத்தலான், மாறில் பசுபாசம் வாட்டலால் விடுக, வேறு பரனே குருவா மியம்பிலே. (௧௮) ஆ ௩௬௩.

## கூடா வொழுக்கம்.

கண்காணி யில்லென்று கள்ளம் பலசெய்வார், கண்காணி யில்லை யிடமில்லை காணுங்கால், கண்காணி யாகக் கலந்தெங்கு நின்றானைக், கண்காணி கண்டார் களவொழிந் தாரே. (௧)

செய்தா னறியுஞ் செழுங்கடல் வட்டத்துப், பொய்தான் மிகவும் புலம்பு மனிதர்கள், மெய்தா னுரைக்கில் விண்ணோர்தொழச் செய்வன், மைதாழ்ந் திலங்கு மிடறுடை யோனே.

பத்திவிற் றுண்டு பகலைக் கழிவிடு, மத்தகர்க் கன்றே மறுபிறப் புள்ளது, வித்துக்குற் றுண்டு விளைபுலம் பாழ்செய்யும், பித்தர்கட் கென்றும் பிறப்பில்லை தானே. (௩)

வடக்கு வடக்கென்பர் வைச்சதொன் றில்லை, நடக்க வுறுவரே ஞான மிலாதார், வடக்கி லடங்கிய வையக மெல்லா, மகத்தி லடங்கு மறிவுடை யோர்க்கே. (௪)

காயக் குழப்பனைக் காயநன் னாடனைக், காயத்தி னுள்ளே கமழ்கின்ற நந்தியைத், தேயத்து ளேயெங்குந் தேடித் திரிவர்கள், காயத்து ணின்ற கருத்தறி யாரே. (௫)

கண்காணி யாகவே கையகத் தேயெழும், கண்காணி யாகக் கருத்து ளிருந்திடும், கண்காணி யாகக் கலந்து வழிசெய்யும், கண்காணி யாகிய காதலன் றானே. (௬)

கன்னி யொருசிறை கற்றோ ரொருசிறை, மன்னிய மாதவஞ் செய்வோ ரொருசிறை, தன்னியல் புன்னி யுணர்ந்தோ ரருஞ்சிறை, யென்னிது வீச னியல்பறி யாரே. (௭)

காணாத கண்ணிற் படலமே கண்ணொளி, காணா தவர்கட்குங் காணாத வவ்வொளி, காணா தவர்கட்குங் கண்ணும் பெருங்கண்ணைக், காணாது கண்டார் களவொழிந் தாரே. (௮)

பித்தன் மருந்தாற் றெளிந்து பிரகிருதி, யுய்த்தொன்று மாபோல் விழியந்தன் கண்ணொளி,யத்தன்மை யாதல்போ னந்தி யருடரச், சித்தந் தெளிந்தேன் செயலொழிந் தேனே. ()

பிரான்மய மாகப் பெயர்ந்தன வெட்டும்,பராமய மென்றெண்ணிப் பள்ளி யுணரார், சுராமய முன்னிய சூழ்வினை யாளர்; நிராமய மாக நினைப்பொழிந் தாரே. (க)

ஒன்றிரண் டாகிநின் றொன்றியொன் றயினோர்க், கொன்று மிரண்டு மொருக்காலுங் கூடிடா, வொன்றிரண் டென்றே யுரைதருவோர்க்செலா, மொன்றிரண் டாய்நிற்கு மொன்றோ டொன் றனதே. (கக)

உயிரது நின்று லுணர்வெங்கு நிற்கு, மயரறி வில்லையா லாருடல் வீழு, முயிரு முடலு மொருங்கிக் கிடக்கும், பயிருங் கிடந்துள்ளம் பாங்கறி யாரோ. (கஉ)

உயிரது வேறு யுணர்வெங்கு மாகு, முயிரை யறிவி லுணர்வறி வாகு, முயிரன் றுடலை விழுங்கு முணர்வை, யயரும் பெரும்பேர்ருளாங்கறி யாரோ. (கங)

உலகாணி யொண்சுட ருத்தம சித்த, னிலவாணி யைந்திணுணேருற நிற்குஞ், சிலவாணி யாகிய தேவர் பிரானைத், தலைவாணிசெய்வது தன்னை யறிவதே. (சச)

தானந்த மாமென நின்ற தனிச்சுட, ரூனந்த மாயுல காய் நின்ற வொண்சுடர், தேனந்த மாய்நின்ற சிற்றின்ப நீயொழி, கோனந்த மில்லாக் குணத்தருளாமே. (கரு)

உன்முத லாகிய வூனுயி ருண்டெனுங், கன்முத லீசன் கருத்தறி வாரில்லை, நன்முதன் மேலறிய நாம மறநின்றாற், றன்முத லாகிய தத்துவ மாமே. (கசு)

இந்திய மந்தக் கரண மிவையுயிர், வந்தன சூக்க வுடல

ன்று மானது, தந்திடு மைவிதத் தாற்றற் புருடனு, முந்துள மன்னுமா ருறு முடிவிலே (கஎ) ஆ௨ ௩அ௦

---

## கேடுசண்டிரங்கல்.

வித்துப் பொதிவார் விரைவிட்டு நாற்றுவா, ரத்தம் வாணு ளறிகிலாப் பாவிக, ளுற்ற வினைத்துய ரொன்று மறிகிலார், முற்றெருளி தீயின் முனிகின்ற வாறே. (க)

போது சடக்கெனப் போகின் றதுகண்டும், வாதுசெய் தென்னே மனிதர் பெறுவது, நீதியுள் ளேநின்ற நின்மலன் ருளணிந், தாதியை யன்பி லறியகில் லார்களே. (உ)

கடன்கொண்டு நெற்குத்துக் கையரை யூட்டி, யுடம்பினை யோம்பி யுயிரார் திரிவர், தடங்கொண்ட சாரற் றழன்முருடேறி, யிடங்கொண் டுடலார் கிடக்கின்ற வாறே. (ங)

விரைந்தன்று நால்வர்க்கு மெய்ப்பதி சூழ்ந்து, புரந்தகல் லானிழற் புண்ணியன் சொன்ன, பரந்தன்னை யோராப் பழமொழி யாள, ருரந்தன்மை யாகவொருங்கிநின் ருர்களே. (ச)

நின்ற புகழு நிறைதவத் துண்மையு, மென்றுமெம் மீசனடியவர்க் கேநல்கு, மன்றி யுலக மதுவிது தேவென்று, குன்றுகை யாலே குறைப்பட்ட வாறே. (ரு)

இன்பத்து ளேபிறந் தின்பத்து ளேவளர்ந், தின்பத்து ளேநினைக் கின்ற திதுமறந், துன்பத்து ளேசிலர் சோர்றுடுங் கூறையென், துன்பத்து ளேநின்று தூங்குகின் ருர்களே. (சா)

பெறுதற் கரிய பிறவியைப் பெற்றும், பெறுதற் கரிய பிரானடி பேணார், பெறுதற் கரிய பிராணிக ளெல்லாம், பெறுதற் கரியதோர் பேறிழந் தாரே. (எ)

ஆர்வ மனமு மளவி லிளமையு, மீரமு நல்லதொன் றின்புறு காலத்துத், தீர வருவதோர் காமத் தொழிலின்று, மாதய வி

ன்ப மறந்தொழிந் தார்களே. (அ)

இப்பரி சேயிள ஞாயிறு போலுரு, வப்பரி சங்கியி னுள்ளு றை யம்மனை, யிப்பரி சேகம லத்துறை யீசனை, மெய்ப்பரி சே வின வாதிருந் தோமே. (௯)

கூடகில் லார்குரு வைத்த குறிகண்டு, நாடகில் லார்நயம் பேசித் திரிவர்கள், பாடகில் லாரவன் செய்த பரிசறிந், தாட வல் லாரவர் பேறெது வாமே. (௧0)

நெஞ்சு நிறைந்தங் கிருந்த நெடுஞ்சுடர், நஞ்செம் பிரானெ ன்று நாதனை நாடொறுந், துஞ்சு மளவுந் தொழுமின் றொழா விடி, னஞ்சற்று விட்டதோ ரானையு மாமே. (௧௧)

மிருக மனிதர் மிக்கோர் பறவை, யொருவர்செய் தன்பு வைத் துன்னுத தில்லை, பருகுவ ரோடுவர் பார்பயன் கொள் வர், திருமரு மாதவஞ் சேர்ந்துணர்ந் தாரே. (௧௨)

நீதியி லோர்பெற்ற பொன்போ லிறைவனைச், சோதியி லாருந் தொடர்ந்தறி வாரில்லை, யாதி யயனென் ரமரர் பிரானெ ன்று, நாதியே வைத்தது நாடுகின் றேனே. (௧௩)

இருந்தேன் மலர்களைத் தின்புற வண்டு, பெருந்தே னிழை க்கின்ற பெற்றிமை யோரார், வருந்தே னுகராது வாய்புகு தே னை, யருந்தேனை யாரு மறியகி லாரே. (௧௪)

கருத்தறி யாது கழிந்தன கால, மருத்தியுள் ளானம ராப தி நாத, னொருத்தனுள் ளானுல கத்துயிர்க் கெல்லாம், வருத் திநில் லாது வழுக்குகின் றாரே. (௧௫)

குதித்தோடிப் போகின்ற கூற்றமுஞ் சார்வாய், விதித்த ன நாட்களும் வீழ்ந்து கழிந்த, வதிர்த்திருந் தென்செய்தீ ரா றுதி ராகிற், கொதிக்கின்ற கூழிற் றுடுப்பிட லாமே. (௧௬)

கனையரு காருக் கழனி விளைந்த, தினையரு காமுன்னங்

தேர்ந்தின்ப மெய்தும், வரையரு கூறிய மாதவ நோக்கி, ன
ரையுரு வாச்செல்லு நாளில வாமே. (கஎ)

வரவறி வானை மயங்கிருண் ஞாலத், திரவறி வானைச் செ
மூஞ்சுடர்ச் சோதியை, யறவறி வார்முன் னொருதெய்வ மென்
று, விரவறி யாமலே மேல்வைத்த வாறே. (கஅ) ஆ. நஃஅ.

---

இதோபதேசம்.

மறந்தொழி மண்மிசை மன்னுப் பிறவி, யிறந்தொழி கா
லத்து மீசனை யுள்கும், பறந்தல மந்து படுதுயர் தீர்ப்பான்,
சிறந்த சிவநெறி சிந்தைசெய் யீரோ. (க)

செல்லு மளவுஞ் செலுத்துமின் சிந்தையை, வல்ல பரிசா
லுரைமின்கள் வாய்மையை, யில்லை யெனினும் பெரிதுள னெ
ம்மிறை, நல்ல வரனெறி நாடுமி னீரே. (உ)

ஒன்றே குலமு மொருவனே தேவனு, நன்றே நினைமி ன
மனில்லை நாணுமே, சென்றே புகுங்கதி யில்லைநுஞ் சித்தத்து,
நின்றே நிலைபெற நீர்நினைந் துய்ம்மினே. (ந)

போற்றிசெ யந்தண் கயிலைப் பொருப்பனை, நாற்றிசைக்
குந்நடு வாய்நின்ற நம்பனைக், காற்றிசைக் குங்கம ழாக்கை
யைக் கைக்கொண்டு, கூற்றுதைத் தான்றன்னைக் கூறிநின் று
ய்ம்மினே. (ச)

இக்காய நீக்கி யினியொரு காயத்திற், புக்குப் பிறவாமற்
போம்வழி தேடுமி, னெக்காலத் திவ்வுடல் வந்தெமக் கான
தென், றக்கால முன்ன வருள்பெற லாமே. (ரு)

போகின்ற வாறே புகுகின்ற வப்பொரு, ளாகின்ற போ
தி மரனறி வானுளன், சாகின்ற போதுந் தலைவனை நாடுமி,
ருகின்ற வப்பொரு ளக்கரை யாகுமே. (சு)

பறக்கின்ற வொன்று பயனுற வேண்டி, னிறக்கின்ற கா லத்து மீசனை யுள்குஞ், சிறப்பொடு சேருஞ் சிவகதி பின்னை ப், பிறப்பொன் றிலாமையும் பேறுல காமே. (எ)

கூடியு நின்றுந் தொழுதெம் மிறைவனைப், பாடியு மாடி ன்று பாதம் பணிமின்க, ளாடியு ளேநின் றறிவுசெய் வார்கட் கு, நீடிய விற்றுப் பசுவது வாகுமே. (அ)

விடுகின்ற சீவனார் மேலெழும் போது, நடுநின்று நாடுமி னுதன்றன் பாதங், கெடுகின்ற வல்வினை கேடில் புகழோ, னி டுகின்ற தும்மை யிமையவ ரோடே. (கூ)

ஏறுடை யாயிறை வாவெம் பிரானென்று, நீறிடு வாரடி யார்நிகழ் தேவர்க, ளாறணி செஞ்சடை யண்ண றிருவடி, வேறணி வார்க்கு வினையில்லை தானே. (கo)

இன்புறு வீரறிந் தேயெம் மிறைவனை, யன்புறு வீர்தவ ஞ் செய்யுமெய்ஞ் ஞானத்துப், பண்புறு வீர்பிற வித்தொழி லேநின்று, துன்புறு பாசத் துழைத்தொழிந் தீரே. (கச)

மேற்கொள்ள லாவதோர் மெய்த்தவ மொன்றுண்டு, மேற்கொள்ள லாவதோர் மெய்த்தாளு மொன்றுண்டு, மேற் கொள்ள லாவதோர் மெய்ந்நெறி யொன்றுண்டு, மேற்கொள் ள லாம்வண்ணம் வேண்டிநின் றோர்க்கே. (கஉ)

சார்ந்தவர்க் கின்பங் கொடுக்குந் தழல்வண்ண, னோர்ந் தவர் கின்னுப் பிறவி கொடுத்திடுங், கூர்ந்தவர்க் கங்கே கு ரைகழல் காட்டிஞ், சேர்ந்தவர் தேவரைச் சென்றுணர் வாரே. (கங)

முத்தியை ஞானமு முத்தமி ழோசையை, யெத்தனை காலமு மேத்துவ ரீசனை, நெய்த்தலை பால்போ னிமலனு மங் குள, னத்தகு சோதி யதுவிரும் பாரே. (கசு)

நியமத்த னாகிய நின்மலன் வைத்த, வுகமெத் தனையென்

ருருவருந் தேரார், பவமத்தி லேவந்து பாய்கின்ற தல்லாற், சிவமத்தை யொன்றுந் தெளியகில் லாரே. (கசு)

இங்கித்தை வாழ்வு மெனத்தோ ரகிதமுந், தஞ்சொத்த காலத்துத் தூய்மணி வண்ணனை, விஞ்சத் துறையும் விகிர்தா வெனநின்னை, நஞ்சத் தவர்க்கன்றி நாடவொண் ணாதே.

பஞ்சமு மாம்புவி சற்குரு பான்முன்னி, வஞ்சக ரானவுர் வைகி லவர்தம்மை, யஞ்சுவ நாத னருநர கத்திடுஞ், செஞ்சநிற் போரைத் தரிசிக்கச் சித்தியே. (கஎ)

சிவனை வழிபட்டா ரெண்ணிலி தேவ, ரவனை வழிபட்டங் காமாறொன் றில்லை, யவனை வழிபட்டங் காமாறு காட்டிங், குருவை வழிபடிற் கூடலு மாமே. (கஅ)

நரருஞ் சுரரும் பசுபாச நண்ணிக், கருமங்க ளாலே கழிதலிற் கண்டு, குருவென் பவன்ஞானி கோதில னானாற், பரமென்ற லன்றிப் பகர்வொன்று மின்றே. (கசு)

ஆட்கொண் டவர்தனி நாயக னன்புற, மேற்கொண் டவர்வினை போயற நாடோறு, நீர்க்கின்ற செஞ்சடை நீளனு ருவத்தின், மேற்கொண்ட வாறலை வீவித்து ளானே. (உ0)

ஆக அதிகாரம் நகூ-இ திருமந்திரம். சசஅ.
ஏழாந்தந்திர முற்றும்.
ஆக சிறப்புப்பாயிர முட்பட அதிகாரம் கசுஅ-இ
கூடிய திருமந்திரம்-உகஉக.

## எட்டாந்தந்திரம்.

### உடலிற்பஞ்சபேதம்.

காயப்பை யொன்று சரக்குப் பலவுள, மாயப் படைத்தினில் மற்றுமோர் பையுண்டு, காயப்பைக் குண்ணின்ற கள்வன் புறப்பட்டான், மாயப்பை மண்ணு மயங்கிய வாறே. (க)

அத்த னமைத்த வுடலிரு கூறினிற், சுத்தம தாகிய சூக்கு மஞ்சொல்லுங்காற், சத்த பரிச ரூப ரசகந்தம், புத்திமா னாங் காரம் புரியட்ட காயமே. (௨)

எட்டினி லைந்தாகு மிந்திரி யங்களுங், கட்டிய மூன்று கர ணமு மாயிடு, மொட்டிய பாச முணர்வது வாகவே, கட்டி ய விழ்த்திடுங் கண்ணுதல் காணுமே. (௩)

இரத முதிர மிறைச்சிதோன் மேதை, மருவிய வத்தி வழு ம்பொடு மச்சை, பரவிய சுக்கிலம் பாழா முபாதி, யுருவ மலா லுட லொன்றென லாமே. (௪)

ஆரே யறிவா ரடியின் பெருமையை, யாரே யறிவா ரங்க வர் நின்றது, வாரே யறிவா ரதுபத்தோ டாக்கையை, யாரே யறிவா ரடிக்காவ லானதே. (௫)

எண்சா ணளவா லெடுத்த வுடம்புக்குட், கண்கா லுடலி ற் கரக்கின்ற கைகளிற், புண்கா லறுபத்தெட் டாக்கை புணர் க்கின்ற, நண்பா லுடம்புதன் னாலுடம் பாகுமே. (௬)

உடம்புக்கு நாலுக்கு முயிராய சீவ, னொடுங்கும் பரனோ டொழியாப் பிரமங், கடந்தோறு நின்ற கணக்கது காட்டி, ய டங்கியே யற்றது வாரறி வாரே. (௭)

ஆறந்த மாகி நடுவுடன் கூடினாற், றேறிய மூவாறுஞ் சிக் கென் றிருந்திடுங், கூறுங் கலைகள் பதினெட்டுங் கூடியே, யூறு முடம்பை யுயிருடம் பெண்ணுமே. (௮)

மெய்யினிற் றூல மிகுத்த முகத்தையும், பொய்யினிற் சூக் கம் பொருந்து முடலையுங், கையினிற் றுல்லியங் காட்டு முடலை யு, மைய னடிக்கு ளடங்கு முடம்பே. (௯)

காயுங் கடும்பரி கால்வைத்து வாங்கல்போற், சேய விட முண்மை செல்லவும் வல்லது, காயத் துகிற்போர்வை யொன் றுவிட் டாங்கொன்றிட், டேயு மவனொன்ன வேய்ந்திடுங் காய மே. (௧௦)

நாக முடலுரி போலுநல் லண்டச, மாக நனுவிற் கனுமற ந் தல்லது, போகலு மாகு மரனரு ளாலேசென், றேகு மிடஞ் சென் றிருபய னுண்ணுமே. (௧௧)

உண்டு நரக சுவர்க்கத்தி லுள்ளன, கண்டு விடுஞ்சூக்கங் காரண னுச்செலப், பண்டு துடரப் பரகாய யோகிபோற், பி ண்ட மெடுக்கும் பிறப்பிறப் பெய்தியே. (௧௨)

தானவ னாகிய தற்பரந் தாங்கினோ, னானவை மாற்றிப் பரமத் தடைந்திடு, மேனை யுயிர்வினைக் கெய்து மிடஞ்சென் றும், வானு நிலனும் புகுந்தும் வருந்துமே. (௧௩)

ஞானிக்குக் காயஞ் சிவமே தனுவாகும், ஞானிக்குக் கா ய முடம்பே யதுவாகு, மேனிற்கும் யோகிக்கு விந்துவு நாத மு, மோனிக்குக் காயமுப் பாழ்கெட்ட முத்தியே. (௧௪)

விஞ்ஞானத் தோர்க்கா ணவமே மிகுதனு, வெஞ்ஞானத் தோர்க்குத் தனுமாயை தானென்ப, வஞ்ஞானத் தோர்க்குக் கன்ம தனுவாகு, மெய்ஞ்ஞானத் தோர்க்குச் சிவதனு மே வுமே. (௧௫)

மலமென் றுடம்பை மதியாத வூமர், தலமொன்று வேறு தரித்தமை கண்டீர், நலமென் றிதனையே நாடி யிருக்கிற், பல முள்ள காயத்திற் பற்றுமிவ் வண்டத்தே. (௧௬)

நல்ல வசநத்து வாக்கு மனுதிகள், மெல்ல விளையாடும் விமல னகத்திலே, யல்ல செவிசத்த மாதி மனத்தையு, மெல் லத் தரித்தார் முகத்தார் பசித்தே. (௧௭)

---

உடல்விடல்.

பண்ணுருங் காமம் பயிலும் வசநமும், விண்ணும் பிரா ணன் விளங்கிய சத்தமும், புண்ணு முடலிற் பொருந்து மன த்தையு, மண்ணுந் து பார்க்க வழியு முடம்பே. (௧)

அழிகின்ற வோருடம் பாகுஞ் செவிசண், கழிகின்ற காலவ் விரதங்க டான, மொழிகின்ற வாக்கு முடிகின்ற நாடி, யொழிகின்ற வூனுக் குறுதுணை யில்லையே. (உ)

இலையா மிடையி லெழுகின்ற காம, முலைவாய் நெஞ்சத்து மூழ்குமு மூளத்துத், தலையாய மின்னுடற் றுங்கித் திரியுஞ், சிலவாய சித்தஞ் சிவமுன் னிடைக்கே. (௩) ஆ உ0.

---

## அவத்தைபேதம்-கீழாலவத்தை.

ஐயைந்து மத்திமை யானது சாக்கிரங், கைகண்ட பன்னொன்கிற் கண்டங் கனுவென்பர், பொய்கண் டிலாத புருட னிதயஞ் சுழுனை, மெய்கண் டவனுந்தி யாகுந் துரியமே. (க)

முப்பதோ டாறின் முதனனு வைந்தாகச், செப்பதி னொன்காய்த் திகழ்ந்திரண் டொன்றுகி, யப்பதியாகு நியதி முதலாகச், செப்புஞ் சிவமிருப்த் தேர்ந்துகொள் வீரே. (உ)

இந்திய மீரைந் தீரைந்து மாத்திரை, மந்திர மாய்நின்ற மாருத மீரைந்து, மந்தக் கரண மொருநான்கு மான்மாவும், பந்தவச் சக்கரப் பாலது வாகுமே. (௩)

பாரது பொன்மை பசுமை யுடையது, நீரது வெண்மை செம்மை நெருப்பது, காரறு மாருதங் கருப்பை யுடையது, வானகந் தூம மறைந்துநின் றுறே. (ச)

பூதங்களைந்தும் பொறியவை யைந்தனு, மேதம் படுஞ் செய் திருந்த புறநிலை, யோது மலங்குண மாகுமா தாரமோ, டாதி யவத்தைக் கருவிதொண் ணூற்றுறே. (ரு)

இடவகை சொல்லி லிருபத்தஞ் சானை, படபர சேனையும் பாய்பரி யைந்து, முடையவன் மத்திமை யுள்ளுற நால்வ, ரடைய நெடுங்கடை யைந்தொடு நான்கே. (சு)

உடம்பு முடம்பு முடம்பைத் தழுவி, யுடம்பிடை நின்ற வுயிரை யறியா, ருடம்பொ டுயிரிடை நட்பறி யாதார், மடம்புகு நாய்போன் மயங்குகின் றாரே. (எ)

இருக்கின்ற வாறொருவ ரறிகில ரேழைகள், முருக்கு மசபையை மாற்றி முகந்து, கருக்கொண்டு காமாரி சார முகந்தேர்ந், துருக்கொண்டு தொக்க வுடலொழி யாதே. (அ)

ஒளித்திட் டிருக்கு மொருபதி னாலை, யளித்தன னென்னுள்ளே யாரியன் வந்து, வளிக்குங் கலைகளி னாலறு பத்து, வொளித்திட்டு வைத்தா னொடுங்கிய சித்தே. (கூ)

மண்ணினி லொன்று மலர்நீரு மங்காகும், பொன்னினிலங்கி புகழ்வளி யாகாய, மன்னு மனோபுத்தி யாங்கார மோரொன்று, முன்னி முடிந்தது பூத சமயமே. (௧0)

முன்னிக் கொருமகன் மூர்த்திக் கிருவர், வன்னிக்கு மூவர் வதுவைக்கு நால்வர், கன்னிக்குப் பிள்ளைக ளைவர்மு னில்லை, கன்னியைக் கன்னியே காதலித் தாரே. (௧௧)

கண்ட கனவைந்துங் கலந்தன தானைந்துஞ், சென்றுண்ட நான்கு மொருங்கியுணர்ந்தபின், பண்டைய தாகிப் பரந்த வியாக்கிரத், தண்டமுந் தானு யமர்ந்துநின் றானே. (௧௨)

நின்றவ னிற்பப் பதினலிற் பத்துநீத், தொன்றிய வந்தக் கரணங்க ளுன்குடன்; மன்று கலந்த மனைவாழ்க்கை வாதனை, கன்றிய கண்டத்திற் கண்டான் கனவதே. (௧௩)

தான மிழந்து தனிபுக் கிதயத்து, மான மழிந்து மதிகெட்டு மாலாகி, யான விரிவறி யாவவ் வியத்தத்தின், மேனி யழிந்து சுழுத்திய தாமே. (௧௪)

சுழுனையைச் சேர்ந்துள மூலன்றுடன் காட்சி, கெழுமிய சித்தம் பிராணன்றன் போத, மொழுகக் கமலத்தி னுள்ளே யிருந்து, விழுமப் பொருளுடன் மேவிநின் றானே. (௧௫)

தானத்தெழுந்து தருக்குந் துரியத்தின், வானத் தெழுந் துபோய் வையம் பிறகிட்டுக், கானத் தெழுந்த கருத்தின் றலை யிலே, யூனத்த வித்தையிட் டேனின் றனே. (கசு)

ஊமை யெழுத்தொடு பேசு மெழுத்துறி, லாமை யகத்தி னி லஞ்சு மடங்கிடு, மோமய முற்றது வுள்ளொளி பெற்றது, நாமய மற்றது நாமறி யோமே. (கஎ)

துரிய மிருப்பதுஞ் சாக்கிரத் துள்ளே, நரிகள் பதினாலு நஞ்சுண்டு செத்தது, பரிய புரவியும் பாரிற் பரந்தது, துரிய மி றந்திடஞ் சொல்லவொண் ணாதே. (கஅ)

மாறு மலமைந்தான் மன்னு மவத்தையின், வேறாய மா யா தநுகர ணாதிக்கிங், கீறுகா தேயெவ் வுயிரும் பிறந்திறந், தாறுத வல்வினை யாலடி யுண்ணுமே. (கசு)

உண்ணுந்தன் னூடாடா தூட்டிடு மாயையு, மண்ண லருள் பெற்ற முத்திய தாவது, நண்ண விலாவுயிர் ஞானத்தி னாற் பிறந், தெண்ணுறு ஞானத்தி னேர்முத்தி யெய்துமே. (உ0)

அதிமூட நித்திரை யாணவ நந்த, வதனு ணர்வோ னருங்கன்ம முன்னித், திதமான கேவல மித்திறஞ் சென்று, பர மாகா வையவத் தைப்படு வானே. (உச)

ஆசான்முன் னேதுயில் மாண வகரைத், தேசாய தண்டா லெழுப்புஞ் செயல்போ, னேசாய வீசனு நீடா ணவத்தரை, யே சாத மாயாடன் றாலே யெழுப்புமே. (உஉ)

மஞ்சொடு மந்தா கினிகுட மாமென, விஞ்சறி வில்லோன் விளம்பு மிகுமதி, யெஞ்சலி லொன்றெனு மாறென விவ்வுட, லஞ்சுணு மன்னனன் றேபோ மளவே. (உந)

படையுடை மன்னவன் பாய்பரி யேறி, வடிவுடை மாநகர் தான்வரும் போது, வடியுடை மைவரு மங்குறை வோருந், து

டியில்லம் பற்றித் துயின்றனர் தாமே. (உ௪)

நேரா மலத்தை நீடைந் தவத்தையி, னேரான வாறுன்னி நீடு நனவினின், னேரா மலமைந்து நேரே தரிசித்து, நேராம் பரத்துட னிற்பது நித்தமே. (உரு) ஆ. ௪௫.

---

## மத்தியசாக்கிராவத்தை.

சாக்கிர சாக்கிரந் தன்னிற் றிரோதாயி, சாக்கிர சொற்பனந் தன்னிடை மாமாயை, சாக்கிரந் தன்னிற் சுழுத்திதற் காமியஞ், சாக்கிரந் தன்னிற் றுரியத்து மாயையே. (க)

மாயை யெழுப்புங் கலாதியை மற்றதி, னேய விராகாதி யெய்ந்த துரியத்துத், தோயுஞ் சுழுனை கனாநனா வுந்துன்னி, யாயின னந்தச் சகலத்து ளானே. (உ)

மேவிய வந்தகன் விழிகட் குருடனு, மாவையின் முன்னடிக் காணு மதுகண்டு, மேவுந் தடிகொண்டு சொல்லும் விழிபெற, மூவையி னுன்மா முயலுஞ் சருமமே. (௩)

மத்திம மொத்த சிலந்தி வலயத்து, ளொத்தங் கிருந்து வுயிருண்ணு மாறுபோ, லத்தனு மைம்பொறி யாடகத் துண்ணின்று, சத்த முதலைந்துந் தானுண்ணு மாறே. (௪)

வைச்சன வச்சு வகையிரு பத்தஞ்சு, முச்சு முடன்மனை வாணொரு வன்னுளன், பிச்சன் பெரியன் பிறப்பிலி யென்றென்று, நச்சி யவனரு ளானுய்ந்த வாறே. (ரு)

மாலா றுடன்புருட னற்றத் துவமுடன், வேறான வைபைந்து மெய்ப்புருடன் பரம்,கூறு வியோமம் பரமெனக் கொண்டனன், வேறான நாலேழு வேதாந்த தத்வமே. (௬)

ஏலங்கொண் டாங்கே யிடையொடு பின்கலை, கோலங்கொண் டாங்கே குணத்தி னுடன்புக்கு, மூலங்கொண் டாங்

கே முறுக்கிமுக் கோணிலுங், காலங்கொண் டானடி காணலு
மாமே. (எ)

நாடிகள் பத்து நலந்திகழ் வாயுவு, மோடிய காலி லொடு
ங்கி யிருந்திடுங், கூடிய காமங் குளிக்கு மிரதமு, நாடிய நல்ல
மனமு முடலிலே. (அ)

ஆனவ வாவ வழிவ வழிவன, போவன போவ புகுவ பு
குவன, காவலன் பேர்நந்தி காட்டித்துக் கண்டவ, னேவண
செய்யு மிளங்கிளை யோனே. (கூ)

பத்தொடு பத்துமோர் மூன்றும் பகுதியு, மூய்த்த துரிய
மு முள்ளுணர் காலமு, மெய்த்த வியோமமு மேலைத் துரியமு
ந், தத்துவ நாலே ழெனவுன்னத் தக்கதே. (க0)

விளங்கிடு முந்நூற்று முப்பதோ டொன்பான், றளங்
கொ ளிரட்டிய தாறு நடந்தால், வணங்கிடு மைம்மலம் வாயு
வெழுந்து, விளங்கிடு மவ்வழி தத்துவ நின்றே. (கக)

நாலொரு கோடியே நாற்பத்தெண் ணாயிர, மேலுமோ
ரைந் நூறு வேறு யடங்கிடும், பாலவை தொண்ணூற்ரே டாறு
ட் படுமவ்வ, கோலிய வையைந்து ளாகுங் குறிக்கிலே. (கஉ)

ஆகின்ற தொண்ணூற்றே டாறும் பொதுவென்ப, ராகின்
ற வாறு ரருஞ்சைவர் தத்துவ, மாகின்ற நாலேழ்வே தாந்தி
வயிணவர்க், காகின்ற நாலாறை யைந்துமாயா வாதிக்கே. ()

தத்துவ மானது தன்வழி நின்றிடில், வித்தக னாகி விள
ங்கி யிருக்கலாம், பொய்த்தவ மாமவை போயிடு மவ்வழி, த
த்துவ மாவ தகார வெழுத்தே. (கச)

அறிவொன் றிலாதன வையேழு மொன்று, மறிகின்ற
வென்னை யறியா திருந்தே, னறிகின்றாய் நீயென் றருள்செய்
தார் நந்தி, யறிகின்ற நானென் றறிந்துகொண் டேனே. (கரு)

சாக்கிர சாக்கிர மாதி தனிலைந்து, மாக்கு மலாவத்தை.

யைந்து நனவாதி, போக்கி யிவற்ருேடும் பொய்யான வாரு று, நீக்கி நெறிநின்ருேன் ருகியே நிற்குமே. (கசு)

ஆணவ மாதி மலமைந் தலரோனுக், காணவ மார்திநான் காமாற் கரனுக்கு, வாணவ மாதிமூன் றீசர்க் கிரண்டென்ப, வாணவ மொன்றே சதாசிவற் காவதே. (கஎ) ஆ உ.

---

அத்துவாக்கள்.

தத்துவ மாருறு தன்மனு வேழ்கோடி, மெய்த்தகு வன் னமைம் பானென்று மேதினி, யொத்திரு நூற்றிரு பானன் கெண் பானென்று,வைத்த பதங்கலை யோரைந்தும் வந்ததே.

நாடிய மண்டல மூன்று நலந்தெரிந், தோடு மவரோடு ள்ளிரு பத்தைஞ்சுங், கூடுவர் கூடி குறிவழி யே.சென்று, தேடி ய பின்னர்த் திகைத்திருந் தார்களே. (உ)

சாக்கிர சாக்கிர மாதித் தலையாக்கி, யாக்கிய தூல மது வாக்கி யதீதத்துத்,தாக்கிய வன்பான தாண்டவஞ் சார்ந்தது, தேக்குஞ் சிவமாத லைந்துஞ் சிவாயமே. (ங) ஆ சுரு.

---

சுத்தநனவாதிபருவம்.

நனவாதி தூலமே சூக்கப் பகுதி, யனதான வையைந்து ம் விந்துவின் சத்தி, தன்தா முயிர்விந்து தானின்று போந் து, கனவா நனவிற் கலந்ததிவ் வாறே. (க)

நனவி லதீதம் பிறந்தார் கிடந்தார், நனவிற் றுரிய நகழ் ந்தார் சிவழ்ந்தார், நனவிற் சுழுனை நடந்தார் வளர்ந்தார், ந னவிற் கனவோட னன்செய்தி யானதே. (உ)

செறியுங் கிரியை சிவதத் துவமாம், பிறிவிற் சுகயோகம் பெருள் கல்வி, குறிகற் றிருமேனி குணம்பல வாகு, மறிவி ல் சராசர மண்டத் தளவே. (ங)

ஆதி பரஞ்சிவஞ் சத்தி சதாசிவ, மேதமி லீசனல் வித்தியா தத்துவம், போதங் கலைகால நியதிமா மாயை, நீதியீ ருக நிறுத்தின னென்னே. (௪)

தேசு திகழ்சிவஞ் சத்தி சதாசிவ, மீச னனல்வித்தை யிராகங் கலைகால, மாசகல் வித்தை நியதி மகாமாயை, யாசில் புருடாதி யான்மாவீ ருறே. (௫)

ஆணவ மாயையுங் கன்மமு மாமலங், காணு முளைக்குத் தவுடமி யான்மாவுந், தாணுவை யொவ்வாமற் றண்டுல மாய்நிற்கும், பேணுவாய் மற்றுநின் பாசம் பிறித்தே. (௬)

பசுக்கள் பலவண்ணம் பாலொரு வண்ணம், பசுக்களை மேய்க்கின்ற வாய னொருவண்ணம், பசுக்களை மேய்க்கின்ற வாயன்கோல் போடிற், பசுக்க டலைவனைப் பற்றி விடாவே.

உடலிந் தியமன மொண்புத்தி சித்த, மடலொன் றகந்தை யறியாமை மன்னிக், கெடுமவ் வுயிர்மயல் மேலுங் கிளைத்தா, லடைவது தானேழ் நரகத்து ளாயே. (அ)

தற்றெரி யாத வதீதந்தற் காணவஞ், சொற்றெரி சின்ற துரியஞ்சொற் காமியம், பெற்ற சுழுத்திப்பின் பேசுறுங் காதலா, மற்றது வுண்டிக் கனநன வாதலே. (௯)

நனவிற் கனவில்லை யைந்து நனவிற், கனவிலாச் சூக்குமங் காணுஞ் சுழுத்தி, தனலுண் பகுதியே தற்கூட்டு மாயை, நனவிற் றுரிய மதீதந் தலைவந்தே. (௧0)

ஆறாறி லையந் தகல நனநன, வாறு மவைவிட் வாகு நனக்கன, வேறான வைந்தும் விடவே நனவினி, லீருஞ் சுழுனை யிதின்மாயை தானே. (௧௧)

மாயையில் வந்த புருடன் றுரியத்தி, லாய முறைவிட் டதுவுந்தா னன்றுகிச், சேய கேவலவிந் துடன்செல்லச் சென

றக்கா, லாய தறுவின் பயனில்லை யாகுமே. (கஉ)

அதீதத் துரியத் தறிவனு மான்மா, வதீதத் துரிய மத னூற் புரிந்தா, லதீதத் தெழுந்தறி வாகிய மானன், முதிய வ னலிற் றுரியத்து முற்றுமே. (கங)

ஐயைந்து பத்துட னானது சாக்கிரங், கைகண் டனவை ஞ்சிற் கண்டங் கனுவென்பர், பொய்கண்ட மூவர் புருடன் சுழுனையின், மெய்கண் டவனுந்தி மேவ விருவரே. (கச)

புரியட் டகமே பொருந்த னனவு, புரியட் டகந்தன்னி ன் மூனறு கனவு, புரியட் டகத்தி லிரண்டு சுழுத்தி, புரியட் டசத்தொன்று புக்க துரியமே. (கரு)

நனவி னனவு புலனில் வழக்க, நனவிற் கனவு நினைத்த ன் மறத்த, னனவிற் சுழுனையுண் ணுட லிலாமை, நனவிற் றுரிய மதீதத்து நந்தியே. (கசு)

கனவி னனவுபோற் கண்ட னனவாங், கனவினிற் கண்டு மறைத்தற் கனவாங், கனவிற் சுழுத்தியுங் காணுமை காண, ல றுமாதி செய்தலி லான துரியமே. (கஎ)

சுழுத்தி நனவொன்றுந் தோன்றுமை தோன்றற், சுழுத் தி கனவத னுண்மை சுழுத்தியிற், சுழுத்தி யறிவறி வாலே ய ழிகை, சுழுத்தித் துரியமாஞ் சொல்லறும் பாழே. (கஅ)

துரிய நனவா மிதமுறை போதந், துரியக் கனவா மகமுண ா போதந், துரியச் சுழுத்தி வியோமந் துரியந், துரியம் பரமெ னத் தோன்றிடுந் தானே. (கக)

அறிவறி கின்ற வறிவு நனவா, மறிவறி யாமை யடையக் கனவா, மறிவறி யவ்வறி யாமை சுழுத்தி, யறிவறி வாகு மான துரியமே. (உ0)

தானெங்கு மாயவ னைம்மலந் தான்விட்டு, ஞானந் தனது

ருவாகி நயந்தபின், ருனெங்கு மாய்நெறி நின்றது தான்விட்டு, மேனந்தச் சூக்க மவைவன்ன மேலிட்டே. (உக)

ஐயைந்து மாறுமோ ரைந்து நனுவினி, லெய்யு நனவு கனவு எழுத்தியா, மெய்யும்பின் சூக்கமு மெய்ப்பகுதி மாயை, யையமுந் தானவ னத்துரி யத்தனே. (உஉ)

ஈதென் றறிந்தில னித்தனை காலமு, மீதென் றறிந்தபி னேது மறிந்திலே, னீதென் றறியு மறிவை யறிந்தபி, னீதென் றறியு மியல்புடை யோரே. (உங)

உயிர்க்குயி ராகி யுருவா யருவா, யயற்புணர் வாகி யறிவாய்ச் செறிவாய், நயப்புறு சத்தியு நாத னுலகாதி, யியற்பின்றி யெல்லா மிருண்மூட மாமே. (உச)

சத்தி யிராகத்திற் றனல் லுயிராகி, யொத்துறு பாச மலமைந்தோ டாருறு, தத்துவ பேதஞ் சமைத்துக் கருவியும், வைத்தன னீசன் மயமறு மாறே. (உரு)

சாக்கிரா தீதத்தி லாணவந் தன்னுண்மை, சாக்கிரா தீதந் துரியத்திற் றனுறச், சாக்கிரா தீதத்தி லாணவந் தான்விடாச், சாக்கிரா தீதம் பரனுண்மை தங்குமே. (உசு)

மலக்கலப் பாலே மறைந்தது சத்தி, மலக்கலப் பாலே மறைந்தது ஞான, மலக்கலப் பாலே மறைந்தனன் றனு, மலக்கலப் பற்றன் மதியொளி யாமே. (உஎ)

திகைக்கின்ற சிந்தையுட் சிங்கங்கண் மூன்று, நகைக்கின்ற நெஞ்சு ணரிக்குட்டி நாலு, வகைக்கின்ற நெஞ்சினு ளானைக்கன் றைந்து, பகைக்கின்ற நெஞ்சுக்குப் பாலிரண் டாமே. (உஅ)

கதறு பதினெட்டுக் கண்களும் போகச், சிதறி யெழுந்திடுஞ் சிந்தையை நீரும், விதறு படாமுன்ன மெய்வழி நின்று, லதிர வருவதோ ரானையு மாமே. (உகூ)

நனவகத் தேயொரு நாலைந் தும்விடக், கனவகத் தேயுட் கரணங்க ளோடு, முனவகத் தேநின் றுதறியுள் புக்கு, நினைவக த் தின்றிச் சுழுத்திநின் றானே. (௩௦)

நின்றவ னாசா விகழ்துரி யத்தனு, மொன்றி யுலகி னிய மா திகளுற்றுச், சென்று துரியாதீ தத்தே சிலகால, நின்று பர னாய் நின்மல னாகுமே. (௩௧)

ஆணவவ் வீச னதீதத்தில் வித்தையாய், தானுல குண்டு ச தாசிவ மாசத்தி, மேனிக ளைந்தும்போய் விட்டுச் சிவமாகி, மோன மடைந்தொளி மூலத்த னாமே. (௩௨)

மண்டல மூன்றினுள் மாயநன் னாடனைக், கண்டுகொண் டுள்ளே கருதிக் கழிகின்ற, விண்டலர் தாமரை மேலொன்றுங் கிழாகத், தண்டமுந் தானு யகத்தினுள் ளாமே (௩௩)

போதறி யாது புலம்பின புள்ளின, மாதறி யாவகை நின் று மயங்கின, வேதறி யாவண நின்றன னெம்மிறை, சூதறி வா ருச்சி சூடிநின் றாரே. (௩௪)

கருத்தறிந் தொன்பது கண்டமு மாங்கே, பொருத்தறிந் தோன்புவ னாபதி நாடித், திருத்தறிந் தேன்மிகு தேவர் பிரா னை, வருத்தறிந் தேன்மன மன்னிநின் றானே. (௩௫)

ஆன விளக்கொளி தூண்டு மவனென்னத், தான விளக் கொளி யாமூல சாதநத், தான விதிமூலத் தானத்தி லவ்விளக், கேனை மதிமண் டலங்கொண் டெரியுமே. (௩௬)

*உண்ணாடு மைவர்க்கு மண்டை பொதுங்கிய, விண்ணாட நி ன்ற வெளியை வினவுறி, லண்ணாந்து பார்த்தைவர் கூடிய சந் தியிற், கண்ணாடி காணுங் கருத்தனென் றானே. (௩௭)

அறியா தவற்றை யறிவா னறிவா, னறிவா னறியாதான் றன்னறி வாகா, னறியா தவத்தை யறிவானைக் கூட்டி, யறியா தறிவானை யாரறி வாரே. (௩௮)

துரிய தரிசநஞ் சொற்றோம் வியாத்த, மரியன தூடண ம ந்நன வாதி, பெரியன கால பரம்பிற் றுரிய, மரிய வதீத மதீத த்த தாமே. (௩௯)

மாயையிற் சேதநன் மன்னு பகுதியோன், மாயையின் ம ற்றதீ நீவுதன் மாயையாங் கேவல மாகுஞ் சகலமா யோனியுட், டோயு மனிதர் துரியத்துட் சீவனே. (௪0) ஆ. ௧0௫.

---

கேவலசகலசுத்தம்.

தன்னை யறிசுத்தன் றற்கே வலன்றானும், பின்ன முறநின் ற பேத சகலனு, மன்னிய சத்தசத் துச்சத சத்துடன், றுன் னுவர் தத்தந் தொழிற்கள வாகவே. (௧)

தானே தனக்குப் பகைவனு நட்டானுந், தானே தனக்கு மறுமையு மிம்மையுந், தானேதான் செய்த வினைப்பயன் றுய் ப்பானுந், தானே தனக்குத் தலைவனு மாமே. (௨)

ஆமுயிர் கேவல மாமாயை யின்னடந், தாமுயிர் மாயை யெறிப்ப வறிவுற்றுக், காமிய மாயேய முங்கல வாநிற்பத், தா முறு பாசஞ் சகலத்த தாமே. (௩)

சகல வவத்தையிற் சார்ந்தோர் சகலர், புகலு மலமூ வ கையும் புணர்ந்தோர், நிகரின் மலரோன்மா னீடுபல் தேவர், நி கழ்நரர் கீட மந்தமு மாமே. (௪)

தாவிய மாயையிற் றங்கும் பிரளய, மேவிய மற்ற துடம் பாய் மிக்குள்ளன், வோவ விலக்கண றொன்றிய சீகண்ட ரா ளவயி னூற்றெட் டுருத்திர ராகுமே. (௫)

ஆகின்ற கேவலத் தாணவத் தானவ, ராகின்ற வித்தேச ராமனந் தாதிய, ராகின்ற வெண்ம ரெழுகோடி மந்திர, ராகி ன்ற வீச ரனேகரு மாமே. (௬)

ஆமாறிற் சீவ னாரருள் பெற்றுளோர், போமலந் தன்னாற்

புகழ்விந்து நாதம்விட், டோராய மாக்கி யொடுங்கலி னின்மல
ந், தோமறு சுத்தா வவத்தைத் தொழிலே. (எ)

ஓரினு மூவகை நால்வகை யும்முள, தேரி லிவைகே வல
மாயை சேரிச்சை, சாரியலாயவை தானே தணப்பவை, வாரி
வைத் தீசன் மலமறுத் தானே. (அ)

மெய்யான போதாந்த மாரூறு விட்டகன், றெய்யாமை
நீங்கவே யெய்தவன் றானுகி, மெய்யாஞ் சராசர மாய்வெளி
தன்னுட்புக், கெய்தாம லெய்துஞ்சுத் தாவத்தை யென்பவே.

அநாதி பசுவியாத்தி யாகு மிவனே, யநாதியில் வந்த மல
மைந்தா லாட்டி, யநாதியிற் கேவல மச்சக லத்திட், டநாதி
பிறப்பறச் சுத்தத்து ளாகுமே. (க0)

அந்தரஞ் சுத்தா வத்தைகே வலத்தாறு, தந்தோர்தஞ்
சுத்தகே வலத்தற்ற தற்பரத், தின்பாற்றுரியத் திடையே யறி
வுறத், தன்பாற் றனையறி தத்துவந் தானே. (கக)

ஐயைந் தொடுங்கு மான்மாவி லான்மாவு, மெய்கண்டு சு
த்த வவத்தையில் வீடாகுந், துய்யவவ் வித்தை முதன்மூன்றுந்
தொல்சத்தி, யைய சிவஞ்சித்தி யாந்தோற்ற மவ்வாறே. (கஉ)

ஐயைந்து மானவி லாரூ டடங்கிடு, மெய்கண்ட மென்
மூன்று மேவுமெய் யோகத்தில், கைகண்ட சத்தி சிவபாகத்
தேகாண, வெய்யும் படியடங் கும்நாலே மெய்தியே. (கங)

ஆணவத் தாரொன் றறியாத கேவலர், பேணிய மாயை
பிரளயா கலராகுங், காணு முருவினர் காணுமை காண்பவே,
பூணுஞ் சகலமும் பாசமும் புக்கோரே. (கச)

ஆணவ மாகும் விஞ்ஞான கலருக்குப், பேணிய மாயை பி
ரளயா கலராகு, மாணவ மாயையுங் கன்ம மூன்றுமே, கா
ணுஞ் சகலர்க்குக் காட்டு மலங்களே. (கரு)

கேவலந் தன்னிற் கிளர்ந்தவிஞ் ஞாகலர், கேவலந் தன்னிற் கிளர்விந்து சத்தியா, லாவையிற் கேவலத் தச்சகலத்தையு, மேவிய மந்திர மாமாயை மெய்ம்மையே. (கசு)

மாயையின் மன்னும் பிரளயா கலர்வந்து, மாயையுந் தோன்றி வகைநிற்க வாணவ, மாய சகலத்துக் காமிய மாமாயை, யேயமன் னூற்றெட் டுருத்திர ரென்பவே (கஎ)

மும்மலங் கூடி முயங்கி மயங்குவோ, ரம்மெய்ச் சகளத்தர் தேவர் சுரர்நரர், மெய்ம்மையில் வேதா விரிமிகு கீடாந்தத், தம்முறை யோனிபுக் கார்க்குஞ் சகலரே. (கஅ)

சுத்த வவத்தையிற் றோய்ந்தவர் மும்மலச், சத்தசத் தோடத் தனித்தனி பாசமு, மத்த விருள்சிவ ஞான கதிராலே, தொத்தற விட்டிடச் சுத்தரா வார்களே. (கக)

தற்கே வலமுத்தி தானே தனிமையாம், பிற்பாற் சகலங் கலாதிப் பிறிவதாஞ், சொற்பாற் புரிசுத்த கேவலஞ் சாக்கிரந், தற்பாற் புரிவது தற்சுத்த மாமே. (உ0)

அறிவின்றி மூத்தோ னராகாதி சேரான், குறியொன்றி லாதித்தன் கூடான் கலாதி, செறியுஞ் செயலிலான் றிணங்கத்த வல்லோன், சிறியன் மலவியாபி கேவலந் தானே. (உக)

விந்துவு மாயையு மேவுங் கிரியையுஞ், சந்தத ஞான பரையுந் தநுச்சத்தி, விந்துவின் மெய்ஞ்ஞான மேவும் பிரளயர், வந்த சகலசுத் தான்மாக்கள் வையத்தே. (உஉ)

கேவல மாதியிற் பேதங் கிளக்குறிற், கேவல மூன்றுங் கிளருஞ் சகலத்து, ளாவையின் மூன்று மதிசுத்த மூடவே, யோவலில் லாவொன்பா னுற்றுணர் வோர்கட்கே. (உங)

கேவலத்திற் கேவல மதீதா தீதங், கேவலத் திற்சக லங்கள் வயிந்தவங், கேவலத் திற்சுத்தங் கேடில்விஞ் ஞாகலர்க், தா வையி னூத னருண்மூர்த்தி தானே. (உச)

சகலத்திற் கேவலஞ் சாக்கிரா தீதஞ், சகல சகலமே சா

க்கிர சாக்கிரஞ்,சகலத்திற் சுத்தமே தற்பரா வத்தை,சகலத்தி லிம்மூன்று தன்மையு மாமே. (உ௫)

சுத்தத்திற் சுத்தமே தொல்சிவ மாகுதல், சுத்தத்திற் கேவலந் தொல்லுப சாந்தமாஞ், சுத்த சகலந் துரிய விலாசமாஞ், சுத்தத்தி லிம்மூன்றுஞ் சொல்லலு மாமே. (உ௬)

சாக்கிர சாக்கிரந் தன்னிற் கனவொடுஞ், சாக்கிரந் தன்னிற் சுழுத்தி துரியமே, சாக்கிரா தீதந் தனிற்சுகா னந்தமே, யாக்கு மறையாதி யைம்மல பாசமே. (உ௭)

சாக்கிரா தீதத்திற் றானறு மாணவஞ், சாக்கிரா தீதம் பராவத்தை தங்காது, யாக்கு பரோபாதி யாமுப சாந்தத்தை, நோக்கு மலங்குண நோக்குத லாகுமே. (உ௮)

பெத்தமு முத்தியும் பேணுந் துரியமுஞ், சுத்த வதீதமுந் தோன்றாமற் றானுணு, மத்த னருளென் றருளா லறிந்தபின், சித்தமு மில்லை செயலில்லை தானே. (உ௯)

எய்திய பெத்தமு முத்தமு மென்பன, வெய்து மரனரு ளாவிளை யாட்டோ, டெய்தி யுயிர்சுத்தத் திடுநெறி யென்னவே, யெய்து முயிரிறை பாலறி வாமே. (௩0)

ஐம்மலத் தாரு மதித்த சகலத்த, ரைம்மலத் தாரு மருவினைப் பாசத்தா, ரைம்மலத் தார்சுவர்க் கந்நெறி யாள்பவ, ரைம்மலத் தாரர னூர்க்கறி வோரே. (௩௧)

கருவி லதீதங் கலப்பிக்கு மாயை, யரிய துரிய மதிலுண்ணு மாசையு, முரிய சுழுனை முதலெட்டுஞ் சூக்கத், தரிய கனாத்தூல மந்நன வாகுமே. (௩௨)

ஆணவ மாகு மதீதமேன் மாயையும், பூணுந் துரியஞ் சுழுத்திபொய்க் காமியம், பேணுங் கனவுமா மாயை திரோதாயி, காணு நனவின் மலக்கலப் பாகுமே. (௩௩)

அரன்முத லாக வறிவோ னதீதத்த னரன்முத லாமாயை

தங்கிச் சுழுனை, கரும முணர்ந்துமா மாயைக்கைக் கொண்டோ, ரருளு மறைவார் சகலத்துற் றுரே. (நசு)

உருவுற்றுப் போகமே போக்கியந் துற்று, மருவுற்றுப் பூத மனாதியான் மன்னி, வருமச் செயல்பற்றிச் சத்தாதி வைகிக், கருவுற் றிடுஞ்சீவன் காணுஞ் சகலத்தே. (நரு)

இருவினை யொத்திட வின்னருட் சத்தி, மருவிட ஞான த்திலாதன மன்னிக், குருவினைக் கொண்டருட் சத்திமுன் கூட்டிப், பெருமல நீங்கிப் பிறவாமை சுத்தமே. (நசு)

ஆருறு மாறதி னைபைந் தவத்தையோ, டீரு மதீதத் துரியத் திவனெய்தப், பேரு னவைவரும் போம்பிர காசத்து, நீ ருர் பரஞ்சிவ மாதேய மாகுமே. (நஎ)

தன்னை யறியா துடலைமுன் றனென்றான், றன்னைமுன் கண்டான் றுரியந் தனைக்கண்டா, னுன்னுந் துரியமு மீசனோ டொன்றாக்காற், பின்னையும் வந்து பிறந்திடுந் தானே. (நஅ)

சாக்கிரந் தன்னி லதீதந் தலைப்படி, லாக்கிய வந்த வயிந்தவ மான்ந்த, நோக்கும் பிறப்பறு நோன்முத்தி சித்திபாம், வாக்கு மனமு மருவல்செய் யாவே. (நகூ)

அப்பு மனலு மகலத்து ளேவரு, மப்பு மனலு மகலத்து ளேவரா, வப்பு மனலு மகலத்து ளேதெனி, லப்பு மனலுங் கலந்தவவ் வாறே. (ச0)

அறுநான்கு சுத்த மதிசுத்கா சுத்க, முறுமேழு மாயை யுடனைந்தே சுத்தம், பெறுமா றிவைமூன் றுங் கண்டத்தாற் பேதித், துறுமாயை மாமாயை யான்மாவி னோடே. (சக)

மாயைகைத் தாயாக மாமாயை யீன்றிட, வாய பரசிவன் றந்தையாய் நிற்கவே, யேயு முயிர்க்கே வலசக லத்தெய்தி, யாய்தரு சுத்தமுந் தான்வந் தடையுமே. (சஉ) ஆ கசஎ

## பராவத்தை.

அஞ்சுங் கடந்தவ னாதி பரந்தெய்வ, நெஞ்சம தாய நிமல ன் பிறப்பிலி, விஞ்சு முடலுயிர் வேறு படுத்திட, வஞ்சத் திருந் த வகையறிந் தேனே. (க)

சத்தி பராபரஞ் சாந்தி தனிலான, சத்தி பராநந்தந் தன் னிற் சுடர்விந்து, சத்திய மாயை தநுச்சத்தி யைந்துடன், சத் தி பெறுமுயிர் தானங்கத் தாறுமே. (உ)

ஆறாறுக் கப்பா லறிவா ரறிபவ, ராறாறுக் கப்பா லருளா ர் பெறுபவ, ராறாறுக் கப்பா லறிவா மவர்கட்கே, யாறாறுக் கப்பா லரனினி தாமே. (௩)

அஞ்சொடு நான்குங் கடந்தக மேபுக்குப், பஞ்சணி கால த்துப் பள்ளி துயில்கின்ற, விஞ்சையர் வேந்தனு மெல்லிய லா ளொடு, நஞ்சுற நாடி நயஞ்செய்யு மாறே. (௪)

உரிய நனாத் துரி யத்தி லிவனு, மரிய துரிய நனவாகி மூ ன்றிற், பரிய பரதுரி யத்திற் பரனுந், திரிய வருந்துரி யத்திற் சிவமே. (௫)

பரமா மதீதமே பற்றறப் பற்றப், பரமா மதீதம் பயிலப் பயிலப், பரமா மதீதம் பயிலாத் தபோதனர், பரமாகார் பாச மும் பற்றொன் றறாதே. (௬)

ஆயும்பொய் மாயை யகம்புற மாய்நிற்கும், வாயு மனமுங் கடந்த மயக்கறிந், தூய வறிவு சிவானந்த மாகிப்போய், வேயும் பொருளாய் விளைந்தது தானே. (௭)

துரியப் பரியி லிருந்தவச் சீவனைப், பெரிய வியாக்கிரத் துள்ளே புகவிட்டு, நரிகளை யோடத் துரத்திய நாதர்க், குரிய வி னைகளின் றேலமிட் டன்றே. (௮)

நின்றவிச் சாக்கிர நீடுரி யத்தினின், மன்றனு மங்கே மணஞ் செய்ய நின்றிடும், மன்றன் மணஞ்செய்ய மாயை மறைந்திடு,

மன்றே யிவனு மவன்வடி வாமே. (௯)

விரிந்திடிற் சாக்கிர மேவும் விளக்கா, யிருந்த விடத்திடை யீடான மாயை, பொருந்துந் துரியம் புரியிற்ற ஞகுந், தெரிந் த துரியத்துத் தீதக லாதே. (௧௦)

உன்னை யறியா துடலைமுன் ஞனென்று, யுன்னை யறிந்து துரியத் துறநின்றாய், தன்னை யறிந்தும் பிறவி தணவாதா, லன் ன வியாத்த னமலனென் றறுதியே. (௧௧)

கருவரம் பாகிய காயந் துரிய, மிருவருங் கண்டீர் பிறப்பி றப் புற்றார், குருபரம் பெற்றவர் கூடிய பின்னை, யிருவரு மின் றிபொன் றாகிநின் றாரே. (௧௨)

அணுவின் றுரியத்தி லான நனவு, மணுவகை யின்கண் ணுன கனவு, மணுவகை விற்பரா தீதஞ் சுழுத்தி, பணியிற் பா துரி யம்பர மாமே. (௧௩)

பாதுரி யத்து நனவும் பரந்து, விரிசக மூண்ட கனவுமெய் ச் சார்ந்தி, யுருவுறு கின்ற சுழுனையு மோவத், தெரியுஞ் சிவ துரிய த்தனு மாமே. (௧௪)

பரமாந்நனவின்பின் பாற்சக முண்ட, திரமார் கனவுஞ் சிறந்த சுழுத்தி, யுரமா முபசாந்த முற்றற் றறவே, தரனுஞ் சி வ துரி யத்தனு மாமே. (௧௫)

சிவன் றுரிய முதலாகச் சீரான, வாவ சிவன்றுரி யாந்த மவத்தைபத், தோவும் பராநந்தி யுண்மைக்குள் வைகியே, மே விய நாலேழ் விடுத்துநின் றனே. (௧௬)

பரஞ்சிவன் மேலாம் பரமம் பரத்திற், பரம்பரன் மேலாம் பரனை வாக, விரிந்த கனவிடர் வீட்டுஞ் சுழுனை, யுரந்தரு மா நந்தி யாமுண்மை தானே. (௧௭)

சார்வாம் பரசிவஞ் சத்தி பரநாத, மேலாய விந்து சதா சிவ மிக்கோங்கிப், பாலாய் பிரம னரியம ராபதி, தேவர் முரு

த்திர னீசனுங் காணிலே. (கஅ)

கலப்பறி யார்கடல் சூழுல கேழு, மூலப்பறி யாருட லோடுயிர் தன்னை, யலப்பறிந் திங்கர சாளகி லாதார், குறிப்பது கோல மடலது வாமே. (கசு)

பின்னை யறியும் பெருந்தவத் துண்மைசெய், தன்னை யறியிற் றயாபர னெம்மிறை, முன்னை யறிவு முடிகின்ற காலமு, மென்னை யறியலுற் றின்புற்ற வாறே. (உ0)

பொன்னை மறைத்தது பொன்னணி பூடணம், பொன்னின் மறைந்தது பொன்னணி பூடணந், தன்னை மறைத்தது தன்கர ணங்களாந், தன்னின் மறைந்தது தன்கர ணங்களே. (உக)

மரத்தை மறைத்தது மாமத யானை, மரத்தின் மறைந்தது மாமத யானை, பரத்தை மறைத்தது பார்முதற் பூதம், பரத்தின் மறைந்தது பார்முதற் பூதமே. (உஉ)

ஆரு றகன்று நமவிட் டறிவாகி, வேருன தானே யகாரமாய் மிக்கோங்கி, யீருர் பரையி னிருளற்ற தற்பரன், பேருர் சிவாய வடங்கும்பின் முத்தியே. (உங)

துரியத்தி லோரைந்துஞ் சொல்லகராதி, விரியப் பரையின் மிகுநாத மந்தம், புரியப் பரையின் பராவத்தா போதந், திரியப் பரமந் துரியந் தெரியவே. (உச)

ஐந்துஞ் சகலத் தருளாற் புரிவுற்றுப், பந்திடுஞ் சுத்த வவத்தைப் பதைப்பினி, னந்தி பராவத்தை நாடச் சுடர்முன, மந்தி யிருள்போ லுமைம்மல மாறுமே. (உரு)

ஐயைந்து மட்டுப் பகுதியு மாயையும், பொய்கண்ட மாமாயை தானும் புருடன்கண், டெய்யும் படியா யெவற்றுமா யன்றுகி, யுய்யும் பராவத்தை யுள்ளுறல் சுத்தமே. (உசு)

நின்ற னருளும் பரமுமுன் னேயமு, மொன்றுய் மருவு மு

ருவு முபாதியுஞ், சென்று னெனைவிடுத் தாங்கிற்செல் லாமையு நன்றான ஞானத்தி னுதப்பிரானே. (உஎ) ஆ கஎச.

முக்குணநிர்க்குணம்.

சாத்திக மெய்து நனவெனச் சாற்றுங்கால், வாய்த்த வி ராசத மன்னுங் கனவென்ப, வோய்த்திடுந் தாமத முற்ற சுழு த்தியா,மாய்த்திடு நிர்க்குண மாசி துரியமே. (க) ஆ கஎரு.

அண்டாதிபேதம்.

பெறுபகி ரண்டம் பேதித்த வண்ட, மெறிகட லேழின் மணலள வாகப், பொறியொளி பொன்னணி யென்ன விளங் கிச், செறியுமண் டாசனத் தேவர் பிரானே. (க)

ஆனந்த தத்துவ மண்டா சனத்தின்மேன், மேனியைங் தாக வியாத்தமுப் பத்தாறுய்த், தானந்த மில்லாத தத்துவ மானவை, யீனமி லாவண்டத் தெண்மடங் காமே. (உ)

ஆ கஎஎ.

பதினோராந்தானமு மவத்தையெனக்காணல்.

அஞ்சி லமுதமோ ரேழின்க ணனந்த, முஞ்சிலோங் கா ரமோ ரொன்பான் பதினொன்றில், வஞ்சக மேநின்று வைத் திடுற் காயமாங், கிஞ்சுகச் செவ்வாய்க் கிளிமொழி கேளே. ()

புருட னுடனே பொருந்திய சித்த, மருவமொ டாறு ம தீதத் துரியம், விரியுஞ் சுழுத்தியின் மிக்குள்ள வெட்டு, மரிய பதினொன்று மாமவ் வவத்தையே. (உ)

காட்டும் பதினொன்றுங் கைகலந் தாலுட, னூட்டி யழுத் திடி னந்தியல் லாலில்லை, யாட்டஞ்செய் யாத வதுவிதி யே கினை, யீட்டு மதுதிட மெண்ணலு மாமே. (ங) ஆ கஎஅ.

வென்றனன் மாளச் சிவமா யிருக்குமே. (க)

போதந் தனையுன்னிப் பூதாதி பேதமு, மோதுங் கருவி தொண்ணூறுட னோராறு, பேதமு நாதாந்தப் பெற்றியிற் கைவிட்டு, வேதஞ்சொல் தொம்பத மாகுதன் மெய்ம்மையே. (உ)

தற்பத மென்றுந் துவம்பதந் தானென்று, நிற்ப தசியத் துணேரிழை யாள்பதஞ், சொற்பதத் தாலுந் தொடரவொண்ணுஞ்சிவன், கற்பனை யின்றிக் கலந்துநின் றனே. (ங)

அணுவும் பரமு மசிபதத் தேய்ந்து, கணுவொன் றிலாத சிவமுங் கலந்தா, வினையறு பால்தே னமுதென வின்பத், துனையறு வாயுளா யற்றிடத் தோன்றுமே. (ச)

தொம்பதந் தற்பதந் தோன்று மசிபத, நம்பிய சீவன் பரஞ்சிவ னாய்நிற்கு, மம்பத மேலைச் சொருபமா வாக்கியஞ், செம்பொரு ளாண்டருள் சீர்நந்தி தானே. (ரு)

ஐம்ப தறியா தவரு மவர்சில, ரும்பனை நாடி யுளாமுப் பதத்திடைச், செம்பர மாகிய வாசி செலுத்திடத், தம்பர யோகமாய்த் தானவ னாகுமே. (சு)

நந்தி யறிவு நமூவி லதீதமா, மிந்தியஞ் சத்தாதி விடவிய னாகு, நந்திய மூன்றிரண் டொன்று நலமைந்து, நந்தி னனவாதி மூட்டு மனுதியே. (எ)

பரதுரி யத்து நனவு படியுண்ட, விரிவிற் கனவு மிதனுப சாந்தத், துரிய சுழுனையு மோவுஞ் சிவன்பா, லரிய துரிய மசிபத மாமே. (அ) ஆக ௩உ௩.

---

முப்பரம்.

தோன்றியென் னுள்ளே சுழன்றெழு கின்றதோர், மூன்று படிமண்ட லத்து முதல்வனை, யேன்றெய்தி யின்புற் றிருந்தே னிளங்கொடி, நான்று நலஞ்செய் நலந்தரு மாறே. (க)

மன்று நிறைந்தது மாபர மாயது, நின்று நிறைந்தது நே

ர்தரு நந்தியுங், கன்று நினைந்தெழு தாயென வந்தபின், குன்றுநிறைந்த குணவிளக் காகுமே. (உ)

ஆறாறு தத்துவத் தப்புறத் தப்பரங், கூறு முபதேசங் கூறிற் சிவபரம், வேறாய் வெளிப்பட்ட வேதப் பகவனார், பேறுச வாநந்தம் டேணும் பெருகவே. (ங)

பற்றறப் பற்றிற் பரம்பதி யாவது,பற்றறப் பற்றிற் பரனறி வேபரம்,பற்றறப் பற்றினிற் பற்றவல் லோர்கட்கே, பற்றறப் பற்றிற் பரம்பர மாமே. (ச)

பரம்பர மான பதிபாசம் பற்றாப், பரம்பர மாகும் பரஞ்சிவ மேவப்,பரம்பர மான பரசிவா னந்தம், பரம்பர மாகப் படைப்ப தறிவே. (ரு)

நனவிற் கலாதியா நாலொன் றகன்று, தனியுற்ற கேவலந் தன்னிற்ற னாகி, நினைவுற் றகன்ற வதீதத்து ணையந், தனையுற் றிடத்தானே தற்பர மாமே. (சா)

தற்கண்ட தூயமுந் தன்னில் விலாசமும், பிற்காணுந் தூடணந் தானும் பிறழ்வுற்றுத், தற்பரன் கால பரமுங் கலந்தற்ற, நற்பரா தீதமு நாடக ராதியே. (எ) ஆ. ருரு.

---

## பரலக்ஷணம்.

அதீதத்து ளாகி யகன்றவ னந்தி,யதீதத்து ளாகிய றறிவிலோ னுன்மா, மதிபெற் றிருள்விட்ட மன்னுயி ரொன்றாம், பதியிற் பதியும் பரவுயிர் தானே. (க)

ஆதியு மந்தமு மில்லா வரும்பதி, சோதிப் பரஞ்சுடர் தோன்றத்தோன் றாமையி, னீதிய தாய்நிற்கு நீடிய வப்பரம், போத முணர்ந்தவர் புண்ணியத் தோர்களே. (உ)

துரியங் கடந்து துரியாதீ தத்தே, யரிய வியோகங் கொ

ண்டம் பலத்தாடும், பெரிய பிரானைப் பிரணவக் கூபத்தே, அ
றியவல் லார்க்குத் தூரிசில்லை தானே. (ந)
செம்மைமுன் னிற்பச் சுவேதந் திரிவபோ, லம்மெய்ப் ப
ரத்தோ டணுவனுள் ளாயிடப், பொய்ம்மைச் சகமுண்ட போ
த வெறும்பாழிற், செம்மைச் சிவமேரு சேர்கொடி யாகுமே
வைச்ச கலாதி வருதத் துவங்கெட, வெச்ச விருமாயை
வேருக வேரறுத், துச்ச பரசிவ மாமுண்மை யொன்றவே, ய
ச்ச மறுத்தென்னை யாண்டன னந்தியே. (ரு)
என்னை யறிய விசைவித்த வென்னந்தி, யென்னை யறிந்த
றி யாத விடத்துய்த்துப், பின்னை யொளியிற் சொருகிப் புறப்
பட்டுத், தன்னை யளித்தான் றற்பர மாகவே. (சு)
பரந்துஞ் சுருங்கியும் யார்புனல் வாயு, நிரந்த வளிபொடு
ஞாயிறு திங்க, ளரந்த வரனெறி யாயது வாகித், தரந்த விசு
ம்பொன்று தாங்கிநின் றானே. (எ)
சத்தி னிலையினிற் றானான சத்தியுந், தற்பரை யாய்நிற்குந்
தானும் பரற்கூட, லுய்த்தகு மிச்சையின் ஞானதி பேதமாய்,
நித்த நடத்து நடிக்குமா நேயத்தே. (அ)
மேலொடு கீழ்பக்க மெய்வாய்கண் ணுசிகள், பாலிய வி
ந்து பரையுட் பரையாகக், கோலிய நான்கவை ஞானங் கு
ணர்விந்து. சீல மிலாவணுச் செய்திய தாமே. (கூ)
வேரு மதன்றன்மை போலுமிக் காயத்தி, லாரு முபா
தி யனைத்தாகுந் தத்துவம், பேரும் பரவொளி தூண்டும்பிர
காசமா, யூரு யுயிர்த்துண் டுறங்கிடு மாயையே. (கം)
தற்பர மன்னுந் தனிமுதற் பேரொளி, சிற்பரந் தானே
செகமுண்ணும் போதமுந், தொற்பதந் தீர்பாழிற் சுந்தரச்
சோதிபுக், கப்புற மற்றதிங் கொப்பில்லை தானே. (கக)
பண்டை மறைகள் பரவா னுடலென்னுந், துண்ட மதி

யோன் றுரியாதீ தந்தன்னைக், கண்டு பரனுமக் காரனோ பரி
திக்கே, மிண்டி னவன்சுத்த ளுகான் வினவிலே. (கஉ)

வெளிகால் கனலப்பு மேவுமண் ணின்ற, தளியா கியதற்
பரங்கா ணவன்முன், வெளிகால் கனலப்பு மேவுமண் ணின்
ற, வெளியாய சத்தி யவன்வடி வாமே. (கங)

மேருவி னோடே விரிகதிர் மண்டல, மார நினையு மருந்த
வ யோகிக்குச், சீரார் தவஞ்செய்யிற் சிவனரு டாளுகும், பே
ரவும் வேண்டாம் பிறிதில்லை தானே. (கச) ஆ ருசச.

---

## முத்துரியம்.

நனவாதி மூன்றினிற் சீவ துரியந், தனதாதி மூன்றி னிற்
பர துரியந்தா, னனவாதி மூன்றி னிற்சிவ துரியமா, மினதாகு
ந் தொந்தத் தசிபதத் தீடே. (க)

தாளு நனவிற் றுரியந்தன் ளும்பதந், தானுந் துரிய நன
வாதி தான்மூன்றி, லானுப் பரபத மற்ற தருநனு, வானுன
மேன்மூன் றுந் துரிய மணுகுமே. (உ)

அணுவின் றுரியத்து நான்கும தாகிப், பணியும் பரதுரி
யம்பயி லுன்குந், தணிவிற் பரமாகிச் சார்முத் துரியக், கணு
விலிந் நான்குங் கலந்தவீ ரைந்தே. (ங)

ஈரைந் தவத்தை யிசைமுத் துரியத்து, நேரந்த மாக நெ
றிவழி யேசென்று, பாரந்த மான பராபரத் தயிக்கியத், தோ
ரந்த மாமிரு பாதியைச் சேர்த்திடே. (ச)

தொட்டே யிருமின் றுரிய நிலத்தினை, யெட்டா தெனி
னின் றெட்டு மிறைவனைப், பட்டாங் கறிந்திடிற் பன்னு வுத
டுகள், தட்டா தொழிவதோர் தத்துவந் தானே. (ரு)

அறிவா யசத்தென்னு மாரு றகன்று, செறிவாய மாயை
சிதைத்தரு ளாலே, பிறியாத பேரரு ளாயிடும் பெற்றி, நெறி
யான வன்பர் நிலையறிந் தாரே. (சு)

நனவி னனவாதி நாலாந் துரியந், தனதுயிர் தொம்பத மாமாறு போல, வினையறு சிவ னனவாதி யாகத், தனைய பர துரி யந்தற் பதமே. (எ)

தொம்பதந் தற்பதஞ் சொன்முத் துரியம்போ, னம்பிய மூன்றுந் துரியத்து நற்றும, மம்புவி யுன்று வதிருக்க மப்பா லைச், செம்பொரு ளாண்டருள் சீர்நந்தி தானே. (அ)

ஆகூ நஙஉ.

---

## மும்முத்தி.

சிவன்றன் முத்தியதீதம் பரமுத்தி, யோயுப சாந்தஞ் சிவமுத்தி யானந்த, மூவயின் முச்சொருப முத்திமுப் பாலதா, யோவுறு தாரத்தி லுள்ளுநா தாந்தமே. (க)

ஆவ தறியா ருயிர்பிறப் பாலுறு,மாவ தறியு முயிரருட் பாலுறு, மாவதொன் றில்லை யகம்புறத் தென்றகன், றோவு சிவனுட னொன்றுதன் முத்தியே. (உ)

சிவமாகி மும்மல முக்குணஞ் செற்றுத், தவமான மும்முத்தி தத்துவத் தயிக்கியத், துவமா கியநெறி சோகமென் போர்க்குச், சிவமா மமலன் சிறந்தது தானே. (ந)

சித்தியு முத்தியுந் திண்சிவ மாகிய, சுத்தியு முத்தித் தொலைக்குஞ் சுகானந்த, சத்தியு மேலைச் சமாதியு மாயிடும், பெத்த மறுத்த பெரும்பெரு மானே. (ச) ஆகூ நஙச.

---

## முச்சொருபம்.

ஏறிய வாறே மலமைந் திடையடைத், தாறிய ஞானச் சிவோக மடைந்திட்டு, வேறு மெனமுச் சொருபத்து வீடுற்றங், கீறதிற் பண்டைப் பரனுண்மை செய்யுமே. (க)

மூன்றுள மாளிகை மூவ ரிருப்பிட,மூன்றினின் முப்பத்தா

று முதிப்புள, மூன்றினி னுள்ளே முளைத்தெழுஞ் சோதியைக், காண்டலுங் காயக் கணக்கற்ற வாறே. (௨)

உலகம் புடைபெயர்ந் தூழியும் போன, நிலவு சுடரொளி மூன்றுமொன் றாய, பலவும் பரிசொடு பான்மையு ளீச, னளவும் பெருமையு மாரறி வாரே. (௩)

பெருவாய் முதலெண்ணும் பேதமே பேதித், தருவா யுருவா யருவுரு வாகிக், குருவாய் வருஞ்சத்தி கோனுயிர்ப் பன்மை, யுருவா யுடனிருந் தொன்றாயன் றாமே. (௪)

மணியொளி சோபை யிலக்கணம் வாய்த்து, மணியென லாய்நின்ற வாறது போலத், தணிமுச் சொருபாதி சத்தியாதி சாரப், பணிவித்த பேர்நந்தி பாதம்பற் றாயே. (௫)

கல்லொளி மாநிறஞ் சோபைக் கதிர்தட்ட, நல்ல மணி பொன்றி னாடியொண் முப்பதஞ், சொல்லறு முப்பாழிற் சொல்லறு பேருணைத், தல்லறு முத்திராந் தத்தறு பூதியே. (௬)

உடந்தசெந் தாமரை யுள்ளுறு சோதி, நடந்தசெந் தாமரை நாதந் தகைந்தா, லடைந்த பயோதரி யட்டி யடைத்தவ், விடந்தரு வாசலை மேல்திற வீரே. (௭) ஆ ௩௯௩.

---

முக்கரணம்.

இடறொரு மூன்றி லியைந்த வொருவன், கடனுறு மவ்வுரு வேறெனக் காணுந், திடமது போலச் சிவபர சீவ, ருடனுறை பேதமு மொன்றென லாமே. (௧)

ஒளியை யொளிசெய்து வோமென் றெழுப்பி, வளியை வளிசெய்து வாய்த்திட வாங்கி, வெளியை வெளிசெய்து மேலெழ வைத்துத், தெளியத் தெளியுஞ் சிவபதந் தானே. (௨)

முக்கர ணங்களின் மூர்ச்சைதீர்த் தாவதக், கைக்கார ணமென்னத் தந்தனன் காணந்தி, மிக்க மனோன்மனி வேறே

துனித்தேக, வொக்கும துன்மனி யோதுட் சமாதியே. (௩)
ஆ ௩௬௬.

---

முச்சூனியம்- தொந்ததசி.

தற்பதந் தொம்பதந் தாமு மசிபதந், தொற்பத மூன்றுந் துரியத்துத் தோற்றவே, நிற்ப துயிர்பர நிகழ்சிவ மிம்மூன் றின், சொற்பத மாகுந் தொந்தத் தசியே. (௧)

தொந்தத் தசிமூன்றிற் றெல்கா மியமாதி, தொந்தத் தசிமூன்றிற் றெல்தா மதமாதி, வந்த மலங்குண மாளச் சிவந் தோன்றி, யிந்துவின் முன்னிரு ளேகுத லொக்குமே. (௨)

தொந்தத் தசியையவ் வாசியிற் றேற்றியே, யந்த முறை யீரைங் தாக மதித்திட்டு, வந்த மிலாத வவத்தையவ் வாக்கிய த், துந்து முறையிற் சிவமுன்வைத் தோதிடே. (௩)

வைத்துச் சிவத்தை மதிசொரு பானந்தத், துய்த்துப் பிர ணவ மாமுப தேசத்தை, மெய்த்த விதயத்து விட்டிடு மெய்யு ணர்ந், தத்தற் கடிமை யடைந்துநின் றனே. (௪)

தொம்பத மாயையுட் டோன்றிடுந் தற்பத, மம்பரா தன் னி லுதிக்கு மசிபத, நம்புறு சாந்தியி னண்ணுமவ் வாக்கிய, மும் பருரைதொந்தத் தசிவாசி யாமே. (௫)

ஆகிய வச்சோமன் றேய்வது தன்னிடத், தாகிய யவ்விட் டா காயமுபா தான, மேகிய தொந்தத் தசியென்ப மெய்யறி வாகிய சீவன் பரசிவ னாமே. (௬)

தரமத காமிய மாகித் தகுகுண, மாமல மூன்று மகார வு காரத்தோ, டாமறும் யவ்வுமவ் வாயுடன் மூன்றிற், றமாந் துரியமுந் தொந்தத் தசியவே. (௭) ஆ ௩௭௩.

---

முப்பாழ்.

காரிய மேழ்கண் டறுமாயப் பாழ்விடக், காரண மேழ்க

ண் டறும்போதப் பாழ்விடக், காரிய காரண வாதனை கண்ட றுஞ், சொரூப சாந்தமுப் பாழ்விடத் திருமே. (க)

மாயப்பாழ் சீவன் வியோமப்பாழ் மன்பரன் சேயமுப் பாழெனச் சிவசத்தி யிற்சீவ, ஞேய வியாப்த மெனுமுப்பா ழா மந்தத், தூய சொரூபத்தன் சொன்முடி வாகுமே. (உ)

எதிரற நாளு மெருதுவந் தேறும், பதியெனு நந்தி பதம து கூடக், சதியெனப் பாழைக் கடந்தந்தக் கற்பனை, யுதறிய பாழி லொடுங்குகின் றேனே. (௩)

துரிய மடங்கிய சொல்லறும் பாழை, யரிய பரம்பர மென்பர்க ளாத, ரரிய பரம்பர மென்றே துதிக்கு, மருநில மென்பதை யாரறி வாரே. (௪)

ஆறாறு நீங்க நமவாதி யகன்றிட்டு, வேறா கியபரா யா வென்று மெய்ப்பர, னீறுண வாசியிற் கூட்டு மதுவன்றே, தே றுஞ் சிவாய நமவெனத் தேறிலே. (௫)

உள்ள முருவென்று முருவ முளமென்று, முள்ளப் பரிச றிந் தோரு மவர்கட்குப், பள்ளமு மில்லை திடரில்லை யாழில்லை, யுள்ளமு மில்லை யுருவில்லை தானே. (௬) ஆ ௩எக.

---

## காரிய காரணோபாதி.

செற்றிடுஞ் சீவ வுபாதித் திரனேழும், பற்றும் பரோபா தி யேழும் பகருணா, யுற்றிடுங் காரிய காரணத் தோடற, வற்றிட வச்சிவ மாகு மணுவனே. (க)

ஆறாறு காரியோ பாதி யகன்றிட்டு, வேறாய் நனவு மிகுத் த கனநனு, வாறா றகன்ற சுழுத்தி யதிலெய்தாப், பேறா நிலத் துயிர் தொம்பதம் பேசிலே. (உ)

அகார முயிரோ யுகாரம் பரமே, மகாரஞ் சிவமாய் வருமு

ப் பதத்துச், சிகாரஞ் சிவமே வகாரம் பரமே, யகார முயிரொ
ன் றறையலு மாமே. (௩)

உயிர்க்குயி ராகி யொழிவற் றழிவற், றயிர்ப்பறு காரணோ
பாதி வெதிரேகத், துயிர்ப்புறு மீச னுபமிதத் தாலன்றி, வியர்
ப்புறு மாணவம் விடல்செய் யாவே. (௪)

காரிய மேழிற் கலக்குங் கடும்பசு, காரண மேழிற் கலக்கு
ம் பரசிவன், காரிய காரணங் கற்பனை சொற்பதப், பாரறும்
பாழில் பராபரத் தானே. (௫) ஆ ௩அ௪.

---

## உபசாந்தம்.

முத்திக்கு வித்து முதல்வன்றன் ஞானமே, பத்திக்கு வி
த்துப் பணிந்துற்றுப் பற்றலே, சித்திக்கு வித்துச் சிவபரந் தா
னுதல், சத்திக்கு வித்துத் தனதுப சாந்தமே. (௧)

காரிய மேழுங் கரந்திடு மாயையுட், காரண மேழுங் கர
க்குங் கடுவெளி, காரிப காரண வாதனைப் பற்றறப், பாரண வு
ம்முப சாந்தப் பரிசிதே. (௨)

அன்ன துரியமே யாத்தும சுத்தியு, முன்னிய சாக்கிரா தீ
தத் துறுபுரி, மன்னு பரங்காட்சி யாவ துடனுற்றுத், தன்னி
ன் வியாத்தித் தனினுப சாந்தமே. (௩)

ஆறு றமைந்தா ணவத்தையுண் ணீங்குதற், பேறுன த
ன்னை யறிதற்பின் றீர்சுத்தி, கூறுத சாக்கிரா தீதங் குருபரன்,
பேறும் வியாத்தம் பிரமுப சாந்தமே. (௪)

வாய்ந்த வுபசாந்த வாதனை யுள்ளப்போ, யேய்ந்த சிவ
மாத லின்சிவா னந்தத்துத், தோய்ந்தறல் மோனச் சுகாறுப
வத்தோடே, யாய்ந்ததிற் றீர்க்கை யானதி ரைந்துமே. (௫)

பரையின் பரவப ரத்துட னேகமாய்த், திரையினின் று
கிய தெண்புனல் போலவுந், றுரையுணர்ந் தாரமு மொக்க வு

ணர்ந்துளோன், சரைசண் டானுரை யற்ற சணக்கிலே. (கூ)

ஆ ௫கூ).

---

புறங்கூறாமை.

பிறையுட் கிடந்த முயலை யெறிவா, னறைமணி வாட்கொண் டவர்தமைப் போலக், கறைமணி கண்டனைக் காண்குற மாட்டார், நிறையறி வோமென்பர் நெஞ்சிலர் தாமே. (க)

கருந்தாட் கருடன் விசும்பூ டிறப்பக், கருந்தாட் கயத்திற் கரும்பாம்பு நீங்கப், பெருந்தன்மை பேசுதி நீயொழி நெஞ்சே, யருந்தா வலைகட லாறுசென் றுலே. (உ)

கருகலர் மாளக் கருவாயி னின்ற, பொருதலைச் செய்வது புல்லறி வாண்மை, மருவலர் செய்கின்ற மாதவ னொத்தாற், றருவலர் கேட்ட தனியும்ப ராமே. (௩)

பிணங்கவும் வேண்டாம் பெருநில முற்று, மிணங்கியெம் மீசனே யீசனென் றுன்னிற், கணம்பதி னெட்டுங் கழலடி காண, வணங்கெழு நாடியங் கன்புற லாமே. (௪)

என்னிலு மென்னுயி ராய விறைவனைப், பொன்னிலு மாமணி யாய புனிதனை, மின்னிப வெவ்வுயி ராய விகிர்தனை, யுன்னிலு முன்னு முறுவகை யாலே. (௫)

நின்று மிருந்துங் கிடந்து நிமலனை; யொன்றும் பொருள்க ளுரைப்பவ ராகிலும், வென்றைம் புலனும் விரைந்து பிணக்கறுத், தொன்று யுணருமொருவனு மாமே. (௬)

நுண்ணறி வாயுல காயுல கேழுக்கு, மெண்ணறி வாய்நிறை யெந்தை பிரான்றன்னைப், பண்ணறி வாளனைப் பாவித்த மாந்தரை, விண்ணறி வாளர் விரும்புகின் றாரே. (௭)

விண்ணவ ராலு மறிவறி யான்றன்னைக், கண்ணற வுள்ளே கருதிடிற் காலையி, லெண்ணுற வாகமுப் போது மியற்றிநீ, பண்ணிடிற் றன்மை பராபர னாமே. (அ)

ஒன்று யுலகுட னேழும் பரந்தவன், பின்று னருள்செய்த பேரரு ளாளவன், கன்று மனத்தார்தங் கல்வியு னல்லவன், பொன்றாத போது புனைபுக ழானே. (௯)

போற்றியென் றேனெந்தை பொன்னான சேவடி, யேற்றி யே தென்று மெறிமணி தானசக், காற்றின் விளக்கது காய ம யக்குறு, மாற்றலுங் கேட்டது மன்றுகண் டேனே. (௧௦)

நேடிக்கொண் டென்னுள்ளே நேர்தரு நந்தியை, யூடுபுக் காரு முணர்ந்தறி வாரில்லை, கூடுபுக் கேறலுற் றேனவன் கோ லங்கண், மூடிக்கண் டேனுல கேழுங்கண் டேனே. (௧௧)

ஆன புகழு மமைந்ததோர் ஞானமுந், தேனு மிருக்குஞ் சி றுவரை யொன்றுகண், நீனமொன் றின்றி யுணர்வுசெய் வார்க ட்கு, வானகஞ் செய்யு மறவனு மாமே. (௧௨)

மாமதி யாமதி யாய்நின்ற மாதவர், தூய்மதி யாகுஞ் சுட ர்பர மானந்தந், தாமதி யாகச் சகமுணச் சாந்திபுக், காமல் ம ற்று ரமைவுபெற் றுரே. (௧௩)

பதமுத்தி மூன்றும் பழுதென்று கைவிட், டிதமுற்ற பா விருளைத் துரந்து, மதமற் றெனதியான் மாற்றிவிட் டாங்கே, திதமுற் றவர்கள் சிவசித்தர் தாமே. (௧௪)

சித்தர் சிவத்தைக் கண்டவர் சீருடன், சுத்தர்சுத் தத்து டன் ரேய்ந்துந்தோ யாதவர், முத்தரம் முத்திக்கு மூலத்தர் மூலத்துச், சத்தர் சதாசிவத் தன்மையர் தாமே. (௧௫)

ஆ ௨௦௫.

---

அஷ்டதளகமலமுக்குணவவத்தை.

உதிக்கின்ற விந்திர னங்கி யியமனுந், துதிக்கு நிருதி வருண னல் வாயு, மதிக்குங் குபேரன் வடதிசை யீச, விதித்தெண் டி சையு நிறைந்துநின் றுனே. (௧)

ஒருங்கிய பூவுமோ ரெட்டித் ழாகு, மருங்கிய மாயா புரி யத னுள்ளே, சுருங்கிய தண்டின் சுழுனையி னூடே, யொருங்கி ய சோதியை யோர்ந்தெழு முய்ந்தே. (உ)

மொட்டலர் தாமரை மூன்றுள மூன்றினும், விட்டலர் கின்றனன் சோதி விரிசுட, ரொட்டல ருள்ளே யிரண்டல ருள்ளு நிற், பட்டலர் கின்றதோர் பண்டங் கனுவே. (௩)

ஆறே யருவி யகங்குள மொன்றுண்டு, நூறே சிவகதி நுண்ணிது வண்ணமுங், கூறே குவிமுலைக் கொம்பனை யாளொடும், வேறே யிருக்கும் விழுப்பொரு டானே. (௪)

திசையெட்டுந் தேரெட்டுந் தேவதை யெட்டும், வகையெட்டு மாய்நின்ற வாதிப் பிரானை, வகையெட்டு நான்குமற் றுங்க ரேிறைந்து, முகையெட்டு முண்ணின் றுதிக்கின்ற வாறே. ()

ஏழுஞ் சகள மியம்புங் கடந்தெட்டில், வாழும் பரமென் றதுகடந் தொன்பதி, லூழி பராபர மோங்கிய பத்தினிற், றூழ்வது வான தனித்தன்மை தானே. (௬)

பல்லூழி பண்பன் பகலோ னிறையவ, னல்லூழி யைந் தினுள் ளேநின்ற வூழிகள், செல்லூழி யண்டத்துச் சென்றவவ் வூழியு, ளவ்வூழி யுச்சியு ளொன்றிற் பகவனே. (௭)

புரியு முலகினிற் பூண்டவெட் டானை, திரியுங் களிறொடு தேவர் குழாமு, மெரியு மழையு மியங்கும் வெளியும், பரியு மாகாசத்திற் பற்றது தானே. (௮)

ஊறு மருவி யுயர்வரை யுச்சிமே, லாறின்றிப் பாயு மருங்குள மொன்றுண்டு, சேறின்றிப் பூத்த செழுங்கொடித் தாமரைப், பூவின்றிச் சூடான் புரிசடை யோனே. (௯)

ஒன்று மிரண்டு மொருங்கிய காலத்து, நின்று மிருந்து நிலம்பல பேசினும், வென்று மிருந்து விகிர்தனை நாடுவர், சென்று மிருந்துந் திருவுடை யோரே. (௧௦) ஆ சகடு

---

நவாவத்தை நவாபிமானி.

தொற்பத விசுவன் றைசதன் பிராஞ்ஞன், னற்பத விராட்டன்பொன் கர்ப்பனவ் யாகிருதன்,பிற்பதஞ் சொலிதையன் பிரசா பத்தியன்,பொற்புவி சாந்தன் பொருதபி மானியே. (க)

நவமா மவத்தை நனவாதி பத்திற், பவமா மலங்குணம் பற்றற்றுப் பற்றுத், தவமான சத்திய ஞானப் பொதுவிற், றுவமார் துரியஞ் சொரூபம தாமே. (௨)

சிவமான சிந்தையிற் சீவன் சிதைய, பவமான மும்மலம் பாறிப் பறிய, நவமான வந்தத்தி னற்சிவ போதந், தவமா மவையாகித் தானல்ல வாகுமே. (௩)

முன்சொன்ன வொன்பானின் முன்னூறு தத்துவந், தன் சொல்லி லெண்ணத் தகாவொன்பான் வேறுள, பின்சொல்ல லாகுமிவ் விரொன்பான் பேர்த்திட்டுத், தன்செய்த வாண்டவன் றன்சிறந் தானே. (௪)

உகந்தன வொன்பது மைந்து முலகம், பகர்ந்தி பிரானெ ன்னும் பண்பினை நாடி, யகந்தெம் பிரானென்ப னல்லும் பகலு, மிகந்தன வல்வினை யோடறுத் தானே. (௫)

நலம்பல காலந் தொகுத்தன நீளங், குலம்பல வண்ணங் குறிப்பொடுங் கூடும், பலம்பல பன்னிரு கால நினையு, நிலம்பல வாறின னீர்மையன் றனே. (௬)

ஆதி பராபர மாகும் பராபரை, சோதி பரமுயிர் சொல்லுநற் றத்துவ, மோதுங் கலைமாயை யோரிரண் டோர்முத்தி, நீதியாம் பேதமொன் பானுட னாதியே. (௭)

தேறுத சிந்தை தெளியத் தெளிவித்து, வேறு நரக சுவர்க் கமு மேதினி, யாருப் பிறப்பு முயிர்க்கரு ளால்வைத்தான்,

வேருத் தெளியார் வினையுயிர் பெற்றதே. (அ)

ஒன்பா னவத்தையுள் ளொன்பா னபிமானி, நன்பாற் பயி லு நவதத் துவமாதி,யொன்பானி னிற்பதோர் முத்துரியத்து றச்,செம்பாற் சிவமாதல் சித்தாந்த சித்தியே. (கூ) ஆ உசஉசு.

---

சுத்தாசுத்தம்.

நாசி நுனியினி னான்மூ விரலிடை, யீச னிருப்பிட மியா ரு மறிகிலர், பேசி யிருக்கும் பெருமறை யம்மறை, கூசி யிருக் குங் குணமது வாமே. (க)

கருமங்க ளொன்று கருதங் கருமத், துரிமையுங் கன்மமு முன்னும் பிறவிக், கருவினை யாவது கண்டகன் றன்பிற், புரிவ ன கன்மக் கயத்துட் புகுமே (உ)

மாயை மறைக்க மறைந்த மறைப்பொருண், மாயை மறை ய வெளிப்படு மப்பொருண், மாயை மறைய மறையவல் லார் கட்குக்,காயமு மில்லை கருத்தில்லை தானே. (ஙு)

மோழை யடைந்து முழைதிறந் துள்புக்குக், கோழை ய டைகின்ற தண்ணற் குறிப்பினி, லாழ வடைத்தங் கனலிற் பு றஞ்செய்து, தாழ வடைப்பது தன்வலி யாமே. (சு)

காயக் குழப்பனைக் காயநன் னாடனைக், காயத்தி னுள்ளே கமழ்கின்ற நந்தியைத், தேயத்து ளேயென்றுந் தேடித் திரிப வர், காயத்து ணின்ற கருத்தறி யாரே. (ரு)

ஆசூச மாசூச மென்பா ரறிவிலா, ராசூச மாமிட மாரு மறிகிலா, ராசூச மாமிட மாரு மறிந்தபின், னாசூச மானு மாசூச மாமே. (சா)

ஆசூச மில்லை யருநிய மத்தருக், காசூச மில்லை யரனையர் ச் சிப்பவர்க், காசூச மில்லையா மங்கி வளர்ப்போருக், காசூச

மில்லை யருமறை ஞானிக்கே. (எ)

வழிபட்டு நின்று வணங்கு மவர்க்குச், சுழிபட்டு நின்ற தோர் தூய்மை தொடங்குங், குழிபட்டு நின்றவர் கூடார் குறிகள், சுழிபட் டவர்க்கன்றிக் காணவொண் ணாதே. (அ)

தூய்மணி தூயன றூய வொளிவிடுந், தூய்மணி தூயன றூரறி வாரில்லை, தூய்மணி தூயன றூரறி வார்கட்குத், தூய் மணி தூயன றூயவு மாமே. (௯)

தூயது வாளா வைத்தது தூநெறி, தூயது வாளா நாதன் றிருநாமந், தூயது வாளா வட்டமா சித்தியுந், தூயது வாளாத் தூயடிச் சொல்லே. (௧௦)

பொருளது வாய்நின்ற புண்ணிய னெந்தை, யருளது போற்று மடியவ ரன்றிச், சுருளது வாய்நின்ற துன்பச் சுழியின், மருளது வாய்ச்சிந்தை மயங்குகின் றாரே. (௧௧)

வினையா மசத்து விளைவ துணரார், வினைஞானந் தன்னில் விடலுந் தேரார், வினைவிட வீடென்னும் வேதமு மோதார், வினையாளர் மிக்க வினைவறி யாரே. (௧௨) ஆ. சஙஈ.

---

மோக்ஷநிந்தை.

பரகதி யுண்டென் வில்லையென் போர்க, ணரகதி செல்வது ஞால மறியு, மிரகதி செய்திடு வார்கடை தோறுந், துரகதி யுண்ணத் தொடங்குவ தாமே. (௧)

கூடகில் லார்குரு வைத்த குறிகண்டு, நாடகில் லார்நயம் பேசித் திரிவார்கள், பாடகில் லாரவன் செய்த பரிசறிந், தாடவல் லாரவர் பேறிது வாமே. (௨)

புறப்பட்டுப் போகும் புகுதமென் னெஞ்சிற், றிறப்பட்ட சிந்தையைத் தெய்வமென் றெண்ணி, யறப்பட்ட மற்றப் பதியென் றழைக்கி, லிறப்பற்றி னேனிங் கிதென்னென்கின் று

னே. (௩)

திடரிடை நில்லாத நீர்போல வாங்கே, யுடலிடை நில்லா வுறுபொருள் காட்டிக், கடலிடை நில்லாக் கலஞ்சேரு மா போல லடலெரி வண்ணனு மங்குநின் றனே. (௪)

தாமரை நூல்போற் றடுப்பார் பரத்தொடும், போம்வழி வேண்டிற் புறமே யுழிதாவர், காண்வழி காட்டக்கண் காணுக் கலதிக, டநெறி செய்வான் றிரிகின்ற வாறே. (௫)

மூடுத லின்றி முடியு மனிதர்கள், கூடுவர் நந்தி யவனைக் குறித்துடன், காடு மலையுங் கழனி கடந்தோறு, மூடு முருவினை யுன்னகி லீரே. (௬)

ஆவது தெற்கும் வடக்கு மமரர்கள், போவர் குடக்குங் குணக்குங் குறிவழி, நாவினின் மந்திர மொன்று நடுவங்கி, வேவது செய்து விளங்கிடு நீரே. (௭)

மயக்குற நோக்கினு மாதவஞ் செய்வார், தமக்குறப் பேசின தாரணை கொள்ளார், சினக்குறப் பேசின தீவினை யாளர், தமக்குற வல்வினை தாங்கினின் றரே. (௮) ஆ ௪௪௪,

---

இலக்ஷணத்திரயம்.

விட்ட விலக்கணை தான்போம் வியமத்துத், தொட்டு விடாத துபசாந்தத் தேதொக்கும், விட்டு விடாதது மேவுஞ்சத் தாதியிற், சுட்டு மிலக்கணு நீதஞ் சொரூபமே. (௧)

வில்லின் விசைநாணின் கோத்திலக் கெய்தபின், கொல்லுங் களிறைந்துங் கோலொடு சாய்ந்தது, வில்லு ளிருந்தெறி கூறு மொருவர்க்குக், கல்கல னென்னக் கதிரெதி ராமே. (௨)

ஆ ௪௪௬.

தத்துவமசிவாக்கியம்.

சிவ துரியத்துத் தொம்பதஞ் சீவனார், தாவு பரதுரி யத்தினிற் றற்பத, மேவு சிவதுரி யத்தசி மெய்ப்பத, மோவி விடுந்தத் துவமசி யுண்மையே. (க)

ஆறு றகன்ற வணுத்தொம் பதஞ்சுத்த, மீறுன தற்பத மெய்துப சாந்தத்துப், பேறு கியசீவ னீக்கிப் பிரசாதத்து, வீறு னதொந்தத் தசிதத்வ மசியே. (உ)

ஆகிய வச்சோயந் தேவதத் தன்னிடத், தாகிய விட்டு விடாத விலக்கணைத், தாகுப சாந்தமே தொந்தத் தசியென்ப, வாகிய சீவன் பரன்சிவ னாமே. (௩)

துவந்தத் தசியே தொந்தத் தசியு, மவைமன்னு மந்த வயத்தேக மான, தவமுறு தத்துவ மசிவே தாந்த, சிவமாகு மதுஞ் சித்தாந்த வேதமே. (௪)

துரிய மடங்கிய சொல்லறும் பாழை, யரிய பரமென்ப ராகா ரிதன்றென்னு, ரூரிய பரம்பர மாமொன் றுதிக்கு, மருநிலமென்பதை யாரறி வாரே. (௫)

தொம்பதந் தற்பதஞ் சொல்லு மசிபத, நம்பிய முத்துரி யத்துமே னாடவே, யும்பத முப்பத மாகு முயிர்பரன், செம்பொரு ளான சிவமென லாமே. (௬)

வைத்த துரிய மதிற்சொரு பானந்தத், துய்த்த பிரணவ மாமுப தேசத்தை, மெய்த்த விதயத்து விட்டிடு மெய்யுணர், வைத்த படியே யடைந்துநின் றானே. (௭)

நனவாதி யைந்தையு நாதாதி யில்வைத்துப், பினமா மலத்தைப் பின்வைத்துப் பின்சுத்தத், தனதாஞ் சிவகதி சத்தாதி சாந்தி, மனவா சகங்கெட்ட மன்னனை நாடே. (௮)

பூரணி யாது புறம்பொன் றிலாமையின், பேரணி யாதது

பேச்சொன் றிலாமையி, லோரணை யாதது வொன்று மிலாமை யிற், காரண மின்றியே காட்டுந் தகைமைத்தே. (௬)

ஆ. ௨௫௫.

---

மகாவாக்கியம்.

நீயது வாயா யெனநின்ற பேருரை, யாயது நானானே னென்னச் சமைந்தறச், சேய சிவமாக்குஞ் சீர்நந்தி பேரரு, ளாயது வாயனந் தானந்தி யாகுமே. (௧)

உயிர்பர மாக வுயர்பர சிவ, னரிய சிவமாக வச்சிவ வேதத், திரியிலுஞ் சீராம் பராபர னென்ன, வுரிய வுரையற்ற வோமய மாமே. (௨)

வாய்நாசி யேபுரு மத்தக முச்சியி, லாய்நாசி யுச்சி முதலவை யாய்நிற்குந், தாய்நாடி யாதிவாக் காதிக் கலாதி, சேய்நா டொளியெனச் சிவகதி யைந்துமே. (௩)

அறிவறி யாமை யிரண்டு மகற்றிச், செறிவறி வாயெங்கு நின்ற சிவனைப், பிறிவறி யாது பிரானென்று பேணுங், குறியறி யாதவர் கொள்ளறி யாரே. (௪)

அறிவா ரறிவன வப்பு மனலு, மறிவா ரறிவன வப்புங் கலப்பு, மறிவா னிருந்தங் கறிவிக்கி லல்லா, லறிவா னறிந்த வறிவறி யோமே. (௫)

அதீதத்து ளாகி யகன்றவ னந்தி, யதீதத்து ளாகி யறிவிலோ னான்மா, மதிபெற் றிருள்விட்ட மன்னுயி ரொன்றும், பதியிற் பதியும் பரவுயிர் தானே. (௬)

அடிதொழ முன்னின் றமரர்க ளத்தன், முடிதொழ வீசனு முன்னின் றருளிப், படிதொழ நீபண்டு பாவித்த தெல்லாங், கடிதொழக் காணென்னுங் கண்ணுத லானே. (௭)

நின்மல மேனி நிமலன் பிறப்பிலி, பென்னுளம் வந்திவ
னென்னடி யானென்று, பொன்வளர் மேனி புகழ்கின்ற வான
வன், நின்மல மாகென்று நீக்கவல் லானே. (௮)

துறந்துபுக் கொள்ளொளி சோதியைக் கண்டு, பறந்ததெ
ன் னுள்ளம் பணிந்து கிடந்தே, மறந்தறி யாவென்னை யானவர்
கோனு, மிறந்து பிறவாம லீங்குவைத் தானே. (௯)

மெய்வாய்கண் மூக்குச் செவியென்னு மெய்த்தோற்றத்,
தவ்வாய வந்தக் கரண மகிலமு, மெவ்வா யுயிரு மிறையாட்ட
வாடலாற், கைவாயி லாநிறை யெங்குமெய் கண்டதே. (௧௦)

ஆகூ ௪௯௫.

---

## விசுவக்கிராசம்.

அழிகின்ற சாயா புருடனைப் போலக், கழிகின்ற நீரிற் கு
மிழியைக் காணி, லெழுகின்ற தீயிற்கற் பூரத்தை யொக்கப்,
பொழிகின்ற விவ்வுடற் போமப் பரத்தே. (௧)

உடலு முயிரு மொழிவற வொன்றிற், படருஞ் சிவசத்தி
தாமே பரமா, முடலைவிட் டிந்த வுயிரெங்கு மாகிக், கடையுந்
தலையுங் கரக்குஞ் சிவத்தே. (௨)

செவிமெய்வாய் கண்மூக்குச் சேரிந் திரியம், லீவின் றிய
மன மாதிக ளைந்துங், குவியொன் றிலாமல் விரிந்து குவிந்து,
தவிர்வொன் றிலாத சராசரந் தானே. (௩)

பரனெங்கு மாகிப் பரந்தற்று நிற்குந், திரனெங்கு மாகி
ச் செறிவெங்கு மெய்து, முரனெங்கு மாயுல குண்டு மிழ்க்
கும், வரமிங்ஙன் கண்டியான் வாழ்ந்தற்ற வாறே. (௪)

அளந்து துரியத் தறிவினை வாங்கி, யுளங்கொள் பரஞ்சக
முண்ட தொழித்துக், கிளர்ந்த பரஞ்சிவஞ் சேரக் கிடைத்தா
ல், விளங்கிய வெட்ட வெளியனு மாமே. (௫)

இரும்பிடை நீரென வென்னையுள் வாங்கிப், பரம்பர மான பரமது விட்டே, யுரம்பெற முப்பா ழொளியை விழுங்கி, யிருந்தவென் னந்தி யிதயத்து ளானே. (௬)

கரியுண் விளவின் கனிபோ லுயிரு, முரிய பரமுமுன் னோதுஞ் சிவமு, மரிய துரியமே லகிலமு மெல்லாந், திரிய விழுங்குஞ் சிவபெரு மானே. (௭)

அந்தமு மாதியு மாகும் பராபரன், றந்தம் பரம்பரன் றன்னிற் பரமுட, னந்தமை யுண்டுமெய்ஞ் ஞானநே யாந்தத்தே, நந்தி யிருந்தன னாமறி யோமே. (௮) ஆக ௨௭௩.

---

வாய்மை.

அற்ற துரைக்கி லருளுப தேசங்கள், குற்ற மறுத்தபொன் போலுங் கனலிடை, யற்றற வைத்திறை மாற்றற மாற்றிடில், செற்று மறுத்த செழுஞ்சுட ராகுமே. (௧)

எல்லா மறியு மறிவு தனைவிட்டு, வெல்லா மறிந்து மிலாபமங் கில்லை, யெல்லா மறிந்த வறிவினை நானென்னி, லெல்லா மறிந்த விறையென லாமே. (௨)

தலைநின்ற தாழ்வரை மீது தவஞ்செய்து, முலைநின்ற மாதறி மூர்த்தியை யானும், புலைநின்ற பொல்லாப் பிறவி கடந்து, கலைநின்ற கள்வனைக் கண்டுகொண் டேனே. (௩)

தானே யுலகிற் றலைவ னெனத்தகுந், தானே யுலகுக்கோர் தத்துவ மாய்நிற்கும், வானே மழைபொழி மாமறை கூர்ந்திடு, மூனே யுருகிய வுள்ளொளி யானே ழுமே. (௪)

அருள்பெற்ற காரண மென்கொ லமரி, விருளற்ற சிந்தை யிறைவனை நாடி, மருளுற்ற சிந்தையை மாற்றி யருமைப், பொருளுற்ற சேவடி போற்றுவர் தாமே. (௫)

மெய்கலந் தாரொடு மெய்கலந் தான்றன்னைப், பொய்கலந் தார்முன் புகுதா வொருவனை, யுய்கலந் தூழித் தலைவனு மாய்நிற்கு, மெய்கலக் தின்பம் விளைந்திடு மெய்யர்க்கே. (௬)

மெய்கலந் தாரொடு மெய்கலந் தான்மிகப், பொய்கலந் தாருட் புகுதாப் புனிதனை, மைகலந் தாவி யெழும்பொழு தண்ணலைக், கைகலந் தார்க்கே கருத்துற லாமே. (௭)

எய்திய காலத் திருபொழு துஞ்சிவன், மெய்செயின் மேலை விதியது வாய்நிற்கும், பொய்யும் புலனும் புகலொன்று நீந்திடி, லையனு மவ்வழி யாகிநின் றானே. (௮)

எய்துவ தெய்தா தொழிவ திதுவரு, ளுய்ய வருள்செய்தா னுத்தமன் சீர்நந்தி, பொய்செய் புலனெறி யொப்பதுந் தாட்கொளின், மெய்யென் புரவியை மேற்கொள்ள லாமே. (௯)

கைகலந் தானைக் கருத்தினு ணந்தியை, மெய்கலந் தான்றன்னை வேத முதல்வனைப், பொய்கலந் தார்முன் புகுதாப் புனிதனைப், பொய்யொழிந் தார்க்கே புகலிட மாமே. (௧௦)

மெய்த்தா ளகம்படி மேவிய நந்தியைக், கைத்தாள்கொண் டாருந் திறந்தறி வாரில்லைப், பொய்த்தா ளிடும்பையைப் பொய்யற நீவிட்டங், கத்தா டிறக்கி லரும்பேற தாகுமே. ()

உய்யும் வகையா லுணர்விலு லேத்துமின், மெய்ய னரனெறி மேலுண்டு திண்ணெனப், பொய்யொன்று மின்றிப் புறம்பொலி வார்நடு, வையனு மங்கே யமர்ந்துநின் றானே. (௧௨)

வம்பு பழுத்த மலர்ப்பழ மொன்றுண்டு, தம்பாற் பறவை புகுந்துணத் தானொட்டா, தம்புகொண் டெய்திட் டகலத் துரந்திடிற், செம்பொற் சிவகதி சென்றெய்த லாமே. (௧௩)

மயக்கிய வைம்புலப் பாச மறுத்துத், துயக்கறுத் தானைத் தொடர்மின் றொடர்ந்தாற், றியக்கஞ்செய் யாதே சிவனெம்

பெருமா, னுயப்போ வெனமன மொன்றுவித் தானே. (௧௪)

மனமது தானே நினையவல் லார்க்கு, வினமெனக் கூறு மிருங்காய மேவுற், றணிவினி னுதன்பாற் றக்கன செய்யிற், புவிதன் செயலாகும் போதப் புவிக்கே. (௧௫) ஆ௳ ௪௮௮.

---

ஞானிசெயல்.

முன்னை வினைவரின் முன்னுண்டே நீங்குவர், பின்னை வினைக்கணுர் பேர்ந்தறப் பார்ப்பர்க, டன்னை யறிந்திடுந் தத்துவ ஞானிக, ணன்மையி லைம்புல னுடலி னுலே. (௧)

தன்னை யறிந்திடுந் தத்துவ ஞானிகள், முன்னை வினையின் முடிச்சை யவிழ்ப்பர்கள், பின்னை வினையைப் பிடித்துப் பிசைவர்கள், சென்னியில் வைத்த சிவனரு ளாலே. (௨)

மனவாக்குக் காயத்தால் வல்வினை மூளு, மனவாக்கு நேர்நிற்கில் வல்வினை மன்னு, மனவாக்குக் கெட்டவர் வாதனை தன்னுர், றனைமாற்றி யாற்றத் தகுஞானி தானே. (௩)

ஆ௳ ௪௯௧.

---

அவாவறுத்தல்.

வாசியு மூசியும் பேசி வகையினுற், பேசி யிருந்து பிதற்றிப் பயனில்லை, யாசையு மன்பு மறுமி னறுத்தபி, னீச னிருந்த விடமெளி தாமே. (௧)

மாடத்து ளானலன் மண்டபத் தானலன், கூடத்து ளானலன் கோயிலுள் ளானலன், வேடத்து ளானலன் வேட்கைவிட் டார்நெஞ்சின், மூடத்து ளேநின்று முத்திதந் தானே. (௨)

ஆசை யறுமின்க ளாசை யறுமின்க, ளீசனோ டாயினு மாசை யறுமின்க, ளாசை படப்பட வாய்வருந் துன்பங்க, ளாசை விடவிட வானந்த மாமே. (௩)

அடிவன பூதங்க ளைந்துமுடனே, படுவழி செய்கின்ற பற்றற வீசி, விடுவது வேட்கையை மெய்நின்ற ஞானந், தொடுவது தம்மைத் தொடர்தலு மாமே. (௪)

உவாக்கட லொக்கின்ற வூழியும் போன, துவாக்கட லுட்பட்டுத் துஞ்சினர் வாறே, ரவாக்கட லுட்பட் டழுந்தினர் மன்றே, தவாக்கட லீசன் றரித்துநின் றானே. (௫)

நின்ற வினையும் பிணியு நெடுஞ்செய, துன்றுமு லற்றுச் சுத்தம தாகலும், பின்றைங் கருமமும் பேர்த்தரு ணேர்பெற் றுத், தன்ற வழுத்தலு ஞானிக ளுய்மையே. (௬)

உண்மையு ணர்ந்தற வொண்சித்தி முத்தியாம், பெண்மை யற்கெட்டறப் பேறட்ட சித்தியாந், திண்மையின் ஞானி சிவ காயங் கைவிட்டால், வண்மை யருட்டா னடைந்தன்பி லாறுமே. (௭)

அவனிவ னீசனென் றன்புற நாடிச், சிவனிவ னீசனென் றுண்மையை யோரார், பவனிவன் பல்வகை யாமிப் பிறவி, புவனிவன் போவது பொய்கண்ட போதே. (௮)

கொதிக்கின்ற வாறுங் குளிர்கின்ற வாறும், பதிக்கின்ற வாதித்தப் பாரக முற்றும், விதிக்கின்ற வைவரை வேண்டா துலக, நொதிக்கின்ற காயத்து நூலொன்று மாமே. (௯)

உய்ந்தன மென்றிருறுபொருள் காண்கிலீர், கந்த மலரிற் கலக்கின்ற நந்தியைச், சிந்தையில் வைத்துத் தெளிவுறச் சேர்த்திட்டான், முந்தைப் பிறவிக்கு மூலவித் தாமே. (௧௰)

ஆக ௫௩௧.

## பத்தியுடைமை.

முத்திசெய் ஞானமுங் கேள்வியு மாய்நிற்கு, மத்தனை மாயா வமரர் பிரான்றனைச், சத்தனைத் தூய்நெறி யாய்நின்ற சோ

தியைப், பத்தர் பரசும் பசுபதி தானென்றே (௧)

அடியா ரடியா ரடியார்க் கடிமைக், கடியனாய் நல்கிட் டடிமையும் பூண்டே, னடியா ரருளா லவனடி கூட, வடியா னிவனென் றடிமைகொண் டானே. (௨)

நீரிற் குளிரு நெருப்பினிற் சுட்டிடு, மாரிக் கடனந்தி யா மா ரறிபவர், பாரிற் பயனாகும் பார்க்கிலு நேரிய, சூரி லுமாப தி யாகிநின் றானே. (௩)

ஒத்துல கேழு மறியா வொருவனென், றத்த னிருந்திட மாரறி வார்சொல்லப், பத்தர்தம் பத்தியிற் பாற்படி லல்லது, முத்தினை யார்சொல்ல முந்துகின் றாரே. (௪)

ஆன்கன்று தேடி யழைக்கு மதுபோ, னான்கன்றாய் நாடி யழைத்தேனென் னாதனை, வான்கன்றுக் கப்பாலாய் நின்ற மறைப்பொரு, ளூன்கன்றா னாடிவந் துள்புகுந் தானே. (௫)

பெத்தத்துந் தன்பணி யில்லை பிறத்தலான், முத்தத்துந் தன்பணி யில்லை முறைமையா, லத்தற் கிரண்டு மருளா லளித்தலாற், பத்திப்பட் டோர்க்குப் பணியொன்று மில்லையே. (௬)

பறவையிற் கற்பமும் பாம்புமெய் யாகக், குறவன் சிலம்பக் குளிர்வரை யேறி, நறவா மலர்கொண்டு நந்தியை யல்லா, லிறைவனென் றென்மன மேத்தகி லாவே. (௭)

உறுதுணை நந்தியை யும்பர் பிரானைப், பெறுதுணை செய்து பிறப்பறுத் துய்மின், செறிதுணை செய்து சிவனடி சிந்தித், துறுதுணை யாயங்கி யாகிநின் றானே. (௮)

வானவர் தம்மை வலிசெய் திருக்கின்ற, தானவர் முப்புரஞ் செற்ற தலைவனைக், கானவ னென்றுங் கருவரை யானென் றூனத னுண்ணினைந் தொன்றுபட் டாரோ. (௯)

நிலைபெறு கேடென்று முன்னே படைத்த, தலைவனை நா

டித் தயங்குமென் னுள்ள, மலையுளும் வானகத் துள்ளும் புறத்து, முலையுளு முள்ளத்து மூழ்கினின் றேனே. (கo) ஆ ருககக

முத்தியுடைமை.

முத்தியி லத்தன் முழுத்தவ ருட்பெற்றுத், தத்துவ சுத்தித் தலைப்பட்டுத் தன்பணி, மெய்த்தவஞ் செய்கை வினைவிட்ட மெய்யுண்மைப், பத்தியி லுற்றோர் பரானந்த போதரே. (க)

வளங்கனி தேடிய வன்றுட் பரவை, யுளங்கனி தேடி யுழிதரும் போது, களங்கனி யங்கியிற் கைவிளக் கேற்றி, நலங்கொண்ட நால்வரு நாடிநின் றாரே. (உ) ஆ ருககரு.

சோதனை.

பெம்மான் பெருநந்தி பேச்சற்ற பேரின்பத், தம்மா னடிதந் தருட்கட லாடினேன், மெம்மாய மும்விடுத் தெம்மைக்கரந்திட்டுச், சும்மா திருந்திடஞ் சோதனை யாகுமே. (க)

அறிவுடை யானரு மாமறை யுள்ளே, செறிவுடை யான்மிகு தேவர்க்குந் தேவன், பொறியுடை யான்புல னைந்துங் கடந்த, குறியுடை யானொடுங் கூடுவ னானே. (உ)

அறிவறி வென்றங் கரற்று முலக, மறிவறி யாமையை யாரு மறியா, ரறிவறி யாமை கடந்தறி வானு, லறிவறி யாமை யழகிய வாறே. (ரு)

குறியாக் குறியினிற் கூடாத கூட்டத், தறியா வறிவி லவிழ்ந்தேக சித்தமாய், நெறியாம் பராநந்தி நீடருளொன்றுஞ், செறியாச் செறிவே சிவமென லாமே. (சு)

காலினி லூறுங் கரும்பினிற் கட்டியும், பாலினுண் ணெய்யும் பழத்து ளிரதமும், பூவினு ணாற்றமும் போலுள னெம்மிறை, காவல னெங்குங் கலந்துநின் றானே. (ரு)

விருப்பொடு கூடி விகிர்தனை நாடிப், பொருப்பகஞ் சேர்தரு பொற்கொடி போல, விருப்பர் மனத்திடை மெங்கள் பிரானார், நெருப்புரு வாகி நிகழ்ந்து நிறைந்தே. (௬)

நந்தி பெருமா னடுவுள வியோமத்து, வந்தெ னகம்படி கோயிற்கொண் டான்கொள்ள, வெந்தைவந் தானென் றெழுந்தே னெழுதலுஞ், சிந்தையி னுள்ளே சிவனிருந் தானே. (௭)

தன்மைவல் லோனைத் தவத்து ளொருத்தனை, நன்மைவல் லோனை நடுவுறை நந்தியைப், புன்மைபொய் யாதே புனிதனை நாடுமின், பன்மையி லும்மைப் பரிசுசெய் வானே. (௮)

தொடர்ந்துநின் றானென்னைச் சோதிக்கும் போது, தொடர்ந்துநின் றானல்ல நாதனு மங்கே, படர்ந்துநின் றாதிப் பராபரனெந்தைக், கடந்துநின் றவ்வழிக் காட்டுகின் றானே. (௯)

அவ்வழி காட்டு மமரர்க் கரும்பொரு, ளிவ்வழி தந்தை தாயாய்கேளி யானெனக்குஞ், செவ்வழி சேர்சிவ லோகத் திருந்திடு, மிவ்வழி நந்தி யியல்பது தானே. (௧0)

எறிவது ஞானத் துறைவா னுருவி, யறிவது னோடேயவ் வாண்டகை யானைச், செறிவது தேவர்க்குந் தேவர் பிரானைப், பறிவது பல்கணப் பற்று விடாரே. (௧௧)

ஆதிப் பிரான்றந்த வாளங்கை கொண்டபின், வேதித்து வென்னை விலக்கவல் லாரில்லை, சோதிப்ப னங்கே சுவடு படாவண்ணம், மாதிக்கட் டெய்வ மவனிவ னாமே. (௧௨)

அத்தக் கருவை யருவை வினைசெய்தற், பக்கம் பணியச்சம் பல்பிறப் பும்வாட்டிச், சிந்தை திருத்தலுஞ் சேர்ந்தாரச் சோதனை, சந்திக்கத் தற்பர மாகுஞ் சதுரர்க்கே. (௧௩)

உளையற்ற கொன்றை யுளைத்தா னெனக்குக், களையற் றெழுந்த கலைவேட் டறுத்துத், திளையொத்த வென்னுட லீங்கா திருத்திப், புளையற்ற வென்னுட் புகுந்தற் பரனே. (௧௪)

ஆக அதிகாரம்-௨௩௪-இ-திருமந்திரம்-௫௨௭.
எட்டாந்தந்திரமுற்றும்.
ஆக சிறப்புப்பாயிரமுட்பட-அதிகாரம்-௨௧௨இ.
கூடியதிருமந்திரம்- ௨௬௪௮.



# ஒன்பதாந்தந்திரம்.

## குருமடதரிசனம்.

பலியுமலியும் பரந்து புகையு, மொலியுமெம் மீசன் றனக்கென்றே யுள்கிக், குவியுங் குருமடங் கண்டவர் தாம்போய்த், தளிரு மலரடிச் சார்ந்துநின் றாரே. (௧)

இவனில்ல மல்ல தவனுக்கங் கில்லை, யவனுக்கும் வேறில்ல முண்டா வறியி, னவனுக் கிவனில்ல மென்றென் றறிந்து, மவனைப் புறம்பென் றரற்றுகின் றாரே. (௨)

நாடும் பெருந்துறை நான்கண்டு கொண்டபின், கூடுஞ் சிவனது சொய்மலர்ச் சேவடி, தேட வரியன் சிறப்பிலி யெம்மிறை, யோடு முலகுயி ராகிநின் றானே. (௩)

இயம்புவ னாசனத் தோடு மலையு, மியம்புவன் சித்தக் குகையு மிடமு, மியம்புவ னாதாரத் தோடு வனமு, மியம்புவ னீரா திருநிலத் தோர்க்கே. (௪)

முகம்பீட மாமட முன்னிய தேய, மகம்பர வர்க்கமே யாசில்செய் காட்சி, யகம்பர மாதன மெண்ணெண் கிரிகை, சிதம்பரந் தற்குகை யாதாரந் தானே. (௫)

அகமுக மாம்பீட மாதார மாகுஞ், சகமுக மாஞ்சத்தி யாதன மாகுஞ், சகமுக மாந்தெய்வ மேசிவ மாகு, மகமுக மாய்ந்த வறிவுடை யோர்க்கே. (௬)

மாயை யிரண்டு மறைக்க மறைவுறுங், காயமோ ரைந்து ங்கழியத்தா னாகியே, தூய பரஞ்சுடர் தோன்றச்சொரூபத் து, ளாய்பவர் ஞானாதி மோனத்த ராமே. (எ)

---

## ஞானகுரு தரிசனம்.

ஆறெழு முப்பது மங்கே யடங்கிடிற், கூறக் குருபரன் கு ம்பிடு தந்திடும், வேறே சிவபத மேலா யளித்திடும், பேறுக வா னந்தம் பேணும் பெருகவே. (க)

துரியங்கண் மூன்றுங் கடந்தொளிர் சோதி, யரிய பரசிவ மியாவையு மாகி, விரிவு குவிவற விட்ட நிலத்தே, பெரிய குரு பதம் பேசவொண் ணாதே. (உ)

ஆயன நந்தி யடிக்கென் றலைபெற்றேன், வாயன நந்தி யை வாழ்த்தவென் வாய்பெற்றேன், காயன நந்தியைக் காண வென் கண்பெற்றேன், சேயன நந்திக்கென் சிந்தைபெற் றே னே. (௩)

கருடனுருவங் கருதுமளவிற், பருவிடந் தீர்ந்து பயங்கெ டுமாபோல், குருவி னுருவங் குறித்தவப் போதே, திரிமலந் தீ ர்ந்து சிவனவ னாமே. (ச)

அன்ன விருப்பிட மாருமறிகில, ரண்ண விருப்பிட மாய் ந்துகொள் வார்களுக், கண்ண லழிவின்றி யுள்ளே யமர்ந்திடு, மண்ணலைக் காணி லவனிவ னாமே. (ரு)

தோன்ற வறிதலுந் தோன்றித்தோன் றாமையு, மான்றவ றிவுமறிநன வாதிகண், மூன்றவை நீங்குந் துரியங்கண் மூன்றற வூன்றிய நந்தி யுயர்மோனத் தானே. (சா)

சந்திர பூமிக் குடன்புரு வத்திடைக், கந்த மலரி லிரண் டிதழ்க் கன்னியும், பந்த மிலாத பளிங்கி னுருவினள், பந்த ம

றுத்த பரங்குரு பற்றே. (எ)

மனம்புகுந் தானுல கேழு மகிழ, நிலம்புகுந் தானெடு வா னிலந் தாங்கிச், சினம்புகுந் தான்றிசை யெட்டு நடுங்க, வனம் புகுந் தானூர் வடக்கென்ப தானே. (அ)

தானான வன்னமுங் கோசமுஞ் சார்தருந், தானும் பற வை வனமெனத் தக்கன, தானான சோடச மார்க்கந்தா னின் றிடிற், றானுந் தசாங்கமும் வேறுள்ள தானே. (௯)

மருவிப் பரிவறி யாவெங்கண் மாநந்தி, யுருவ நினைக்கநின் றுள்ளே யுருக்குங், கருவிற் கரந்துள்ளங் காணவல் லார்க்கு, யருவினை கண் சோரு மடிவா ரகத்தே. (௧0)

தலைப்பட லாமெங்க டத்துவன் றன்னைப், பலப்படு பாச மறுத்தறுத் திட்டு, நிலைப்பெற நாடி நினைப்பற வுள்கிற், றலை ப்பட லாகுந் தருமமுந் தானே. (௧௧)

நினைக்கி னினைக்கு நினைப்பவர் தம்மைச், சுனைக்குள் வி ளைமலர்ச் சோதியி னானைத், தினைப்பிளந் தன்ன சிறுமைய ரேனுங், கனத்த மனத்தடைந் தாருயர்ந் தாரே. (௧௨)

தலைப்படுங் காலத்துத் தத்துவன் றன்னை, விலக்குறின் மேலை விதியென்றுங் கொள்க, வனைத்துல காய்நின்ற வாதிப் பிரானை, நினைப்புறு வார்பத்தி நேடிக்கொள் வாரே. (௧௩)

நகழ்வொழிந் தாரவர் நாதனை யுள்கி, நிகழ்வொழிந் தா ரெம் பிரானொடுங் கூடித், திகழ்வொழிந் தார்திங்கள் சிந்தை யி னுள்ளே, புகழ்வழி காட்டிப் புகுந்துநின் றானே. (௧௪)

வந்த மரகத மாணிக்க ரேகைபோற், சந்திடு மாமொழிச் சற்குரு சன்மார்க்க, மிந்த விரேகையி லாடத்தின் மூலத்தே, சுந்தரச் சோதியுட் சோதியு மாமே. (௧௫)

உண்ணும் வாயு முடலூ முயிருமாய்க், கண்ணுமா யோக க் கடவு ளிருப்பது, மண்ணு நீரனல் காலொடு வானுமாய், வி

ண்ணு மின்றி வெளியான மேனியே. (௧௬)

பரசு பதியென்று பார்முழு தெல்லாம், பரசிவ ஞானை நடக்கும் பதியாற், பெரிய பதிசெய்து பின்னு மடியார்க், குரிய பதியும்பா ராக்கினின் றுனே. (௧௭)

அம்பர நாத னகலிட நீள்பொழில், தம்பர மல்லது தாமறி யோமென்ப, ரும்பருள் வானவர் தானவர் கண்டில, ரெம்பெரு மானருள் பெற்றிருந் தாரே. (௧௮)

கோவணங் கும்படி கோவண மாகிப்பி, ஞவணங் கும்படி நந்தி யருள்செய்தான், றேவணங் கோமினிச் சத்தந் தெளிந்தனம், போய்வணங் கும்பொரு ளாயிருந் தோமே. (௧௯)

ஆ உ௯.

---

பிரணவசமாதி.

தாலப் பிரணவஞ் சொருபானந்தப் பேருரை, பாலித்த சூக்கும மேலைச் சொருபப்பெண், ணாலித்த முத்திரை யாங்சதிற் சூக்கும், மேலைப் பிரணவம் வேதாந்த வீதியே. (௧)

ஒன்றுமோங்காரத் துள்ளே யொருமொழி, போமெனு மோங்காரத் துள்ளே யுருவரு, வோமெனு மோங்காரத் துள்ளே பலபேத,மோமெனு மோங்கார மொண்முத்திசித்தியே. ()

ஓங்காரத் துள்ளே யுதித்தவைம் பூதங்க, ளோங்காரத் துள்ளே யுதித்த சராசர, மோங்காரா தீதத் துயிர்மூன்று முற்றன, வோங்காரஞ் சிவ பரசிவ ரூபமே. (௩)

வருக்கஞ் சுகமாம் பிரமமு மாகு, மருக்கஞ் சராசர மாகு முலகிற், றருக்கிய வாதார மெல்லாந்தன் மேனி, சுருக்கமின் ஞானந் தொகுத் துணர்ந் தோர்களே. (௪)

மலையு மனோபவ மருள்வன வாவன, நிலையிற் றரிசனந்

தீப நெறியாங், தலமுங் குலமுந் தவஞ்சித்த மாகு, நலமுஞ் சன்மார்க்கத் துபதேசந் தானே. (௫)

சோடச மார்க்கமுஞ் சொல்லுஞ்சன் மார்க்கிகட், காடிய விராதி னந்தமு மீரேழிற், கூடிய வந்தமுங் கோதண்ட முங்கடக், தேறியே ஞானஞே யாந்தத் திருக்கவே. (௬) ஆ ௩௨.

---

ஒளி.

ஒளியை யறியி லுருவு மொளியு, மொளியு முருவ மறியி லுருவா, மொளியி லுருவ மறியி லொளியே, யொளியு முருக வுடனிருந் தானே. (௧)

புகலெளி தாகும் புவனங்க ளெட்டு, மகலொளி தாயிருளாசற வீசும், புகலொளி செய்தது மத்தா மறையிலே, யிகலொளி செய்தெம் பிரானிருந் தானே. (௨)

விளங்கொளி யங்கி விரிகதிர் சோமன், றுளங்கொளி பெற்றது சோதி யருளா, வளங்கொளி பெற்றதே பேரொளி வேறு, களங்கொளி செய்து கலந்துநின் றானே. (௩)

இளங்கொளி யீசன் பிறப்பொன்று மில்லி, துளங்கொளி ஞாயிறுந் திங்களுங் காண, வளங்கொளி யங்கியு மற்றைக்கணெற்றி, விளங்கொளி செய்கின்ற மெய்காய மாமே. (௪)

மேலொளி கீழதின் மேவிய மாருதம், பாலொளி யங்கி பரந்தொளி யாகாச, நீலொளி செய்து நெடுவிசும் பொன்றிலு, மேலொளி யைந்து மொருங்கொளி யாமே. (௫)

மின்னிய தூவொளி மேதக்க செவ்வொளி, பன்னிய ஞானம் பரந்த பரத்தொளி, துன்னிய வாறொளி தூய்மொழி நாடோறு, முன்னிய வாறொளி யொத்தது தானே. (௬)

விளங்கொளி மின்னொளி யாகிக் கரந்து, துளங்கொளியீ

சனைச் சொல்லுமெப் போது, ளங்கொளி யூனிடை நின்றுயி
ர்க்கின்ற, வளங்கொளி யெங்கு மருவிநின் றானே. (எ)

விளங்கொளி யவ்வொளி யவ்விருண் மன்னுந், துளங்கொ
ளி யான்றெழு வார்க்கு மொளியா, னளங்கொளி யாரமு தா
காஞ் சாரும், களங்கொளி யீசன் கருத்தது தானே. (அ)

இலங்கிய தெவ்வொளி யவ்வொளி யீசன், றுலங்கொளி
போல்வது தூங்கருட் சத்தி, விளங்கொளி மூன்றே விரிசுடர்
தோன்றி, யுளங்கொளி யுள்ளே யொருங்குகின் றானே. (கூ)

உளங்கொளி யாவதென் னுண்ணின்ற சீவன், வளங்கொ
ளி யாநின்ற மாமணிச் சோதி, விளங்கொளி யாய்மின்னி வி
ண்ணொலொடுங்கி, வளங்கொளி யாயத்து ளாகிநின் றானே. ()

விளங்கொளி யாய்நின்ற விகிர்த விருந்த, துளங்கொளி
பாசத்துட் டுங்கிருள் சேராக், களங்கிரு ணட்டமே கண்ணுத
லாட, விளங்கொளி யுன்மனத் தொன்றினின் றானே. (கக)

போது கருங்குழற் போனவர் தூதிடை, யாதி பரத்தை
யமரர் பிரானொடுஞ், சோதியு மண்டத்தப் பாலுற்ற தூவொ
ளி, நீதியி னல்லிரு ணீக்கிய வாறே. (கஉ)

உண்டில்லை யென்னு முலகத் தியல்வது, பண்டில்லை யென்
னும் பரங்கதி யுண்டுகொல், கண்டில்லை மானுடர் கண்ட கருத்
துறில், விண்டில்லை யுள்ளே விளக்கொளி யாமே. (க௩)

சுடருற வோங்கிய வொள்ளொளி யாங்கே, படருறு கா
ட்சிப் பகலவ னீச, னடருறு மாயையி னுயிருள் வீசி, லுடலுறு
ஞானத் துறவிய னாமே. (க௪)

ஒளிபவ ளத்திரு மேனிவெண் ணீற்ற, னளிபவளச் செம்
பொன் னாதிப் பிரானுங், களிபவ ளத்தினன் காரிரு ணீங்கி,
யொளிபவ ளத்தென்னோ டீசனின் றானே. (க௫)

ஈசனின் றானிமை யோர்களின் றார்நின்ற, தேசமொன்

றின்றித் திகைத்திழைக் கின்றனர், பாசமொன் ருகப் பழவி
னைப் பற்றற, வாசமொன் ருமலர் போன்றது தானே. (௧௬)

தானே யிருக்கு மவற்றிற் றலைவனுந், தானே யிருக்கு மவ
னென நண்ணிடும், வானு யிருக்குமிம் மாயிரு ஞாலத்துப், பா
னு யிருக்கப் பரவலு மாமே. (௧௭) ஆ ௨௪௯.

---

மூலபஞ்சாக்கரம்.

ஐம்ப தெழுத்தே யனைத்து வேதங்களு, மைம்ப தெழுத்
தே யனைத்தாக மங்களு, மைம்ப தெழுத்தி னடைவை யறிந்த
பி, னைம்ப தெழுத்தே யஞ்செழுத் தாமே. (௧)

அகார முதலாக வைம்பத்தொன் ருகி, யுகார முதலாக
வோங்கி யுதித்து, மகார விறுதியாய் மாய்ந்துமாய்ந் தேறி, ந
கார முதலாகு நந்திதன் னுமமே. (௨)

அகராதி யீரொண் கலந்த பரையு, முகராதி தன்சத்தி யுள்
ளொளி யீசன், சிகராதி தான்சிவ வேதவே கோண, நகராதி
தான்மூல மந்திர நண்ணுமே. (௩)

வாயொடு கண்ட மிதய மருவுந்தி, யாய விலிங்க மவற்றி
ன்மே லேயவ்வாய், தூயதோர் துண்ட மிருமத் தகஞ்சொல்
ல, லாயதீ ருமைந்தோ டாமெழுத் தஞ்சுமே. (௪)

கிரணங்க ளேழுங் கிளர்ந்தெரி பொங்கி, கரணங்கள் வி
ட்டுயிர் தானெழும் போது, மரணங்கை வைத்துயிர் மாற்றிடும்
போது, மரணங்கை கூட்டுவ தஞ்செழுத் தாமே. (௫)

ஞாயிறு திங்க ணவின்றெழு காலத்தி, லாயுறு மந்திர
மாரு மறிகிலர், சேயுறு கண்ணி திருவெழுத் தஞ்சையும், வா
யுற வோதி வழுத்தலு மாமே. (௬)

தெள்ளமு தூறச் சிவாய நமவென்று, வுள்ளமு தூற வொ
ருக்கா லுரைத்திடும், வெள்ளமு தூறல் விரும்பியுண் ணுதவர்,
துள்ளிய நீர்போற் சுழல்கின்ற வாறே. (௭)

குருவழி யாய குணங்களி னின்று, கருவழி யாய கணக்கை யறுக்க, வரும்வழி மான மறுக்கவல் லார்கட், கருள்வழி காட்டுவ தஞ்செழுத் தாமே. (அ)

வெறிக்க வினைத்துயர் வந்திடும் போது, செறிக்கின்ற நந்தி திருவெழுத் தோதுங், குறிப்பது வுன்னிற் குரைகழல் கூட்டுங், குறிப்பறி வான்றவங் கோனுரு வாமே. (கூ)

நெஞ்சு நினைந்துதம் வாயாற் பிரானென்று, துஞ்சும் பொழுதுன் றுணைத்தாள் சரணென்று, மஞ்சு தவழும் வடவரை மீதுறை, யஞ்சி லிறைவ னருள்பெற லாமே. (க0)

பிரான்வைத்த வைந்தின் பெருமை யுணரா, திராமாற்றஞ் செய்வார்கொ லேழை மனிதர், பராமுற்றுங் கீழொடு பல்வகை யாலு, மராமுற்றுஞ் சூழ்ந்த வகலிடந் தானே. (கக)

ஆ. கூ0.

---

## சூக்குமபஞ்சாக்கரம்.

எளிய வாதுசெய் வாரெங்க ளீசனை, யொளியை யுன்னி யுருகு மனத்தராய்த், தெளிய வோதிச் சிவாய நமவெனுங், குளிகை யிட்டுப்பொன் னாக்குவன் கூட்டையே. (க)

சிவன்சத்தி சீவன் செறுமல மாயை, யவஞ்சேர்த்த பாச மலமைந் தகலச், சிவன்சத்தி தன்னுடன் சீவனார் சேர, வவஞ்சேர்த்த பாச மணுககி லாவே. (உ)

சிவனரு ளாய சிவன்றிரு நாமஞ், சிவனரு ளான்மாத் திரோத மலமாயை, சிவன்முத லாகச் சிறந்து நிரோதம், பவமது கன்று பரசிவ னாமே (ௐ)

வோதிய நமமல மெல்லா மொழித்திட்டவ், வாதி தனைவிட் டிறையருட் சத்தியாற், நீதிற் சிவஞான யோகமே சித்திக்கு, மோதுஞ் சிவாய மலமற்ற வுண்மையே. (ச)

நமாதி நனாதி திரோதாயி யாகித், தமாதிய தாய்நிற்கத்

தாணந்தத் தற்றுச், சமாதித் துரியந் தமதாக மாவே, சமாதி சமாதி சிவவாத லெண்ணவே. (௫)

அருட்ரு மாயமு மத்தனுந் தம்மி, லொருவனை யின்றவ் வொன்றாறு மாயை, திரிமல நீங்கிச் சிவாயவென் றோது, மருவினை தீர்ப்பது மவ்வெழுத் தாமே. (௬)

சிவசிவ வென்றே தெளிகில ரூமர், சிவசிவ வாயுவுந் தேர்ந்துள் ளடங்கச், சிவசிவ வாய தெளிவினுள் ளார்கள், சிவசிவ வாகுந் திருவரு ளாமே. (௭)

சிவசிவ வென்கிலர் தீவினை யாளர், சிவசிவ வென்றிடத் தீவினை மாளுஞ், சிவசிவ வென்றிடத் தேவரு மாவர், சிவசிவ வென்னச் சிவகதி தானே. (௮)

நமவென்னு நாமத்தை நாவி லொடுக்கிச், சிவவென்னு நாமத்தைச் சிந்தையுள் ளேற்றிப், பவமது தீரும் பரிசும தற்றே, லவமதி தீரு மறும்பிறப் பன்றே. (௯) ஆ. ௬௯.

---

அதிசூக்குமபஞ்சாக்கரம்.

சிவாய நமவெனச் சித்த மொருக்கி, யவாய மறவே யடைய தாக்கிச், சிவாய சிவசிவ வென்றென்றே சிந்தை, யவாயங் கெடநிற்க வானந்த மாமே. (௧)

செஞ்சுடர் மண்டலத் தூடுசென் றப்புற, மஞ்சன வும்முறை யேறி வழிக்கொண்டு, துஞ்சு மவன்சொன்ன காலத் திறைவனை, நெஞ்சென நீங்கா நிலைபெற லாகுமே. (௨)

அங்கமு மாகம வேதம தோதினு, மெங்கள் பிரானெழுத் தொன்றி லிருப்பது, சங்கைகெட் டவ்வெழுத் தொன்றையுஞ் சாதித்தா, லங்ஙனை சேர்க்க வருங்கல மாமே. (௩)

பழுத்தன வைந்தும் பழமறை யுள்ளே, விழுத்தங் குறங்கும் வினையறி வாரில்லை, யெழுத்தறி வோமென் றுரைப்பர்க ளேதை, யெழுத்தை யழுத்து மெழுத்தறி யாரே. (௪) ஆ. ௭௩.

---

திருக்கூத்துத்தரிசநம்.

எங்குந் திருமேனி யெங்குஞ் சிவசத்தி, யெங்குஞ் சிதம்பர மெங்குந் திருநட்ட, மெங்குஞ் சிவமா யிருத்தலா லெங்கெங்கும், தங்குஞ் சிவனருட் டன்விளை யாட்டதே. (க)

சிற்பரஞ் சோதிசிவானந்தக் கூத்தனைச், சொற்பத மாமந்தச் சுந்தரக் கூத்தனைப், பொற்பதிக் கூத்தனைப் பொற்றில்லைக் கூத்தனை, யற்புதக் கூத்தனை யாரறி வாரோ. (உ)

---

சிவானந்தக்கூத்து.

தானந்த மில்லாச் சதானந்த சத்திமேற், றேனுந்து மானந்த மாநடங் கண்டீர், ஞானங் கடந்து நடஞ்செய்யு நம்பிக்கங், கானந்தக் கூத்தாட வாடரங் கானதே. (ங)

ஆனந்த மாடரங் கானந்தம் பாடல்க, ளானந்தம் பல்லிய மானந்த வாச்சிய, மானந்த மாக வகில சராசர, மானந்த மானந்தக் கூத்துகந் தானுக்கே. (ச)

ஒளியாம் பரமு முளதாம் பரமு, மளியார் சிவகாமி யாகுஞ் சமயக், களியார் பரமுங் கருத்துறை யந்தத், தெளிவாஞ் சிவானந்த நட்டத்தின் சித்தியே. (ரு)

ஆன நடமைந் தகள சகளத்த, ரான நடமாடி யைங்கருமத்தாக, வான தொழிலரு ளாலைந் தொழிற்செய்தே, தேன்மொழி பாகன் றிருநட மாடுமே. (சு)

பூதாண்ட பேதாண்ட போகாண்ட யோகாண்ட, மூதாண்ட முத்தாண்ட மோகாண்ட தேகாண்ட, தாகாண்ட மைங்கரு மத்தாண்ட தற்பரத், தேகாந்த மாம்பிர மாண்டத்த வென்பவே. (எ)

வேதங்க ளாட மிகுவா கமமாடக், கீதங்க ளாட கிளரண்ட மேழாடப், பூதங்க ளாடப் புவந முழுதாட, நாதங்கொ

ண் டாடினான் ஞானனந் திக்கூத்தே. (அ)

பூதங்க ளைந்திற் பொறியிற் புலனைந்தில், வேதங்க ளைந்தின் மிகுமாக மந்தன்னி, லோதுங் கலைகால மூழி யுடனண்டப், போதங்க ளைந்திற் புணர்ந்தாடுஞ் சித்தனே. (௯)

தேவர் சுரர்நரர் சித்தர்வித் தியாதரர், மூவர்க ளாதியின் முப்பத்து மூவர்கள், தாபதர் சத்தர் சமையஞ் சராசரம், யாவையு மாடிடு மெம்மிறை யாடவே. (௧0)

---

சுந்தரக்கூத்து

அண்டங்க ளேழினுக் கப்புறத் தப்பா, லுண்டென்ற சத்தி சதாசிவத் துச்சிமேற், கண்டங் கரியாக கருணை திருவுருக், கொண்டங் குமைகாணக் கூத்துகந் தானே. (௧௧)

கொடுகொட்டி பாண்டரங் கோடுசங் கார, நடமெட்டோ டைந்தாறு நாடியு ளாடுந், திடமுற் றெழுந்தேவ தாருவுந் தில்லை, வடமுற்ற மாவன மன்னவன் றானே. (௧௨)

பரமாண்டத் தூடே பராசத்தி பாதம், பரமாண்டத் தூடே படரொளி யீசன், பரமாண்டத் தூடே பட்டர்தரு நாதம், பரமாண்டத் தூடே பரனட மாடுமே. (௧௩)

அங்குச வென்ன வெழுமார்க்கம் போதத்திற், றங்கிய தொந்தி யெனுங்கா ள வொத்தினிற், சங்கரன் மூலநா டிக்குட் டரித்தாடற், பொங்கிய காலம் புகும்போக லில்லையே. (௧௪)

ஆளத்தி யாடிப் பின்னவக் கூத்தாடிக், காளத்தி யாடிக் கருமத்திற் றரித்தாடி, மூளச் சுழுனையு ளாடி முடிவில்லா, ஞானத்து ளாடி முடித்தானென் னாதனே. (௧௫)

சத்திக ளைந்துஞ் சிவபேதந் தானைந்து, முத்திக ளெட்டு முதலாம் பதமெட்டுஞ், சித்திக ளெட்டுஞ் சிவபதந் தானெட்டுஞ், சுத்திக ளெட்டீசன் றொன்னட மாடுமே. (௧௬)

மேகங்க ளேழும் விரிகடற் றீவேழுந், தேகங்க ளேழுஞ்

சிவபாற் கரனேழுர், தாகங்க ளேழுஞ் சாந்தி தனிலேழு, மா கின்ற நந்தி யடிக்கி ழடங்குமே. (கஎ)

---

பொற்பதிக்கூத்து.

தெற்கு வடக்குக் கிழக்குமேற் குச்சியி, லற்புத மான தோ ரஞ்சு முகத்திலு, மொப்பில்பே ரின்பத் துபய வுபயத்து ட், டற்பர னின்று தனிநடஞ் செய்யுமே. (கஅ)

அடியா ரரனடி யானந்தங் கண்டோ, ரடியா ரானவ ரத்தரு ளுற்றோ, ரடியார் பவரே யடியவ ராமா, லடியார்பொ ன் னம்பலத் தாடல்கண் டோரே. (கக)

அடங்காத வென்னை யடக்கி யடிவைத், திடங்காண்ப ரானந்தத் தேயென்னை யிட்டு, நடந்தான் செயுநந்தி நன்ஞானக் கூத்தன், படந்தான்செய் துள்ளுட் படிந்திருந் தானே. (உ)

உம்பறிற் கூத்தனை யுத்தமக் கூத்தனைச், செம்பொற் றிருமன்றுட் சேவகக் கூத்தனைச், சம்பந்தக் கூத்தனைத் தற்பரக் கூத்தனை, யின்புற நாடியென் னன்பில்வைத் தேனே. (உக)

மாணிக்கக் கூத்தனை வண்டில்லைக் கூத்தனைப், பூணுற்ற மன்றுட் புரிசடைக் கூத்தனைச், சேணுற்ற சோதிச் சிவானந்தக் கூத்தனை, யாணிப்பொற் கூத்தனை யாருரைப் பாரே. ()

விம்மும் வெருவும் விழுமெழு மெய்சோருந், தம்மையுந் தாமறி யார்கள் சதிர்கெடுஞ், செம்மை சிறந்த திருவம் பலக்கூத்து, ளம்மலர்ப் பொற்பாதத் தன்புவைப் பார்கட்கே. ()

தேட்டறுஞ் சிந்தை திகைப்பறும் பிண்டத்துள், வாட்டறுங் கால்புந்தி யாகி வரும்புல, னோட்டறு மாசை யறுமுளத் தானந்த, நாட்ட முறுக்குறு நாடகங் காணவே. (உச)

காளியோ டாடிக் கனகா சலத்தாடிக், கூளியோ டாடிக் குவலயத் தேயாடி, நீடிய நீர்தீகால் நீள்வா னிடையாடி, நா

ஆறு வம்பலத் தேயாடு நாதனே. (௨௫)

மேரு நடுநாடி மிக்கிடை பிங்கலை, கூருமிவ் வானினி லங்கைக் குறியுறுஞ், சாருந் திலைவனத் தண்மா மலயத்து, டேறுஞ் சுழுனை யிவைசிவ பூமியே. (௨௬)

பூதல மேருப் புறத்தான தக்கண, மோது மிடைபிங் கலையொண் சுழுனையாம், பாதி மதியோன் பயிற்றிரு வம்பல, மேதமில் பூதாண்டத் தெல்லையி னீறே. (௨௭)

---

பொற்றில்லைக்கூத்து.

அண்டங்க ளோரேழு மம்பொற் பதியாகப், பண்டையா காசங்க ளைந்தும் பதியாகத்,தெண்டினிற் சத்தி திருவம் பலமாகக், கொண்டு பரஞ்சோதிக் கூத்துகந் தானே. (௨௮)

குரானந்த ரேகையாய்க் கூர்ந்த குணமாய், சிரானந்தம் பூரித்துத் தென்றிசை சேர்ந்து,புரானந்த போகனுய்ப் பூவையுந் தானு, பிரானந்த மாகி நிருத்தஞ்செய் தானே. (௨௯)

ஆதி பரனாட வங்கைக் கனலாட,வோதுஞ் சடையாட வுன்மத்த முற்றாடப், பாதி மதியாடப் பாரண்ட மீதாட, நாதமோ டாடினு னுதாந்த நட்டமே. (௩௦)

கும்பிட வம்பலத் தாடிய கோனட, மம்பர னுடு மகிலாண்ட நட்டமாஞ், செம்பொரு ளாகுஞ் சிவலோகஞ் சேர்ந்தற்று, லும்பர மோனஞா னனந்தத்தி லுண்மையே. (௩௧)

மேதினி மூவேழ் மிகுமண்ட மோரேழு, சாதக மாகுஞ் சமயங்க ளாற்றெட்டு, நாதமொ டந்த நடானந்த நாற்பதப், பாதியோ டாடிப் பரனிரு பாதமே. (௩௨)

இடைபிங் கலையிம வானோ டிலங்கை, நடுநின்ற மேரு நடுவாஞ் சுழுனை, கடவுந் திலைவனங் கைகண்ட மூலம், படர்வொன்றி யென்னும் பரமாம் பரமே. (௩௩)

ஈறான கன்னி குமரியே காவிரி, வேறா நவதீர்த்த மிக்குள்ள வெற்பேழுள், பேறான வேதா கமமே பிறத்தலான், மாறாத தென்றிசை வையகஞ் சுத்தமே. (௩௪)

நாதத் தினிலாடி நாற்பதத் தேயாடி, வேதத்தி லாடித் தழலந்த மீதாடிப், போதத்தி லாடிப் புவன முழுதாடுந், தீதற்ற தேவாதி தேவர் பிரானே. (௩௫)

தேவரோ டாடித் திருவம் பலத்தாடி, மூவரோ டாடி முனிசனத் தோடாடிப், பாவினு ளாடிப் பராசத் தியிலாடிக், கோவினு ளாடிடுங் கூத்தப் பிரானே. (௩௬)

ஆறு முகத்தி லதிபதி நானென்றுங், கூறு சமயக் குருபர னென்றுங், தேறினர் தெற்குத் திருவம் பலத்துளே, வேறின்றி யண்ணல் விளங்கிநின் றானே. (௩௭)

அம்பல மாடரங் காக வதன்மீதே, யெம்பர னாடு மிருதாளி னீரொளி, யும்பர மாமைந்து நாதத்து ரேகையுட், டம்பத மாய்நின்று தான்வந் தருளுமே. (௩௮)

ஆடிய காலு மதிற்சிலம் போசையும், பாடிய பாட்டும் பலவான நட்டமுங், கூடிய கோலங் குருபரன் கொண்டாடத், தேடியு ளேகண்டு தீர்ந்தற்ற வாறே. (௩௯

இருதயந் தன்னி லெழுந்த பிராணன், கரசர ணாதி கலக்கும் படியே, வரதன மன்றினின் மாணிக்கக் கூத்தன், குரவனா யெங்கணுங் கூத்துகந் தானே. (௪0)

---

## அற்புதக்கூத்து.

குருவுரு வன்றிக் குனிக்கு முருவ, மருவுரு வாவது மந்தவருவே, திரிபுரை யாகித் திகழ்கரு வாளு, முருவரு வாகு முமையவ டானே. (௪௧)

திருவழி யாவது சிற்றம்பலத்தே, குருவடி யுள்ளாக் குனிக்கு முருவே, யுருவரு வாவது முற்றுணர்ந் தோர்க்கு, வருள்வழி யாவது மவ்வழி தானே. (௪உ)

நீருஞ் சிரசிடை பன்னிரண் டங்குல, மோடு முயிரெழுந் தோங்கி யுதித்திட, நாடுமின் ஞாதாந்த நம்பெரு மானுகந், தாடு மிடந்திரு வம்பலந் தானே. (௪௩)

வளிமேக மின்வில்லு வானக வோசை, தெளிய விசும்பிற் றிகழ்தரு வாறுபோல், களியொளி யாறுங் கலந்துடன் வேறு, யொளியுரு வாகி யொளித்துநின் றானே. (௪௪)

தீமுத லைந்துந் திசையெட்டுங் கீழ்மேலு, மாயு மறிவினுக் கப்புற மானந்த, மாயைமா மாயை கடந்துநின் றார்காண, நாயக னின்று நடஞ்செய்யும் வாறே. (௪௫)

கூத்தன் கலந்திடுங் கோல்வளை யாளொடுங், கூத்தன் கலந்திடுங் கோதிலா வானந்தங், கூத்தன் கலந்திடுங் கோதிலா ஞானத்துக், கூத்தனுங் கூத்தியுங் கூத்ததின் மேலே. (௪௬)

இடங்கொண்ட சத்தியு மெந்தை பிரானு, நடங்கொண்டு நின்றமை யானு மறிந்தேன், படங்கொடு நின்றவிப் பல்லுயிர்க் கெல்லா, மடங்கலுந் தாமாய்நின் றாடுகின் றாரே. (௪௭)

சத்தி வடிவு சகலவா னந்தமு, மொத்தவா னந்த முமையவள் மேனியாஞ், சத்தி வடிவு சகளத் தெழுந்திரண், டொத்தவா னந்த மொருநட மாமே. (௪அ)

நெற்றிக்கு நேரே புருவத் திடைவெளி, யுற்றுற்றுப் பார்க்க வொளிவிடு மந்திரம், பற்றுக்குப் பற்றாய்ப் பரம னிருந்திடஞ், சிற்றம் பலமென்று சேர்ந்துகொண் டேனே. (௪௯)

அண்டங்க டத்துவ மாகிச் சதாசிவந், தண்டினிற் சாத்தவி சாம்பவி யாதனந், தெண்டினி லேழுஞ் சிவாசன மாகவே, கொண்டு பரஞ்சோதி கூத்தகந் தானே. (௫0)

மன்று நிறைந்த விளக்கொளி மாமலர், நன்றிது தானிதழ் நாலொடு நூறவை, சென்றது தாளொரு பத்திரு நூறுள, நின்றது தானெடு மண்டல மாமே. (௫௧)

அண்ட மெழுகோடி பிண்ட மெழுகோடி, தெண்டிரை சூழ்ந்த திசைக ளெழுகோடி, யெண்டிசை சூழ்ந்த விலிங்க மெழுகோடி, யண்ட னடஞ்செயு மாலயந் தானே. (௫௨)

ஆகாச மாமுட லங்கார் முயலக, னேகாச மாந்திசை யெட்டுந் திருக்கைகண், மோகாய முக்கண்கள் மூன்றொளி தானாக, மாகாயன் மன்றுள் நடஞ்செய்கின் றானே. (௫௩)

அம்பல மாவ தகில சராசர, மம்பல மாவது வாதிப் பிரானடி, யம்பல மாவது வப்புத்தீ மண்டல, மம்பல மாவது வஞ்செழுத் தாமே. (௫௪)

கூடிய திண்முழ வங்குழ லோமென்று, வாடிய மானுட ராதிப் பிரானென்ன, நாடிய நற்கண மாரம்பல் பூதங்கள், பாடிய வாறொரு பாண்டரங் காமே. (௫௫)

அண்டத்திற் றேவர்க ளப்பாலைத் தேவர்க, ளெண்டிசை சூழ்புவிக் குள்ளுள்ள தேவர்கள், புண்டரீ கப்பதப் பொன்னம் பலக்கூத்து, கண்டுசே வித்துக் கதிபெறு வார்களே. (௫௬)

புளிக்கண் டவர்க்குப் புனலூறு மாபோற், களிக்குந் திருக்கூத்துக் கண்டவர்க் கெல்லா, மளிக்கு மருட்கண்ணீர் சோர் நெஞ் சுருக்கு, மொளிக்கு ளானந்தத் தமுதூறு முள்ளத்தே.

இண்டாடி வீழ்கை சிவானந்த மாவது, வுண்டார்க்கு ணர்வுண்டா முன்மத்தஞ் சித்திக்கும், கொண்டாடு மன்றுட் குளிக்குந் திருக்கூத்து, கண்டார் வருங்குணங் கெட்டார்க்கு மொக்குமே. (௫௮)

அங்கி தமருக மக்குமா லைபாச, மங்குசஞ் சூலங் கபால முடன்ஞானந், தங்கு மபயந் தருநீல முமுடன், மங்கையோர் பாகமாய் மாநட மாடுமே. (௫௯)

ஆடல் பதினொ ருறுப்பு முடைவாகக், கூடிய பாதஞ் சி லம்புகைக் கொள்துடி, நீடிய நாதம் பராற்பர நேயத்தே, யாடிய நந்தி புறமகத் தானே. (௬௦)

ஒன்பது மாட வொருபதி னுருட, வன்புறு மார்க்கங்க ளாறு முடனாட, வின்புறு மேழினு மேழைம்பத் தாருட, வ ன்பது மாடினா னனந்தக் கூத்தே. (௬௧)

ஏழினி லேழா யிகழ்ந்தெழுத் தேழதா, யேழினி லொன் று யிழிந்தமைந் தொன்றாகி, யேழினிற் சன்மார்க்க மெங்கள் பரஞ்சோதி, யேழிசை நாடகத் தேயிசைந் தானே (௬௨)

மூன்றினி லஞ்சாகி முந்நூற் றறுபதாய், மூன்றினி லாறு ய் முதற்பன்னீர் மூலமாய், மூன்றினி லக்க முடிவாகி முந்தி யே, மூன்றினு மாடினான் மோகாந்தக் கூத்தே. (௬௩)

தாமுடி வானவர் தம்முடி மேலுறை, மாமணி யீசன் மல ரடித் தாளிணை, வாமணி யன்புடை யார்மனத் துள்ளெழுங், காமணி ஞாலங் கடந்துநின் றானே. (௬௪)

புரிந்தவ னாடிற் புவனங்க ளோடுந், தெளிந்தவ னாடு மன வெங்கள் சிந்தை, பரிந்தவ னாடிற்பல் பூதங்க ளாடி, தெரிந் தவ னாடல்கண் டின்புற்ற வாறே. (௬௫)

ஆதி நடஞ்செய்தா னென்பர்க ளாதர்க, ளாதி நடஞ்செய் கை யாரு மறிகில, ராதி நடமாட லாரு மறிந்தபி, னாதி நடமா ட லாமருட் சத்தியே. (௬௬)

ஒன்பதோ டொன்பதா முற்ற விருபதக், தன்புறு கோ ண மசிபதத் தாடிடத், தன்புறு சத்தியுட் டோன்றிநின் றுட வே, யன்புற வெங்கைநின் றுடலுற் றானே. (௬௭)

தத்துவ மாடச் சதாசிவந் தானாடச், சித்தமு மாடச் சிவ சித்தி தானாட, வைத்த சராசர மாட மறையாட, வத்தனு மா டினா னனந்தக் கூத்தே. (௬௮)

இருவருங் காண வெழிலம் பலத்தே, யுருவோ டருவோ டுருபா ரூபமாய்த், திருவருட் சத்திக்குள் சித்தனா னந்த, னொருவனு மாகநின் றாடலுற் றானே. (௬௯)

சிவமாடச் சத்தியு மாடச் சகத்தி, லவமாட வாடாத வம்பரு மாட, நவமான தத்துவ நாதாந்த மாடச், சிவமாடும் வேதாந்தச் சித்தாந்தத் துள்ளே. (௭0)

நாதத்தி னந்தமு நற்போத வந்தமும், வேதத்தி னந்தமு மெய்ச்சிவா னந்தமுந், தாதற்ற நல்ல சதாசிவா னந்தத்து, நாதப் பிரமஞ் சிவநட மாகுமே. (௭௧)

சிவமாதி யைவர் திண்டாட்ட முந்திரத், தவமார் பசுபாச மாங்கே தனித்துத், தவமாம் பரனெங்குந் தானாக வாடுந், தவமாஞ் சிவானந்தத் தோர்ஞானக் கூத்தே. (௭௨)

கூடிநின் றானொரு காலத்துத் தேவர்கள், வீடநின் றான்விகிர் தாவென்னு நாமத்தைத், தேடநின் றான்றிக ழுஞ்சுடர் மூன்றொளி, யாடநின் றானென்னை யாட்கொண்ட வாறே (௭௩)

நாதத் துவங்கடந் தாதி மறைநம்பி, பூதத் துவத்தே பொலிந்தின்ப மெய்தினர், நேதத் துவமு மவற்றொடு நேதியும், பேதப் படாவண்ணம் பின்னிநின் றானே. (௭௪)

ஆனந்த மானந்த மென்ப ரறிவில, ரானந்த மாநட மாரு மறிகில, ரானந்த மாநட மாரு மறிந்தபின், றானந்த மற்றிட மானந்த மாமே. (௭௫)

திருந்துநற் சிவென் றுதறிய கையு, மருந்தவர் வாவென் றணைத்த மலர்க்கையும், பொருந்தி லிமைப்பில் யவ்வென்ற பொற்கையுந், திருந்தத் தீயாந் திருநிலை மவ்வே. (௭௬)

மருவுந் துடியுடன் மன்னிய வீச்சு, மருவிய வப்பு மனலுடன் கையுங், கருவின் மிதித்த கமலப் பதமு, முருவில் சிவாய நமவென வோதே. (௭௭)

அரன்றுடி தோற்றமமைத்த திதியா, மரணங்கி தன்னி லூறுயிற் சங்கார, மரனுற் றணைப்பி லமருந் திரோதாயி, யர னடி யென்று மநுக்கிரக மென்னே. (எ௬)

தித்திரட் சோதி திகழொளி யுள்ளொளி, கூத்தனைக் க ண்டவக் கோமளக் கண்ணினள், மூர்த்திகண் மூவர் முதல்வ னிடைசெல்லப், யார்த்தனள் வேதங்கள் பாடினள் தானே.

நந்தியை யெந்தையை ஞானத் தலைவனை, மந்திர மொன் றுண் மருவி யதுகடந், தந்தர வானத்தி னப்புறத் தப்பர, சுந் தரக் கூத்தனை யென்சொல்லும் வாறே. (அ)

சிய குருநந்தி திருவம் பலத்திலே, யாயுறு மேனி யை யா ரு மறிகிலர், தீயுறு செம்மை வெளுப்பொடு மத்தன்மை, யாயு று மேனி யணைபுக லாமே. (அச)

தானான சத்தியுந் தற்பரை யாய்நிற்குந், தானும் பரற் கு முயிர்க்குந் தருமிச்சை, ஞானாதி பேத நடத்து நடித்தரு, ளானு லரனடி நேயத்த தாமே. (அ௫) ஆ கருரு.

---

## ஆகாசப்பேறு.

உள்ளத்து ளோமென வீச னொருவனை, யுள்ளத்து ளேயங் கி யாய வொருவனை, யுள்ளத்து ளேநீதி யாய வொருவனை, யுள் ளத்து ளேயுட லாகாய மாமே. (க)

பெருநில மாயண்ட மாயண்டத் தப்பாற், றருநில மாய் நின்ற கொள்கைய னீசன், பெருநில மாய்நின்று தாங்கிய தா ளோ, னருநிலை யாய்நின்ற வாதிப் பிரானே. (உ)

அண்ட வொளியு மகண்ட வொளியுடன், பிண்ட வொளி யாற் பிதற்றும் பெருமையை, யுண்ட வெளிக்குள் ளொளிக்கு ளொளித்தது, கொண்ட குறியைக் குலைத்தது தானே. (௩)

பயனுறு கன்னியர் போகத்தி னுள்ளே,பயனுறு மாதிப ரஞ்சுடர்ச் சோதி, யயனொடு மாலறி யாவகை நின்றிட், டுரு நெறி யாயொளி யொன்றது வாமே. (௪)

அறிவுக் கறிவா மகண்ட வொளியும், பிறியா வலத்தினிற் பேரொளி மூன்று. மறியா தடங்கிடு லத்த னடிக்குட், பிறியா திருக்கிற் பெருங்கால மாமே. (௫)

ஆகாச வண்ண னமரர் தலக்கொழுந், தேகாச மாசுண மிட்டங் கிருந்தவ, னாகாச வண்ண மமர்ந்துநின் றப்புற, மாகாச மாயங்கி வண்ணனு மாமே. (௬)

உயிர்க்கின்ற வாறு முலகமு மொக்க, வுயிர்க்கின்ற வுள்ளொளி சேர்கின்ற போது, குயிற்கொண்ட பேதை குலாவி யுலாவி, வெயிற்கொண்டென் னுள்ளம் வெளியது வாமே. (௭)

நணுகி லகல்கில னாத னுலகத், தணுகி லகன்ற பெரும்பதி நந்தி, நணுகிய மின்னொளி சோதி வெளியைப், பணியி னமுதம் பருகலு மாமே. (௮)

புறத்துளா காசம் புவன முலக, மகத்துளா காசமெம் மாதி யறிவு, சிவத்துளா காசஞ் செழுஞ்சுடர்ச் சோதி, சகத்துளா காசந் தானஞ் சமாதியே. (௯) ஆக ௧௬௭௪.

---

## ஞானோதயம்.

மனசந்தி யிற்கண்ட மன்னன வாகுங், கனவுற வானந்தங் காண்ட லதனை, வினவுற வானந்த மீதொழி வென்ப, வினைபுற்று னந்தியா னந்த மிரண்டே. (௧)

கரியட்ட கையன் கபாலங்கை யேந்தி, யெரியு மிளம்பிறை சூடுமெம் மானை,யரியன் பெரியனென் றெட்டப்பட்ட தல்லாற், கரியன்கொல் சேயன்கொல் காண்கின்றி லேனே. (௨)

மிக்காரமுதுண்ண நஞ்சுண்ட மேலவன், றக்கா ருரைத்த தவநெறி யேசென்று, புக்கா லருளும் பொன்னுரை ஞானத்தை, நக்கார் கழல்வழி நாடுமி னீரே. (௩)

விளக்கைப் பிளந்து விளக்கினை யேற்றி, விளக்கினுக் குள்ளே விளக்கினைத் தூண்டி, விளக்கில் விளக்கை விளக்கவல் லார்க்கு, விளக்குடை யான்கழல் மேவலு மாமே. (௪)

தத்துவ மெங்குண்டு தத்துவ னங்குண்டு, தத்துவ மெங்கில்லை தத்துவ னங்கில்லை, தத்துவ ஞானத்தின் றன்மை யறிந்தபின், றத்துவ னங்கே தலைப்படுந் தானே. (௫)

விசும்பொன்று தாங்கிய மெய்ஞ்ஞானத் துள்ளே, யசும்பினின் றூறிய தாரமு தாகும், பசும்பொன் றிசழும் படர்சடை மீதே, குசும்ப மலர்க்கந்தங் கூடிநின் றுனே. (௬)

முத்தின் வயிரத்தின் முன்னீர்ப் பவளத்தின், கொத்தும் பசும்பொன்னின் றூவொளி மாணிக்க மொத்துய ரண்டத் துள்ளமர் சோதியை, யெத்தன்மை வேறென்று கூறுசெய் வீரே. (௭)

நானென்றுந் தானென்று நாடினே னாடலு, நானென்றுந் தானென் றிரண்டில்லை யென்பது, நானென்ற ஞான முதல்வனே நல்கினு, னானென்று நானு நினைப்பொழிந் தேனே. ()

ஞானத்தி னன்னெறி நாதாந்த நன்னெறி, ஞானத்தி னன்னெறி நானென் றறிவோர்தன், ஞானத்தி னல்லியோக நன்னிலை யேநித்தன், ஞானத்தி னன்மோன நாதாந்த வேதமே.

உய்யவல் லார்கட் குயிர்சிவ ஞானமே, யுய்யவல் லார்கட் குயிர்சிவந் தெய்வமே, யுய்யவல் லார்கட் கொடுக்கம் பிரணவ, முய்யவல் லாரறி வுள்ளறி வாமே. (௧௦)

காணவல் லார்க்கவன் கண்ணின் மணியொக்குங், காணவல் லார்க்குக் கடலி னமுதொக்கும், பேணவல் லார்க்குப் பி

ழைப்பிலன் பேர்நந்தி, யாணவல் லார்க்கே யவன்றுணை யாமே.
ஓமெனு மோரெழுத் துண்ணின்ற வோசைபோல், மேனி ன்றதேவர் விரும்பும் விழுப்பொருள், சேய்நின்ற செஞ்சுடரெ ம்பெரு மானடி, யார்நின்ற தேவ ரகம்படி யாமே. (௧௨)

ஆ. ௧௭௬.

---

சத்தியஞானனந்தம்.

எப்பாழும் பாழு மியாவுமா யன்றாகி, முப்பாழுங் கீழுள முப்பாழு முன்னியே, யிப்பாழு மின்னவா றென்ப திலாவின் பத், தற்பரஞா னனந்தந் தானது வாகுமே. (௧)

தொம்பதந் தற்பதஞ் சொன்ன துரியம்போ, னம்பிய மூன் றுந் துரியத்து நன்றும, மம்புவி யுன்று வதிருக்க மப்பாலைச் செம்பொரு ளாண்டருள் சீர்நந்தி தானே. (௨)

மன்னுஞ் சத்தியாதி மணியொளி மாசோபை, யன்னதோ டொப்ப மிடலொன்று மாறது, வின்னிப வுற்பல மொண்சீர் நிறமணம், பன்னிய சோபை பகராறு மானதே. (௩)

சத்தி சிவன்பர ஞானமுஞ் சாற்றுங்கா, லுய்த்த வநந் தஞ் சிவமுய ரானந்தம், வைத்த சொரூபத்த சத்தி வருகுரு, வு ய்த்த வுடலிவை யுற்பலம் போலுமே. (௪)

உருவுற் பலநிற மொண்மணஞ் சோபை, தரநிற்ப போலு யிர்த் தற்பரந் தன்னின், மருவச் சிவமென்ற மாமுப் பதத்தின், சொருபத்தன் சத்தியாதி தோன்றநின் றுனே. (௫)

நினையு மளவி னெகிழ வணங்கிப், புனையி லவனைப் பொதி யலு மாகு, மெனையுமெங் கோனந்தி தன்னருட் கூட்டி, நினையு மளவி னினைப்பித் தனனே. (௬)

பாலொடு தேனும் பழத்து ளிரதமும், வாலிய பேரமு தாகு மதுரமும், போலுந் துரியம் பொடிபட வுள்புகச், சீல மயிர்க்கா றெறுந்தேக் கிடுமே. (௭)

அமரத் துவங்கடந் தண்டங் கடந்து, தமரத்து நின்ற த னிமைய னீசன், பவளத்து முத்தம் பணிமொழி மாதர், துவ ளற்ற சோதி தொடர்ந்துநின் றானே. (அ)

மத்திம மாறுறு மாற்றி மலநீக்கிச், சுத்தம தாகுந் துரிய த் துரிசற்றுப், பெத்த மறச்சிவ மாகிப் பிறழ்வுற் றுச், சத்திய ஞானந்தஞ் சார்ந்தனன் ஞானியே. (௯)

சிவமா யவமான மும்மலந் தீரப், பவமான மும்பாழைப் பற்றறப் பற்றத், தவமான சத்திய ஞானனந் தத்தே, துவ மார் துரியஞ் சொரூபம தாமே. (௧0) ஆக ௧அ௬.

---

சொரூபோதயம்.

பரம குரவன் பரமெங்கு மாகித், திரமுற வெங்கணுஞ் சே ர்ந்தொழி வற்று, நிரவு சொருபத்து ணீடுஞ் சொரூப, மரிய து ரியத் தணைந்துநின் றானே. (௧)

குலைக்கின்ற நீரிற் குவலய நீரு, மலைக்கின்ற காற்று மன லோடா காச, நிலத்திடை வானிடை நீண்டகன் றனை, வ ளாத்து வலஞ்செயு மாறறி யேனே. (௨)

அங்குநின் றனயன் மால்முதற் றேவர்க, ளெங்குநின் று மிறைவனென் றேத்துவர், தங்கிநின் றன்றனி நாயக னெம் மிறை, பொங்கிநின் றன்புவ னாபதி தானே. (௩)

சமையச் சுவடுந் தனையறி யாமற், சமையற்ற காமாதி கார ண கெட்டுந், திமிரச் செயலுந் தெளிவுட னின்றே, ரமரர்க் கதி பதி யாகிநிற் போரே. (௪)

மூவகை தைவத் தொருவன் முதலுரு, வாயது வேறு ம துபோ லணுப்பரன், சேய சிவமுத் துரியத்துச் சீர்பெற, வேயு நெறியென் றிறைநூ லியம்புமே. (௫)

உருவன்றி யேநின் றுருவம் புணர்க்குங், கருவன்றி யேநி

ன்று தான்கருவாகு, மருவன்றி யேநின்ற மாயப்பிரானைக், கு
ருவன்றி யாவர்க்குங் கூடவொண் ணாதே. (௬)

உருவ நினைப்பவர்க் குள்ளூறுஞ் சோதி, யுருவ நினைப்பவ
ருழியுங் காண்ப, ருருவ நினைப்பவ ரும்பரு மாவ, ருருவ நினைப்
பவ ருலகத்தில் யாரோ. (எ)

பரஞ்சோதி யாகும் பதியினைப் பற்றுப், பரஞ்சோதி யெ
ன்னுட் படிந்ததற் பின்னைப், பரஞ்சோதி யுண்ணுன் படியப் ப
டியப், பரஞ்சோதி தன்னைப் பறையக்கண் டேனே. (அ)

சொரூப முருவங் குணந்தொல் விழுங்கி, யரியன வுற்பல
மாமாறுபோல, மருவிய சத்தியாதி நான்கு மகித்த, சொரூப
க் குரவன் சுகோதயத் தானே. (௯)

உரையற்ற வானந்த மோன சொருபத்தன், கரையற்ற ச
த்தியாதி காணி லகார, மருவுற் றுகார மகாரம தாக, வுரைய
ற்ற தாரத்தி லுள்ளொளி யாமே. (௧௦)

தலைநின்ற தாழ்வரை மீது தவஞ்செய், முலைநின்ற மாதறி
மூர்த்தியை யானும், புலைநின்ற பொல்லாப் பிறவி கடந்து, க
லைநின்ற கள்வனிற் கண்டுகொண் டேனே. (௧௧)

ஆமா றறிந்தே னகத்தி னரும்பொருள், போமா றறிந்தே
ன் புகுமாறு மீதென்றே,யேமாப்ப தில்லை யினியோ ரிடரில்லை
நாமா முதல்வனு நானென லாமே. (௧௨) ஆ ௧௬அ

---

௩ ழ்.

செற்றிலென் சீவிலென் செஞ்சாந் தணியிலென், மத்தகத்
தேபுளி நாட்டி மறிக்கிலென், வித்தக னந்தி விதிவழி யல்லது,
தத்துவ ஞானிக டன்மைகுன் றாரே. (௧)

தான்முன்னஞ் செய்த விதிவழி தானல்லால், வான்முன்
னஞ் செய்தங்கு வைத்ததோர் மாட்டில்லை, கோன்முன்னஞ்

சென்னி குறிவழி யேசென்று, நான்முன்னஞ் செய்ததே கண்ணில மானதே. (௨)

ஆறிட்ட நுண்மணை லாறே சமவாதே, கூறிட்டுக் கொண்டு சுமந்தறி வாரில்லை, நீறிட்ட மேனி நிமிர்சடை நந்தியைப், பேறிட்டென் னுள்ளம் பிரியகி லாவே. (௩)

வானின் றிடிக்கிலென் மாகடற் பொங்கிலென், கானின்ற செந்திக் கலந்துடன் வேகிலென், மூனொன்றி மாருதஞ் சண்டமடிக்கிலெ, னூனொன்றி நாதனை நாடுவ னானே. (௪)

ஆனை துரக்கிலெ னம்பூ டறுக்கிலென், கானத் துழுவை கலந்து வளைக்கிலென், னேனைப் பதியினி லெம்பெருமான்வைத்த, ஞானத் துழவினை நானுழு வேனே. (௫)

கூடு கெடின்மற் றோர் கூடுசெய் வானுள, வோடு கெடினு நமர்கெடு வாரில்லை, வீடு கெடின்மற் றோர் வீடுபுக் காலொக்கும், பாடது நந்தி பரிசறி வார்க்கே. (௬) ஆக உ௦௪.

---

## சிவதரிசநம்.

சிந்தைய தென்னச் சிவனென்ன வேறில்லை, சிந்தையி னுள்ளே சிவனும் வெளிப்படுஞ், சிந்தை தெளியத் தெளியவல் லார்கட்குச், சிந்தையி னுள்ளே சிவனிருந் தானே. (௧)

வாக்கு மனமு மறைந்த மறைப்பொரு, ணோக்குமின் னோக்கப் படும்பொரு ளுண்ணிது, போக்கொன்று மில்லை வரவில்லை கேடில்லை, யாக்கமு மத்தனை யாய்ந்துகொள் வார்க்கே. ()

பரனாய்ப் பராபர னாகிய பார்சென், றரனாய் வழக்கற வொண்சுடர் தானாய்த், தானாய்த் தனுதென வாறறி வொண்ணு, வானு யுலகி லருள்புரிந் தானே. (௩) ஆக உ௦௭.

---

## சிவரூபதரிசநம்.

ஓதுமயிர்க்கா ருருமமுதுறிய, பேதமபேதம் பிறழாத வானந்த, மாதிச் சொருபங்கண் மூன்றகன் றப்பாலே, வேதகமோதுஞ் சொரூபிதன் மேன்மையே. (௧)

உணர்வு மவனே யுயிரு மவனே, புணரு மவனே புலவி யவனே, யிணரு மவன்றன்னை பெண்ணனு மாகான், றுணரின் மலர்க்கந்தந் துன்னிநின் றானே. (௨)

துன்னிநின் றான்றன்னை யுன்னிமுன் னாவிரு, முன்னி யவர்தங் குறையை முடித்திடு, மன்னிய கேள்வி மறையவன் மாதவன், சென்னியு ணின்றதோர் தேற்றத்த னாமே. (௩)

மின்னுற்ற சிந்தை விழித்தேன் விழித்தலுந், தன்னுற்ற சோதி தலைவ னிணையிலி, பொன்னுற்ற மேனிப் புரிசடை நந்தியு, மென்னுற் றறிவனு னென்விழித் தானே. (௪)

சத்திய ஞானத் தனிப்பொருளானந்தஞ், சித்தத்தி னில்லாச் சிவானந்தப் பேரொளி, சுத்தப் பிரம துரியந் துரியத்து, ளுய்த்த துரியத் துறுபே ரொளியே. (௫)

பரனல்ல நீடும் பராபர னல்ல, வுரனல்ல மீதுண ரொண்சுட ரல்ல, தரனல்ல தானவை யாயல்ல வாகு, மரனல்ல வானந்தத் தப்புறத் தானே. (௬)

முத்தியுஞ் சித்தியு முற்றிய ஞானத்தோன், பத்தியு ணின்று பரந்தன்னு ணின்றுமா, சுத்தியு ணின்றோர்க்குத் தத்துவங் கூடலாற், சுத்தி யகன்றோர் சுகானந்த போதரே. (௭)

துரிய வதீதஞ் சொல்லுறும் பாழா, மரிய துரிய மதீதம் புரியில், விரியுங் குவியும் விள்ளா மிளிருந்தன், னுருவுந் திரியு முனைப்பதெவ் வாறே. (௮)

ஆ. உ௧௫.

முத்திபேதம், கர்மநிர்வாணம்.

ஓதிய முத்தி யடைவே யுயிர்பர, பேதமி லச்சிவ மெய்துந் துரியமோ, டாதி சொருபச் சொரூபத்த தாகவே, யேதமி லாநிரு வாணம் பிறந்ததே. (க)

பற்றற் றவர்பற்றி நின்ற பரம்பொருள், கற்றற் றவர்சற் றுக் கருதிய கண்ணுதல், சுற்றற் றவர்சுற்றி நின்றவென் சோதியைப், பெற்றுற் றவர்கள் பிதற்றொழிந் தாரே. (உ) ஆ உகள.

சூந்நியசம்பாஷணை.

காயம் பலகை கவறைந் து கண்மூன்று, யாயம் பொருவதோ ரைம்பத்தோ ரக்கர, மேய பெருமா னிருந்து பொருகின்ற, மாயக் கவற்றின் மறைப்பறி யேனே. (க)

தூறு படர்ந்து கிடந்தது தூநெறி, மாறிக் கிடக்கும் வகையறி வாரில்லை, மாறிக் கிடக்கும் வகையறி வாளர்க்கு, ஆறிக் கிடந்ததென் னுள்ளன்பு தானே. (உ)

ஆறு தெருவி லகப்பட்ட சந்தியிற், சாறு படுவன நான்கு பனையுள, வேறற் கரியதோ ரேணியிட் டப்பனை, யேறலுற் றேன்கட லேழுங்கண் டேனே. (ந)

வழுதலை வித்திடப் பாகன் முளைத்தது, புழுதியைத் தோண்டினேன் பூசணி பூத்தது, தொழுதுகொண் டோடினார் தோட்டக் குடிகண், முழுதும் பழுத்தது வாழைக் கனியே. (ச)

ஐயென்னும் வித்தினி லானை விளைப்பதோர், செய்யுண்டு செய்யின் றெளிவறி வாரில்லை, மையணி கண்டன் மனம்பெறி னந்நிலம், பொய்யொன்று மின்றிப் புகவெளி தாமே. (ரு)

பள்ளசெய் யொன்றுண்டு பாழ்செய் யிரண்டுள, கள்ளச்செய் யங்கே கலந்து கிடந்தது, வுள்ளச்செய் யங்கே யுழவுசெய் வார்கட்கு, வெள்ளச்செய் யாகி விளைந்தது தானே. (சு)

மூவணை யேரு முழுவது முக்காணி, தாமணி கோலித் தறியுறப் பாய்ந்திடு, நாவணை கோலி நடுவிற் செறுவுழார், கால

ணை கோலிக் களருழு வாரே. (எ)

ஏத்த மிரண்டுள வேழு துரவு, மூத்தா னிறைக்க விளையா ன் படுத்தநீர், பாத்தியிற் பாயாது பாழ்ப்பாய்ந்து போயிடி ற், கூத்தி வளர்த்ததோர் கோழிப்புள் ளாமே. (அ)

பட்டிப் பசுக்க ளிருபத்து நாலுள, குட்டிப் பசுக்களோ ரேழுளஐவந்துள, பட்டிப் பசுக்கள் குடப்பாற் சொரியினும், ப ட்டிப் பசுவே பனவற்கு வாய்த்ததே. (கூ)

ஈற்றுப் பசுக்க ளிருபத்து நாலுள, ஆற்றுப் பசுக்க ளொ ருகுடம் பால்போதுங், காற்றுப் பசுக்கள் கறந்துண்ணுங் கால த்து, மாற்றுப் பசுக்கள் வரவறி யோமே. (க0)

தட்டா னகத்திற் றலையான மச்சின்மேல், மொட்டா யெழுந்தது செம்பால் மலர்ந்தது, வட்டம் படவேண்டி வாய் மை மடித்திட்டுத், தட்டா னதனைத் தகைந்துகொண் டானே.

அரிக்கின்ற நாற்றங்கா லல்லற் கழனி, திரிக்கின்ற வோட் டஞ் சிக்கெனக் கட்டி, வரிக்கின்ற நல்ல னறவையைப் பூட்டி ல், விரிக்கின்ற வெள்ளரி வித்துவித் தாமே. (கஉ)

இடர்க்கொண்டு தூவி யெருவிட்டு வித்திக், கிடர்க்கொ ண்டு பூட்டிக் களறி முளையை, மிடர்க்கொண்டு சோறட்டு மெள்ள விழுங்கா, ரடர்க்கொண்டு செந்நெ லறுக்கின்ற வா றே. (கங)

விளைந்து கிடந்தது மேலைக்கு வித்தது, விளைந்து கிடந்த து மேலைக்குக் காதம், விளைந்து விளைந்து விளைந்துகொள் வா ர்க்கு, விளைந்து கிடந்தது மேவுமுக் காதமே. (கச)

களருழு வார்கள் கருத்தை யறியோங், களருழு வார்க ள் கருதலு மில்லை, களருழு வார்கள் களரின் முளைத்த, வளரி ள வஞ்சியின் வாய்த்தலு மாமே. (கரு)

கூப்பிடு கொள்ளாக் குறுநரிக் கொட்டகத், தாப்பிடு பா

சத்தை யங்கியுள் வைத்திட்டு, நாட்பட நின்று நலம்புருந் தாயிழை, யேற்பட வில்லத் தினிதிருந் தானே. (௧௬)

மலைமேன் மழைபெய்ய மான்கன்று துள்ளக், குலைமே லிருந்த கொழுங்கனி வீழ, வுலைமே லிருந்த வுறுப்பெனக் கொல்லன், முலைமே லமிர்தம் பொழியவைத் தானே. (௧௭)

பார்ப்பா னகத்திலே பாற்பசு வைந்துண்டு, மேய்ப்பாருமின்றி வெறித்துத் திரிவன, மேய்ப்பாரு முண்டாய் வெறியு மடங்கினாற், பார்ப்பான் பசுவைந்தும் பாலாச் சொரியுமே. (௧௮)

ஆமாக்க ளைந்த மரியேறு முப்பதுந், தேமா விரண்டொடு திப்பிலி யொன்பதுந், தாமாக் குரங்கொளி நம்மனத் துள்ளன, மூவாக் கடாவிடின் மூட்டுகின் றானே. (௧௯)

எழுதாத பொத்தகத் தேட்டின் பொருளைத், தெருளாத கன்னி தெளிந்திருந் தோத, மலராத மாட்டின் மணத்தின் மதுவைப், பிறவாத வண்டு மணமுண்ட வாறே. (௨0)

போகின்ற பொய்யும் புகுகின்ற பொய்வித்துங், கூகின்ற நாவலின் கூழைத் தருக்கனி, யாகின்ற பைங்கூழ் வையுண்ணுமைவரும், வேகின்ற கூரை விருத்திபெற் றாரே. (௨௧)

மூங்கி லெழுந்ததோர் வேம்புண்டு வேம்பினிற், சார்ந்து கிடந்த பனையிலோர் பாம்புண்டு, பாம்பைத் தூரத்திட்டு வேம்பைந்தின் பாரின்றி, வேம்பு கிடந்து வெடிக்கின்ற வாறே. ()

பத்துப் பரும்புலி யானை பதினைஞ்சு, வித்தக ரைவர் வினோதக ரிரெண்மர, ரத்தகு மூவ ரறுவர் மருத்துவ, ரத்தலை யைவ ரமர்ந்துநின் றாரே. (௨௩)

இரண்டு கடாவுண்டிவ்வூரி னுள்ளே, யிரண்டு கடாவுக்கு மொன்றே தழும்ப, விரண்டு கடாவு மிருத்திப் பிடிக்கி, லீரரடு கடாவு மொருகடா வாமே. (௨௪)

ஒத்த மனக்கொல்லை யுள்ளே சமன்கட்டிப், பத்தி வலையி

ற் பருத்தி நிறுத்தலான், முத்தக் குயிருக மூவர்க ளொரினு, ஙவி
த்தம் பொருது நிரம்பநின் றுரே. (உரு)

கூகையும் பாம்பும் கிளியொடு பூனையு, நாகையும் பூழுங்
கிவி லுறைவன, நாகையைக் கூகை நணுக நிறுத்தலலுங், கூகை
யைக் கண்டெலி கூப்பிடு மாறே. (உசு)

குலக்கின்ற நன்னகை யாங்கொங் குழக்கி, விலக்கின்ற
வெள்ளெலி மூன்று குணந்தா, னுலக்குப் புறமெனி லோடு மி
ருக்கும், புலக்குப் பிறந்தவை போகின்ற வாறே. (உஎ)

காடுபுக் காரினி காணார் கடுவெளி, கூடுபுக் கானது வைந்
து குதிரையு, மூடுபுக் கானது வாறுள வொட்டக, மூடுபு தாவி
டின் மூவனே யாமே. (உஅ)

கூரையுஞ் சோறுங் குழாயகத் தெண்ணெயுங், காரையு நா
ணும் வளையலுங் கண்டவர், பாறையி லுற்ற பறக்கின்ற சீலை
போ, லாறைக் குழியி லழுந்துகின் றுரே. (உகூ

துருத்தியுள் ளக்கரை தோன்று மலைமேல், விருத்திகண்
காணிக்கப் போவார்முப் போதும், வருத்தியுண் ணின்ற மலை
யைத் தவிர்ப்பா, னொருத்தியுள் ளாளவ ளூரறி யோமே. ()

பருந்துங் கிளியும் படுபறை கொட்டத், திருந்திய மாதர்
திருமணப் பட்டார், பெருந்தவப் பூதம் பெறலுரு வாகு, மிரு
ந்திய பேறினி யின்புறு வாரே. (௩க)

கூடுற் பறவை யினைகொத்தி மற்றத, னூடுபுக் குண்டி ய
றுக்குறி லென்னெக்குஞ், குடேறி நெய்யுண்டு மைகான் றிடுகி
ன்ற, பாட்டறி வார்க்குப் பயனெளி தாமே. (௩உ)

இலையில்லை பூவுண் டினவண்டுங் கில்லை, தலையில்லை வேரு
ண்டு தாளில்லை பூவின், குலையில்லை கொய்யு மலருண்டு கொய்யு
ந், தலையில்லை தாழ்ந்த மயிர்புல ராதே. (௩௩)

அக்கண நின்றதோ ராலமரங்கண்டு,நக்கண வாழ்த்தி ந டுவே பயன்கொள்வர், மிக்கவ ரஞ்சு துயரமுங் கண்டுபோய்த், நுக்கவர் தாழ்ந்து கிடக்கின்ற வாறே. (ருச)

கூப்பிடு மாற்றிலே வன்கா டிருகாதங், காப்பிடு கள்ளர் க லந்துநின் முருளர், காப்பிடு கள்ளரை வெள்ளர் தொடர்ந்திட்டு க், கூப்பிடு மீண்டதோர் கூரைகொண் டாரே. (ருரு)

கொட்டியு மாம்பலும் பூத்த குளத்திடை, வெட்டியும் வேம்பு மினியதோர் வாழையுங், கட்டியுந் தேனுங் கலந்துண மாட்டாதா, ரொட்டிப் பழத்துக் கிளைக்கின்ற வாறே. (ருசு)

பெடைவண்டு மாண்வண்டும் பீடிகை வண்ணக், கொடை கொண்ட பாசத்துக் கோலமுண் டானுங், கடைவண்டு தானு ண்ணுங் கண்கலக் திட்ட, பெடைவண்டு தான்பெற்ற தின்பமு மாமே. (ருஎ)

கொல்லையின் மேயும் பசுக்களைச் செய்கவ, னெல்லை கட ப்பித் திறையடி கூட்டியே, வல்லசெய் தாற்றன் மதித்தபி ன ல்லது, கொல்லைசெய் கெஞ்சங் குறியறி யாதே (ருஅ)

தட்டத்து நீரிலே தாமரை பூத்தது, குட்டத்து நீரிற் குவ ளை யெழுந்தது, விட்டத்தி னுள்ளே விளங்கவல் லார்கட்குக், குட்டத்தி லிட்டதோர் கொம்மட்டி யாமே. (ருகூ)

ஆறு பறவைக ளைந்தகத் துள்ளன, நூறு பறவை நனிக் கொம்பின் மேலன, வேறும் பெரும்பதி யேழுங் கடந்தபின், மாறுத லின்றி மனைபுக லாமே. (சுO)

கொட்டனஞ் செய்து குளிக்கின்ற கூவலுள், வட்டனப் பூமி மருவிவந் தூறிடுங், கட்டனஞ் செய்து கயிற்றுற் றெழுமி யு, மொட்டனஞ் செய்தொளி யாவர்க்கு மாமே. (சுக)

ஏழு வளைகட லெட்டுக் குலவரை, யாழும் விசும்பினி லங் கி மழைவளி, தாழு மிருநிலத் தன்மை யதுகண்டு, வாழ நினைக் கில தாலய மாமே. (சுஉ)

ஆலிங் கனஞ்செய் தகஞ்சுடச் சூலத்துச், சாலிங் கமைத் துத் தலைமை தவிர்த்தனர், கோலிங் கமைத்தமின் கூபப் பற வைகண், மாலிங்கன் வைத்தது முன்பின் வழியே. (௪௩)

கொட்டுக்குந் தாலி யிரண்டே யிரண்டுக்குங், கொட்டுக்கு ந் தாலிக்கும் பாளை வலிதென்பர், கொட்டுக்குந் தாலிக்கும் பாளைக்கு மூன்றுக்கு, மிட்டம் வலிதென்ப ரீச னருளே. ()

சுயலொன்று கண்டவர் கண்டே யிருப்பர், முயலொன்று கண்டவர் மூவரு முப்பவர், பறையொன்று பூசல் பிடிப்பா னொ ருவன், மறையொன்று கண்ட துருவம்பொன் னாமே. (௪௫)

கோளை யெழுந்து கிடந்த குளத்தினி, லாளை படர்ந்து தொடர்ந்து கிடந்தது,நாளை படுகின்றுப் போலல்ல நாதனார், பாளை கிடக்கப் படிக்கின்ற வாறே. (௪௬)

கொல்லைமுக் காதமுங் காடைக் காதமு, மெல்லை மயங் கிக் கிடந்த விருநெறி, யெல்லை மயங்கா தியங்கவல் லார்கட்கு, வொல்லை கடந்துசென் றூர்புக லாமே. (௪௭)

உழவொன்று வித்து வொருங்கின காலத், தெழுமழை யெய்யா திருநிலச் செவ்வி, தழுவி வினைச்சென்று தாம்பய வா து, வழுவாது போவர் வளர்சடை யோனே. (௪௮)

பதுங்கிலும் பாய்புலி பன்னிரு காத, மொதுங்கிய தண் கட லோத முலவு, மதுங்கிய வார்கனி யாரமு தூறப், பொ துங்கிய வவ்வரைப் போய்விளைத் தானே. (௪௯)

தோணியொன் றேறித் தொடர்ந்து கடல்புக்கு,வாணிபஞ் செய்து வழங்கி வளர்மக, னீலிக் கிறையுமே நெஞ்சி னிலைதளா ர்ந், தாலிப் பழம்போ லளிக்கின்ற வப்பே. (௫0)

முக்காத மாற்றிலே மூன்றுள வாழைகள், செக்குப் பழு த்த திரிமலங் காய்த்தன; பக்கனார் மிக்கார் பட்ங்கினார் கன் னியர், நக்கு மலருண்டு நடுவுநின் றாரோ. (௫௧)

அடியு முடியு மமைத்ததோ ராத்தி, முடியு நுனியின்கண்

முத்தலை மூங்கில், கொடியும் படையுங் கோட்சர ணையைந்து,
முடியும் வலம்புரி வாய்த்ததவ் வாறே. (௫௨)

குன்றியும் பாம்பும் பசுமுசு வானரந், தென்றிக் கிடந்த
சிறுநரிக் கூட்டத்துக், குன்றுமை கூடித் தராசி னிறுத்தபின்.
பன்றி நிரையைக் குறைக்கின்ற வாறே. (௫௩)

மொட்டித் தெழுந்ததோர் மொட்டுண்டு மொட்டினைக்,
கட்டுவிட் டோடி மலர்தலுங், காணலாம், பற்றுவிட் டம்மனை
பாழ்பட நோக்கினுற், கட்டுவிட் டார்க்கன்றிக் காணவொண்
ணுதே. (௫௪)

நீரன்றிப் பாயு நிலத்தினிற் பச்சையாம், யாவரு மென்று
மறியவல் லாரில்லை, கூரு மழைபொழி யாது பொழிபுனல்,
தேரினிந் நீர்மை திடரினில் லாதே. (௫௫)

கூகை குருந்தம தேறிக் குணம்பயில், மோக முலகுக் கு
ணர்கின்ற காலத்து, நாகமு மொன்று நடுவுரை செய்திடும்,
பாகனு மாய்நின்ற பண்பனு மாமே. (௫௬)

வாழையுஞ் சூரையும் வந்திடங் கொண்டது, வாழைக்கு
ச் சூரை வலிது வலிதென்பர், வாழையுஞ் சூரையை வன்றுண்ட
ஞ் செய்திட்டு, வாழை யிடங்கொண்டு வாழ்கின்ற வாறே. ()

நிலத்தைப் பிளந்து நெடுங்கட லோட்டிப், புனத்துக் குர
வன் புணர்ந்த கொழுமீன், விலக்குமின் யாவர்க்கும் வேண்டி
ற் குறைபா, கருத்தமு மின்றி யடுவது மாமே. (௫௮)

தளிர்க்கு மொருபிள்ளை தட்டா ணகத்தில், விளிப்பதோ
ர் சங்குண்டு வேந்தனை நாடிக், களிக்குங் குசவர்க்குங் காவிதி
யார்க்கு, மளிக்கும் பதத்தொன் றுய்ந்துகொள் வார்க்கே. ()

குடைவிட்டுப் போந்தது கோயி லருமை, படைகண்டு மீ
ண்டது பாதி வழியி, லுடையவன் மந்திரி யுள்ளனு மூரா,ரடை
யா நெடுங்கடை யைந்தொடு நான்கே. (௬௰)

போகின்றவெட்டும் புகுகின்ற பத்தெட்டு, மாகிப் படைத்தன வொன்பது வாய்தலு,நாகமு மெட்டொடு நாலு புரவியும், பாகன் விடாவிடிற் பன்றியு மாமே. (௬௧)

பாசி படர்ந்து கிடந்த குளத்திடைக், கூசி யிருக்குங் குருகினை நேர்ந்துண்ணுந், தூசி மறவன் றுணைவழி யெய்திடப், பாசங் கிடந்து பதைக்கின்ற வாறே. (௬௨)

கும்ப மலைமே லெழுந்ததோர் கொம்புண்டு, கொம்புக்கு மப்பா லடிப்பதோர் காற்றுண்டு, வம்பாய் மலர்ந்ததோர் பூவுண்டப் பூவுக்கு, வண்டாய் கிடந்து மணங்கொள்வ னீசனே. ()

வீணையுந் தண்டும் விரவி யிசைமுரல், தாணுவு மேவித் தகுதலைப் பெய்தது,வாணிபஞ் சிக்கென றதுவடை யாமுன்னங், காணியு மங்கே கலக்கின்ற வாறே. (௬௪)

கொங்குபுக் காரொடு வாணிபஞ் செய்தது, வங்குபுக் காலன்றி யாய்ந்தறி வாரில்லை, திங்கள்புக் காலிரு ளாவ தறிந்திலர், தங்குபுக் கார்சிலர் தாபதர் தாமே. (௬௫)

போறும் புலர்ந்தது பொன்னிறங் கொண்டது, தாதவிழ் புன்னை யியங்கு மிருகனை, யேதமி லீச னியங்கு நெறியிது, மாத ரிருந்ததோர் மண்டலந் தானே. (௬௬)

கோமுற் றமருங் குடிகளுந் தம்மிலே, காமுற் றகத்தி யிடுவர் கடைதொறு, மீவற்ற வெல்லை விடாது வழிகாட்டி, யாமுற் றதட்டினு லைந்தண்ண லாமே. (௬௭)

தோட்டத்தில் மாம்பழந் தோண்டி விழுந்தக்கா, லாட்டின் புறத்தி னரியழைத் தென்செயு, மூட்டிக் கொடுத்து முதல்வனை முன்னிட்டுக், காட்டிக் கொடுத்தவர் கைவிட்ட வாறே.

புலர்ந்தது தாமென்று புட்கள் சிலம்பப், புலர்ந்தது போதென்று பூங்கொடி புல்லி, புலம்பி னவளோடும் போக நுகரும், புலம்பனுக் கென்றும் புலர்ந்திலை போதே. (௬௯)

தோணியொன் றுண்டு துறையில் விடுவன, வாணி மிதித
துநின் றைவர்கோ லூன்றலும், வாணிபஞ் செய்வார் வழியி
டை யாற்றிடை, யாணி கலங்கி லதுவிது வாமே. (௭௦)

ஆ உ௮௭.

---

மோனசமாதி.

நின்று ரிருந்தார் கிடந்தா ரெனவில்லை, சென்றார்தஞ் சி
த்த மோன சமாதியா, மன்றேயு மங்கே மறைப்பொரு ளொ
ன்றுண்டு, சென்றுங் கணைந்தவர் சேர்கின்ற வாறே. (௧)

காட்டுக் குறியுங் கடந்தவர் காரண,மேட்டின் புறத்தி லெ
ழுதிவைத் தென்பயன், கூட்டுங் குருநந்தி கூட்டிடி னல்லாது,
வாட்டின கழுத்தி லதர்கிடந் தற்றே. (௨)

உணர்வுடை யார்கட் குலகமுந் தோன்று, முணர்வுடை
யார்கட் குறுதுய ரில்லை, யுணர்வுடை யார்க ளுணர்ந்தவக் கா
ல, முணர்வுடை யார்க ளுணர்ந்துகண் டாரே. (௩)

மறப்பது வாய்நின்ற மாயநன் னாட்டன, பிறப்பினை நீங்கி
ய பேரரு ளாளன், சிறப்புடை யாள்திரு மங்கையுந் தானு, மு
றக்கமில் போகத் துறங்கிடுந் தானே. (௪)

துரியங்கண் மூன்றுங் கடந்தொளிர் சோதி, யரிய துரி
ய மதினமீது மூன்றாய், விரிவு குவிவு விழுங்கி யுமிழ்ந்தே, யுரை
யி லநுபூ திகத்தினுள் ளானே. (௫)

உருவிலி யூனிலி யூனமொன் றில்லி, திருவிலி தீதிலி தே
வர்க்குந் தேவன், பொருவிலி பூதப் படையுடை யாளி, மருவி
லி வந்தென் மனம்புகுந் தானே. (௬)

கண்டறி வாரில்லை காயத்தி னந்தியை, யெண்டிசை யோ
ரு மிறைவனென் றேத்துவ, ரண்டங் கடந்த வளவிலா வான
ந்தத், தொண்டர் முகந்த துறையறி யோமே. (௭)

தற்பர மல்ல சதாசிவன் றானல்ல, நிட்கள மல்ல சகள நிலையல்ல, யற்புத மாகி யநுபோகக் காமம்போற், கற்பனை யின்றிக் கலந்துநின் றானே. (அ)

முகத்திற் கண்கொண்டு காண்கின்ற மூடர்கா, ளகத்திற் கண்கொண்டு காண்பதே யானந்த, மகட்குத் தாய்தன் மணாளனோ டாடிய, சுகத்தைச் சொல்லென்றாற் சொல்லுமா றெங்ஙனே. (௯)

அப்பினி லுப்பென வத்த னணைந்திட்டுச், செப்பு பராபரஞ் சேர்பர மும்விட்டுக், கப்புறு சொற்பத மாளக் கலந்தமை, யெப்படி யப்படி யென்னுமவ் வாறே. (௰)

கண்டார்க் கழகிதாங் காஞ்சிரத் தின்பழந், தின்றார்க் கறியலா மப்பழத் தின்சுவை, பெண்டா னிரம்பி மடவிய ளானாற், கொண்டா னறிவன் குணம்பல தானே. (௧௧)

நந்தியிருந்தா னடுவுட் டெருவிலே, சந்தி சமாதிகடானே பொழிந்தது, வுந்தியி னுள்ளே யுதித்தெழுஞ் சோதியைப், புந்தியி னாலே புணர்ந்துகொண் டேனே. (௧௨)

விதறுபடாவண்ணம் வேறிருந் தாய்ந்து, பதறு படாதே பழமறை பார்த்துக், கதறிய பாழைக் கடந்தந்தக் கற்பனை, யுதறிய பாழி லொடுங்குகின் றேனே. (௧௩)

வாடா மலர்ப்புனை சேவடி வானவர், கூடா ரநெறி நாடொறு மின்புறச், சேடார் கமலச் செழுஞ்சுட ருட்சென்று, நாடா ரமுதுற நாடா ரமுதே. (௧௪)

அதுக்கென் றிருவ ரமர்ந்தசொற் கேட்டும், பொதுக்கெனக் காமம் புலப்படு மாபோ, லதுக்கென்று வேறே சமைந்தாரைக் காண, மதுக்கொன்றைத் தாரான் வளந்தரு மன்றே ()

தானு மழிந்து தனமு மழிந்துநீ, டூனு மழிந்து வுயிரு மழிந்துடன், வானு மழிந்து மனமு மழிந்துபி, னானு மழிந்தமை நானறி யேனே. (௧௬)

இருளும் வெளியு மிரண்டையு மாற்றிப், பொருளிற் பொருளாய் பொருந்தவுள் ளாகி, யருளா லழிந்திடு மத்த னடிக்கே, யருளாத கன்மன முற்றுநின் றானே. (௧௭)

ஒன்றிநின் றுள்ளே யுணர்ந்தேன் பராபர,மொன்றிநின் றுள்ளே யுணர்ந்தேன் சிவகதி, யொன்றிநின் றுள்ளே யுணர்ந்தே னுணர்விலை; யொன்றிநின் றேபல வூழிகண் டேனே. (௧௮)

ஆ ௩௦௫.

---

வரையுரைமாட்சி.

தான்வரை வற்றபி னானா வரைவது, தானவ னானபி னாரை நினைவது, காமனை வென்றகண் ணாரை யுகப்பது, நாமொழி வாசகஞ் சொல்லுமி னீரே. (௧)

உரையற்ற தொன்றை யுரைசெய்யு மூமர்காள், கரையற்ற தொன்றைக் கரைகாண லாகுமோ, திரையற்ற நீர்போற் சிந்தை தெளிவார்க்குப், புரையற் றிருந்தான் புரிசடை யோனே.

மனமாயை மாயையிம் மாயை மயக்க, மனமாயை தான்மாயு மற்றொன்று மில்லை, பினைமாய்வ தில்லை பிதற்றவும் வேண்டாந், தனையாய்ந் திருப்பது தத்துவந் தானே.(௩) ஆ ௩௦௮.

---

அணைந்தோர் தன்மை.

மலமில்லை மாசில்லை மானாபி மானக், குலமில்லை கொள்ளுங் குணங்களு மில்லை, நலமில்லை நந்தியை ஞானத்தி னாலே, பலமன்னி யன்பிற் பதித்துவைப் போர்க்கே. (௧)

ஒழிந்தேன் பிறவி யுறவென்னும் பாசங், கழிந்தேன் கடவுளு நானுமொன் றானே,னழிந்தாங் கினிவரு மார்க்கமும் வேண்டேன், செழுஞ்சார் புடைய சிவனைக்கண் டேனே. (௨)

ஆலைக் கரும்பு மமுதமக் காரமுஞ், சோலைத்தண் ணீரு முடைத்தெங்க ளுட்டிடைப், பீலிக்கண் ணன்ன வடிவுசெய் வள்ளொரு, கோலப்பெண் ணுட்குக் குறையொன்று மில்லையே. ()

ஆராலு மென்னை யமட்டவொண் ணுதினிச், சீரார் பிரான்வந்தென் சிந்தை புகுந்தனன், சீராடி யங்கே திரிவதல் லாதினி, யார்பாடுஞ் சாரா வறிவறிந் தேனே. (௪)

பிரிந்தேன் பிரமன் பிணித்ததோர் பாசந், தெரிந்தேன் சிவகதி செல்லு நிலையை, யரிந்தேன் வினையை யயில்மன வாளான், முரிந்தேன் புரத்தினை முந்துகின் றேனே. (௫)

ஒன்றுகண் டீருல குக்கொரு தெய்வமு, மொன்றுகண் டீருல குக்குயி ராவது, நன்றுகண் டீரினி நமசிவா யப்பழந், தின்றுகண் டேற்கிது தித்தித்த வாறே. (௬)

சந்திரன் பாம்பொடுஞ் சூடுஞ் சடாதரன், வந்தென்னை யாண்ட மணிவிளக் கானவ, னந்தமு மாதியு மில்லா வரும்பொருள், சிந்தையின் மேவித் தியக்கறுத் தானே. (எ)

பண்டெங்க ளீச னெடுமால் பிரமனைக், கண்டங் கிருக்கு ங் கருத்தறி வாரில்லை, விண்டங்கே தோன்றி வெறுமன மாயிடிற், றுண்டங் கிருந்ததோர் தூறது வாமே. (அ)

அன்னையு மத்தனு மன்புற்ற தல்லது, வன்னையு மத்தனு மாரறி வாரென்னை, யன்னையு மத்தனு மியானு முடனிருந், தன்னையு மத்தனை யான்புரந் தேனே. (௯)

கொண்ட சுழியுங் குலவரை யுச்சியு, மண்டரு மண்டத் தலைவரு மாதியு, மெண்டிசை யோரும்வந் தென்கைத் தலத்துளே, யுண்டனர் நானினி யுய்ந்தொழிந் தேனே. (௧௦)

தானே திசையொடு தேவரு மாய்நிற்குந், தானே வடவரை யாதியு மாய்நிற்குந், தானே யுடலுயிர் தத்துவ மாய்நிற்குந், தானே யுலகிற் றலைவனு மாமே. (௧௧)

நமன்வரின் ஞானவாள் கொண்டே யெறிவன், சிவன்வரி
னானுடன் போவது திண்ணம், பவம்வரும் வல்வினைப் பண்டே
யறுத்தேன், றவம் வருஞ் சிந்தைக்குத் தானெதி ராமே. ()

சித்தஞ் சிவமாய் மலமூன்றுஞ் செற்றவர், சுத்தச் சிவ
மாவர் தோயார் மலபந்தங், கத்துஞ் சிலுருங் கலசமுங் கை
காணார், சத்தம் பரவிந்து தானுமென் றெண்ணியே. (௧௩)

நினைப்பு மறப்பு மிலாதவர் நெஞ்சம், வினைப்பற் றறுக்கு
ம் விமல னிருக்கும், வினைப்பற் றறுக்கும் விமலனைத் தேடி,
நினைக்கப் பெறிலவ னீளிய னாமே. (௧௪)

சிவபெரு மானென்று நானழைத் தேத்தத், தவபெரு
மானென்று தான்வந்து நின்று, னவபெரு மானென்னை யாளு
டை நாதன், பவபெரு மானைப் பணிந்துநின் றேனே. (௧௫)

பணிந்துநின் றேன்பர மாதி பதியைத், துணிந்துநின் றே
னினி மற்றொன்றும் வேண்டேன், னணிந்துநின் றேனுட லாதிப்
பிரானைத், தணிந்துநின் றேன்சிவன் றன்மைகண் டேனே. ()

என்னெஞ்ச மீச னிணையடி தாஞ்சேர்ந்து, முன்னஞ்செய்
தேத்த முழுதும் பிறப்பறுந், தன்னெஞ்ச மில்லாத் தலைவன்
றலைவிதி, பின்னஞ்செய் தென்னைப் பிணக்கறுத் தானே. ()

பிணக்கறுத் தான்பிணி மூப்பறுத் தெண்ணுங், கணக்கறு
த் தாண்டனன் காணந்தி யென்னைப், பிணக்கறுத் தென்னுட
ன் முன்வந்த துன்பம், வணக்கலுற் றேன்சிவம் வந்தது தானே.

சிவன்வந்து தேவர் குழாமுடன் கூடப், பவம்வந் திட
நின்ற பாச மறுத்திட், டவனெங்கை யாண்டரு ளாதிப் பெரு
மா, னவன்வந்தென் னுள்ளே யகப்பட்ட வாறே. (௧௯)

கரும்புக் தேனுங் கலந்ததோர் காயத்தி, லரும்புங் கந்
தமு மாகிய வானந்தம், விரும்பியே யுள்ளம் வெளியுறக் கண்
டபின், கரும்புங் கைத்தது தேனும் புளித்ததே. (௨௦)

உள்ள சரிதாதி யொட்டியே யீட்டென்பால், வள்ள லருத்தியே வைத்த வளம்பாடிச், செய்வன வெல்லாஞ் சிவமாகக்காண்டலாற், கைவள மின்றிக் கருக்கடந் தேனே. (உ௧)

மீண்டார் கமலத்து ளங்கி மிகச்சென்று, தூண்டா விளக்கின் றகளிநெய் சோர்தலும், பூண்டா னொருத்தி புவகரு டாமணி, மாண்டா னொருவன்கை வந்தது தானே. (உ௨)

ஆறே யருவி யகங்குள மொன்றுண்டு, நூறே சிவகதி நுண்ணிது வண்ணமுங், கூறே குவிமுலைக் கொம்பனை யாளொடும், வேறே யிருக்கும் விழுப்பொரு டானே. (உ௩)

அன்பு ளுருகி யழுவ னரற்றுவ, னென்பு முருவ விராப்பக லேத்துவ, னென்பொன் மணியை யிறைவனை யீசனைத், தின்பன் கடிப்பன் றிருத்துவன் றானே. (உ௪)

மனம் விரிந்து குவிந்தது மாதவ, மனம் விரிந்து குவிந்தது வாய்வு, மனம் விரிந்து குவிந்தது மன்னுயிர், மனம் விரிந்துரை மாண்டது முத்தியே. (உ௫) ஆ ௩௩௩.

---

## தோத்திரம்.

மாயனை நாடி மனநெடுந் தேரேறிப், போயின நாடறி யாதே புலம்புவர், தேயமு நாடுந் திரிந்தெங்கள் செல்வனைக், காயமின் னாட்டிடைக் கண்டுகொண் டேனே. (௧)

மன்னு மலையோன் மதவா ரணத்தின்மே, லின்னிசை பாட விருந்தவ ராரொனின், முன்னியல் கால முதல்வனார் நாமத்தைப், பன்னின ரென்றே பாட்டறி வீரோ. (௨)

முத்தினின் முத்தை முகிழிள ஞாயிற்றை, யெத்தனை வானோரு மேத்து மிறைவனை, யத்தனை காணு தரற்றுகின் றேனைப் போர், பித்த னிவனென்று பேசுகின் றாரோ. (௩)

புகுந்துநின் றானெங்கள் புண்ணிய மூர்த்தி, புகுந்துநின் றானெங்கள் போதறி வாளன், புகுந்துநின் றானடி யார்தங்க

ணெஞ்சம், புகுந்துநின் றுனையே போற்றுகின்றேனே. (௪)

பூதக்கண் ணாடியிற் புகுந்திலன் போதுளன், வேதக்கண் ணாடியில் வேறே வெளிப்படு, நீதிக்கண் ணாடி நினைவார் மனத்துளன், தீதக்கண் ணாடியிற் கெட்டுநின் றேனே. (௫)

நாமமோ ராயிர மோதுமி னாதனை, யேமமோ ராயிரத் துள்ளே யிசைவீர்க, ளோமமோ ராயிர மோதவல் லார்கட்குக், காமமோ ராயிரங் கண்டொழிந் தார்களே. (௬)

போற்றுகின் றேன்புகழ்ந் தும்புகழ் ஞானத்தைத், தேற்றுகின் றேன்சிந்தை நாயகன் சேவடி, சாற்றுகின் றேனறை யோசிவ யோகத்தைப், போற்றுகின் றேனெம் பிரானென்று நானே. (௭)

நானா விதஞ்செய்து நாடிமி னந்தியை, யூனார் கமலத்தி னூடுசென் றப்புறம், வானோ ருலகம் வழிப்பட மீண்டபின், றேனூர வுண்டு தெவிட்டலு மாமே. (௮)

வந்துநின் றானடி யார்கட் கரும்பொரு, ளிந்திர னாதி யிமையவர் வேண்டினுஞ், சுந்தர மாதர் குழலியொன் றல்லது, வந்தர வானத்தி னப்புற மாமே. (௯)

மண்ணிற் கலங்கிய நீர்போன் மனிதர்க, ளெண்ணிற் கலங்கி [illegible]வ னிவனெனுந், றுண்ணிற் குளத்தின் முகந்தொரு பால்வைத்துத், தெண்ணிற் படுத்த சிவனவ னாமே. (௧௦)

மெய்த்தவத் தானை விரும்பு மொருவர்க்குக், கைத்தலஞ் சேர்தரு நெல்லிக் கனியொக்குஞ், சுத்தனைத் தூய்நெறி யாய்நின்ற தேவர்க, ளத்தனை நாடி யமைந்தொழிந் தேனே. (௧௧)

அமைந்தொழிந் தேனள வில்புகழ் ஞானஞ், சமைந்தொழிந் தேன்றடு மாற்றமொன் றில்லை, புகைந்தெழும் பூதலம் புண்ணிய னண்ணி, வகைந்து கொடுக்கின்ற வள்ளலு மாமே. ()

வள்ளற் றலைவனை வானநன் னாடனை, வெள்ளப் புனற்ச

டை வேத முதல்வனைக், கள்ளப் பெருமக்கள் காண்பர்கொ
லோவென்று, வுள்ளத்தி னுள்ளே யொளித்திருந் தானுமே. ()

ஆறு மலர்ப்பதங் கந்த கடவுளை, நாளும் வழிபட்டு நன்
மையு ணின்றவர்,கோளும் வினையு-மறுக்குங் குரிசிலின், வாறு
மனத்தொடும் வைத்தொழிந் தேனே. (௧௪)

விரும்பி லவனடி வீர சுவர்க்கம், பொருந்தி லவனடி புண்
ணிய லோகந், திருந்தி லவனடி தீர்த்தமு மாகும், வருந்தி
யவனடி வாழ்த்தவல் லார்க்கே. (௧௫)

வானக மூடறுத் தானிவ் வுலகினிற், றனக மில்லாத் த
னியாகும் போதகன், கானக வாழைக் கனிநுகர்ந் துள்ளுறு
ம், பானகச் சோதியைப் பற்றிநின் றேனே. (௧௬)

விதியது மேலை யமரருறையும், பதியது பாய்புனற் கங்
கையு முண்டு, துதியது தொல்வினைப் பற்றறு விக்கும், பதியது
வவ்விட்ட தந்தமு மாமே. (௧௭)

மேலது வானவர் கீழது மாதவர், தானிடர் மானுடர் கீ
ழது மாதலங், கானது கூவிள மாலை கமழ்சடை, யானது செ
ய்யுமெம் மாருயிர் தானே. (௧௮)

சூழுங் கருங்கட னஞ்சுண்ட கண்டனை, யேழு மிரண்டி
லு மீசன் பிறப்பிலி, யாழுஞ் சுனையு மடவியு மங்குளன், வாழு
மெழுத்தைந்து மன்னனு மாமே. (௧௯)

உலகம தொத்துமண் ணொத்துயர் காற்றை, யலர்கதி ர
ங்கியொத் தாதிப் பிரானு,நிலவிய மாமுகி னீரொத்து மீண்டச்,
செலவொத் தமர்திகைத் தேவர் பிரானே. (௨௦)

பரிசறிந் தங்குள னங்கி யருக்கன், பரிசறிந் தங்குளன் மா
ருதத் தீசன், பரிசறிந் தங்குளன் மாமதி ஞானப், பரிசறிந் தன்
னிலம் பாரிக்கு மாறே. (௨௧)

அந்தங் கடந்து மதுவது வாய்நிற்கும், பந்த வுலகினிற் கீழோர் பெரும்பொருள், தந்த வுலகெங்குந் தானே பராபரன், வந்து படைக்கின்ற மாண்பது வாமே. (௨௨)

முத்தண்ட வீரண்ட மேமுடி யாகிலு, மத்த னுருவ முலகே ழெனப்படு, மத்தனின் பாதாள மளவுள்ள சேவடி, மத்த ரதனை மகிழ்ந்துணை ராரே. (௨௩)

ஆதிப்பிரானம் பிரானவ் வகலிடச்,சோதிப் பிரான்சுடர் மூன்றொளி யாய்நிற்கு, மாதிப் பிரானண்டத் தப்புறங் கீழவ, னாதிப் பிரானடு வாகிநின் றானே. (௨௪)

அண்டங் கடந்துயர்ந் தோங்கும் பெருமையன், பிண்டங் கடந்த பிறவிச் சிறுமையன், றண்டர் நடந்த கனைகழல் காண்டொறுந், தொண்டர்கள் தூய்நெறி தூங்கிநின் றாரே. (௨௫)

உணர்வுசெய் நோக்கம் பெருங்கடல் சூழ, நிலமுழு தெல்லா நிறைந்தன னீசன், பலமுழு தெல்லாம் படைத்தனன் முன்னே, புலமுழு பொன்னிற மாகிநின் றானே. (௨௬)

பராபர னாகிப்பல் லூழிக டோறும், பராபர னாயிவ் வகலிடந் தாங்கித், தராபர னாய்நின்ற தன்மை யுணரார், நிராபர னாகி நிறைந்துநின் றானே. (௨௭)

போற்றும் பெருந்தெய்வந் தானே பிறரில்லை, யூற்றமு மோசையு மோசை யொடுக்கமும், வேற்றுட னென்ன றதுபெருந் தெய்வமாங், காற்றது விசன் கலந்துநின் றானே (௨௮)

திகையனைத் துஞ்சிவ னேயவ னாகி, மிகையனைத் துஞ்சொல்ல வேண்டா மனிதரே, புகையனைத் தும்புற மங்கியிற் கூடு, முகையனைத் தும்மெங்க ளாதிப் பிரானே. (௨௯)

அகன்றா னகலிட மேழுமொன் றாகி, யிவன்றா னெனநின் றெளியனு மல்லன், சிவன்றான் பலபல சீவனு மாகி, நவின்றா னுலகுறு நம்பனு மாமே. (௩௦)

கலையொரு மூன்றுங் கடந்தப்பா லின்ற, தலைவனை நாடு மின் றத்துவ நாதன், விலையில்லை விண்ணவ ரோடு முரைப்ப, னரையில்லை யுள்ளுறு முள்ளவன் றானே. (௩௧)

படிகால் பிரமன்செய் பாச மறுத்து, நெடியான் குறுமை செய் நேச மறுத்துச், செடியார் தவத்தினிற் செய்தொழி னீக்கி, யடியேனை யுய்யவைத் தன்புகொண் டானே. (௩௨)

ஈசனென் றெட்டுத் திசையு மியங்கின, வோசையி னின்றெழு சத்த முலப்பிலி, தேசமொன் றங்கே செழுங்கண்ட மொன்பதும், வாச மலர்போன் மருவிநின் றானே. (௩௩)

இல்லனு மல்ல னுளனல்ல னெம்மிறை, கல்லது நெஞ்சம் பிளந்திடுங் காட்சியன், றொல்லையன் றூயன் றுளக்கிலன் றூய் மணி, சொல்லருஞ் சோதி தொடர்ந்துநின் றானே. (௩௪)

உள்ளத் தொடுங்கும் புறத்துளு நானெனுங், கள்ளத் தலைவன் கமழ்சடை நந்தியும், வள்ளற் பெருமை வழக்கஞ்செய்வானுத, லள்ளற் கடலை யறுத்துநின் றானே. (௩௫)

மாறெதிர் வானவர் தானவர் நாடொறுங், கூறுதல் செய்து குரைகழ லாடுவர், ஊறுவ ருள்ளத் தகத்தும் புறத்துளும், வேறுசெய் தாங்கே விளக்கொளி யாமே. (௩௬)

விண்ணிலும் வந்த வெளியிலன் மேனியன், கண்ணிலும் வந்த புனலல்லன் காட்சியன், பண்ணினில், வந்தப் பயனல்லன் பான்மைய, னெண்ணிலா னந்தமு மெங்கள் பிரானே. (௩௭)

உத்தம னெங்கு முகக்கும் பெருங்கட, னித்திலச் சோதி யனிலக் கருமைய, னெத்தனை காலமு மெண்ணுவ ரீசனைச், சித்த ரமரர்க டேர்ந்தறி யாரே. (௩௮)

நிறம்பல வெவ்வண்ண மவ்வண்ண மீசன், நறம்பல வெவ்வண்ண மவ்வண்ண மின்ப, மறம்பல வெவ்வண்ண மவ்வண்ணம் பாவம், புறம்பல காணினும் போற்றகி லாரே. (௩௯)

இங்குநின் றனைங்கு நின்றன னெங்குளன், பொங்கிநின் றா
ன்புல னாபதி புண்ணியன், கங்குனின் றான்கதிர் மாமதி ஞாயி
று, வெங்குநின் றான்மழை போலிறை தானே. (௪௰)

உணர்வது வாயுமே யுத்தம மாயு, முணர்வது நுண்ணறி
வெம்பெரு மானைப், புணர்வது வாயுவும் புல்லிய தாயு, முண
ர்வுட லண்டமு மாகிநின் றானே. (௪௧)

தன்வலி யாயுல கேழுந் தரித்தவன், றன்வலி யாலே ய
ணுவிலுந் தானொய்யன், றன்வலி யான்மலை யெட்டினுந் தான்
சாரான், தன்வலி யாலே தடங்கட லாமே. (௪௨)

ஏனோர் பெருமைய னாகிலு மெம்மிறை, யூனே சிறுமையு
ள் ளுள்கலந் தங்குளன், வானோ ரறியு மளவல்லன் மாதேவ
ன், றானே யறியுந் தவத்தி னளவே. (௪௩)

பிண்டாலம் வித்தி லெழுந்த பெருமுளைக், குண்டாலங்
காயத்துக் குதிரை பழுத்தது, வுண்டன ருண்டா ருணர்விலா
மூடர்கள், பிண்டத்துட் பட்டுப் பிணங்குகின் றார்களே. (௪௪)

---

சர்வவ்வியாபி.

ஏயுஞ் சிவபோக மீதன்றி யோரொளி, யாயு மறிவையு மா
யா வுபாதியா, லேய பரிய புரியுந் தனைதெய்துஞ், சாயுந் தனது
வியாபகந் தானே. (௧)

நானறிந் தப்பொரு ணடவிட மில்லை, வானறிந் தங்கே வ
ழியுற விம்மிடு, மூனறிந் துள்ளே யுயிர்க்கின்ற வொண்சுடர், தா
னறிந் தெங்குந் தலைப்பட லாமே. (௨)

கடலிடை வாழ்கின்ற கௌவை யுலகத், துடலிடை வா
ழ்வுகொண் டுள்ளொளி நாடி, யுடலிடை வைகின்ற வுள்ளுறு
தேவனைக், கடலின் மலிதிரைக் காணலு மாமே. (௩)

பெருஞ்சுடர் மூன்றினு முள்ளொளி யாகித், தெரிந்துடலாய்நிற்குந் தேவர் பிரானு, மிருஞ்சுடர் விட்டிட் டிகலிடமெல்லாம், பரிந்துடன் போகின்ற பல்கோரை யாமே. (௫)

உறுதியி னுள்வந்த வுள்வினைப் பட்டு, விறுதியின் வீழ்ந்தாரிரணம தாகுஞ், சிறுதியி னுள்ளொளி திப்பிய மூர்த்தி, பெறுதியின் மேலோர் பெருஞ்சுட ராமே. (௬)

பற்றினி னுள்ளே பரமாய் பரஞ்சுடர், முற்றினு முற்றிமுளைக்கின்ற மூன்றொளி, நெற்றியி னுள்ளே நினைவாய் நிலைதரு மற்றவ னாய்நின்ற மாதவன் றானே. (௬)

தேவனு மாகுந் திசைதிசை பத்துளு, மேவனு மாம்விரிநீருல கேழையு, மாவனு மாமமர்ந் தெங்கு முலகினு, நாவனுமாகி நவிற்றுகின் றானே. (௭)

நோக்குங் கருட னொடியே மூலகையுங், காக்கு மவனித் தலைவனு மங்குள, நீக்கும் வினையென் னிமலன் பிறப்பிலி, போக்கும் வரவும் புணரவல் லானே. (௮)

செழுஞ்சடை யன்செம்பொ னேயொக்கு மேனி, பொழிந்தன ாயு வொருங்குடன் கூடுங், கழிந்தில னெங்கும் பிறப்பில னீச, னொழிந்தில சேழுல கொத்துநின் றானே. (௯)

உணர்வு மவனே யுயிரு மவனே, புணர்வு மவனே புலனு மவனே, இணரு மவன்றன்னை யெண்ணலு மாகான், றுணரின் மலர்க்கந்தந் துன்னிநின் றானே. (௰)

புலமையி னற்றமில் புண்ணிய னெந்தை, நலமையின் ஞான வழக்கமு மாகும், விலமையில் வைத்துள வேதியர் கூறும், பலமையி லெங்கும் பரந்துநின் றானே. (௧௧)

விண்ணவ னாயுல கேழுக்கு மேலுளன், மன்னவ னாய்வலஞ் சூழ்கட லேழுக்குந், தண்ணவ னாயது தன்மையி னிற்பதோர், கண்ணவ னெங்கி கலந்துநின் றானே. (௧௨)

நின்றனன் மாலொடு நான்முகன் றானாகி, நின்றனன் றா
னிலங்கீழொடு மேலென, நின்றனன் றானொடு மால்வரை யே
ழ்கட, னின்றனன் றானே வளங்கனி யாயே. (௧௩)

புவனா பதிமிகு புண்ணிய னெந்தை, யவனே யுலகி லடர்
பெரும் பாக, னவனே யரும்பல சீவனு மாகு, மவனே யிறை
யென மாலுற்ற வாறே. (௧௪)

உண்ணின் றொளிரு மூலவாப்பிராணனும், விண்ணின் றிய
ங்கும் விரிகதி ராச்செல்லு, மண்ணின் றியங்கியும் வாயுவு மா
ய்நிற்குங், கண்ணின் றிலங்குங் கருத்தவன் றானே. (௧௫)

எண்ணு மெழுத்து மினஞ்செய லவ்வழி, பண்ணுந் திறனு
ம் படைத்த பரமனைக், கண்ணின் கவருங் கருத்தி லதுவிது,
வுண்ணின் றுருக்கியோ ராயமு மாமே. (௧௬)

இருக்கின்ற தெண்டிசை யண்டம்பா தாள, முருக்கொடு
தன்னடி வோங்கலிவ் வண்ணக், கருக்கொண்டு வெங்குங் கல
ந்திவன் றானே, திருக்கொன்றை வைத்த செழுஞ்சடை யானே.

பலவுடன் சென்றவப் பார்முழு தீசன், செலவறி வாரில்
லை சேய னணிய, னலவியன் சங்கர னாதியெம் மாதி, பலவில
தாய்நிற்கும் பான்மைவல் லானே. (௧௮)

அதுவறி வானவ னாதிப் புராண, னெதுவறி யாவகை நின்
றனனீசன், பொதுவது வான புவனங்க ளெட்டு, மிதுவறி வா
னந்தி யெங்கள் பிரானே. (௧௯)

நீரு நிலனும் விசும்பங்கி மாருத, தூறு முடம்புறு சோதி
யு மாயுளன், பேரும் பராபரன் பிஞ்ஞக னெம்மிறை, யூருஞ்
சகல னுலப்பிலி தானே. (௨௦)

மூல னுரைசெய்த மூவா யிரந்தமிழ், மூல னுரைசெய்த
முன்னூறு மந்திரம், மூல னுரைசெய்த முப்ப துபதேசம், மூல
னுரைசெய்த மூன்றுமொன் றாமே. (௨௧)

வாழ்கவே வாழ்கவென் நந்தி திருவடி, வாழ்கவே வாழ்க மலமறுத் தாள்பதம், வாழ்கவே வாழ்கமெஞ் ஞானத் தான்ருள், வாழ்கவே வாழ்க மயமிலான் பாதமே. (௨௨)

ஆ அதிகாரம் - உசஐ - திருமந்திரம் - நகக.

ஒன்பதாந் தந்திர முற்றும்.

---

ஆ சிறப்புப்பாயிர முட்பட - அதிகாரம் உநுஐ - கூடியதிருமந்திரம் - நாஅந.

திருமந்திர முற்றும்.

